# தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி

## THE STORY OF TAMIL RESEARCH

(ஓர் விமரிசன நூல்)

பண்டைக்காலமும் இடைக்காலமும்

ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் எழுதியது



அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

# தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி

## THE STORY OF TAMIL RESEARCH

(ஓர் விமரிசன நூல்)



பண்டைக்காலமும் இடைக்காலமும்

ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் எழுதியது

அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை - 18

# பொருள் அட்டவணை

## பண்டைக்காலம்



## இடைக்காலம்

# முகவுரை

## I

தமிழ் ஆராய்ச்சி என்பதன் பொருள் என்ன? இதற்கும் விளக்கம் வேண்டுமோ என்று சிலர் ஐயுறலாம். ஆனால் கருத்துத் தெளிவின் பொருட்டு விளக்கம் அவசியமாகிறது. தமிழ் மொழி, அதிலுள்ள இலக்கியம் இலக்கணம் பற்றிய கொள்கைகள், தமிழ்ப் புலவரின் காலம், வாழ்க்கை, நூல்களின் தன்மை, தரம், அவை எழுதப் பெற்ற சூழ்நிலை, புலவருக்கும் அவரை ஆதரித்த அரசர், வள்ளல்கள் முதலியோருக்கும் இடையே திகழ்ந்த உறவு ஆகியவைகளைப் பொருளாகக் கொண்டு, விருப்பும் வெறுப்பும் இன்றி, நம்பத் தகுந்த ஆதாரங்களை வைத்துத் தக்க பரிசீலனை முறைகளைக் கையாண்டு, தற்காலப் பண்புடன் ஆராய்ந்து, உண்மையை நாடும் முயற்சியே தமிழ் ஆராய்ச்சி ஆகும். தமிழரின் சரித்திரம், நாகரிகம், தமிழ் நூல்களின் இலக்கிய விமரிசனம் முதலியவற்றைத் தெரிந்து கொள்ள முயலுவதும் தமிழ் ஆராய்ச்சி என்பதற்குள் பொதுவாக ஒருவாறு அடங்கும்; எனினும், இவைகளில் ஒவ்வொன்றும், விரிந்த பரிசீலனைக்குரிய தனிப்பட்ட பெரிய துறையாதலால், தமிழ் ஆராய்ச்சியையே முக்கியமான பொருளாகக் கொண்ட இந்நூலின் நோக்கத்திற்குப் புறம்பாகக் கருதப்பெறும். அவசியமான இடங்களில் அவை சுருக்கமாகவே கவனிக்கப்பெறும்.

இது வரையும் நடைபெற்றிருக்கும் தமிழ் ஆராய்ச்சியின் வரலாற்றைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் வரைவதே இந்த நூலின் பொதுவான நோக்கம். இதை நிறைவேற்றும் முறையில், பண்டைக் காலத்தில் நிகழ்ந்த தமிழ்

ஆராய்ச்சி முதல் பாகத்தின் பொருளாக அமைந்திருக்கிறது. இடைக் காலத்தில் நடைபெற்ற ஆராய்ச்சியின் தன்மையும், அதில் விளைந்த பயனுள்ள இலக்கியத்தின் விபரங்களும் இரண்டாம் பாகத்தில் கூறப்பெற்றிருக்கின்றன. பின்னர் வெளிவரும் இந்த நூலின் மூன்றும் பாகத்தில், தற்காலத்தில் எழுதப்பெற்றிருக்கும் தமிழ் ஆராய்ச்சியின் கருத்துக்களும், முடிபுகளும், தன்மைகளும் சற்று விரிவாக உரைக்கப்பெறும். ஏனென்றால் தற்காலத்தில் தமிழ் ஆராய்ச்சி பல துறைகளில் ஓரளவு சரித்திரப் பாங்குடனும், அறிவு நுட்பத்துடனும் செய்யப்பெற்றிருப்பதால் நல்ல வளம் பெற்றிருக்கிறது.

காலவரை யளவுகள் சம்பந்தமாக இந்த நூலின் அமைப்பை முதலில் சற்று விளக்க வேண்டும். தமிழ் இலக்கியம் வளர்ந்த முறைகளையும் அதன் சரித்திரத்தின் போக்கையும் தழுவி ஆராய்ந்தால் மேலே குறிப்பிடப் பெற்ற மூன்று பாகங்களும் மூன்று காலப் பகுதிகளைச் சேர்ந்ததாகக் கொள்ளப்பட்டிருப்பதன் காரணம் தெரிய வரும். பண்டைக் காலம் என்பது கி. மு. முதல் நூற்றுண்டிலிருந்து கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டு முடியவுள்ள ஆயிரம் வருட காலத்தை குறிக்கும். இடைக்காலம் என்பது கி. பி. பத்தாம் நூற்றுண்டிலிருந்து பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதி வரையுள்ள காலமாகும். கி.பி. பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்து இன்று வரையுள்ள காலம், தற்காலமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வாறு வகுத்துக் கொண்டிருப்பது இந்த நூலில் கையாளப் பெற்றிருக்கும் ஆராய்ச்சி முறைக்கும் ஒருவாறு பொருத்தமாய் இருப்பது நோக்கத்தக்கது.

கிறிஸ்து சகத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே தமிழ் மொழி இயங்கி செறிந்த இலக்கியச் செல்வத்தையும் விரிந்த இலக்கணத்தையும் பெற்றிருந்தது; எவ்வளவு

காலத்திற்கு முன்பு என்று வரையறுத்துக் கூற இயலாது; சுமார் பத்து நூற்றாண்டுகளோ அல்லது அதற்கும் மேற்பட்ட காலமாகவோ இருக்கலாம்; பல்லாயிரக்கணக்கான வருடங்கள் என்று கூறுவாரும் உண்டு. ஒரு மொழி பிறந்து, வளர்ந்து, பரவி, ஆயிரக்கணக்கான சொற்களைப் பெற்று, இலக்கியத்தையும் இலக்கணத்தையும் ஈன்று, நிலைத்து நிற்க எவ்வளவு காலம் ஆகும் என்று, தற்கால மேனாட்டு மொழி நூற் புலவராலும் திட்டமாய்ச் சொல்ல முடியாது. பொதுவாக, பண்டைக் கால மொழிகளைப் பொறுத்த வரையில், அது நீண்ட காலமாயிருந்திருக்கும் என்று ஊகிக்கலாம். அவைகளைப் பேசும் மக்கள் பல்லாயிரக் கணக்கான வருடங்கள் வாழ்ந்திருக்கலாம்.

மேலே கூறிய மூன்று காலப் பிரிவுகளையும், இலக்கிய முறையில் பல உட் பிரிவுகளாகப் பாகுபாடு செய்யலாம். உதாரணமாக, பண்டைக் காலத்தை, தொகை நூல்கள் காலம், தொல்காப்பியம் முதலிய இலக்கணங்கள் காலம், கீழ்க் கணக்குகள் காலம், பழைய காப்பியங்கள் காலம், தேவார திவ்யப் பிரபந்தங்கள் காலம் என்று ஐந்து வகையாகப் பிரிக்கலாம். ஆனால் இக்காலப் பகுதிகளில் ஒன்றுக்குப் பின்னால் மற்றொன்று வந்தது என்று கருதக்கூடாது. தொகை நூல்களில், கிறிஸ்து சகத்திற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்து சுமார் கி. பி. ஏழாம் நூற்றாண்டு வரையிலுமுள்ள காலத்தில் எழுதப்பெற்ற பாடல்கள் காணப்பெறுகின்றன. தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் போன்ற இலக்கண நூல்கள் இந்தக் காலத்தின் முற்பகுதியையும், கீழ்க்கணக்கு நூல்கள் அதன் பிற்பகுதியையும் சேர்ந்தன. பழைய காப்பியங்கள் காலமும் தேவார, திவ்யப் பிரபந்த காலமும், சுமார் கி பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு முடியவும் அதற்குச் சற்றுப் பின்னரும் நீடித்திருந்தன. ஆகையால் இந்த ஐந்து வகை கால உட் பிரிவுகளில், சில, ஒன்றுக்

றொன்று சம காலத்தையும் தொடர்பையும் பெற்றே அமைந்திருக்கின்றன. இதிலிருந்து தமிழ் இலக்கிய வளர்ச்சி எந்தக் காலத்திலும் குன்றுமல் தொடர்ந்தே பல துறைகளில் நிகழ்ந்திருக்கிறது என்று தெளிவாகத் தெரிகிறது. இதேபோல், இடைக் காலத்தை, சிற்றிலக்கணங்கள் காலம், பெருங் காப்பியங்கள் காலம், புராணங்கள் முதலிய சமய நூல்கள் காலம், இலக்கிய உரைகள் காலம், சிறு காவியங்கள், பிரபந்தங்கள் முதலியன காலம், என்று ஐவகையாகப் பிரிக்கலாம். இவ்வித உட் பிரிவுகளில் ஒன்று மற்றொன்றுக்குப் பின்னர் இயங்கியது என்று கொள்ளக்கூடாது.

## II

மக்கள் சமுதாயத்தின் கலை வாழ்வின் சரித்திரத்தில், ஐரோப்பாவில் தோன்றிய சமய மறுமலர்ச்சிக் காலத்திற் கப்புறம், கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வடமொழி இலக்கியத்தைக் கண்டு பிடித்த சம்பவத்திற் குள்ள உலக சரித்திர முக்கியத்துவம் வேறெந்த சம்பவத்திற்கும் இல்லை என்று அம் மொழியின் வரலாற்றை எழுதியிருக்கும் சிறந்த ஆங்கிலப் புலவர் ஆர்தர் மக்தானல் கூறுகிறார்.[1] இந்தியாவைச் சேர்ந்த வடமொழி இலக்கியத்தை, மேனுட்டு அறிஞர் பலர் படித்து ஆராய்ந்ததின் பயனுகச் சென்ற நூற்றாண்டில் அறிவுத் துறையிலும் கலைத் துறையிலும் ஏற்பட்ட விளைவுகளின் பெருக்கத்தையே இந்த ஆசிரியர் இவ்வாறு எடுத்துக் காட்டியிருக்கிறார். ஒப்பு

1. "Since the Renaissance there has been no event of such world wide significance in the history of culture as the discovery of the Sanskrit literature in the latter part of the eighteenth century." A. History of Sanskrit Literature by Dr. Arthur. A. Macdonell. Introductory page 1.

நோக்கும் மொழி நூல் (Comparative Philology) என்பது, மேனாட்டு அறிஞர் வட மொழியைத் தெரிந்த பிறகு வகுத்துக் கொண்ட ஒரு நூதன சாத்திரமாயிற்று. சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக எத்தனையோ மேனாட்டுப் புலவர் வட மொழி பயின்று, அதில் சிறந்த தேர்ச்சி பெற்று, இந்தியாவின் கலைகளையும், இலக்கியத்தையும், தத்துவ ஞானத்தையும், சமயங்களையும் வரலாற்றையும் நுட்பமாக, பல கோணங்களிலிருந்து ஆராய்ந்து எண்ணிறந்த நூல்களையும் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் எழுதி பாரத நாட்டிற்கு அரும்பணி ஆற்றி வந்திருக்கிறார்கள்.

இவ்வாறு பாரத நாட்டிற்குக் கலைப்பணி ஆற்றிய மேனாட்டு அறிஞரில், ஒரு சிலரைத் தவிர, மற்றவர் எல்லாம், அந்நாட்டின் தென் கோடியிலுள்ள தமிழ் நாட்டின் பழமையான சரித்திரத்தையோ, மொழியையோ, இலக்கியத்தையோ பயிலவோ, ஆராயவோ முன் வரவில்லை. தமிழ் மொழியின் மீது ஆர்வம் கொண்ட பெஸ்கி என்ற வீரமா முனிவர், ஜி. யு. போப், வின்ஸ்லோ, பெர்சிவல், கால்டுவெல் முதலியோர், தங்களுடைய சமயப் பிரசாரத்திற்கே அம் மொழியைக் கற்றாரேனும், அதிலுள்ள இலக்கணத்திலும், இலக்கியத்தின் ஒரு பகுதியிலும் நல்ல தேர்ச்சி பெற்று, சில அருமையான ஆராய்ச்சி நூல்களையும், மொழி பெயர்ப்புகளையும், இலக்கணங்களையும் அகராதிகளையும் இயற்றி சிறந்த தமிழ்ப் பணி ஆற்றினார் என்பது உண்மையே. இந்தப் பணி மிகவும் போற்றத்தக்கது; தற்காலத் தமிழ் ஆராய்ச்சிக்குப் பாதைகளையும் தடங்களையும் வகுத்துக் கொடுத்தது. ஆனால் மேலே கூறப் பெற்ற மேனாட்டு அறிஞரும் அவர்களைப் போன்றவரும் பண்டைக் காலத் தமிழ் இலக்கியம், இடைக்காலத் தமிழ் இலக்கியம் ஆகியவைகளின் பரப்பையும், கவித்வ நயங்களையும் சரித்திர முக்கியத்துவத்தையும் பூராவும் உணர்ந்திருந்

தார்கள் என்று கூற முடியாது. அதற்கு வேண்டிய சூழ் நிலையும் சாதனங்களும் அவர்கள் காலத்தில் தக்க அளவி லும் முறையிலும் இல்லாதது தான் காரணம்; அவர் களுடைய ஆர்வக் குறைவோ அல்லது திறமைக் குறைவோ அல்ல.

மேனாட்டு அறிஞரைச் சொல்வானேன்? தமிழ்நாட்டு அறிஞரில் பழைய முறையில் குருகுல வாசம் செய்து பல்லாண்டுகள் தொடர்ந்து தமிழ் கற்று வந்த ஒரு சில பண்டிதரைத் தவிர, மற்றவருக்கும் ஆங்கிலங் கற்ற பெரும்பாலான தமிழருக்கும் இந்த அறிவு கிட்டாமல் தான் இருந்தது. பண்டைத் தமிழ் இலக்கியம், ஏடுகளில் எழுதப்பெற்று, நாட்டின் பல பாகங்களில், மடங்களிலோ, அல்லது பிரபுக்கள், புலவர் ஆகியோரின் இல்லங்களிலோ ஆங்காங்கே சிதறிக் கிடந்தது. அதைச் சார்ந்த நூல்களை மிகச் சிலரே பெரு முயற்சியுடன் பயின்றார். திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை, தமது தொல்காப்பியப் பொருளதி காரப் பதிப்புரையில் கடந்த நூற்றாண்டின் முற்பகுதி யில், தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பூரணமாய்த் தெரிந்தவர் திருவாரூர் வடுகநாத தேசிகர் என்ற ஒருவரே இருந்ததாகவும், சென்னை வேங்கடாசல முதலியார் என் பவர் மிகுந்த சிரமப்பட்டு அவரிடம் சென்று இந்தப் பகுதி யைக் கற்று வந்ததாகவும், அவரிடமிருந்து அவர் புதல்வர் வரதப்ப முதலியார் ஒருவரே கற்றுத் தேர்ந்திருந்ததாக வும், இதனால் அவருக்கு, தொல்காப்பியம் வரதப்ப முதலியார் என்ற பெயர் இருந்தது என்றும் குறிப்பிட் டிருப்பது அக் காலத்திலுள்ள நிலைமையைச் சற்று மிகை படுத்தி யிருப்பினும், ஊன்றி நோக்கற்பாலது. ஏட்டி லிருந்த தமிழ் நூல்கள் எல்லாம் சிதைந்து வந்ததும், தமி ழறிவு நாளடைவில் பயில்வோரின்றிக் குன்றி வந்ததும் இதனால் தெரிய முடிகிறது.

சென்ற நூற்ருண்டில் திருக்குறளும் பிற கீழ்க் கணக்கு நூல்களும், கம்ப ராமாயணமும், பெரிய புராணம் தேவாரம் போன்ற சைவ சமய நூல்களும் திவ்யப் பிரபந்தம் போன்ற வைணவ சமய நூல்களும் அச்சிடப்பெற்று வெளிவந்தன. இவ்வெளியீட்டுப் பணியில் விசாகப் பெருமாள் ஐயர், சரவணப் பெருமாள் ஐயர், காஞ்சி சபாபதி முதலியார், களத்தூர் வேதகிரி முதலியார், ஈழநாட்டுப் புலவர் ஆறுமுக நாவலர் போன்ற பல அறிஞர் ஈடுபட்டிருந்தார். சில சில்லறை இலக்கண நூல்களும் தொல்காப்பியப் பகுதிகளும் வெளிவந்தன. இருந்த போதிலும் சென்ற நூற்ருண்டின் இறுதிக் காலத்திலும் இந்த நூற்ருண்டின் தொடக்கத்திலும் தான், பெரும்பாலான பண்டைக் கால இலக்கிய, இலக்கண நூல்களை அச்சிடும் முயற்சியைச் சில பேரறிஞர் கைக்கொண்டார்.

1850-க்கு முன்பு மழவை மகாலிங்கய்யர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தின் நச்சினர்க்கினியர் உரையைப் பதிப்பித்த பிறகு, 1869-ல் அதன் இளம்பூரணரின் உரையை, சுப்பராய செட்டியார் வெளியிட்டார். 1885-ல் அதன் பொருளதிகாரத்தையும், 1893-ல் அதன் சொல்லதிகாரத்தையும் தமிழார்வம் மிகுந்த சி. வை. தாமோதரம் பிள்ளை பெரு முயற்சியுடன் முதலாவதாக அச்சிட்டார். அத்துடன் 1887-ல் கலித் தொகையையும், சற்று முன்னர் வீர சோழியத்தையும் பதிப்பித்து வெளியிட்டார். இக் காலத்தில் தான் தமிழ் இலக்கிய வானில் பேரொளியாயும், பதிப்பாசிரியர்கள் எல்லோரிலும் தலைசிறந்தவராயும் திகழ்ந்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், தமிழ் செய்த தவப் பயனுய்த் தோன்றினர். அவர், 1887-ல் ஜீவக சிந்தாமணியையும், 1889-ல் பத்துப் பாட்டையும், 1892-ல் சிலப்பதிகாரத்தையும், 1894-ல் புறநானூற்றையும், 1898-ல் மணிமேகலையையும், 1904-ல் பதிற்றுப் பத்தையும்

செம்மையாகப் பரிசோதித்து, பழைய உரைகளுடனும் பல குறிப்புக்களுடனும் மேற்கோள் விபரங்களுடனும் அச்சிட்டுப் பதிப்பித்து என்றும் அழியாத் தமிழ்த் தொண்டு புரிந்தார். 1914-ல் பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் நற்றிணையையும், 1915-ல் தி. சௌ. அரங்கசாமி ஐயங்கார் குறுந்தொகையையும், 1920-ல் சென்னை கம்பர் விலாசம் இராஜகோபாலய்யங்கார், ரா. இராகவய்யங் காரால் பரிசோதிக்கப் பெற்ற அகநானூற்றையும் 1924-ல் டாக்டர் சாமிநாதய்யர் பெருங் கதையையும் அச் சிட்டு வெளியிட்டார்கள். திரு. பவாநந்தம் பிள்ளை. கா. நமசிவாய முதலியார் முதலியோரின் முயற்சியால் தொல்காப்பிய உரைகள் நன்முய் அச்சிடப்பெற்று வெளி வந்தன. மேலே கூறிய நூல்கள் சிலவற்றிற்குப் பிற பதிப்புகளும், அவைகளை முதலாவதாகப் பதிப்பித்த ஆசி ரியர் மூலமும் வேறு ஆசிரியர் மூலமும் பின்னர் தோன் றின. ஆகவே 1875 முதல் 1925 வரையுள்ள அரை நூற் றுண்டு காலத்தில் சங்க இலக்கியம் என்று கருதப்பெறும் எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும், தொல்காப்பியமும் அதன் சிறந்த உரைகளும், பழைய காப்பியங்களில் முக்கிய மானவையும் கீழ்க்கணக்கு நூல்களும் நல்ல முறையில் பதிப்பிக்கப் பெற்று அச்சில் வெளி வந்தன. சமய இலக்கியம் எல்லாமும் இவ்வாறே அச்சிடப்பட்டு வெளி வந்தது.

இவ்வித நிகழ்ச்சிகள் பல தமிழ் அறிஞரின் கண் களைத் திறக்கச் செய்து அவரது சிந்தனையையும் கிளப்பின, பண்டைத் தமிழ் நாட்டைப் பற்றியும், தமிழரின் சரித் திரம், சமுதாயம் ஆகியவைகளைப் பற்றியும், அதன் பழம் பெருமைகளைப் பற்றியும் தெரிந்துகொள்ள இந்நூல்கள் எல்லாம் சிறந்த சாதனங்களாக உதவின. வட மொழி இலக்கியத்தின் பரப்பையும் பெருமையையும் தெரிந்த

வுடன் மேனாட்டு அறிஞர், புராதன இந்தியாவையும் அதன் நாகரிகம், கலைகள், தத்துவங்கள், பண்பாடுகள், இலக்கியங்கள் ஆகியவைகளைப் பற்றியும் ஆராய்ந்ததின் பயனாக ஒரு புது ஒளி மண்டலத்தையே கண்டு பிடித்ததாக எவ்வாறு கருதினாரோ அவ்வாறே தமிழ் அறிஞர், பண்டைத் தமிழ் இலக்கியத்தைப் பார்த்துப் படித்துத் தெரிந்தவுடன் ஒரு புது உலகத்தையே கண்டதாகப் பெருமிதம் அடைந்தார்; அதைப் பற்றிய விபரங்களைத் தெரிந்துகொள்ள ஆர்வத்துடன் பாடுபட்டு ஆராய்ந்தார். பண்டைத் தமிழ் நூல்களிலும், அவைகளுக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின், வட மொழியிலும் தமிழ் மொழியிலும் சிறந்த புலமை பெற்றவரால் எழுதப்பெற்ற உரைகளிலும் காணப்பெற்ற விஷயங்கள் எல்லாம் சரித்திர உண்மைகள் என்று கொண்டு பல தமிழ் அறிஞர் ஆராய்ச்சிகள் செய்தார். இவ்வித ஆராய்ச்சிக்கு, கிரேக்க, லத்தீன் மொழிகளில், சரித்திர ஆசிரியர் சிலர், தங்கள் நூல்களில், தென் இந்தியாவைப் பற்றி எழுதி வைத்த குறிப்புக்களும், வட மொழி, பிராகிருத மொழிகள் ஆகியவைகளிலுள்ள இலக்கியங்களில் தென்னாட்டைப் பற்றிக் காணப்பெற்ற சில விபரங்களும் பயன்படுத்தப்பட்டன.

## III

பண்டைத் தமிழ் இலக்கியம் பூராவும் அச்சில் வெளி வருவதற்கு முன்னரே, தற்கால முறைகளைத் தழுவிய தமிழ் ஆராய்ச்சி ஒருவாறு தொடங்கியது என்று கூறலாம். இவ்வித ஆராய்ச்சியில் ஈடுபட்டவர் மேனாடுகளைச் சேர்ந்தவர்கள். கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் வீரமா முனிவர் என்ற இத்தாலியப் பாதிரி, தமது கிறிஸ்துவ சமயப் பிரசாரத்திற்காகத் தமிழ் கற்று, அதில் நல்ல பாண்டித்யம் பெற்று, தமிழ் ஆராய்ச்சியிலும் ஈடு

பட்டார். அவர் சதுரகராதி என்ற ஒரு அகராதியையும், தொன்னூல் என்ற, நன்னூலைப் பெரும்பாலும் தழுவிய ஒரு இலக்கண நூலையும் புது முறையில் இயற்றினார். இவர் போலவே, சென்ற நூற்றாண்டில், ராட்லர், ரீனியஸ் பவர், போப். வின்ஸ்லோ, பெர்சிவல், கால்டுவெல், பர்னல் போன்ற மேனாட்டுக் கிறிஸ்தவ அறிஞர் பலரும், பிற மேனாட்டுப் புலவரும், தமிழ் மொழியைப் பற்றியும் அதிலுள்ள இலக்கியத்தைப் பற்றியும் ஆராய்ச்சி செய்து, அகராதிகள், இலக்கணங்கள், கட்டுரைகள், நூல்கள், மொழிபெயர்ப்புகள் முதலியவற்றை எழுதி வெளியிட்டார்கள். இந்த கூட்டத்தார் செய்த அருமையான நூல்களுக்கு ஒரு உதாரணமாக ராட்லரின் அகராதியைக் கூறலாம். அதில் தமிழ்ப் பதங்கள் ஒழுங்காகத் தொகுக்கப்பெற்று அவைகளுக்கு ஆங்கில மொழி பெயர்ப்புகளும் பொருள் விளக்கங்களும் கொடுக்கப்பட்டிருக்கும் முறை ஆராய்ச்சித் தன்மையுடையது. 1856-ல் கால்டுவெல் பிரசுரித்த திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of the Dravidian Languages) என்ற ஆங்கில நூல் தான் தற்காலத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் எழுந்த முதல் பெரிய நூல்; அதன் முகவுரை அவருடைய பன்மொழிப் பயிற்சியையும் அறிவின் நுட்பத்தையும் காட்டுகிறது. 1859-ல் சைமன் காசி செட்டி என்ற ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் 'தமிழ் ப்ளுடார்க் (Tamil Plutarch) என்ற தலைப்பில் தமிழைப் பற்றியும் தமிழ்ப் புலவரைப் பற்றியும் ஆராய்ந்து ஒரு நூலை வெளியிட்டார். 1858-ல் இந்திய கிறிஸ்தவ தமிழ் அறிஞரான சாமுவேல் பிள்ளை என்பவர் தொல்காப்பிய நன்னூல் என்ற ஒரு தெளிந்த இலக்கண நூலை எழுதினார். அதில் அவர், தொல்காப்பியத்திற்கும் நன்னூலுக்கும் உள்ள தொடர்பைக் காட்டி, தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளின் அடிப்படையான இலக்கணக்

கொள்கைகளில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் சுருக்கமாகக் கொடுத்து, நுட்பமான ஆராய்ச்சி செய்திருக்கிறார். ஆகவே தற்காலத் தமிழ் ஆராய்ச்சி, இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்குமுன் சில கிறிஸ்தவ தமிழ்ப் புலவர்களால் தொடங்கப் பெற்றது. அவர்கள் தமிழ் மொழி, இலக்கணம் ஆகியவைகளைப் பற்றியே பெரும்பாலும் ஆராய்ந்தார்கள்.

1850 முதல் தொடங்கி நடைபெற்று வரும் தமிழ் ஆராய்ச்சியை, ஒவ்வொன்றும் சுமார் முப்பது ஆண்டுகளடங்கிய நான்கு காலப் பகுதிகளைச் சேர்ந்ததாகப் பிரித்துக் கருதலாம். ஒவ்வொரு காலப் பகுதியும் சற்றேறக்குறைய ஒரு தலைமுறைக்குச் சமமாகும். இவ்வாறு செய்தால் முதல் தலைமுறையில் தனி நாயகமாய் விளங்கும் ஆராய்ச்சியாளர் கால்டுவெல் தான். அவர் காலத்தில் ஆராய்ச்சி சாதனங்கள் மிகவும் குறைவாக இருந்ததால், தமிழ் இலக்கியம் சம்பந்தமாக அவர் கொண்ட கருத்துக்கள் பல தவறுதலாய் இருக்கின்றன. இருந்த போதிலும் அவருடைய தமிழ்ப்பற்றும் மொழி நூலறிவும் ஆராய்ச்சித் திறனும் போற்றத் தக்கவை. தற்காலத் தமிழ் ஆராய்ச்சியின் முதற் காலப் பகுதியின் தனிப்பெரும் நூலாக அவருடைய ஒப்பிலக்கணத்தைச் சொல்ல வேண்டும். இன்றும் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய அரிய மொழி நூல் விஷயங்கள் பல அதில் பொதிந்து கிடக்கின்றன.

இரண்டாவது காலப் பகுதியில் நடைபெற்ற ஆராய்ச்சிக்குப் பண்டைத் தமிழ் இலக்கியம் அச்சுப் புத்தகங்கள் மூலம் கிடைத்து விட்டது. இக் காலத்தில், பி. சுந்தரம் பிள்ளை, வி. கனகசபை பிள்ளை, வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி, டி. சவரிராய பிள்ளை போன்ற அறிஞரும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் மதுரை

யில் பாண்டித்துரைத் தேவர் என்ற பிரபுவால் நிறுவப் பெற்ற தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த வித்வான்களாய் இருந்த ரா. இராகவய்யங்கார், அரசன் சண்முகனார் மு. ரா. சுப்பிரமணிய கவிராயர், மு. இராகவய்யங்கார், திரு. நாராயணய்யங்கார் போன்ற பண்டிதர்களும் ஈழநாட்டுப் புலவர்களான அ. குமாரசுவாமி பிள்ளை, ஆ. முத்துத் தம்பி பிள்ளை, த. கனகசுந்தரம் பிள்ளை, நா. கதிரைவேற் பிள்ளை, சுவாமிநாத பண்டிதர் போன்றவரும் மதுரையிலிருந்து வெளிவந்த 'செந்தமிழ்' பத்திரிகையில் கட்டுரைகள் எழுதிய பிறரும், இன்னும் பலரும் தமிழ் ஆராய்ச்சியில் ஆர்வத்துடன் முனைந்து நின்று எத்தனையோ கட்டுரைகளையும் நூல்களையும், அகராதிகளையும் நூற் பதிப்புக்களையும் வெளியிட்டார்கள். இவைகளில் கனகசபை பிள்ளையின் '1800 வருடங்களுக்குமுன் தமிழர்' (Tamils Eighteen Hundred Years Ago) என்ற ஆங்கில நூல் தான் மிகச் சிறந்த தனி ஆராய்ச்சி நூல்.

வெகு சமீப காலம் வரை தமிழ் ஆராய்ச்சியைச் சார்ந்த நூல்களும் கட்டுரைகளும் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே எழுதப்பெற்று வந்திருக்கின்றன. இதற்கு நமது நாட்டின் கல்வித் துறையிலும், பொது மக்களின் மனப் போக்கிலும் அந்நியரின் ஆட்சியால் ஏற்பட்டிருந்த சூழ்நிலை ஒரு முக்கிய காரணமாய் இருந்தது. தமிழ் ஆராய்ச்சியைப் பற்றிய விஷயங்களை, கீழ்நாட்டுக் கலைப் பயிற்சி பெற்ற மேனாட்டு அறிஞருக்கும் இந்தியாவில் பிற பாகங்களிலுள்ள புலவருக்கும், தெரிவிக்க வேண்டிய அவசியம் மற்றொரு முக்கிய காரணமாய் இருந்தது. இந்த தேவைக்கொப்ப கனகசபை பிள்ளை தமது நூலை ஆங்கிலத்தில் எழுதினார். பண்டைத் தமிழ் இலக்கியத்தில் காணப் பெறும் விஷயங்களையும், வெளி நாட்டார் நூல்களிலும் இந்திய இலக்கியத்திலும் பண்டைத் தமிழரைப் பற்றியுள்ள குறிப்புக்களையும் தொகுத்து, அவைகளை நேர்மையுட

னும், நுட்பத்துடனும் சரித்திரப் பாங்குடனும் பரிசீலனை செய்திருப்பது கனகசபை பிள்ளை செய்திருக்கும் ஆராய்ச்சி யின் முக்கிய அம்சம். அவர் கட்டிய முடிபுகளில் பல இன்று ஏற்றுக்கொள்ளத் தக்கதாயில்லை. எனினும், தற்காலத் தமிழ் ஆராய்ச்சியின் இரண்டாம் காலப் பகுதியில் இவரு டைய நூல்தான் முதன்மையானது. சுந்தரம் பிள்ளை நல்ல ஆராய்ச்சித் திறம் படைத்தவர்; ஆனால் அவர் அதிகமாய்த் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபடவில்லை. அவர் எழுதியிருக்கும் திருஞான சம்பந்தர் கால ஆராய்ச்சி (Some Mile Stones in the history of Tamil Literature) பத்துப் பாட்டு ஆராய்ச்சி என்ற சிறந்த ஆங்கிலக் கட்டுரைகளிலிருந்து அவருடைய ஆழ்ந்த கல்வியும் அரிய ஆராய்ச்சித் திறனும் விளங்குகின்றன.

## IV

நமது முன்னோர் சரித்திரத்தை நேரடியாக உள்ளதை உள்ளபடி எழுதி வைக்காததால் இன்று ஆராய்ச்சியாளர் படும் அவதிக்கு அளவே இல்லை. பண்டைத் தமிழ் இலக் கியம்—ஏன், பிற்காலத் தமிழ் இலக்கியமும் கூடத்தான்— தமிழ் ஆராய்ச்சிக்கும், தமிழ் நாட்டின் சரித்திர ஆராய்ச் சிக்கும், இன்றியமையாத கருவியாக அமைந்திருந்த போதிலும், அவைகளில் காலக் குறிப்புகள் இல்லாத தாலும், சில பாடல்களில் பெயர்களும் பொருளும் தெளி வாய் இல்லாததாலும், அதையே ஆதாரமாகக் கொண்டு செய்யப்பெற்ற சரித்திர ஆராய்ச்சிகளில் பல குறைகளும் முரண்பாடுகளும் காணப்பெற்றன. இவைகளை ஓரளவு தவிர்ப்பதற்குத் தெய்வாதீனமாகப் வேறொரு துறையில் தக்க சாதனங்கள் கிடைத்தன. இந்நாட்டின் பல பாகங் களிலுள்ள கல்வெட்டுகள், சாசனங்கள், செப்பேடுகள் முதலியவற்றைப் பரிசோதனை செய்து அவைகளைப் பிர

காரம் செய்ய சர்க்கார் ஆரம்பித்தது, ஆராய்ச்சிக்கு அரும் துணையாயிருந்தது. தமிழ் நாட்டிலும், அதற்கு அடுத்துள்ள ஆந்திர, கன்னட நாடுகளிலுமுள்ள கோவில்களிலும், பிற இடங்களிலும் இவ்வித ஆதாரங்கள் ஏராளமாய் அகப்பட்டன. இலக்கிய ஆராய்ச்சிக்கும், விசேஷமாக சரித்திர ஆராய்ச்சிக்கும் பயன்படக்கூடிய கல்வெட்டுகள் சாசனங்கள், மெய்க்கீர்த்திகள் முதலியன பல கிடைத்ததால், அவைகளின் துணை கொண்டு தமிழ் நாட்டின் சரித்திரம் பல துறைகளில் ஓரளவு முறையாக எழுதப் பெற்றது. இவ்வாறு தோன்றின சரித்திரங்களை எழுதியவர்களில் தர்ஸ்டன், ஹிராஸ் பாதிரி, துப்ரியல் ஞுவல், ப்ளீட் போன்ற மேனுட்டவரும் எஸ். கிருஷ்ணசுவாமி அய்யங்கார், பி. டி. சீனிவாசய்யங்கார், கே. வி. சுப்பிரமணிய அய்யர், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, வி. ஆர். ராமச்சந்திர தீக்ஷிதர், டி. வி. சதாசிவ பண்டாரத்தார் போன்ற தமிழ் நாட்டவரும் செய்திருக்கும் பணி குறிப்பிடத் தக்கது.

கல்வெட்டுகள், சாசனங்கள், இலக்கியம் ஆகியவை இன்றியமையாத சரித்திர சாதனங்களாயும், பிற துறைகளுக்கு ஆராய்ச்சிக் கருவிகளாயும் அமைந்த போதிலும் அவைகளின் துணை கொண்டு செய்யப்பெற்ற முடிபுகளைப் பற்றி அபிப்பிராய பேதங்கள் இருப்பது இயல்புதான். ஆயினும், இவ்வித சாதனங்களின் உதவியால், பல விஷயங்களைப் பற்றி, சந்தேகத்திற்கே இடமில்லாத வரலாற்றுச் செய்திகளும் கிடைத்திருக்கின்றன. இந்தத் துறையில் கிருஷ்ண சாஸ்திரி, வெங்கய்யா, டாக்டர் ஹுல்ஷ் கோபிநாத ராவ் முதலியோர் செய்திருக்கும் சேவையைத் தமிழ் அறிஞர் என்றென்றும் பாராட்டிப் போற்ற வேண்டும். இவர்களும், பின்னுல் பிறரும் வெளியிட்ட ஆதாரங்களையும், தமிழ் இலக்கியத்தில் சிதறிக் கிடக்கும் ஆதாரங்

களையும் நல்ல முறையில் பரிசோதனை செய்து, தமிழரின் சரித்திரம், நாகரிகம், கலைகள், இலக்கியம், புலவரின் வாழ்க்கை முதலியவைகளைப் பற்றி, எம். சீனிவாசய்யங்கார், மு. இராகவய்யங்கார், பி. டி. சீனிவாசய்யங்கார், கே. எஸ். சீனிவாச பிள்ளை, சோமசுந்தர தேசிகர், கே. ஜி. சேஷய்யர், கே. ஜி. சங்கரன், தி. நா. சுப்பிரமணியன், கே. என். சிவராஜ பிள்ளை போன்ற சிறந்த அறிஞரும் பிறரும் அநேக நூல்களையும் கட்டுரைகளையும் எழுதி, தமிழ் ஆராய்ச்சியை வளம் பெறச் செய்து, தமிழ் அறிவையும் பெருக்கினார்கள். இந்தப் பணி, தற்காலத் தமிழ் ஆராய்ச்சியின் மூன்றும் காலப் பகுதியில் பெரும்பாலும் நடைபெற்றது. இக் காலத்தில் தோன்றிய ஆராய்ச்சி நூல்களில், எம். சீனிவாசய்யங்காரின் தமிழ் ஆராய்ச்சிக் கட்டுரைத் தொகுதியும் (Tamil Studies) மு. இராகவய்யங்காரின் சேரன் செங்குட்டுவன் என்ற நூலும், பி. டி. சீனிவாசய்யங்காரின் தமிழரின் சரித்திரமும் (History of the Tamils), கே. எஸ். சீனிவாச பிள்ளையின் தமிழ் வரலாறு என்ற நூலும் முதன்மையானவை. இவைகளில் காணப்பெறும் கொள்கைகளைப் பற்றியோ, இலக்கியக் கருத்துக்களைப் பற்றியோ கருத்து வேறுபாடுகள் பல இருப்பினும், நூல்கள் கூர்மையான அறிவுடன் செய்யப்பெற்ற ஆராய்ச்சியின் விளைவு என்பது வெளிப்படை. கணிதம், சோதிடம் ஆகிய துறைகளில் பெரும் புலமை பெற்று, அதைத் தமிழ் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தி அரிய நூல்களையும் கட்டுரைகளையும் எழுதியவர்களில் கீல்ஹோர்னும், எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையும் முதன்மையானவர். அவர்கள் தமிழாராய்ச்சிக்குச் செய்திருக்கும் பணி மறக்கத் தக்கதில்லை.

இலக்கியம், கல்வெட்டுகள், சாசனங்கள், பிற நாட்டுக்காரர் எழுதி வைத்த நூல்களிலுள்ள குறிப்புகள்

ஆகியவை மூலம் தமிழ் ஆராய்ச்சி வளம் பெற்றுக்கொண்டு வந்த போதிலும், அநேக முக்கியமான விஷயங்களைப் பற்றித் தெளிந்த முடிவுகள் ஏற்படும் நிலைமை இன்னும் வரவில்லை. தமிழ் நாட்டில் தமிழில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுகளும் சாசனங்களும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னுள்ள காலத்திற்குக் கிடைத்ததாகத் தெரியவில்லை.[1] ஆகையால் பண்டைத் தமிழ் இலக்கியத்தின் வரலாற்றுக்கும் நாட்டின் சரித்திரத்திற்கும், தமிழ் இலக்கியமும் பிற நாட்டாரின் குறிப்புகள் மாத்திரமே ஓரளவுக்கு ஆதாரங்களாய் இருக்கின்றன. நாட்டின் சரித்திரத்தைத் தொடர்ச்சியாகத் தெரிவதற்கு அவசியமான அளவுக்கு இவ்வித ஆதாரங்கள் இல்லை; சிறந்த தமிழ்ப் புலவர் பலரின் காலத்தைத் திட்டமாய் நிர்ணயிக்க முடியவில்லை. கிடைத்த ஆதாரங்களை ஆராய்ந்து தெளிவதிலும் பல சிக்கல்கள் தோன்றியிருக்கின்றன. இந்த நிலைமையில் தமிழ் ஆராய்ச்சி நல்ல முறையில் வளர்ந்து பயனுடையதாயிருப்பதற்குப் புதிய ஆராய்ச்சி முறைகள் அவசியமாயிற்று.

## V

நூல்களில் கிடக்கும் அகச் சான்றுகளையும், சொற்களின் சரித்திரத்தையும் பிரயோகத்தையும் தேர்ந்து ஆராயும் முறை சில புலவர்களால் கையாளப்பெற்றது. இது ஒரு புதிய முறையாகவே அமைந்தது. நூல்களிலுள்ள பொருளையும் நடையையும் நன்றாய் ஓர்ந்து, அவைகளுக்கும், தமிழிலுள்ள மற்ற நூல்களுக்கும், பிற மொழிகளிலுள்ள நூல்களுக்கும் தொடர்பு இருந்தால் அதைக்

---

1. பிராகிருதத்திலும் வட மொழியிலும், கிரந்தலிபிகளில் எழுதப்பெற்ற சில பல்லவர் காலத்து சாசனங்களும் செப்பேடுகளும் இதற்கு முன்னுள்ள காலத்திற்கும் கிடைத்திருக்கின்றன.

கண்டு பிடித்து, ஒப்பு நோக்கி, தமிழ் மொழியும் இலக்கியமும் வளர்ந்த வகையைப் பரிசிலனை செய்து, சொற்களின் சரித்திரத்தையும் பிரயோகங்களையும் தேர்ந்து. இவைகளைச் சாதனங்களாகக் கொண்டு, தமிழ்ப் புலவரைப் பற்றியும், அவர்கள் இயற்றிய நூல்கள், வாழ்ந்த காலம் முதலியவைகளைப் பற்றியும் ஆராய்ந்து தெளியும் முயற்சிகளில் சில அறிஞர் ஈடுபட்டார்கள். இந்த முறையை, முன்னர் எம். சீனிவாசய்யங்கார் போன்ற சில ஆராய்ச்சியாளர்கள் ஓரளவு கையாண்டிருந்த போதிலும், அதை மிகுந்த திறமையுடனும், பரந்த அறிவுடனும், விருப்பு வெறுப்பற்ற நேர்மையுடனும் கையாண்டு தமிழ் ஆராய்ச்சித் துறையைப் பண்படுத்தினவர் காலஞ்சென்ற எஸ். வையாபுரிப் பிள்ளை. சென்னைப் பல்கலைக் கழகத்தார் பிரசுரித்த தமிழ்ப் பேரகராதியையும், பல நிகண்டுகளையும் பிரபந்தங்களையும் பதிப்பித்ததிலிருந்தும், தமிழ் இலக்கியத்தை இளமையிலிருந்தே தொடர்ந்து ஆர்வத்துடன் கற்று, அநுபவித்து, தற்கால முறைகளைத் தழுவி ஆராய்ந்ததிலிருந்தும், தமிழ் மொழியின் அமைப்பைப் பற்றியும் அதைச் சார்ந்த சொற்களின் வளர்ச்சியைப் பற்றியும் அவர் நிகரற்ற பாண்டித்யம் பெற்றிருந்தார். இதன் பயனாக அவர் பல துறைகளில் தமிழ் ஆராய்ச்சி செய்து அநேக நூல்களையும் கட்டுரைகளையும் எழுதி, நான்காம் காலப் பகுதியின் தலைசிறந்த ஆராய்ச்சியாளராக விளங்குகிறார், இலக்கிய உதயம், இலக்கிய தீபம் இலக்கிய சிந்தனைகள், இலக்கண சிந்தனைகள், தமிழின் மறுமலர்ச்சி, தமிழர் பண்பாடு, உரைமணி மாலை, தமிழ்ச் சுடர்மணிகள் முதலிய தலைப்புகளுடனுள்ள நூல்களில் வையாபுரிப் பிள்ளையின் ஆராய்ச்சிக் கட்டுரைகள் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. இவர் எழுதியிருக்கும் தனி நூல்கள், கட்டுரைகள் பதிப்புரைகள் எல்லாம் ஒரே புத்தகத்தில் தொகுக்கப் பெற்றால்தான் இவரது சிறந்த

ஆராய்ச்சித் திறனும் தமிழ்ப் பணியும் தெளிவாய் விளங்கும். அவர் சில விஷயங்களைப் பற்றியும் பண்டைத் தமிழ்ப் புலவரின் காலங்களைப் பற்றியும் கொண்ட முடிபு களைப் பற்றி நியாயமாகவே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம்; அவருடைய தனி ஆராய்ச்சி முறையில் சில குறைபாடுகள்கூட இருக்கலாம்; ஆனால் மொத்தத்தில், தமிழ் ஆராய்ச்சித் துறையில், திறமையுடனும் நேர்மை யுடனும் அவர் செய்திருக்கும் சேவை போல் வேறு எவரும் செய்யவில்லை. அவருடைய மரணத்தால் தமிழ் ஆராய்ச்சி உலகம் அடைந்திருக்கும் நஷ்டத்தை அளவிட முடியாது. இப்போது பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவ ராயிருக்கும் டாக்டர் ஆர். பி. சேதுப் பிள்ளை "ஊரும் பேரும்" என்ற ஒரு ஆராய்ச்சி நூலை எழுதி, தமிழ் நாட் டில் ஊர் பெயர்கள் வந்த விதத்தையும், அதில் இலக்கியப் பண்பும் காணப்பெறுவதையும் எடுத்துக் காட்டியிருக் கிறார். நான்காம் ஆராய்ச்சிக் காலப் பகுதியாகிய இன்று இன்னும் பல நல்ல ஆராய்ச்சி நூல்கள் தோன்றலாம். ஏனென்றால் எங்கு பார்த்தாலும் கலாசாலைகளிலும் கழகங்களிலும் தமிழ் ஆர்வம் ஓங்கி வருகிறது; இது வெறும் நுரை போன்ற ஆர்வமாய் இல்லாமல் ஆக்க வேலையில் பரிணமிக்க வேண்டும் என்று தமிழ் அன்பர் விரும்புவர்.

இவ்வாறு கடந்த நூறு ஆண்டுகளுக்கு மேலாகத் தற்காலத் தமிழ் ஆராய்ச்சி நடைபெற்று வந்திருந்த போதிலும், அதைச் சார்ந்த நூல்களும் கட்டுரைகளும், சாதாரணமாகத் தமிழ் மாணவருக்கு அகப்படாதவாறு சிதறிக் கிடக்கின்றன. அத்துடன் அதன் விளைவாக ஏற் பட்டு வளர்ந்து கொண்டிருக்கும் அறிவையோ, முடிபு களையோ தெளிவாகத் தெரிவதற்குக் கோவையாக எழுதப் பெற்ற சுருக்கங்களும் நூல்களும் இருப்பதாகத் தெரிய

வில்லை. ஆகையால் தமிழ் மாணவருக்குப் பயன்படும் முறையில் இவ்வித ஆராய்ச்சியின் சரித்திரத்தையும் விபரங்களையும் பற்றி ஒரு நூல் எழுத வேண்டும் என்ற எண்ணம் பிறந்தது. அதே சமயத்தில், தற்காலத்தில் தமிழ் ஆராய்ச்சி நடைபெற்றிருப்பது போல், பண்டைக் காலத்திலும் இடைக் காலத்திலும் நடந்திருக்க வேண்டும் என்ற கருத்து தோன்றவே, அக்காலங்களில் நிகழ்ந்த ஆராய்ச்சியின் பல முகங்களைப் பற்றி, முதலில் கூறி விட்டுத் தற்காலத்திற்கு வருவதுதான் பொருத்தமாயும் சரித்திர ஒழுங்கைப் பின்பற்றியதாயுமிருக்கும் என்று கருதி இந்த நூலை, தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சியைக் காட்டக்கூடிய முதல் புத்தகமாக எழுதியிருக்கிறேன். இதையே அஸ்திவாரமாக வைத்து தற்காலத் தமிழ் ஆராய்ச்சியைப் பற்றிய இந்த நூலின் மூன்றும் பாகமும் (இரண்டாம் புத்தகம்) பின்னர் வெளிவரும்.

இந்த நூலில், பல விஷயங்களைப் பற்றி, புதிதாக நானாகவே ஆராய்ச்சி செய்திருப்பதாக ஒருவரும் கருதக் கூடாது. மற்றப் புலவர் செய்திருக்கும் தமிழ் ஆராய்ச்சியே இந்த நூலுக்குப் பொருள். ஒரு பொருளைப் பற்றிப் பல புலவர் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டிருந்தால் அவைகளில் எது பொருத்தமானது என்று எனக்குத் தோன்றியதோ அதைக் காரணங் கூறி விளக்கியிருக்கிறேன். தவிரவும் பிறருடைய அபிப்பிராயங்களில் சிக்கல்களோ முரண்பாடுகளோ இருந்தால், அவைகளைப் பரிசீலனை செய்து ஆங்காங்கே எனது கருத்தைத் தெரிவிக்க முயன்றிருக்கிறேன். இந்த அளவில் தான் எனது ஆராய்ச்சி நிற்கும். எந்தக் காலத்திலும் எந்த விஷயத்தைப் பற்றியும், மற்றத் துறைகளில் இருப்பது போல, இலக்கிய ஆராய்ச்சித் துறையிலும் கருத்து வேறுபாடுகள் இருப்பது இயல்பு. ஆதலால் இந்த நூலில் கூறப்பெற்

திருக்கும் பல அபிப்பிராயங்களையும், கட்டப்பெற்றிருக்கும் சில முடிபுகளையும் எல்லாத் தமிழ் அறிஞரும் ஏற்றுக்கொள்வர் என்று நான் எதிர்பார்க்கவில்லை. தமிழ் விஷயங்களைப்பற்றி எழுதியிருக்கும் எல்லோரையும் பெயர் சொல்லிக் குறிப்பிடுவது என்பதும் அவர்களுடைய கருத்துக்களைத் தனித்தனியாக ஆராய்வது என்பதும் இயலாத காரியம். இந்த முயற்சியில் நான் ஈடுபட வில்லை; எனது நோக்கத்திற்கு அது அவசியமும் இல்லை. ஆனால் கிடைக்கும் ஆதாரங்களை வைத்து, விருப்பு வெறுப்பின்றி, நேர்மையான முறையில் தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சியை நான் எனது சிந்தனையில் பார்த்தபடி வரைந்திருக்கிறேன். ஆகையால் இந்த நூல் திறந்த மனமுடைய தமிழ் மாணவருக்கும் தமிழன்பருக்கும் பயன்படும் என்பது எனது நம்பிக்கை. இந்த நூலில், எனது அறியாமையாலும் கவனக் குறைவாலும் ஏற்பட்டிருக்கும் பிழைகளை அறிஞர் மன்னிப்பாராக.

திருநெல்வேலி<br>30—7—1958 } ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்.

# தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி

## பண்டைத் தமிழ் இலக்கியமும் தமிழரும்

பண்டைக் காலத்தில் தமிழ்ப் புலவர் பலர் தங்கள் பசியையும் மறந்து கவிதை புனைந்தார். இலக்கண இலக்கிய நூல்களையும் அவர் இயற்றினர். ஆனால் அவைகளை எல்லாம் ஆராய்ந்து தங்களுடைய கருத்துக் களையும் அநுபவங்களையும் நேரடியாக எழுதினரா என்று பார்த்தால், எழுதி வைக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். அவர் எழுதி வைத்திருந்தால் அவை நமக்குக் கிடைக்கவில்லை. இதனால் பாட்டுக் களும் நூல்களும் ஆராயப் பெறவில்லை என்பதுவது, அவைகளை ஆக்கிய புலவர் நூலாராய்ச்சியில் ஈடுபட வில்லை என்பதுவது துணிய முடியாது.

பண்டைக் காலத்துத் தமிழ் இலக்கியத்தைச் சங்க இலக்கியம் என்று சொல்வது தமிழ் மரபு. பாண்டிய மன்னரின் ஆதரவில் மூன்று தமிழ்ச் சங்கங்கள் வெவ் வேறு காலங்களில் தோன்றி நூலாராய்ச்சியில் ஈடு பட்டு, நயமுள்ளவைகளைப் போற்றிப் பாராட்டியும், குற்றமுள்ளவைகளை ஏற்க மறுத்தும், இயங்கி, வெகு

காலத்திற்குப்பின் மறைந்தன என்று கதைகள் நிலவி வருகின்றன. இவை பூராவும் சரித்திர அடிப்படையில் எழுந்திருக்கின்றனவா என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. இவை மூன்ரும் பாகத் தில் தற்காலத் தமிழ் ஆராய்ச்சியைக் கவனிக்கும் பகுதி யில் ஆராயப் பெறும். இந்தக் கதைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய பொருள் ஒன்று உண்டு. பண்டைக் காலத்தில் நூல்களைப் பற்றியும் இலக்கியத் தைப் பற்றியும் ஆராய்ச்சி நடந்திருக்க வேண்டும்; இவ்வித ஆராய்ச்சிக்குப் பேச்சும் வாதமும் கருவிகளாக அமைந்திருக்க வேண்டும்; நூல்கள் மிகுந்த கண்டிப் புடன் ஆராயப் பெற்றிருக்க வேண்டும்—என்பதையும், பிழைகளையோ குற்றங்களையோ அக்காலத்துப் புலவர் எள்ளள வேனும் அநுமதிக்க மாட்டார் என்பதையும் நக்கீரர், சீத்தலைச் சாத்தனுர் போன்றவரைப் பற்றி யுள்ள சில கதைகள் தெளிவாகக் காட்டுகின்றன. இலக்கிய மரபையும் இலக்கண விதிகளையும் மீறுவதைக் குற்றம் என்று அவர் கொண்டார்.

இப்போது சங்க காலம் என்று பொதுவாக வழங் குவது கடைச் சங்க காலமே. அக் காலத்து நூல்களி லிருந்து. பண்டைத் தமிழ்ப் புலவர்கள் செய்த தமிழ் ஆராய்ச்சிக்குச் சான்றுகள் கிடைக்கின்றனவா என் பதைக் கவனிக்க வேண்டும். சங்க இலக்கியம் என்பது எட்டுத் தொகையையும் பத்துப் பாட்டையும் குறிக்கும்.[1]

---

1. எட்டுத்தொகை: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு, புறநானூறு.

பத்துப் பாட்டு: திருமுரு காற்றுப் படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப் படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடு நல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடு கடாம்.

தொல்காப்பியம் பண்டைத் தமிழ் நூல்களுக்கெல்லாம் மணிமுடியாய் விளங்குகிறது.[1] அது கடைச் சங்க காலத்திலோ, அதற்குச் சற்று முந்தியோ, பிந்தியோ தோன்றியிருக்க வேண்டும். சொல் வளத்துடனும் கருத்து நுட்பத்துடனும் ஆக்கப் பெற்ற ஆயிரத்து அறுநூற்றுக்கு மேற்பட்ட சூத்திரங்களையுடைய தனிப் பெரும் தமிழ் நூல் அது. எட்டுத் தொகையைச் சேர்ந்த பரிபாடலும் கலித் தொகையும், பத்துப் பாட்டில் முதலாவதாகவுள்ள திருமுருகாற்றுப் படையும், ஐம் பெருங் காப்பியங்களுள் சேர்க்கப் பெற்ற சிலப்பதி காரமும், மணிமேகலையும், திருக்குறள் முதலிய சில பதினெண் கீழ்க் கணக்கு நூல்களும் சங்க காலத்தைச் சேர்ந்தனவா என்பதைப் பற்றி கொஞ்ச காலமாக ஐயப்பாடுகள் தோன்றி யிருக்கின்றன. இவை சங்க கால நூல்களே என்பது தான் முன்னோரின் கொள்கை. இன்றும் சிலர் அவ்வாறே கருதுகிறார். இந்த விஷய மும் தற்காலத் தமிழ் ஆராய்ச்சியை விளக்கும் மூன்றாம் பாகத்தில் பின்னர் ஆராயப் பெறும்.

பண்டைக் காலத்தில் இருந்த தமிழ் நூல்கள் எண் ணற்றவை பல காரணங்களால் மறைந்து விட்டன என்பது உண்மை. ஆனால் மறைந்த நூல்களின் விபரங்களைப் பற்றித் திட்டமாய் ஒன்றும் தெரியவில்லை. ஒரு சில நூல்களுக்கு அவைகளின் பெயர்களும், வேறு சிலவற்றிற்கு, அவைகளிலிருந்து எடுத்து உரையாசிரிய

1. தொல்காப்பியம் இடைச் சங்க நூல் என்பது பழைய மரபு. தொல்காப்பியத்தின் காலத்தைப் பற்றி அதிக வித்தியாச முள்ள கூற்றுகள் கூறப்பட்டிருக்கின்றன. கிறிஸ்து சகத்திற்கு, ஐயாயிரம், பதினாயிரம் ஆண்டுகளுக்குமுன் அது எழுதப் பெற்றது என்பர் சிலர். மற்ற அறிஞர், அதற்கு கி. மு. 600லிருந்து கி. பி. 500 வரையுள்ள காலத்தில் வெவ்வேறு நூற்றாண்டுகளைப் பல காரணங்களைக் காட்டிக் குறிப்பிட்டிருக்கிறார். இதைப் பற்றித் தெளிந்த முடிவு இன்னும் ஏற்படவில்லை.

ராலும் மற்றப் புலவராலும் கையாளப் பெற்ற சில சூத்திரங்களும் பாட்டுக்களும், உரை நூல்களிலிருந்தும், புறத்திரட்டுப் போன்ற பிற்காலத் தொகை நூல்களி லிருந்தும் கிடைத்திருக்கின்றன. இவைகளிலிருந்து, மறைந்த நூல்களில் பல, இயல் இசை நாடகம் சம்பந்தமான அருமையான இலக்கண நூல்களாய் இருந்தன என்று தெரிகிறது. அவைகளின் பெயர் கள், யாப் பருங்கல விருத்தி, யாப் பருங்கலக் காரிகை உரைகளிலும், தொல்காப்பிய உரைகளிலும், அடி யார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையிலும், நன் னூலுக்கு மயிலைநாதர் செய்த உரையிலும், வேறு பல இடைக்கால இலக்கணங்களின் உரைகளிலும், பெரும் பாலும் காணப்படுகின்றன. இலக்கியத்தைப் பொறுத்த வரையில் வளையாபதி, குண்டலகேசி, சங்க காலப் பெருந் தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை, முத்தொள் ளாயிரம் போன்ற பழைய நூல்களின் பெரும் பகுதி களும் இப்போது கிடைக்கவில்லை. சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் மகா பாரதத்திற்கும் இராமாயணத் திற்கும் மொழி பெயர்ப்புகள் செய்யப் பெற்றதாகக் குறிப்புகள் காணப் பெறுகின்றன. பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பது அக் காலத்துப் புலவர் ஒரு வரின் பெயராக இருந்தது. வழி நூல் வகை நான்கு என்பனவற்றில் மொழி பெயர்த்தலும் ஒன்றாகத் தொல் காப்பியத்திலேயே கூறப்பட்டிருப்பது, பண்டைக் காலத்தில் மொழி பெயர்ப்பு நூல்கள் இருந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டுகிறது. ஆனால் அவை சிறிதளவேனும் அகப்படவில்லை. இப்போது தெரியக் கூடிய அளவில் மேலே கூறப்பட்டுள்ளவைதான் மறைந்த நூல்கள்.

இவ்வாறு மறைந்த நூல்களால் தமிழுக்கு ஏற்பட் டிருக்கும் நஷ்டம் மிகப் பெரிதே. எனினும் அதைப்

பற்றி வருந்துவதற்கு அவசியம் இல்லை. ஏனென்றால் வருந்திப் பயன் இல்லை. இல்லாத நூல்கள் இருந்திருக்க வேண்டும் என்று கொண்டு அவைகளின் பொருண்மையை ஊகித்து, கருத்துக் கட்டிடங்களையோ ஆராய்ச்சி மாளிகைகளையோ எழுப்புவதால் பயன் இல்லை. தவிரவும் இன்று நமக்குக் கிடைத்திருக்கும் பண்டைக் கால இலக்கியம், கவித்வ ஆற்றலிலும், சிந்தனைச் செறிவிலும் கற்பனைப் பொலிவிலும் உயர்ந்து, தமிழுக்கு அழியாப் பெருமையை அளிக்கக்கூடிய நிலைமையில் போதிய அளவு இருக்கிறது. அதில் சுவை பொருந்திய சிறந்த கவிதை பொதிந்து, தமிழ் இலக்கியத்தின் ஆணி வேர்கள் போல் படர்ந்திருக்கின்றது. பத்துப் பாட்டு மூவாயிரத்து ஐநூறுக்கு மேற்பட்ட அடிகளை உடையது. எட்டுத் தொகையிலுள்ள சுமார் இரண்டாயிரத்து நானூறு பாடல்கள் கிட்டத்தட்ட நானூற்று எழுபத்தைந்து புலவரால் எழுதப் பெற்று ஏறக்குறைய முப்பதினாயிரத்திற்கு மேலுள்ள வரிகளை உடையன. இவைகளில் பெரும்பாலானவை அரசர், வள்ளல்கள் முதலியோரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, அகம், புறம் ஆகிய இரு பொருளைச் சேர்ந்த துறைகளில் சமைக்கப் பெற்ற பாடல்கள். பரிசில் பெறுவதற்காக அவர்களைப் புகழ்ந்து புலவர்கள் பாடியவையே மிகுதியாகக் காணப்படுகின்றன. திருக்குறள் ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறட்பாக்களைக் கொண்ட அற்புதமான அறநூல். தொல்காப்பியத்தைப் பற்றி முன்னர்க் கூறியிருக்கிறோம். ஆகவே தமிழர், நியாயமாய்ப் பெருமை அடையக்கூடிய முறையிலும், பண்டை கிரேக்கம், சமஸ்கிருதம், சீனம், எபிரேயம் தவிர, வேறு எந்த மொழியிலும் இல்லாத அளவிலும் தன்மையிலும், பண்டைத் தமிழ் இலக்கியம் வளம் பெற்றிருப்பதை எல்லோரும் உணர வேண்டும்.

இவ்வளவு பழமையும் பெருமையும் வாய்ந்த இலக்கியம் பிறந்த தமிழகத்தின் மக்களின் வாழ்க்கை எவ்வாறு அமைந்திருந்தது? கிறிஸ்து சகத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே தமிழ் நாட்டில் வசித்த மக்கள் பண்பாடு மிகுந்த நாகரிகத்தைப் பெற்றிருந்தார்கள்.[1] நாகரிகம் எய்திய சமூகத்தார் எல்லோரும், விலங்குகள் அல்லது ஆதி மனிதரைப் போல் திரிந்து வேட்டையாடிக் கிடைத்ததை உண்டு, இயற்கையில் விளையும் மது முதலிய பானங்களை அருந்தி, குகைகளில் வசித்து, இச்சை எழுந்தபோது குலத்தைப் பெருக்கி வாழாமல், தங்கள் வாழ்க்கைக்குச் சில குறிக்கோள்களை வகுத்துக் கொண்டும், கலைகளைக் கற்றுப் பேணியும் சமயங்களைச் சிருஷ்டித்துக் கொண்டும், உடலுழைப்பாலும் ஊக்கத்தாலும் தங்கள் சமுதாயத்தை அமைத்துக் கொண்டு முன்னேறுவர். இந்த விதிக் கொப்பவே, தமிழர் பண்டைக் காலத்தில் தங்கள் வாழ்வையும் சமுதாயத்தையும் அமைத்துக் கொண்டு முன்னேற்றப் பாதைகளையும் தடங்களையும் வகுத்துக் கொண்டார். தென் இந்தியாவின் தென் பகுதியில் வட வேங்கடத்திலிருந்து கிழமேலாக ஒரு கோடு கிழித்தால், அதற்குத் தெற்கேயுள்ள பாகத்தில், வரலாறு தெரியக்கூடிய காலத்திற்கு முன்பே தமிழ் மொழி பரவி யிருந்தது. இந்தப் பாகம் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவைகளில் வாழ்ந்த தமிழர் தங்கள் வாழ்க்கையின் மீது பேரார்வம் கொண்டு அதைச் செம்மையாக நடத்தி, அதிலிருந்து

1. திராவிட நாகரிகத்தில் பிறந்து தமிழ் மொழியைப் பேசி அதை வளர்த்து அதில் இலக்கியமும் படைத்துக் கொண்டவர் தமிழ் நாட்டின் ஆதி மக்கள் இல்லை என்றும், இவர் பிற தேசங்களிலிருந்து தமிழ் நாட்டில் வந்து குடியேறினவர் என்றும், தமிழ் நாட்டில் வசித்த ஆதி மக்கள் நாகர் அல்லது அவர் போன்ற ஒரு இனத்தைச் சேர்ந்தவர் என்றும் சில அறிஞர் கருதுகிறார். இந்தக் கருத்துக்குப் போதிய வலிபுள்ள ஆதாரங்கள் இல்லை.

எத்தனையோ வழிகளில் இன்பம் நுகர்ந்தார். பண்டைக் காலத்திலுள்ள பல சமுதாயங்களில் இருந்தது போல், வீரமும் காதலும் நிறைந்த வாழ்க்கையே தமிழரையும் பெரும்பாலும் கவர்ந்தது. அதை அவர் பல துறை களிலும் வளர்த்துப் பேணினர்.

பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் பல அரசர் ஆட்சி புரிந்தார். அவர் தங்கள் தங்கள் நாடுகளைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபட்டார். சில காலங் களில் தெற்கேயுள்ள இலங்கை யுள்பட பிற நாடுகள் மீது அவர் அடிக்கடி படையெடுத்துப் போர் தொடுத்து வெற்றி வாகைசூடி அவைகளைக் கைப்பற்றிப் புகழ் பெற்றார். அவ்விதப் போர்களில் சிலர் மடிவதும், வேறு சிலர் தோற்று வேற்று மன்னருக்கு அடிமை யாகித் தங்கள் நாடுகளை இழப்பதும் உண்டு. அக் காலத்தில் தமிழ் நாட்டில் எத்தனையோ அரசர், சிற்றரசர், குறுநில மன்னர் வாழ்ந்த போதிலும், அவர் களில் மிகச் சிறந்து விளங்கிப் பல தமிழ்ப் புலவரால் பாடப் பெற்றவர் தொல் குடியைச் சேர்ந்த சேர சோழ பாண்டியர்களே. சற்றுப் பின்னர் தமிழ் நாட்டின் வட பகுதியாகிய தொண்டை மண்டலத்தில் பல்லவ மன்னர் பெருங் கீர்த்தியுடன் ஆண்டு பல கோவில்களைக் கட்டிக் கலைகளை வளர்த்தார். பொதுவாக எல்லா அரசரும் முத்தமிழ்க் கலைகளைப் பேணிப் புலவரையும் கலைவாண ரையும் ஆதரித்தார். புலமைத் தொழிலில் பெண்களும் ஈடுபட்டிருந்தார்கள். தொகை நூல்களில் காணப் பெறும் பாடல்களை இயற்றியவரில் சுமார் பதினைந்து பேர் பெண் குலத்தைச் சேர்ந்தவர் என்பதைக் கவனிக் கும்போது பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் கல்விப் பயிற்சி இரு பாலாருக்கும் உரியது என்று மக்கள் கருதி வந்தது தெரிய வருகிறது. அரசரால் ஆதரிக்கப் பெற்ற ஆண் பெண் புலவரும், அவ்வரசரின் வீரச்

செயல்களைப் பற்றியும், ஈகை முதலிய நற்குணங்களைப் பற்றியும், சமுதாய வாழ்க்கையின் நுட்பங்களைப் பற்றியும், இல்லறப் பண்புகளைப் பற்றியும் பாடல்களைச் சமைத்தார். இவை அரிய கற்பனைப் பாங்குடன் எழுதப் பெற்றன. அரசர் பெரிய மதில்கள் சூழ்ந்த அரண்மனைகளையும் கோட்டைகளையும் பிற கட்டிடங்களையும் கட்டினர்; கால்வாய்களையும் குளங்களையும் வெட்டினர்; சாலைகளையும் சத்திரங்களையும் அமைத்தார். அவருடைய சேனைகளில் யானைப் படை, குதிரைப் படை, வில் தாங்கிய காலாட் படை முதலியன இருந்தன. எத்தனையோ விதமான போர்க் கருவிகளையும் போர் முரசங்களையும் அவர் பெற்றிருந்தார். இவற்றின் துணையுடன் பண்டைக் காலத் தமிழ் அரசர் போர்க் கலையைப் பேராண்மையுடன் வளர்த்தார்.

பண்டைத் தமிழகத்தில் பட்டினங்களும் கிராமங்களும் செழித் தோங்கின. பிற நாடுகளுடன் வாணிபம் ஒழுங்காக நடைபெற்றதால் நாட்டில் செல்வம் செழித்தது. மேற்கே வெகு தூரத்திலுள்ள எகிப்து, கிரேக்கம், ரோம் முதலிய நாடுகளுடன் கடல் கடந்து போகும்' கப்பல்கள் மூலம் நடைபெற்ற வியாபாரம் வளர்ந்தது. மிளகு, முத்து, தந்தம், சந்தனம், ஏலக்காய், துணி, தாவர எண்ணெ, விலங்குகளின் தோல்கள், மயில்கள், குரங்குகள் முதலியவைகள் ஏற்றுமதி செய்யப் பெற்றன. ரோம் நாட்டிலிருந்து தங்கம் வெள்ளி நாணயங்களும், கிரேக்க நாட்டிலிருந்து மது முதலிய பண்டங்களும் இறக்குமதி செய்யப்பட்டன. கிழக்கே கடல் கடந்து கலங்களில் சென்று கடாரம் முதலிய நாடுகளிலும், சாவகம் முதலிய தீவுகளிலும் தமிழர் குடியேறினர். இதற்கும் வாணிபத்திற்கும் உதவும் முறையில் கடற்கரை யோரங்களில் பல துறைமுகங்கள் கலங்கரை விளக்கங்களுடனும், சுங்கச் சாலைகளுடனும்,

அகன்ற வீதிகளுடனும் அமைந்திருந்தன. வாணிபத்தின் பொருட்டு வந்த பல மொழிகளைப் பேசும் பிற நாட்டினர் இத் துறைமுகங்களில் குடியேறி, மக்களுடன் நெருங்கிப் பழகி அரசருக்கும் பணியாற்றினர். இவ்வாறு பணியாற்றிய யவனரைப் பற்றிய குறிப்புகள் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் காணப் பெறுகின்றன; இவர் அரசருக்கும் அரண்மனைகளுக்கும் காவல் வேலை பார்த்ததாகத் தெரிகிறது. தமிழ் அரசர் தங்கள் தூதர்களை வெளி நாடுகளுக்கு அனுப்பித் தங்கள் நாட்டின் தேவைகளைப் பெற்றுக் கொண்டது மன்றி, பெருமையையும் நிலை நாட்டினர்.

மக்களில் பெரும்பாலோர் விவசாயத்தைப் பேணி நெய்தல், ஆடைகளைத் தைத்தல், உப்பு சர்க்கரை காய்ச்சுதல், தோல் பதனிடுதல் முதலிய கைத் தொழில்களிலும் ஈடுபட்டிருந்தார். மலை நாட்டில் வசித்த மக்கள் விலங்குகளை வேட்டையாடி இறைச்சியையும் தான்யங்களையும் சமைத்து உண்டு வாழ்ந்தார்கள். மலைப் பொருள்களை அடிவாரத்திலுள்ள ஊர்களுக்குக் கொண்டு வந்து அங்குள்ள அங்காடிகளிலும் சந்தைகளிலும் பண்ட மாற்றித் தங்களுக்குத் தேவையான சாமான்களை வாங்கிப் போனார்கள். கால் நடைகளே அக் காலத்தில் சிறந்த பொருட் செல்வமாகக் கருதப் பெற்றன. ஆடுகள், மாடுகள், குதிரைகள்; கோழிகள், பன்றிகள், மயில்கள் முதலியவை சிறப்பாகப் பேணி வளர்க்கப் பெற்றன. பட்டினங்களில் மக்கள் விதவிதமான ஆடைகளை அணிந்து பொன் முதலான உலோகங்களால் செய்யப் பெற்ற ஆபரணங்களைப் போட்டுக் கொண்டார்கள். அத்துடன் அகில், சந்தனம், புனுகு முதலிய நறுமணப் பொருள்களையும் தங்கள் இன்ப வாழ்விற்குப் பயன்படுத்தினார்கள். கிராமங்களிலும் சிற்றூர்களிலும் மக்கள் உழுது பயிரிட்டு ஜீவனம்

செய்தார்கள். அரிசி, தேன் முதலியவைகளும் எல்லா மக்களுக்கும் முக்கிய உணவாயின. அரசருடைய களஞ்சியங்கள், மக்களிடமிருந்து பகுதியாக வாங்கப் பெற்ற தான்யங்களால் நிறைந்திருந்தன.

நகரங்களில் சமுதாய வாழ்வு பல துறைகளிலும் மேம்பாடடைந்து ஆர்வத்துடன் நடைபெற்றது. மக்களிடம் மது அருந்தும் பழக்கம் நாடெங்கும் பரவியிருந்தது. திருமணங்கள் பெரும்பாலும் காதலின் அடிப்படையில் பல சடங்குகளுடன் நிகழ்ந்தன. ஒன்றுக் கதிகமான மனைவியரைக் கட்டும் வழக்கமும் இருந்தது. பரத்தையரும் வாழ்ந்து வாலிபரின் மனத்தைச் சூறையாடியும், பத்தினிப் பெண்டிரின் இன்ப வாழ்க்கைக்கு இன்னல் இழைத்தும் வந்தார். போரில்லாத காலங்களில் சமய சமூக விழாக்களை ஆடல் பாடல்களுடன் மக்கள் ஆர்வத்தோடு கொண்டாடினார்கள். எத்தனையோ விதமான கூத்துக்களிலும் அவர் தேர்ச்சி பெற்றிருந்தார். இவைகளோடு இசையும் அவருடைய கலை வாழ்வை ஒளி பெறச் செய்தன. நாடகங்கள் போன்ற கூத்துக்களும் அரசரின் அவைகளிலும், மக்களுக்கு மகிழ்ச்சி ஊட்டத் தெருக்களிலும் நடைபெற்றன. இவைகளைப் பார்த்து ஆண்களும் பெண்களும் இன்புற்றார்கள்.

இறந்தவரைப் புதைக்கும் வழக்கம் அதிகமாயும், எரிக்கும் முறை அருகியும் அக்காலத்தில் நிலவின. சடலங்களைப் பெரிய சிவப்பு நிறமுடைய மண் தாழிகளில், சிறு மண் பாண்டங்களுடனும் இரும்பினால் செய்யப் பெற்ற ஆயுதங்களுடனும், பொன்னால் செய்யப் பெற்ற அணிகலன்களுடனும், வேறு சில்லரைச் சாமான்களுடனும், வைத்துப் பூமியில் ஆழமாகத் தோண்டப் பெற்ற குழிகளில் புதைக்கும் வழக்கம் பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டின் சில பகுதிகளில்

இருந்ததாகத் தெரிகிறது.[1] போரிற்பட்ட வீரருக்கு ஞாபகச் சின்னமாக நடு கற்களை நிறுத்தி அவைகளை மக்கள் வணங்கினர்.[2] இவ்விதக் கற்களில் இறந்த வரின் பெயர்களையும் வீரச் செயல்களையும் பொறிக்கும் வழக்கமும் இருந்தது. இதிலிருந்து எழுத்து முறைகள் கிறிஸ்து சகத்திற்குச் சில நூற்ருண்டுகளுக்கு முன் னரே தமிழ் நாட்டில் வழங்கி வந்தன என்பது தெளி வாகிறது. மக்களிடம் கடவுள் தத்துவம் வெகுவாகப் பரவி யிருந்தது. முக்கண்ணன், திருமால், முருகன், இந்திரன் முதலிய சிறப்புப் பெயர்களிலும், கந்தழி, கொடி நிலை போன்ற பொதுப் பெயர்களிலும், பல கடவுள்களுக்கு ஆங்காங்கே கோவில்கள் கட்டி மக்கள் பூசைகள் நடத்தி வணங்கினர்கள்.

தமிழ் நாட்டில் பண்டைக் காலத்தில் வேறுபட்ட பல சமயங்கள், அவைகளின் தொடக்க நிலையில், மக்க ளிடம் ஆட்சி புரிந்து நிலவி யிருந்தன. இவ்வாறு பல

---

1. சுமார் அறுபது வருஷங்களுக்கு முன்பு திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஆதிச்சநல்லூர் என்ற கிராமத்தைச் சேர்ந்த பறம்பு, இந்திய சர்க்காரின் புதை பொருள் இலாகா அதிகாரி களால் தோண்டப் பெற்றபோது இவ்விதத் தாழிகள் எடுக்கப் பட்டன. இந்திய சர்க்காரின் புதை பொருள் இலாகாவின் 1902—3-ம் வருஷத்து அறிக்கையில் இவைகளைப் பற்றிய முழு விபரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த அறிக்கையின் சில பகுதிகளை எச். ஆர். பேட் என்பவர் தமது திருநெல்வேலி ஜில்லா வரலாற்றில் எடுத்தாண்டிருக்கிருர். (Tinnevelly District Gazetteer. by H. R. Pate I.C.S. Pages 424—428.)

2. இறந்த அரசர், வீரர் அல்லது பெரியோரின் சடலங்களைப் புதைத்து அவைகளின் மீது எழுப்பப் பெற்ற கட்டிடங்களைப் பிற் காலத்தார் பள்ளிபடைகள் என்று கொண்டார். இவைகளை மக்கள் கோவில்களாகவே கருதி வணங்கி, பூசைகளும் செய்தார். இக்காலத்தில் இவ்விதக் கட்டிடங்களை 'சமாதி' என்று கூறு வோம். பெரும்பாலும் சந்நியாசிகளுக்கு உரிய இந்தப் பெருமை வேறு பிறருக்கும் அளிக்கப்பட்டது என்று தெரிகிறது.

2ᏭO



மதங்கள் இருந்த போதிலும் சமயப் பூசல்கள் அக்காலத்தில் தோன்றவில்லை. ஏனென்றால் சமயம், மக்களின் வாழ்க்கை முழுவதையும் கவர்ந்து அதை ஆட்டி வைக்கும் பெரும் சக்தியாக இயங்கவில்லை. சமயங்களைப் பொறுத்த வரையில் பண்டைக் காலத் தமிழர் சமரச மனப்பான்மையுடன் வாழ்ந்தார். ஒவ்வொரு சமயத்தாரும் தங்களுக்கென்று பள்ளிகளையும் தொழுகை நிலையங்களையும் அமைத்துக் கொண்டார். ஆனால் பிற்காலத்தில் எழுந்த தீவிரமான சமய உணர்ச்சியோ, அல்லது ஆகமங்களின் அடிப்படையில் தோன்றி நுட்பமாய் விரிந்த ஆலய வழி பாட்டு முறைகளோ வெகுவாகப் பரவ வில்லை.

வட நாட்டிலிருந்து ஆரியரும் தெற்கு நோக்கித் தமிழ் நாட்டிற்கு வந்தார். இராமாயணம் மகாபாரத காலத்திற்கு முன்பும், தொல்காப்பிய காலத்திற்கு முந்தியும் அவர் சிறு சிறு கூட்டங்களாக வந்து தமிழகத்தில் குடியேறினர். இவ்வாறு அவர் குடியேறின காலத்தை வரையறுத்துச் சொல்ல முடியா விட்டாலும் அது உத்தேசமாக கி. மு. ஆறு அல்லது ஏழாவது நூற்றாண்டாக இருக்கலாம். தமிழ் நாட்டில் குடியேறின ஆரியர், தங்கள் நாகரிகம், சமயம், மொழி, இலக்கியம் ஆகியவைகளைப் பரப்ப முயன்றார். இந்த முயற்சி வெகு காலமாக வெற்றி பெறவில்லை. தமிழ்ப் புலவரும் தங்களுடைய மொழியையும் பாட்டியல் முறைகளையுமே கையாண்டு வட மொழியைப் புறக்கணித்து வந்தார். நாளடைவில் ஆரியருடைய சமயக் கோட்பாடுகளும், பழக்க வழக்கங்களும், நாகரிகமும், வழிபாட்டு முறைகளும், வேள்விப் பண்பாடுகளும் மெள்ளப் பரவி, எதிர்ப்புகளுக்குட்பட்டு, தமிழ் மக்கள் சிலருடைய வாழ்வுடன் கலந்து நிலைத்தன. பெரும்பாலான தமிழ் மக்கள் வடநாட்டு நாகரிகத்தைப் பின்பற்றவில்லை.

சங்க கால இலக்கியத்திலிருந்தும் தொல்காப்பியத்தி லிருந்தும் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்க்கையைப் பற்றித் தெரியக்கூடிய வரலாற்றின் சுருக்கம் மேலே வரையப்பட்டிருக்கிறது. கிறிஸ்து சகத்தின் தொடக் கத்தில் இருந்த தமிழர் வாழ்வின் சித்திரம் தான் இது. இதிலிருந்து இவர் சில தனிப் பண்பாடுகளுடைய நாக ரிகத்தைப் பெற்றிருந்தார் என்பது விளங்கும்.

# பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய நோக்கு

## பொருள் பாகுபாடு

மேலே சித்திரிக்கப்பட்ட சமுதாயத்தில் பண்டைக் காலப் புலவர் வாழ்ந்து தமிழைப் பேணி வளர்த்தார். அவர், அரசர் முதலிய சமுதாயத் தலைவருடன் நட்புக் கொண்டு உறவாடிப் பாட்டுக்கள் பாடித் தங்கள் புலமைத் தொழிலை நடத்தி வந்தார். அவர் கொண்ட மொத்தமான இலக்கிய லட்சியப் பரப்பைத் தெரிய முயல வேண்டும். பண்டைத் தமிழ்ப் புலவர் கையாண்ட இலக்கியத் தத்துவம், கைக்கொண்ட இலக்கியக் கருவி, எடுத்துக் கொண்ட இலக்கியப் பொருள் ஆகியவை களின் முக்கிய இயல்புகளிலிருந்து அவருடைய இலக்கியக் குறிக்கோள்களை ஒருவாறு நாம் அறிய லாம்.

பண்டைத் தமிழ்ப் புலவரின் அடிப்படையான இலக்கியத் தத்துவம் என்ன? இதை அக் காலத்துத் தமிழ் இலக்கணத்திலிருந்தே தெரிந்து கொள்ளலாம். இலக்கியப் பொருளை எல்லாம் அகப் பொருள் புறப் பொருள் என்று பிரித்து, அகப் பொருளைக் களவு கற்பு என்று இரு வகையாக வகுத்து, அகப் பொருள் புறப் பொருள் ஒவ்வொன்றுக்கும் ஏழு திணைகளைக் குறிப் பிட்டு, ஒவ்வொரு திணைக்கும் பல துறைகளை உரிய தாக்கிப் பண்டைக் காலத் தமிழ் இலக்கணம், இலக்கியம் சமைக்கும் கலையை எத்தனையோ நுண்ணிய விதிக ளுடன் வரையறுத்திருக்கிறது. இந்த முறை தான் பண்

டைத் தமிழ்ப் புலவரின் அடிப்படையான இலக்கியத் தத்துவத்தின் சிறந்த இயல்பு. இதன் விபரங்கள் முழுவதையும், நூற்றுக்கணக்கான சூத்திரங்களில் திட்பமான வாக்கில், ஆழ்ந்த சிந்தனைப் பண்புடனும் விரிந்த பாகுபாட்டு முறைகளுடனும் தொல்காப்பியர் வரைந்திருக்கிறார். ஆனால் இவைகளை முதலாவதாகத் தொல்காப்பியர் ஆக்கவில்லை. அவருக்கு முன்னாலிருந்த இலக்கணங்களின் பொருளைத் திரட்டியும், இலக்கியத்தின் தன்மையை ஆராய்ந்துமே, அவர் தமது சூத்திரங்களைப் பெரும்பாலும் தொகுத்து அமைத்திருக்கிறார். இவைகளில் பல 'என்ப' 'என்மனார் புலவர்' போன்ற சொற்களுடன் முடிவதே மேலே கூறிய கருத்துக்குச் சான்றாகும். தொல்காப்பியத்தின் சிறப்புப்பாயிரத்தில் பனம்பாரனார் 'முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி' என்று சொல்லியிருப்பதும் இதையே வலியுறுத்துகிறது. தொல்காப்பிய உரையாசிரியர் எல்லோரும், பன்னிரு படலம், புறப் பொருள் வெண்பாமாலைப் பாயிரங்களும், தொல்காப்பியத்திற்கு முதல் நூல் அகத்தியம் என்று கூறி யிருப்பதும் இங்கு நோக்கத் தக்கது. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே பொருள் இலக்கணம் தமிழில் இருந்தது என்பது வெளிப்படை. இதன் தத்துவம் என்ன என்பதை ஆராய வேண்டும்.

இந்தப் பொருள் பாகுபாடு அர்த்தமற்ற ஒரு இலக்கண முறை என்று கொள்ள முடியாது. ஏதோ ஒரு தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுதான் பண்டைத் தமிழ்ப் புலவர் இந்தப் பாகுபாட்டை வகுத்திருக்க வேண்டும். அதைக் கண்டு பிடிக்க முயலுவது அறிஞர் கடமை. பழைய உரையாசிரியர் இந்தப் பாகுபாட்டை ஓரளவு விளக்கியிருந்த போதிலும் அதன் தத்துவத்தை எடுத்துக் கூறவில்லை. இன்று நாம் விரும்பக்கூடிய முறையில் அவர் இதைப் பற்றி ஆராய

வில்லை. இந்தப் பாகுபாடு பற்றி இளம்பூரணர், "அகம், புறம் என்பன காரணப் பெயர். அகப் பொருளாவது போக நுகர்ச்சியாகலின் அதனுனுய பயன் தானே அறிதலின் அகம் என்றூர். புறப் பொருளாவது மறஞ் செய்தலும் அறஞ் செய்தலும் ஆகலான் அவற்றுனுய பயன் பிறர்க்குப் புலனுகலின் புறம் என்றூர்" என்று எழுதியிருக்கிறூர். இதே கருத்தைச் சற்று விரித்துத் தமக்கே யுரிய நடையில் நச்சினூர்க்கினியர் கூறியிருப்பதாவது;- "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக் கூட்டத்தின் பின்னர், அவ் விருவரும் ஒருவர்க் கொருவர் தத்தமக்குப் புலனுக இவ்வாறிருந்த தெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றூர். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்பது ஓர் ஆகு பெயராம். இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார், தாமே யன்றி எல்லார்க்குந் துய்த்துணரப்படுதலானும், அவை புறமெனவே படும். இன்பமே யன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாலெனின் அதுவுங் காமங் கண்ணிற்றேல் இன்பத்துடன் அடங்கும். ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனுகாமை மறைக்கப்படாமையிற் புறத்திணைப் பாலவாம். காம நிலையின்மையான் வருந் துன்பமுந் 'தாபத நிலை' 'தபுதார நிலை' யென வேறும். திணையாவது ஒழுக்கம்; இயல் இலக்கணம்; எனவே அகத்திணையியலென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கண மென்றவாறு யிற்று."

மேலே எடுத்துக் காட்டப்பெற்ற சிறந்த தொல்காப்பிய உரையாசிரியரின் விளக்கங்கள், பொருள் பாகுபாட்டின் தத்துவத்தின் ஒரு இயலைக் கூறுகின்றனவே யொழிய, அதன் நுட்பங்கள் முழுவதையும் கூறவில்லை.

பாலுணர்ச்சியால் தூண்டப்பெற்று ஆணும் பெண்ணும் கூடுமிடத்து, அவர் அநுபவிக்கும் இன்பத்தின் உற்பத்தி யிடமும் உறைவிடமும், அவருடைய மனம் அல்லது நெஞ்சம் என்றும், அதில் எழும் உணர்ச்சிகள் பிறருக்குப் புலனாகாவென்றும், ஆகையால் அதைப் பொருளாகக் கொண்டு எழுதப்பெறும் பாடல்கள் எல்லாம் அகப் பொருளைச் சார்ந்தன என்றும் இவ்விரு ஆசிரியரும் சொல்லி யிருக்கிறார். இதைத் தவிர மற்றவை எல்லாம் பிறருக்குப் புலப்படக் கூடியதால், அவைகளைப் பொருளாகக் கொண்டு ஆக்கப்பெற்ற இலக்கியம் எல்லாம் புறப் பொருளைச் சேர்ந்தன என்றும் கூறுகிறார். மனிதனின் மனத்தில் எழக்கூடிய உணர்ச்சிகள் நிகழ்ச்சிகள் எல்லாம் பலவகைப்பட்டன. அவைகளில் ஒன்றுதான் ஆண்மை பெண்மையின் கூட்டுறவில் விளையும் காம இன்பம். இதே போல் மனத்தில் எழக்கூடிய வேறு பல உணர்ச்சிகளும் பிறருக்குப் புலனாகாதவை தான். காம இன்பத்தை, அதை அநுபவிக்கும் காதலர் இருவருமே அறியக்கூடும் என்றும், பிறருக்கு அது புலப்படாது என்றும், இக் காரணங்களால் அது அகம் என்றாயிற்று என்பது ஓரளவு தான் பொருத்தமாயிருக்கிறது. ஒருவனும் ஒருத்தியும் காதலால் பிணைக்கப்பட்டு நுகரும் இன்பம், அவருக்கன்றிப் பிறருக்குப் புலப்படாது என்பது, ஒரு தமிழ் இலக்கிய சம்பிரதாயமே யொழிய உலகியல் உண்மையைச் சார்ந்தது அல்ல. ஏனென்றால் எல்லா ஆண்களும் பெண்களும் அவரவர் பருவ காலத்தில் இவ்வித இணைவிழைச்சால் ஏற்படும் இன்பத்தை நுகர்ந்தே அதன் பயனாக மனித குலத்தைப் பெருக்கி வந்திருக்கிறார்கள். தவிரவும் இந்த இன்பத்தின் நானாவிதமான தன்மைகளைக் கவிதையில் வரைவதே அகப் பொருள் பாடல்களின் பெரு நோக்கமாய் இருந்திருக்

கிறது. இந்த நோக்கத்தை நிறைவேற்றும் முறையில் பண்டைக் காலத் தமிழ்ப் புலவர் பாடியிருக்கும் பாடல்களே தமிழ் அகப் பொருள் இலக்கியத்தின் தனிச் சிறப்பு. உணர்ச்சிகளுக்குப் பிறப்பிடம் மனம் என்பதும், அதில் பிறக்கும் உணர்ச்சிகளில் எல்லாம் காதல் உணர்ச்சியே மிகச் சிறந்தது என்பதும், அது மனித குலம் முழுவதற்கும் மற்ற சேதன வாழ்விற்கும் பொதுவானது என்பதும், இதில் விளையும் இன்பத்தை நுகர்வதும் அதே மனம் தான் என்பதும்தான், அகப் பொருள் தத்துவத்தின் சிறப்பியல். இதைப் பண்டைத் தமிழ்ப் புலவர் நன்ருய் உணர்ந்திருந்தார். ஆகவே காதலைப் பாடும் இலக்கியத்தை அகப் பொருள் என்றும், மற்றெல்லாப் பிற பொருளைக் கூறும் இலக்கியத்தைப் புறப் பொருள் என்றும், பண்டைத் தமிழ்ப் புலவர் கொண்டார். இந்த மாதிரி அகப் பொருள் இலக்கியத்தை ஆக்குவதற்குப் பல துறைகளை வகுத்ததின் மூலம் பண்டைத் தமிழ்ப் புலவர் செய்திருக்கும் விதிகளை ஊன்றி ஆராய்ந்தால் அவர் மனித இயற்கையின் ஆழத்தையும் அகலத்தையும் நிலை கண்டு உணர்ந்தது மன்றிப் பெண் மனத்தைப் படம் பிடிப்பதில் பேராற்றல் படைத்தவர் என்பதும் விளங்கும். தாங்கள் எடுத்துக் கொண்ட இலக்கியப் பொருளில் காதலுக்கு அவர் முக்யத்வமும் ஏற்றமும் கொடுப்பதிலிருந்து, மனேதத்துவ அறிவிலும் அவர் ஆற்றல் படைத்திருந்தார் என்று தெரிகிறது.

தமிழரின் பொருள் பாகுபாட்டின் அடிப்படையான தத்துவத்திற்கு வேருெரு விளக்கமும் கொடுக்கலாம். மனிதனின் உள்ளத்திற்கு அரிய ஒரு சக்தி மேவியிருக்கிறது. தான் இயங்குவதினுலும், தன்னிடமிருந்து எழும் உணர்ச்சிகளாலும், நிகழ்ச்சிகளாலும், அது இன்ப துன்பங்களைச் சிருஷ்டித்துக் கொள்ள வல்லது.

அவைகளை அநுபவிப்பதும் அதே. இவ்வாறு, தானுகவே, பிறரின் உதவி யின்றியும், வேறு பொருள்களோடு புலன்களின் மூலம் ஏற்படும் அலைகளின் மோதுதலின்றியும், மனம் பெறக்கூடிய ஸ்வாநுபவத்திற்கு எல்லை கிடையாது. இந்த அநுபவத்தை ஆங்கிலத்தில் subjective experience என்றும், அதற்குப் புறம்பாக, பிற பொருள்களின் தொடர்பு மூலம் புலன்கள் வழியாய் மனம் பெறும் எல்லா அநுபவங்களையும் objective experience என்றும் கூறுவர். அகம், புறம், என்ற பாகுபாடு இந்த முறையைத் தழுவியிருப்பதாகக் கருதலாம்.

மனம் இயங்குவதற்குப் புலன்களும் இயங்க வேண்டும். இவ்விரண்டும் சேர்ந்து ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டு இயங்குவதே இயற்கையின் நியதி. முற்றும் துறந்து மோன நிலையிலிருக்கும் யோகிகளுக்குப் புலன்களின் துணையின்றி ஒருகால் மனம் இயங்கலாம். அவரும் புலன்களை அடக்குவதின் மூலம் மனத்தை ஒடுக்குவதாகக் கருதி வந்திருக்கிருர். இணைவிழைச்சால் ஆண்களும் பெண்களும் பெறக்கூடிய இன்ப நிலையை, அதை அநுபவிக்கும் இருவர் தவிர மற்றவர் அறியக் கூடாமல் இருப்பதால் அதை அகம் என்றும், அவரது பிற செயல்களை எல்லாம் பிறர் தெரிந்து பார்க்கக் கூடியதால் புறம் என்றும், வகுக்கப்பட்டிருக்கின்றன என்று பழைய உரையாசிரியர் கருதியதில், புலன்களின் தன்மையை வைத்து இப் பாகுபாடு செய்திருக்கிருர் என்று தோன்றுகிறது. இந்த உண்மை கவனிக்கத் தக்கது. வட மொழிப் புலவரும் புலன்களின் செயல் தன்மைகளை அடிப்படையாகக் கொண்டு சில இலக்கியக் கொள்கைகளை வகுத்துக்கொண் டிருக்கிருர். அவர் காவியங்களை எல்லாம் 'திருஶ்ய' காவியம் என்றும் 'சிராவ்ய' காவியம் என்றும் இரு வகையாகப் பாகு

பாடு செய்திருப்பது நோக்கத் தக்கது. அவர் 'காவியம்' என்ற சொல்லால் இலக்கியம் முழுவதையும் குறிப்பிடுகிறார். நாடக இலக்கியத்தை 'திருஶ்ய' காவியம் என்றும், பிற இலக்கியம் எல்லாவற்றையும் 'சிராவ்ய' காவியம் என்றும் அவர் கொண்டார். காதல் பொருளாகக் கொண்டு, சில குறிப்பிட்ட துறைகளிலும் முறைகளிலும் எழுதப் பெறும் பாடல்களைத் தமிழ் இலக்கண நூல்கள் அகப் பொருள் என்று வகுத்து, மற்றவைகளைப் புறப் பொருள் என்று வரையறுத்தது போல், வட மொழி இலக்கணகர்த்தரும், இலக்கியத்தில், நாடக அமைப்பில் நவரசங்களும் பொதிந்து எழுதப் பெற்ற காவியங்கள், படிக்கப்படுவதுடன், நடிக்கப் பெறும் போது கண்களால் பார்த்து அநுபவிக்கக்கூடிய தன்மையுடன் இருப்பதால் 'திருஶ்ய' காவியம் என்றும், பிற நூல்கள் எல்லாம் படித்தோ கேட்டோ தெரிந்து கொள்ளக் கூடியதாய் இருப்பதால் 'சிராவ்ய' காவியம் என்றும், ஒரு பாகுபாட்டை வகுத்தார். ஆகவே பண்டைக் காலத்தில், ஏதோ ஒரு அடிப்படையான தத்துவத்தைக் கொண்டு, இலக்கியத்தை இரு வகையாகப் பாகுபாடு செய்யும் முறை வட மொழியிலும் தென் மொழியிலும் இருந்திருப்பது கவனிக்கத் தக்கது.

பொருள், திணை, துறைப் பாகுபாடுகள் பண்டைத் தமிழரின் வாழ்க்கையைத் தழுவி அதையே காட்டும் முறையில் உலகியல் வழக்காக இலக்கியத்தில் எழுந்தனவா, அல்லது புலவரின் கூர்மையான அறிவிலும் பரந்த கற்பனையிலும் தோன்றிய நாடக வழக்கு எனப்படும் வெறும் புனைந்துரைகளைக் கொண்ட இலக்கியக் கோட்பாடுகளா என்னும் விஷயம் ஆராய்ச்சிக்குரியது. தமிழ் மொழிக்கே உரியதாகக் கருதப்பெறும் இந்த இலக்கிய முறை பண்டைத் தமிழரின் வாழ்க்கையோடு எவ்விதத் தொடர்பும் இன்றி நூற்றுக்கு நூறு கற்பனை

யாகவே புலவரால் வரையப் பெற்றது என்று கொள்வது பொருத்தமல்ல. கற்பனையின் பிறப்பிடம் தெரியாதவர் சொல்லக்கூடிய கூற்று இது. மிகப் பழமையான காலத்தில் தமிழரின் வாழ்வில் நிலவியிருந்த சில இயல்புகளிலிருந்தே இவ்விதப் பாகுபாடுகளைப் பற்றிய எண்ணங்கள் புலவருக்குத் தோன்றியிருக்கும். வெகு காலத்திற்குப் பின்னர் இவ்வித இயல்புகள் வாழ்க்கையிலிருந்து மறைந்த பிறகும், அவை வெறும் இலக்கிய சம்பிரதாயங்களாகவும் புலநெறி வழக்காகவும் உறைந்திருக்க வேண்டும்.[1] இந்த இலக்கணம் இப்போது கிடைத்திருக்கும் சங்க இலக்கியம் முழுவதற்கும் பொருந்தியிருப்பதும் அதற்குப் புறம்பாக நூல்கள் அக் காலத்தில் ஆக்கப் பெறவில்லை என்பதும் நன்று கவனிக்கத் தக்கன. பிற்காலத்தில் கோவை போன்ற சில தனிப் பிரபந்தங்களில் பழைய இலக்கணத்தில் இருப்பதைவிட அதிக நுட்பத்துடனும் விரிவுடனும் சில அகத் துறைகள் கையாளப்பட்டிருக்கின்றன. தற்காலத்தில் தமிழ்ப் பொருள் இலக்கணம், வழக்கொழிந்த இலக்கணமாகத்தான் இருக்கிறது. இதைப் பின்பற்றிப் பொதுவாக நூல்கள் எழுதப் பெறுவதில்லை. அதனுல் இந்த இலக்கண அறிவு தமிழ் மாணவருக்குத் தேவையில்லை என்று சிறிதளவேனும் கருத முடியாது. ஏனென்ருல் பண்டைத் தமிழ் இலக்கியத்தையும், பிற்

---

1. "இவ்வாறு இக் களவு கற்புக்கள் ஒருசார் மக்களின் வழக்கத்தோடு சம்பந்தப்படாத வெறும் கற்பனைகளே யாயின், அவற்றின் பலவேறு விகற்பங்களைச் செய்யுள் வழக்கோடும் உலகியல்களோடும் பொருந்த வைத்து இத் துணையளவாகப் பழைய நூல்களெடுத்தோதா என்க. எனவே பொருளதிகாரத்திற் கண்ட அகப் பொருள் பற்றிய செய்யுள் வழக்கெல்லாம் பண்டைத் தமிழ் மக்கள் கொண்டொழுகிய ஒருவகை உலக வழக்கினின்றே உற்பத்தியாகி விரிந்த தென்பது போதரும்" தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி (1929)—மு. இராகவய்யங்கார். பக்கம்-8.

காலத்தில் தோன்றிய சில காப்பியங்களையும், பிரபந்தங்களையும், தேவாரம், திருக்கோவையார், திருவாசகம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் ஆகியவைகளின் சில பகுதிகளையும், பொருள் தெரிந்து இன்புறுவதற்கு இந்த இலக்கண அறிவு இன்றியமையாதது.[2]

தமிழ் இலக்கணத்தில் உள்ள பொருள் திணை துறை முதலிய பாகுபாடுகள், தமிழுக்கே உரியன என்றும், இதைப் போன்றவை வேறு எந்த மொழியிலும் இல்லை என்றும் சில தமிழ் அறிஞர் கூறி வந்திருக்கிறார். நல்ல ஆக்க முறையில் தமிழுடன் சிறந்த தொடர்பு கொண்டு, அதன் பிற்கால இலக்கியத்தை எத்தனையோ துறைகளில் வளம் பெறச் செய்த வட மொழியிலும் இந்த முறைகள் இல்லை என்பது இரண்டு மொழிகளையும் தெரிந்த புலவரின் கருத்து. இது ஆராய்ச்சிக்குரியது. வட மொழியில் பொருளை அறம், பொருள், இன்பம், வீடு (தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்) என்ற முறையில் வகுத்திருக்கிறார். இவை நாற்பொருள் அல்லது நான்கு புருஷார்த்தங்கள் என்றும், மனித வாழ்க்கையின் குறிக்கோள்கள் என்றும், இவை தான் காப்பியங்களுக்கோ வேறு இலக்கியத்திற்கோ நூல்களுக்கோ பொருளாக அமைய வேண்டும் என்றும் கொண்டிருக்கிறார். இந்த முறையைத் தமிழ் இலக்கண

2. வட மொழியிலும் தமிழ் மொழியிலும் சிறந்த புலமை பெற்று விளங்கிய சிவஞான முனிவர் கூறுவதாவது:— "ஈண்டு கூறும் பொருள் பாகுபாடுகள், பொதுவாகாது, தமிழிற்கே சிறந்து, வேறென்றால் பெறப்படாமையின், இப் பொருள் பற்றி வரும் பரிபாடல், கலி, அகநானூறு, புறநானூறு, ஐங்குறு நூறு, நற்றிணை, குறுந்தொகை, ஆற்றுப்படை, பதிற்றுப் பத்து முதலிய செய்யுள் ஆராயப் புகுந்தார்க்கு இப்பொருள் பாகுபாடு உணராக்கால் குன்று முட்டிய குரீஇப்போல இடர்ப்பட்டு, செய்யுள், மொழித் திறம் உணர மாட்டாமையின்" etc. தொல்காப்பியப் பாயிர விருத்தி—சிவஞான முனிவர், ஆறுமுக நாவலர் பதிப்பு: பக்கம்-5.

ஆசிரியரும் நூலாசிரியரும் பண்டைக் காலத்திலிருந்தே ஒருவாறு ஏற்றுக்கொண்டிருக்கிருர். அகத்திணையியலில் பொருளை எல்லாம் முதல், கரு, உரி என்று ஒருவகையாகப் பாகுபாடு செய்த தொல்காப்பியத்திலேயே இந்த முறை இடம் பெற்றிருக்கிறது என்று கருதுகிருர் அதன் சிறந்த உரையாசிரியரான இளம்பூரணர். பொருளதிகாரம் என்ற பெயரை விளக்கும் முறையில் அவர் அகம், புறம் என்பவற்றிற்குப் பொருள் கூறி விட்டு எழுதுவதாவது:

“அஃதற்ருக, அறம் பொருள் இன்பம் வீடு என உலகத்தோரும் சமயத்தோரும் கூறுகின்ற பொருள் யாதனுள் அடங்குமெனின் அவையும் உரிப் பொருளினுள் அடங்கும். என்னை? வாகைத்திணையுள்

‘அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனேர் பக்கமும்

புறத்திணை-16

என இல்லறத்திற்கு உரியவும்,

‘காமம் சான்ற கடைக்கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்தது பயனே

கற்பியல்—51

என நான்கு வருணத்தார் இயல்பும்,

‘நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்’

புறத்திணை =51

எனவும்,

‘காமம் நீத்த பாலினுனும்’

புறத்திணை —16

எனவும் புறமாகிய வீடு பேற்றிற்குரிய வானப்பிரத்த சந்நியாசிகள் இயல்பும் கூறுதலின் அறமும் வீடும் அடங்கின......அகத்திணையியலானும் களவியலானும் கற்பியலானும் இன்பப் பகுதி கூறினாராம். அஃதேல் பிற நூலாசிரியர் விரித்துக் கூறினாற்போல அறமும் பொருளும் விரித்துக் கூறாதது என்னையோ வெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது, அறிவிலாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே; யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்தோதுவராயின் ஓதுகின்றதனாற் பயன் இன்றாமாதலால் முன் நூலாசிரியர் விரித்துக் கூறின பொருளைத் தொகுத்துக் கூறலும், தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் மரபு என்று உணர்க. அஃதேல் இந் நூலகத்து விரித்துக் கூறிய பொருள் யாதெனின் காமப் பகுதியும் வீரப் பகுதியும் என்ப. இன்பம் காரணமாக பொருள் தேடும் ஆகலானும், பொருளானே அறஞ் செய்யும் ஆகலானும் இன்பமும் பொருளும் ஏற்றம் என ஓதினார் என உணர்க."[1]

இதிலிருந்து தொல்காப்பிய காலத்திலும் அதற்குச் சற்று முன்பும் அறம் பொருள் இன்பம் வீடு என்ற

---

1. தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம்—வ. உ சிதம்பரம்பிள்ளை, எஸ். வையாபுரிப்பிள்ளை பதிப்பு: பக்கம் 2. நச்சினார்க்கினியரும் "அகத்திணைக் கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளும் உணர்த்துப" என்று கூறி அதை விளக்குகிறார்; பின்வரும் பன்னிருபடலச் செய்யுளும் இங்கே கவனிக்கத் தக்கது :

"ஆன்ற சிறப்பின் அறம், பொருள் இன்பமென
மூன்று வகை நுதலியதுலகம், அவற்றுள்
அறமும் இன்பமும் அகலாதாகிப்
புறன் எனப்படுவது பொருள் குறித்தன்றே"

இதை இளம்பூரணர் புறத்திணை இயலின் உரை முகவுரைப் பகுதியில் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இலக்கியப் பொருள் பாகுபாடு தமிழ் உலகில் நிலவி வந்தது என்றும், அந்த முறையிலும் நூல்கள் இருந்தன என்றும் தெரியவருகிறது. தொல்காப்பியரும் அதே பாகுபாட்டை வேறு வகையாகத் தமது ஒப்பற்ற இலக்கணத்தில் அமைத்திருக்கிருர் என்று, நுட்பமான கருத்துச் செறிவுடன் இளம்பூரணர் விளக்கியிருக்கிருர்.

புறநானூற்றில் சோழன் நலங்கிள்ளியைப்பற்றி உறையூர் முதுகண்ணன் சாத்தனுர்,

"அறனும் பொருளு மின்பமு மூன்று
மாற்றும் பெரும"

புறம்—28

என்று பாடியிருக்கிருர்.[1] தொல்காப்பியத்திலுைம், புறநானூற்றினுலும் இந்தப் பாகுபாடு தமிழ் வழக்கிலும் ஒருவாறு இருந்தது என்று தெரிகிறது. ஆனுல்இவ்விரண்டு முறைகளையும் தெளிந்து சேர்த்து ஆக்கப் பெற்ற மிகச் சிறந்த பழமையான நூல் திருக்குறள். இதில் பொருள் முறை அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்று, அறம் பொருள் இன்பம் என்ற பாகுபாட்டைத் தழுவி இருக்கிறது. எனினும் காமத்துப்பால் தமிழ் அகப்

1. புறநானூறு தொகுக்கப் பெற்ற முறையிலே அறம் பொருள் இன்பம் ஆகியவற்றைத் தழுவிய பாகுபாடு இருக்கலாம் என்று அதைப் பதிப்பித்த டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் கருதுகிருர். அவர் எழுதுவதாவதுः—"இவற்றுள் ஒரு பிரதியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்று வரையப் பெற்றிருந்தது. அப்படியே, பொருள் நிலை, இன்பநிலை என்ற பகுதிகள் எந்தப் பாட்டிலிருந்து தொடங்குமோ வென்று தேடிப்பார்த்ததில், ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை. ஆனுலும் இந்நூல், அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாய்ப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது இதனுல் ஊகித்தறியப்படுகின்றது" புறநானூறு இரண்டாம் பதிப்பு—டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் முகவுரை பக்கம் 8.

பொருள் இலக்கணத்தைத் தழுவியே ஆக்கப்பட்டிருக்கிறது.[1]

பொருள் இலக்கணம் தமிழருக்கேயுள்ள தனிமுறை என்று பல அறிஞர் கருதி வந்திருப்பதாக முன்னர்க் கூறி யிருக்கிறோம்.[2] இந்தக் கருத்தைச் சிலர் மறுக்கக் கூடும். அகப் பொருளைச் சார்ந்த காதல் கவிதை, தமிழ் மொழியின் தனிப் பெருமை என்று நினைப்பது தவறு என்றும், இவ்விதப் பாடல்கள் தமிழ்த் தொகை நூல்களில் உள்ளன போல வேறு மொழிகளிலும் இருக்கின்றன என்றும், கிரேக்கப்புலவன் அகாதியன் செய்த தொகுதியும், ஹாலா என்ற கவியாயிருந்த அரசன் தொகுத் திருக்கும் சட்டசி என்ற நூலும் அகப் பொருள் வகையைச் சேர்ந்தன என்றும், தமிழ் ஆராய்ச்சியில் தலை சிறந்து விளங்கிய காலஞ் சென்ற திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை

---

1. "இனி அகப்பொருளைத் திணைக் காரணமாக வுடைத்தாய இம்மையே பயப்பதாய இன்பங் கூறுவானெடுத்துக்' கொண்டார். ஈண்டின்பமென்றது ஒரு காலத்தொரு பொருளான் ஐம்புல நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை: இச்சிறப்புப்பற்றி வட நூலுட் போஜராசனுஞ் 'சுவை பல வென்று கூறுவார் கூறுக. யாங்கூறுவது இன்பச் சுவையொன்றனையுமே?' யென இதனையே மிகுத்துக் கூறினன். இது புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். எனையிருத்தல், இரங்கல், ஊடலென்பனவோ வெனின், இவர் பொருட் பாகுபாட்டினை அறம் பொருள் இன்பமென வடநூல் வழக்குப்பற்றி யோதுதலான்: அவ்வாறே யவற்றைப் பிரிவின்கணடக்கினரென்க. இனி அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும், பெரும்பான்மைபற்றி வகுத்து அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பு மொவ்வாமையுமுடையவாக் கிக் கூறுகிறார்" திருக்குறள் காமத்துப்பால் பாயிரவுரை பரிமேலழகர் உரை—மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு. பக்கம் 622.

2 "அகப் பொருளும் அதன் துறைகளும்; புறப்பொருளும் அதன் துறைகளும், இவ்விருவகைப் பொருள்களின் இயைபுகளும், வடமொழியினின்றும் என்றென்றும் கிடைத்தல் இயலாத அரிய தனித் தமிழ் விஷயங்களாம்" வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி நூற்லெருகுதி (தமிழ் மொழி வரலாறு) பக்கம் 207.

கூறியிருக்கிறார்.[1] புறப் பொருளில் கூறப் பெற்ற ஏழு துறைகளும் வட மொழியிலுள்ள அர்த்த சாஸ்திரங்களில் கூறப் பெறும் 'ஷாட்குண்யங்கள்' போல சில அம்சங்களில் இருக்கின்றன என்று அதே அறிஞர் கருதுகிறார்[2]. இவ்விரண்டு கருத்துக்களையும் சற்று நுட்பமாக ஆராய்தல் நலம்.

நாகரிகம் எய்திய மக்களின் மொழிகளில் காதலைப் பொருளாகக் கொண்ட உயர்ந்த கவிதை இருப்பது இயல்பு. மக்களின் பழக்க வழக்கங்களைத் தழுவியே பாடல்கள் எழுதப் பெறும். மொழிகளின் பண்புக்கும் வளர்ச்சிக்கும் உகந்தவாறும் புலவரின் திறமைக்குத் தகுந்தவாறும் கவிதை அமைந்திருக்கும். அகப் பொருளுக்கு, காதலின் பிறப்பும் வளர்ச்சியும், அது இயங்கும்

---

1. "Tall claims are sometimes made that the Aham poems, that is poems of love, are the sole monopoly of the ancient Tamils. Sanskrit literature abounds in poems of this nature and indeed some of these poems are very ancient. I may refer to the famous Hala's Sattasi. It is a collection of 700 gathas in the Arya metre in maharashtri Prakrit and it is ascribed to king Hala. The situations portrayed in these gathas are very much like the Tamil thurai, given in the colophons. But love poems are not confined to any one clime or country. It is said that during the time of Justinian 'epigramatic writing,' especially in its amatory department experienced a great revival at the hands of Agathias the historian, Paul Silenterius, and their circle and their ingenious and mannered productions were collected by Agathias into a new anthology. The poems in our (Tamil) collections also do not escape the charge of being mannered productions" History of Tamil Language and Literature— S. Vaiyapuri Pillai. Page 45.

2. "Similar in some respects to the shadgunyas of the Arthasastras, are the seven turais of Puram" Ibid Page 54.

முறையிலுள்ள வேறுபாடுகளும் உணர்ச்சிக்கற்றையும் அடிப்படையான தத்துவமாய் இருந்தபோதிலும், ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாத வெறும் காதல் அல்லது சிருங்கார ரசப்பாடல்கள் அகப்பொருள் ஆகா. காதல் பாடல்களைச் சமைப்பதற்கு விதிகளைக் கூறும் வெறும் அமைப்பிலக்கணம் இல்லை தமிழ் அகப்பொருள்; அதைவிட விரிந்தது; சாத்திரப் பான்மையுடையது; மனோதத்துவ உண்மைகளின் அடிப்படையில் எழுந்த ஒரு அற்புதமான இலக்கிய சம்பிரதாயக்கலை. பண்டைக் காலத்தமிழ்ப் புலவர், ஆண்மை பெண்மையின் தவிர்க்க முடியாத, தெய்விகப் பிணைப்பையே வாழ்க்கையின் மிகவும் முக்கியமான இயல் என்று கருதி, அதையே தங்களுடைய இலக்கியத்திற்குச் சிறந்த பொருளாகக் கொண்டு, அதைப்பற்றி வெட்கமோ கூச்சமோ இன்றித் தெளிவாகப் பாடியிருப்பது அவருடைய கலைப்பண்பின் ஆற்றலையும் மனத்தூய்மையையும் காட்டுகிறது. காதலின் பிறப்பையும், மலர்ச்சியையும், வளர்ச்சியையும் சில சம்பவங்கள் மூலமாயும், தலைவன் தலைவி தோழி பாங்கன் செவிலி முதலியோரின் கூற்றுக்கள் மூலமாயும், கோவையாகவும் நாடகச் சுவையுடனும், படம் பிடித்துக் காட்டுவது போல், தமிழ்ப் புலவர் வரைந்திருக்கிறார். ஒரு துறையிலிருந்து அதற்கடுத்த துறை இயற்கையாகவே எழுவது எவருக்கும் எளிதில் புலப்படும். இவ்வாறு வரைவதற்கு ஒரு ஒழுங்கு முறையைத் தமிழ்ப் புலவர் கற்பித்துக் கொண்டு அதைப் பின்பற்றியே பாடல்களை ஆக்கினார். இந்த ஒழுங்கு முறையே பல துறைகளடங்கிய அகப் பொருள் இலக்கணமாக அமைந்து உருவெடுத்தது. இதில் சில துறைகள், உலகியல் வழக்குக்குப் புறம்பாகவும் நாடக வழக்கைத் தழுவியும் உள்ளன. இந்த இனத்தைச் சேர்ந்தவைதான் காட்சி, ஐயம், தெளிதல் போன்றவை. அவை புலவருக்குக்

கற்பனையுடன் ஓங்கிய கவிதையை ஆக்குவதற்குரிய சந்தர்ப்பங்களே. ஆனால் காதலரின் உள்ளத்தில் தோன்றும் நிகழ்ச்சிகளையும், அவர்களிடம் நேரும் அங்க சேஷ்டைகளையும் நுட்பமாய் 'மெய் தொட்டுப் பயிறல்' 'நாணிக் கண் புதைத்தல்' போன்ற துறைகளாக ஆக்கியிருப்பது உலகியல்போடு ஒத்திருக்கின்றன; அவை வெறும் புலநெறி வழக்கோ நாடக வழக்கோ அல்ல. பின்னர், சமயங்கள் வலுப்பெற்ற காலத்தில் சமயத் தலைவரும் ஞானிகளும் உலகியல் வாழ்க்கையைச் சேர்ந்த காதல் இன்பத்தையும் அதை நுகரும் புலன்களையும் அவித்து, மக்கள் கடவுள் மீது பக்தி கொண்டு வாழ வேண்டுமென்று பாடினர். அவ்வாறு பாடிய ஞானிகளும் கடவுளின் கருணையைப் பெறுதலையும், அவர் அடி நீழலைப் பற்றுவதால் விளையும் இன்பத்தையும்,அவைகளின் தன்மையையும் சிற்றின்பத்தின் தன்மையிலேயே அகப் பொருள் இலக்கணத்தைத் தழுவிப் பாடி அதையே கருவியாகக் கொண்டு மக்களுக்கு விளக்க நேர்ந்தது.[1] இந்த உண்மை சிந்தனைக்குரியது.

வட மொழியிலுள்ள சில பாடல்களையும் பாடல் தொகுதிகளையும் ஊன்றிக் கவனித்தால் அவைகளில் தமிழ் அகப் பொருள் இலக்கணத்தின் இயல்புகள் சில காணப்படுகின்றன. வட மொழியிலுள்ள இவ்விதப் பாடல்களில் ஹாலா என்ற சாத வாகன அரசன் தொகுத்த சட்டசியைத் தவிர, மற்றவை சுமார் கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னரே

---

1. "கடவுளரிடத்துச் செலுத்துங் காமப் பகுதியைப் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்தனராயினும் அதன் பொருட் கூறுகளெல்லாம் அகத்திணைத் தொடர்புடையனவாகவே அமைந்திருத்தல் கண்டு கொள்க" தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.—மு. இராகவய்யங்கார். பக்கம் 41.

எழுதப் பெற்றிருக்கின்றன.[1] அந்தக் காலத்தில் வட

---

1. ஹாலா என்ற சாதவாகன வம்சத்தின் 17-வது அரசர் கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்ததாகச் சரித்திரப் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார். History of India Vol I Page 102. ஹாலாவின் சட்டசி என்ற 700 பாடல்களடங்கிய தொகுதியைப் பற்றி டாக்டர் ஏ. பி. கெயித் என்ற ஆங்கில வடமொழிப் புலவர் எழுதுவதாவது :

"Probably, contemporaneous with, or a little earlier than, Kalidasa, were those poets whose work went to constitute collection of some 700 stanzas passing under the name of Hala or Satavahana, who is known to Bana in the Harshacharitra. Written in artificial and carefully studied language, the Maharashtri Prakrit and metre, they show, none the less, a measure of naturalness, which is doubtless the reflex of the matter of fact spirit of the Maratta people. Among much that is sensual, licentious or trivial or hackneyed, we may find effective expressions of the sentiment of love; Short they say, are the nights in summer; But ah, they are long for me, far from my beloved. For half the year the days grow longer, for the other half the nights. How different the year of separation. Then the days and nights grow equally long.

The true accent of the tenderness of a loving maiden is revealed in: "Well do I know that he has wronged me, that his word is false. Yet when he begs my pardon, it is I who feel at fault.

Sly humour is not wanting. 'Yasoda may say that Krisna is but a child, but the maidens of the village smile involuntarily as they look at the alleged infant... The thirsty traveller feasts his eyes on the maiden who draws water for him, and to prolong the feast, lets the water escape through his fingers, while she, with equal desire, lessens the stream of water which she directs into his hands...The maiden, who guards the field of rice is so fair that she has no rest from the passers-by, who insist on asking her the way, however well they know it." Classical Sanskrit Literature by Dr A. B. Keith (Heritage of India Series) Page 114—115.

மொழிக்கும் தமிழுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்த தால் வட மொழியைச் சார்ந்த சில அகப் பாட்டுக்கள் தமிழ் இலக்கணத்தைப் பின்பற்றியே இயற்றப் பெற்றிருக்கலாம் என்று ஊகிப்பது தவருகாது. ஏனென்ருல் வடமொழி இலக்கண நூல்களில் பொருள் இலக்கணத்தைப் போல் ஒரு பகுதி இருப்பதாகத் தெரியவில்லை. இருந்த போதிலும், வட மொழியில் தமிழ் அகப் பொருள் இலக்கணத்தைச் சார்ந்த பாடல்களைப் போன்றவை ஏராளமாய் இருப்பதால் அகப் பொருள் இலக்கணம் தமிழுக்கே உரியது என்ற கருத்து முழுவதையும் ஏற்றுக் கொள்ள அறிஞர் தயங்குவர்.

தொல்காப்பியத்தின் களவியல் பகுதியின் முதல் சூத்திரமும் இறையனுர் அகப் பொருள் என்ற நூலின் முதல் சூத்திரமும், களவு என்பது, வடமொழியார் வகுத்திருக்கும் எட்டு வகை மணங்களில் யாழோர் கூட்டத்தாரிடம் வழங்கி வரும் காந்தருவத்தைச் சேர்ந்தது என்று தெளிவாகக் கூறுகின்றன.[1] காதல் பிறந்து மலர்ந்து வளர்ந்து மன்றலில் கனிவதைக் களவு, கற்பு, என்று பிரிவினை செய்யப்பட்டிருப்பது தான் தமிழ் அகப் பொருள் இலக்கணத்தின் மிகவும் முக்கியமான தத்துவம். களவு என்பது அழகாயும் அர்த்த புஷ்டியுடனும் அமைந்த ஒரு சொல்; அதன் சிறப்பை இங்கே விளக்க வேண்டிய அவசியம் இல்லை. களவியல் என்பது

---

1. இன்பமும் பொருளும் அறனும் என்ருங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டங் காணுங்காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.
தொல். பொருள். 89 களவியல்—1

அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவ
தந்தணரரு மறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்க மென்மனுர் புலவர்
இறையனுர் அகப் பொருள்—1

காந்தருவ மணத்தைச் சேர்ந்த இயல்புடையது என்று தொல்காப்பியர் விளக்கியதிலிருந்து இந்த அகப் பொருள் கருத்து தமிழுக்கே உரியதென்றும் வட மொழிக்குப் புறம்பானது என்றும் கூற முடியாது. களவில் பிறந்து நிகழும் காதலும், அதனால் தலைவனுக்கும் தலைவிக்கும் ஏற்பட்ட தொடர்பும் உயிருறவும், மணத்தில் முடிவதற்கு முன்னும் கற்பு முறையிலேயே வளர்கின்றன என்ற உணர்ச்சியே தமிழ் அகப் பொருள் இலக்கணத்தில் அவர்களைக் கட்டுப்படுத்துகிறது.[1] அன்பு மலர்ந்து மன ஒருமிப்பு இயங்கி, தோழியின் துணையால் காதலர் தனியாகப் பல தடவை சந்தித்து இன்புற்று மனச்சோர்வுடன் பிரிந்து ஏக்கங் கொண்டு மணம் ஏற்படும்வரை, அநுபவிக்கும் நாடகச் சுவை பெற்ற நிகழ்ச்சிகளைக் களவு என்றும், மணமான பிறகு நிகழும் நடைமுறைகளையும் சம்பவங்களையும் கற்பு என்றும் தமிழ் இலக்கணம் வகுத்திருக்கிறது. இந்த அடிப்படையான பாகுபாடு வடமொழி நூல்களிலும் காணப் பெறுகிறது. அம்மொழியில் ரஸபாவங்களின் தன்மையை விரித்து எழுதிய புலவர், அகப்பொருளை சிருங்கார ரஸமாகக் கொண்டு, அதன் மலர்ச்சியையும் வேறுபாடுகளையும், தமிழில் களவு, கற்பு என்ற பாகுபாடு இருப்பது போலவே பகுத்து வரைந்திருக்கிறார். அவர் சிருங்காரத்தை 'விப்ரலம்பம்', 'சம்போகம்' என்று இரு வகையாகப் பிரித்து, ஒவ்வொன்றுக்கும், களவு, கற்புக்குத் தமிழில் இருப்பதுபோல் இலக்கணம் வகுத்திருக்கிறார். களவில் பிரிதல், கற்பில் பிரிதல் என்ற இரண்டுமே 'விப்ரலம்ப'த்தில் அடங்கும்படியாய் வடமொழியாரின் இலக்கணம் அமைந்திருக்கிறது. பிரித

1. உயிரினுஞ் சிறந்தன்று நாணே, நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று."
தொல். பொருள் 113 களவியல்

லினால் காதலரிடம் ஏற்படும் துன்ப உணர்ச்சியை எத்தனையோ விதமான பாவங்களில் உருக்கமாய் எழுதப் பெற்ற பாடல்கள் தமிழ்த் தொகைநூல்களில் இருப்பனபோல் வடமொழியிலும் இருக்கின்றன.[1] இவைகளிலிருந்து, தமிழிலுள்ள அகப்பொருள், திணை, துறை பாகுபாடுகளுக்கும், வடமொழிப் புலவரின் சிருங்கார ரஸ இலக்கணத்திற்கும் ஓரளவு பொதுவா யுள்ள தன்மைகள் விளங்கும். இவ்வொற்றுமை ஓரளவு இருப்பினும், விவரங்களிலும், நுணுக்கங்களிலும் வித்தி யாசங்களும் இருக்கின்றன. ஹாலாவின் சட்டசியிலும், ஆதிசங்கரரால் எழுதப் பெற்றதாக வழங்கி வரும் அமருசதகத்திலும், பிற்காலத்தில் தோன்றிய பில்ஹண ரின் சௌரபஞ் சாசிகாவிலும், போஜராஜரின் சிருங்கா ரப் பிரகாசத்திலும், ஜயதேவரின் ஒப்புயர்வற்ற கீத கோவிந்தத்திலும் அற்புதமான அகப்பொருள் பாடல் கள் பல துறைகளில் மலிந்து கிடக்கின்றன. ஆகவே, களவு, கற்பு என்ற தமிழ் அகப்பொருளின் அடிப்படை யான தத்துவமும் பாகுபாடும் வடமொழியில் சிருங்கார

---

1. பிரிதலால் காதலரிடம் தோன்றும் மன நிகழ்ச்சிகளையும் துன்பத்தையும் வடமொழிப் புலவர் மிகுந்த நயத்துடன் பாடி யிருப்பதாக டாக்டர் ஏ. பி. கீத் இவ்வாறு கூறுகிறார்:—"Normally, however there is no more than the grief of temporary parting; the Indian poet does not describe the bitterness of love lost on one, who does not return it or on one whom fate takes irrevocably away. But he excels in pictures of the sorrows of temporary seperation of husband and wife, when the former, as often, must go on journey. "Classical Sanskrit Literature Page 118.

பண்டைத் தமிழ்த் தொகை நூல்களிலுள்ள பாலைத் திணையின் பல்வேறு துறைகளைச் சார்ந்த பல பாட்டுக்களுக்கும் இது பொருந் தும். பிரிதலால் ஏற்படும் துன்பத்தை எத்தனையோ கற்பனை விந்நியாசங்களுடன் பண்டைத் தமிழ்ப் புலவர் அழகாகப் பாடி யிருக்கிறார்.

ரஸ இலக்கணமாக ஓரளவு இயங்கியிருப்பது வெளிப் படை. இந்தப் பாகுபாடும் அதைச் சார்ந்த துறைகளும் தமிழில் தனி இலக்கணமாய் இருப்பதுபோல் வட மொழியில் இல்லாததும், தமிழில் இந்த இலக்கணம் அதி கமான பிரிவுகளுடனும் நுட்பங்களுடனும் விவரிக்கப்பட் டிருப்பதும், வித்தியாசங்களாகக் குறிப்பிடத்தக்கன.

இனி மேனாட்டு இலக்கியத்தை எடுத்துக் கொள் வோம். அகாதியன் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்க சரித்திர ஆசிரியன்; அவன் கவிஞனாயும் இருந் தான். அவன் காலத்திற்கு முன்னாலேயே கிரேக்க இலக்கியத்தில் சிற்சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களுக் கேற்றவாறு சிறு செய்யுட்கள் தொகுக்கப் பெற் றிருந்தன. மெலிகர் என்பவன் இவ்விதத் தொகுதியை இயற்றியிருந்தான். அகாதியன், தானும், மற்றப் புலவர் சிலரும் இயற்றிய பழமொழிகள் அல்லது சொல் திட்ப முள்ள முதுமொழிகள்(Epigrams)போன்ற பாட்டுக்கள் பலவற்றைத் தொகுத்தான். இந்தத் தொகுதியில் ஒரு பகுதி ஒரே அச்சில் வார்க்கப்பட்டன போலுள்ள சிருங் கார ரஸப் பாடல்கள். அவைகளைப் பற்றிய சில விவரங் களும் உதாரணங்களும் சுருக்கமாக அடிக்குறிப்பில் ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.[1] இவைகளை

1. "Of some 3700 poems contained in the Palatine anthology, just one tenth (376) come from Agathias's collection and are the work of Agathias and his contemporaries......The love poems often have themes familiar in our own literature. Agathias for instance (V. 261) is anticipating Ben Johnson when he writes of the kiss within the cup:—"If you but touch the bowl with your lips, it is hard to be sober, who could refuse such a cup offered by bearer so sweet? Surely the bowl is a ferry boat bearing the kiss you set on it, which when it comes with its charge tells of the grace it received. 'Paul Silentarius is still further inflamed by a jug of water

வைத்து ஓரளவு ஒப்பிட்டுப் பார்க்கலாம். அப்படிப் பார்த்தால் அவைகளுக்கும் தமிழிலுள்ள அகப்பாட்டுக் களுக்கும் இருக்கும் பொது இயல்புகள் மிகக் குறைவே. இப்பாடல்களில் காணப் பெறுவன உத்பிரேக்ஷை போன்றவைகளே. இவைகளுக்கும் தமிழ் அகப் பொருள் பாடல்களுக்கும் பொருள் காதலும், அதனுல் எழும் உணர்ச்சிகளும்தான் பொதுவான தன்மை. மற்றப்படி தமிழ்ப் பாடல்களில் காணப் பெறும் கவிதை யழகுகளும் கற்பனைப் பண்புகளும் மனோதத்துவ ஆழமும் இத்தொகுதியில் இல்லை. தமிழ் அகப்பொருள் இலக்கணத்தின் சிறப்பும், பாகுபாடுகளும், தனி இயல்பு களும் கிரேக்க பாடல் தொகுதியில் காண்பதற்கு அரிதா யிருக்கின்றன.

பண்டைத் தமிழ்த் தொகை நூல்களில் காணப் பெறும் அகத்துறைப் பாடல்களில் சில ஒரே அச்சில் வார்த்தவை போலிருக்கின்றன என்பது உண்மைதான். அகப்பொருள் இலக்கண விதிகளைத் தழுவியே இவை ஆக்கப் பெற்றிருப்பதால் ஒரேவிதமான கருத்தும், கற்பனையும், சொல்லும் முறையும் அடிக்கடி தென்படு

---

which his lady love pours over him when he serenades her (V. 281). Another beauty affects him by the varieties of her hair dressing, much as Julia did Herrick by the variations in her clothes (V. 260). Agathias and his imprisoned mistress kiss the two ends of her girdle like an earlier Pyramus and Thisbe (V. 285) Several poems are addressed to faded beauties now deserted by their lovers (Macedonius (V. 271 Agathias V. 273) They read like sequels to Herrick's 'Sweet, be not proud'...With occes-sional exceptions, these epigrams, whatever their subject, are just conceits. The language is that which had been used for similar epigrams on the same set of subjects for many centuries. But that is not to deny them a limited sincerity.'' Justinian and his Age by P. N. Ure (pages 190-192).

கின்றன. இருந்தபோதிலும், தங்களுடைய புலமையின் திறத்தால், எத்தனையோ விதமான கற்பனு பாவங்களில் நெஞ்சை உருக்கும் கவிதைப் பாங்குடன் கற்றோருக்கும் மற்றோருக்கும் ஒருங்கே இன்பம் அளிக்கக்கூடியதும், கவிதைக் கலைக்கே எல்லையாயிருக்கக் கூடியதாயுமுள்ள அகப் பாட்டுக்களைப் பண்டைத் தமிழ்ப் புலவர் பலர் சமைத்திருக்கிறார்கள். இலக்கண விதிகள் அவர்களுடைய கவித்வ சக்தியின் மலர்ச்சிக்கு இடையூருக இல்லாத அளவில் அவர் புலமை ஓங்கியிருந்தது. இவ்விதப் பாடல்கள் பெரும்பாலும் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய தொகை நூல்களில் சிறப்பாகக் காணப்படுகின்றன. வடமொழிப் புலவர் பண்டைக் காலத்திலாவது பிற்காலத்திலாவது பொருள் இலக்கணம் என்று தனியாக அமைத்து ஓதினதாகத் தெரியவில்லை; எழுத்து, சொல், யாப்பு, அணி, த்வனி ஆகியவைகளையே பிரதானமாகக் கொண்டு அவர் சிறந்த இலக்கண நூல்களையும், அலங்கார சாத்திரங்களையும் ஆக்கினர். அவர் ரஸ பாவங்களைப்பற்றி எழுதியிருக்கும் பகுதிகளில்தான், தமிழ் அகப்பொருள் இலக்கணத்தோடு ஒப்புமை கூறக்கூடிய சில இயல்புகள், முன்னர்க் கூறியதுபோல், காணப் பெறுகின்றன.

புறப் பொருளை எடுத்துக்கொண்டால், அகப்பொருள் சம்பந்தமாக இருக்கும் அளவுக்குக்கூட வடமொழிக்கும் தமிழுக்கும் ஒற்றுமை இல்லை. புறப்பொருளின் துறைகளின் சில அம்சங்கள் வடமொழியிலுள்ள அர்த்த சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் 'ஷாட்குண்யங்கள்' போல் இருக்கின்றன என்று ஒரு தமிழ் அறிஞர் எழுதியிருப்பதை முன்னல் குறிப்பிட்டிருக்கிறோம். இது ஆராய்ச்சிக்குரியது. அர்த்த சாஸ்திரங்களில் கூறப்பெற்றிருக்கும் 'ஷாட்குண்யங்கள்' எவை என்று கவனித்தல் நலம். பிற நாடுகளுடன்

கொள்ள வேண்டிய உறவைப்பற்றி அரசர் அநுஷ்டிக்க வேண்டிய ஆறு வகைக் கொள்கைகளைப்பற்றி கௌதில்யரின் அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. அவை நாகரிகம் முதிர்ந்த நாடுகளின் மன்னர் கையாள வேண்டிய, அறிவு, புத்தி பூர்வமாக வகுக்கப்பெற்ற அரசியல் சூழ்ச்சியைச் சார்ந்த கொள்கைகள் அல்லது உத்திகளாக அமைந்திருக்கின்றன. இவ்வாறு வரையப் பெற்றிருக்கும் ஆறு வகைக் கொள்கைகள், உடன் படிக்கை செய்து கொள்ளுதல், போர் தொடுத்தல், நடுவு நிலைமை வகித்தல், வலியுள்ள அரசருடன் நட்புக் கோடல், ஒரு முகத்தால் சமாதானத்தையும் வேறு முகத் தால் போரையும் நாடுதல் ஆகியவைகளைப் பற்றியவை. இவைகளைப் பற்றிக் கௌதில்யர் கூறும் ஆழ்ந்த கருத் துக்களையும் அவைகளில் பொதிந்து கிடக்கும் அரசியல் தந்திர அறிவையும் கவனித்தால், கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய சிறந்த ராஜ தந்திர நிபுணர் என்று கருதப் பெற்ற மாக்கியவெல்லி என்பவனின் அரசன் (Prince) என்ற தலைப்புடனுள்ள நூல் பால பாடமாகும். ஆனால் கௌதில்யரின் அர்த்த சாஸ்திரத் தில் கூறப் பெற்றிருக்கும் 'ஷாட்குண்யங்களை' அநுஷ் டிக்கும் மன்னர் ஆளும் நாடுகளின் சமுதாய நிலைக்கும் தமிழ் இலக்கணத்திலுள்ள புறப் பொருளின் துறை களாகிய வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் ஆகியவை பிரதிபலிக்கும் சமுதாய நிலைக்கும் வேறுபாடுகள் இருக்கின்றன.[1] மிகப் பழமை

1. தொல்காப்பியர், புறப் பொருளுக்கு மேலே கூறிய ஏழு திணைகள் தான் வகுத்திருக்கிறார். புறப் பொருள் வெண்பா மாலை, இவ் வேழுடன் கரந்தை, நொச்சி, பொதுவியல், கைக் கிளை, பெருந்திணை ஆகிய ஐந்தையும் சேர்த்துப் பனிரண்டு புறத் திணைகள் உண்டு என்று கூறுகிறது. ஒருகால், புறப் பொருள் வெண்பா மாலையின் முதல் நூலாகிய பன்னிரு படலத்தில் இவ் வாறுள்ள பனிரண்டு திணைகள் கூறப்பட்டிருக்கலாம். இப்

யான காலத்தில் நாடுகள் பெரிதாக அமைந்து நாகரிக அரசியல் முறைகள் பெறுவதற்கு முன், ஆங்காங்கே பல குறுநில மன்னர் தோன்றிப் போர்களை நடத்தி வாழ்ந்து வந்த சமுதாயச் சித்திரத்தையே, புறப்பொருள் இலக்கணத்தின் துறைகள் காட்டுகின்றன. சரித்திர காலத்தில் சேர, சோழ, பாண்டிய, பல்லவர், தமிழ் நாட்டில் புகழுடன் வாழ்ந்து போர் செய்த பண்பு மேலே கூறப் பெற்றிருக்கும் திணைகள் பேசும் முறைகளைப் பூராவும் தழுவியதாக இல்லை. இவை அக் காலத்தில் பெரும்பாலும் மறைந்து விட்டன என்று தெரிகிறது. இலக்கியத்தில் இத் திணைகளைத் தழுவிய குறிப்புகள் ஏகதேசமாகவேதான் காணப் பெறுகின்றன. புறப் பொருள் திணைகளில், வாகை, காஞ்சி, பாடாண் ஆகிய இம் மூன்று தான் பிற்காலத்தில் நாகரிகத்தில் வளர்ந்த பண்டைத் தமிழ் நாட்டின் சமுதாய வாழ்வைப் பிரதி பலிக்கும் முறையில், பண்டைத் தமிழ் இலக்கியத்தில் பெரிதும் இடம் பெற்றிருக்கின்றன. ஆகவே புறப் பொருள் பாகுபாடு தமிழ் இலக்கியத்திற்கே பெரும் பாலும் உரிய ஒரு சிறப்பு என்று கூறலாம்.

---

போது அந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. சற்று கூர்ந்து பார்த்தால் தொல்காப்பியரின் திணைப் பாகுபாட்டிலே இப் பனிரண்டு புறத் திணைகளும் அடங்கும். அவர் அணிகளை எல்லாம் 'உவமம்' என்பதில் அடங்கச் செய்தது போல, வெட்சியிற் கரந்தையையும், உழிஞையில் நொச்சியையும், கைக்கிளை பெருந்திணை இவ்விரண்டையும் அகத்திணையுள் உள்ள அகப் புறத்திலும், பொதுவியலை திணையெனக் கொள்ளாது பொது இலக்கணமாகவும் அமைத்துக் கூறியிருக்கிறார்.

# பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய நோக்கு

## முத்தமிழ்ப் பாகுபாடு

பண்டைத் தமிழ்ப் புலவர் தமிழை வேறொரு விதமாகவும் பாகுபாடு செய்தார். தமிழை இயல், இசை, நாடகம் என்று மூவகையாக வகுத்து முத்தமிழ் என்று கொண்டார். இந்தப் பாகுபாடும் மிகப் பழமையானது என்பதில் ஐயம் இல்லை. ஆனால் பழைய தமிழ் நூல்களில் இதைப் பற்றி உரையாசிரியர்கள் கையாண்டிருக்கும் சில சூத்திரங்களைத் தவிர வேறு தெளிவான விளக்கமோ குறிப்புக்களோ இல்லை.

இயல், இசை, நாடகம் என்ற இந்தப் பாகுபாட்டிலடங்கிய மூன்றும் ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாதவை என்று நினைப்பது தவறு. இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் இயற்றமிழின் சில இயல்புகள் உரியனவாயிருக்கும். இயற்றமிழுக்கு இசைத் தன்மை இன்றியமையாதது. இசைத் தமிழுக்கு இயற்றமிழைச் சார்ந்த சொல் நயமும் பொருள் நயமும் ஓரளவாவது இருக்க வேண்டும். இயற்றமிழின் சுவையும் இசைத் தமிழின் பண்பும் நாடகத் தமிழில் பொதிந்திருக்க வேண்டும்.[1]

---

1. தொல்காப்பியம் மரபியலின் கடைசிச் சூத்திரத்தில் வரும் அதிகார முறைமை என்பதைக் குறித்துப் பொருள் கூறும்போது பேராசிரியர் எழுதுவதாவது:—“இனி வழக்கியலும், வழக்கியலாற் செய்யப்பட்ட செய்யுளியலும் பற்றி எழுந்த இலக்கணம் இயற்றமிழெனப்படும். அச் செய்யுளின்றி அமையாத இசை யிலக்கணம் இசைத் தமிழெனப் பெயரெய்தி அவ்வியற்றமிழ்ப் பின்னர் வைக்

இப்போதுள்ள பழைய தமிழ் நூல்களைப் பொதுவாக இயற்றமிழ் என்று தான் புலவர் கருதி வந்திருக்கிறார். இயற்றமிழ் இலக்கியம், இலக்கணம் என்று இரு பிரிவாக வழங்கி வருகிறது. தொல்காப்பியம் இயற்றமிழின் இலக்கணம் என்றே கொள்ளப்படுகிறது. இயற்றமிழுக்குத் தொல்காப்பியம் இருப்பது போல், இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் பண்டைக் காலத்தில் தனி இலக்கண நூல்கள் இருந்தன. சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார் தம் காலத்திலிருந்த இசை நுணுக்கம், இந்திர காளியம், பஞ்ச மரபு, பரத சேனாபதியம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல், ஆகிய இசைத் தமிழ் நாடகத் தமிழ் நூல்களைத் தழுவியே தமது உரையை எழுதியிருப்பதாகக் கூறுகிறார்; அவைகளிலிருந்து சில சூத்திரங்களையும் மேற்கோள்களாகக் காட்டி யிருக்கிறார். அவர் காலத்தில் மறைந்துபோன பல நூல்களையும் குறிப்பிட்டு அவைகளிலிருந்தும் சில விஷயங்களைக் கூறியிருக்கிறார். பரதம், அகத்தியம், முறுவல், சயந்தம், குண நூல் செயிற்றியம், கூத்த நூல், நூல், என்ற நாடகத் தமிழ் நூல்களும், பெருநாரை, பெருங் குருகு, பஞ்ச பாரதீயம், இசை நுணுக்கம் என்ற இசைத் தமிழ் நூல்களும் இவ்வாறு மறைந்து போன நூல்கள் என்று தெரிகிறது. அவைகளின் பொருண்மை எத்தன்மையது என்றாவது, எந்தெந்த இசைத் தமிழ் நாடகத் தமிழ் நூல்களைக் கருதி அவை இலக்கணமாக எழுதப் பெற்றன என்றாவது, அவைகளைப் பின்பற்றி எழுந்த இசைத் தமிழ் நாடகத் தமிழ் நூல்கள் எவை என்றாவது இப்போது தெளி

கப்பட்டதெனப்படும்; இவ்விரண்டன் வழி நிகழ்ந்தன் கூத்திலக்கணங் கூறிய நாடகத் தமிழ் அவற்றுப் பின்னர்த் தாமென முறைமை கூறுதலும்" தொல். பொருள். மரபியல்.—ச. பவாநந்தம் பிள்ளை பதிப்பு. பக்கம் 627.

வாகத் தெரிய முடியவில்லை. ஆனால் பண்டைக் காலத்தில் தமிழில் இசைத் தமிழ் இலக்கியமும் நாடகத் தமிழ் நூல்களும் சிறந்த அளவில் இருந்திருக்க வேண்டும் என்று திட்டமாய்க் கூறலாம்.

தொல்காப்பியம் முழுவதும் இயற்றமிழ் இலக்கணம் என்பது சரியே. இருந்த போதிலும் இசைத் தமிழ் நாடகத் தமிழ் இலக்கணங்களின் சாயல்களும் அதில் தென்படுகின்றன. மெய்ப்பாட்டியலில் நாடகத் தமிழைச் சார்ந்த சில கருத்துக்களையும் கொள்கைகளையும் காணலாம். இந்த இயலின் முதல் சூத்திரத்திற்கு[1] உரை கூறும் இளம்பூரணர் 'பண்ணைத் தோன்றிய' என்பதற்கு 'விளையாட்டாயத்தின் கண் தோன்றிய' என்று பொருள் கூறுகிறார். அதாவது ஆடல்கள், பாடல்கள் கூத்துகள் முதலியவை நடைபெறும் களன் என்பது கருத்து. இதையே பேராசிரியரும் விளக்குகிறார்.[2]

பண்ணுடனும் தாளத்துடனும் பாடுதற்குரிய பாடல்களையும் பாடல் தொகுதிகளையும், தொடர் நிலையையுமே இசைத் தமிழ் என்று பண்டைத் தமிழ்ப் புலவர் வகுத்தார். பண் என்பது பண்டைத் தமிழர் கையாண்ட இசை முறை அல்லது ராகக் கோட்பாடு என்று சொல்லலாம். இதற்கு விரிவான விளக்கம் பழைய தமிழ் நூல்களில் காணப்படுகிறது. அடியார்க்கு நல்லார் கொடுக்கும் விளக்கம் வருமாறு:- "இங்ஙனம் மூலாதாரந் தொடங்கிய எழுத்தினுதம் ஆளத்தியாய்ப்

---

1. பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய புறனே நானான் கென்ப.
தொல். பொருள். மெய்ப்பாட்டியல்—1.

2. முடியுடை வேந்தருங் குறுநில மன்னரு முதலாயினோர் நாடக மகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டுங் காம நுகரும் இன்ப விளையாட்டினுட் டோன்றிய முப்பத்திரெண்டு பொருளும்'' பேராசிரியர் உரை. தொல். பொருள் மெய்ப்பாட்டியல்.—ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (1917) பக்கம் 2.

பின் இசையென்றும் பண்ணென்றும் பெயராம்; என்னை "பாவோடணை தலிசை யென்றூர் பண்ணென்றூர் மேவார் பெருந்தான மெட்டாறும்—பாவா, யெடுத்தன முதலா விருநான்கும் பண்ணிப், படுத்தமையார் பண் ணென்று பார்". பல இயற் பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் இசையென்று பெயராம்."[1] பண்டைத் தமிழரின் இசைக் கலையைச் சேர்ந்த பல நுட்பமான விபரங்களை, முன்னுள்ள இலக்கண நூல்கள், யோக நூல்கள் முதலியவற்றிலுள்ள மேற்கோள்களுடன் சிலப்பதிகாரத்திலுள்ள அரங்கேற்று காதையின் உரை யில் அடியார்க்கு நல்லார் தருகிறூர். பண் என்பது இக் கால இசைவாணர் பயின்று வரும் ராக முறை அல்ல என்றும், பண் வேறு, ராகம் வேறு என்றும் சில அறிஞர் கூறுகிறூர்.[2] இந்தக் கருத்தில் வலியில்லை. ஒலி அல்லது நாதத் திவலைகளடங்கிய ஏழு ஸ்வரங்களை அடிப்படை யாகக் கொண்டு அவைகளைப் பலவிதமாகக் குறிப்பிட்ட ஒழுங்கிலும், விதிகளுடனும் சேர்த்து அவைகளுக்கு ஒலி உருவங்கள் கொடுப்பதே பண்கள் அல்லது ராகங்கள்; இவைகளைச் சமைக்கும் கலையே இசை அல்லது சங்கீதம்; இந்தக் கலை தெய்வீகமானது; கணக்கற்ற நுட்பங்களை யுடையது. பழைய பண்களுக்கும் இப்போது வழங்கி வரும் ராகங்களுக்கும் சில ஒப்புமை களும் வித்தியாசங்களும் இருந்தபோதிலும் அவை களின் அடிப்படையான தத்துவம் ஒன்றுதான்; தமிழகம் பொறுத்த வரையில் வெகு காலத்திற்கு முன்

1. சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை—டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு (1917) பக்கம் 105.

2. "இன்னும் பண்ணும் வேறு இராகமும் வேறு என்பதும் நோக்கத் தக்கது". சம்பந்தர் காலம்—ஆ. முத்துத்தம்பி பிள்ளை செந்தமிழ் தொகுதி 12—பகுதி 7 பக்கம் 318. எவ்விதத்தில் வேறு என்று இந்த ஆசிரியர் விளக்கவில்லை.

இயங்கி வந்த பண் முறைகளிலிருந்தே பிற்கால ராகங்கள் தோன்றி செழிப்புற்று வளர்ந்தன என்று கூறலாம். தமிழ் நாட்டில் பூர்வீகமாக முப்பத்திரண்டு ராகங்கள் இருந்தனவாக ஒரு ஐதீகம் உண்டு. தேவாரப் பிரபந்தப் பாடல்களைப் பாடுவதற்கேற்பட்ட பண்கள் இருபத்துமூன்று என்று கொள்ளப்படுகிறது. இவைகளுக்கும் ராகங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பது எவருக்கும் புலப்படும். அநேக பண்களின் உண்மையான சொருபத்தையே தெரியாத நிலையில் இன்று நாம் இருக்கிறோம். இதைப்பற்றி ஆராய்ச்சி நடைபெற்று வருகிறது. எல்லாப் பண்களின் சொரூபம் முழுவதையும் தெரிய முடியுமானல் அவைகளுக்கும் பிற்கால ராகங்களுக்கும் உள்ள தொடர்பு விளங்கும்.

இசைத் தமிழுக்கும் இயற்றமிழுக்கும் இலக்கணம் வெவ்வேறு என்று கருதுவது சரியே. ஆனல் திரு. முத்துத்தம்பி பிள்ளை மேலே குறிப்பிட்டிருக்கும் கட்டுரையில் விருத்தப் பாவினம் இசைத் தமிழையே சேர்ந்ததென்றும், திருஞான சம்பந்தரின் விருத்தப் பாடல்களும் ஜீவக சிந்தாமணியின் விருத்தங்களும் இசைத் தமிழ் என்றும், இயற்றமிழைச் சார்ந்தன அல்ல என்றும் கூறியிருப்பதற்கு ஆதாரங்கள் இல்லை. தமிழில் இயற்றமிழுக்கும் இசைத் தமிழுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்திருக்கிறது. இந்தத் தொடர்பு இடைக் காலத் தமிழ் இலக்கியத்திற்கு மிகுந்த சிறப்பை அளித்திருக்கிறது.

பண்டைக் காலத்திலிருந்த இசைத் தமிழ் இலக்கணங்களைப்பற்றிச் சில விபரங்கள் கிடைத்திருப்பினும், அக்காலத்திலிருந்த தனி இசைத் தமிழ்ப் பாடல்களைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் இசைத் தமிழ் எல்லாம் பண்டைக் காலத்தின் பிற்பகுதியைச் சேர்ந்தவை. சமய குரவரின்

தேவார திருவாசகப் பாடல்களும், வைஷ்ணவ ஆழ்வார்களின் பாசுரங்களும், இவ்விரண்டு வகைகளையும் பின்பற்றி எழுந்த ஏராளமான பக்திச் சுவைப் பாடல்களுமே தமிழில் இப்போதுள்ள இசைத் தமிழ். தேவார திருவாசகப் பாடல்களும் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குள் பாடப் பெற்றவை. இந்தக் காலம் தான் இசைத் தமிழ் ஓங்கி அதன் உச்ச நிலையை அடைந்த காலம். பக்திச் சுவைக்கு இசையே உயிர் நாடி என்று கருதப் பெற்ற காலம் அது. இசையே பரம்பொருளின் தோற்றங்களில் ஒன்று என்றும் விளங்கிய காலம் அது. அக்காலத்தில் தமிழும் தமிழ்க் கலைகளும் எல்லாத் துறைகளிலும் சிறப்புற்றன.

“தமிழொடு இசை பாடல் மறந்தறியேன்” என்று அப்பர் அடிகள் ஏங்கிக் கதறினார். மக்கள், திருஞான சம்பந்தரின் பாடல்களை “இசை கற்று வல்லார் சொல்லக் கேட்டு கந்தர்வ”ராக வேண்டும் என்று அப்பெருமானே கூறுகிறார். தமிழ் இசையின் முழுப் பெருமையையும் முக்யத்வத்தையும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடல்களில் காண்கிறோம். அவரைத் தடுத்தாட் கொண்ட கடவுளை இசை வடிவமாகவே அவர் பார்த்துப் பாடுகிறார். “பண்ணார் இன்றமிழாய்ப் பரமாய பரஞ் சுடரே” என்றும், “பண்ணிடைத் தமிழொப்பாய்” என்றும், “ஏழிசையாய், இசைப் பயனாய்” என்றும், “பாட்டகத் திசையாக’ என்றும், “நாதனை, நாதமிகுத்தோசைய தானவனை” என்றும்‘ “தண்டமிழ் நூற்புலவாணர்க்கோர் அம்மானே” என்றும் அவர் தம் அருமைத் தோழராகிய சிவபெருமானை அழைக்கிறார். “நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன் தாளம் ஈந்தவன் பாடலுக்கிரங்கும் தன்மையாளனை” என்றும் கூப்பிடுகிறார். தமக்கு மூத்

தோரும் முன்னேருமான அருள்மூர்த்திகளின் வாக்கை "நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை" என்று போற்றுகிருர். மாணிக்க வாசகரும் "இன்னிசை வீணையில் இசைத்தோன் காண்க" என்று பரம்பொருளைக் குறிப்பிடுகிருர். இதே போல் ஆழ்வார்களின் பாசுரங்களிலும் ஈசனுக்குப் பா மாலை கட்டும் இசைத் தமிழின் ஏற்றம் பாடப்பட்டிருக் கிறது. பகவானைத்தவிர மனிதரைப் பாடமாட்டோம் என்ருர்கள் சில ஆழ்வார்கள். இவர்கள் பகவானை இசை வடிவமாகவும் கண்டார்கள். "ஏழிசையின் சுவைதானே" என்றும், "முன்நல் யாழ்பயில் நூல்நரம்பின் முதிர் சுவையே" என்றும், "மொய்ய சொல்லா லிசைமாலைக ளேத்தி யுள்ளப் பெற்றேன்" என்றும், "அன்றைக்கன் றென்னைத் தன்னுக்கி யென்னுல், தன்னை இன்தமிழ் பாடிய வீசனை" என்றும் நம்மாழ்வார் பரமனை நோக்கி நெஞ்சுருகிப் பாடுகிருர். திருமங்கையாழ்வாரும் ஈசனை "பாட்டினுலுன்னை யென்நெஞ்சத் திருந்தமை காட்டி ஞய்" என்றும், "பண்ணினைப் பண்ணில் நின்றதோர் பான்மையை" என்றும், "பண்ணின் மொழி யாழ் நரம் பில் பெற்ற பாலையாகி யிங்கே புகுந்து" என்றும் பாடு கிருர். மற்ற ஆழ்வார்களில் பலரும் பரமனுக்கு இசைப் பாமாலைகளைப் பாடிச் சூட்டினுர். அந்தக் காலத்தில் தமிழகத்தில் உதித்த இந்த சமயச் செல்வர்களுக்கும் ஞானப் பெருமக்களுக்கும் இசைத் தமிழும் இறைத் தமிழும் ஒன்ருயின.

இயற்றமிழுக்கும் இசைத் தமிழுக்கும் இருந்த நெருங்கிய தொடர்பின் தன்மையை இனி ஆராய வேண்டும். இயற்றமிழில் கவிதையும் உரையும் அடங்கு மாயினும் பண்டைக் காலத்தில் இயற்றமிழ் கவிதை வடிவத்திலேயே இயங்கியது. பாக்களுக்கும் செய்யு ளுக்கும், இசைக்கும் உள்ள உயிர்ப் பிணைப்பைப்பற்றி

தொல்காப்பியத்திலேயே விளக்கம் தென்படுகிறது. செய்யுளுக்கு இசைத் தன்மை அத்தியாவசியமான ஒரு இயல் என்று அதில் காட்டப் பெற்றிருக்கிறது. செய்யுளின் உறுப்புக்களின் ஒன்ருகிய வண்ணம் என்பது "ஒருபாவின் கண்நிகழும் ஓசை விகற்பம்" என்கிருர் பேராசிரியர். செய்யுளுக்குப் பாட்டு என்ற பெயர் வந்ததிலிருந்து அதற்கும் இசைத் தன்மைக்கும் அல்லது பாடப் பெறும் இயல்புக்கும் உள்ள கிழமை புலப்படுகிறது. வல்லார் செய்யும் செய்யுளுக்கு இசைத் தன்மை இன்றியமையாதது என்பதைத் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகிருர்.[1]

---

1. "அசையுஞ் சீருமிசை யோடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே"

தொல். பொருள் 323 செய்யுளியல். இந்த சூத்திரத்திற்கு உரை செய்த பேராசிரியர் ஒரு செய்யுளில் பொருளைவிட ஓசைப் பண்பு அதிகமாக இருந்தால் அது 'வகையுளி' என்ற இனத்தைச் சேரும் என்று சொல்கிருர். வகையுளிக்கு இலக்கணம் கூறும் கீழ்வரும் பாட்டு குணசாகரரின் யாப்பருங்கலக்காரிகை உரையில் காணப் பெறுகிறது.

அருளுேக்கு நீரா ரசைச் சீ ரடிகட்
பொருளுேக்கா தோசையே நோக்கி—மருணீக்கி
கூம்பவுங் கூம்பாத லரவுங் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு.

வகையுளி என்பதற்கு இலக்கணம் யாப்பருங்கலவிருத்தி உரையிலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. செய்யுளியல் முதல் சூத்திரத்தின் முதல் வரியாகிய "மாத்திரை எழுத்தியல் அசை வகை எனு" என்றிருப்பதில் மாத்திரை என்பதற்கு நச்சினர்க்கினியர் 'மாத்திரை என்றது எழுத்திற்கு உரித்தாக எழுத்ததிகாரத்தோதிய மாத்திரைகள், தத்தம அளவில் இறந்து பாவின் ஓசை வேறுபாடுகளை உணர்த்திநிராய் நிற்கும் நிலையை" என்று பொருள் கூறுகிறதும், அதற்கடுத்த சூத்திரத்தின் உரையில் பேராசிரியர் எழுத்திற்கு ஓதிய மாத்திரைகளை "செய்யுள் விராய்க் கிடக்கும் அளவை" என்று சொல்லிவிட்டு மேலும் "அல்லதூஉம், செய்யுட்கள் அவ்வெழுத்து வகையால் இன்னேசையாக விராய்ச் செய்தலுங் கொள்க" என்று எழுதியிருப்பதும் இங்கு கவனிக்கத் தக்கன.

பண்டைக் காலப் பா வகைகளாகிய ஆசிரியப்பா, வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா ஆகிய நான்கிற்கும் அமைப்பிலக்கணம் கூறிய தொல்காப்பியர் அத்துடன் நிற்கவில்லை. அவைகளுக்கு ஓசையிலக்கணமும் வகுத்திருக்கிறார். ஆசிரியப்பாவின் ஓசையை அகவலோசை என்றும், வெண்பாவின் ஓசையை செப்பலோசை என்றும், வஞ்சிப்பாவின் ஓசையைத் தூங்கலோசை என்றும், கலிப்பாவின் ஓசையைத் துள்ளலோசை என்றும் கூறுகிறார். இவ்வித ஓசை வேறுபாடுகளின் தன்மையைத் தொல்காப்பிய உரையாசிரியர் ஒருவாறு விளக்கியிருக்கிறார். ஒவ்வொரு பாவிற்கும் தனிப்பட்ட ஓசைச் சிறப்பு இருக்க வேண்டும் என்று தொல்காப்பியர் வகுத்திருப்பதைத்தான் நாம் முக்கியமாய்க் கவனிக்க வேண்டும். இத்தகைய ஓசைப் பண்புகள் இல்லாமல் பாட்டுக்கள் இயற்றப் பெரு என்றே தொல்காப்பியர் தெளிவாகக் கூறுகிறார்.[1] ஆகவே இயற்றமிழுக்கும் இசைத் தன்மை அல்லது ஓசைப் பண்பு இன்றியமையாத ஒரு இயல் என்பதும், இதனுல் இயற்றமிழுக்கும்

---

1. "அவ்வியலல்லது பாட்டாங்குக் கிளவார்" என்ற தொல்காப்பிய சூத்திரத்திற்கு உரை கூறும் இளம்பூரணர் எழுதியிருப்பதாவது:—"இது பாக்கள் எல்லாவற்றிற்கும் உரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று. இதன் பொருள் மேற்சொல்லப்பட்ட ஓசை வகையாலல்லது பாட்டாங்குக் கூருர் என்றவாருயிற்று. பாட்டாங்குக் கூறலாவது ஓசை யொழிந்து சீருந் தளையும் படக் கூறல். அவ்வாறு சொல்லுங்காற் பாட்டாங்காகா தென்பதூஉம், அடியுந் தொடையும் பெற்று வந்ததாயினும் நூலின்பாற்படுதல், உரையின் பாற் படுதல் என்பதூஉம் கூறியவாரும். அது வருமாறு:—ஐவகையடியும் விரிக்குங்காலை, மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்து—மெழுவது வகையின் வழுவிலவாகி யறுநாற் றிருபத்தைந் தாகும்மே' (தொல். செய்யுளியல் 48) என்பது ஆசிரியப்பாவிற் குரிய இலக்கண முடைத்தாயினும் ஆசிரியம் எனப்படாது நூலெனப்படும் என்று கொள்க". தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம்—வ. உ. சிதம்பரம் பிள்ளை பதிப்பு: பக்கம் 386.

இசைத் தமிழுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதும் புலனாகின்றன.

நாடகத் தமிழைப்பற்றி விளக்கமான குறிப்புகள் பழைய தமிழ் நூல்களில் காணப் பெறவில்லை. நாடகத் தமிழ் என்பது நாடகத் தமிழ் இலக்கணங்களைக் குறிக்கின்றதா, அல்லது முன்னாளில் இருந்து மறைந்து போன நாடக இலக்கியத்தைக் குறிக்கின்றதா என்பதைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. இரண்டையுமே குறிப்பதாகக் கொள்வது பொருத்தமாயிருக்கும். தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் பலவிதக் கூத்துக்கள் நிலவி வந்திருக்கின்றன. இவை வளர்ந்த முறையில், அவைகளுக் கேற்றவாறு தாளத்துடன் பாடப் பெறுவதற்கும், நடிப்புக்குப் பொருள் கொடுப்பதற்கும், பாடல்களும் உரைகளும் புலவரால் ஆக்கப் பெற்று இயங்கி இருத்தல் வேண்டும். இவைகளைத்தான் நாடகத் தமிழ் என்று முன்னோர் கொண்டிருக்க வேண்டும். நடனங்களும் கூத்துக்களும் மக்களின் கலை வாழ்வைப் பண்படுத்தும் துறையில் வளர்ச்சி யடைந்து, இயற்றமிழ் இசைத் தமிழ் ஆகியவைகளின் துணை பெற்று நாடகத் தமிழாயின. இதனால் நாடகத் தமிழுக்கு இயற்றமிழும் இசைத் தமிழும் அவசியமாயின. சிலப்பதிகாரத்தின் அரங்கேற்று காதையின் உரையில், பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் நிலவியிருந்த ஆடல் பாடல்கள், இசைக் கருவிகள், முறைகள் முதலியவைகளைப் பற்றி மிகுந்த நுட்பமான தத்துவங்களையும் கருத்துக்களையும், அவைகளை விளக்கப் பழைய இலக்கண நூல்களிலிருந்து சில சூத்திரங்களையும் அடியார்க்கு நல்லார் தந்திருக்கிறார். 'அவிநயக் கூத்து என்பது கதை தழுவாத பாட்டினது பொருளுக்குக் கை காட்டி வல்லபஞ் செய்யும் பலவகைக் கூத்து' என்றும் 'நாடகம்' என்பது 'கதை தழுவி வரும் கூத்து'

என்றும் அவர் கூறுகிறார். ஆகவே நடனங்களுடன் ஒரு கதையைப் பொருளாகக் கொண்டு நடித்தலே நாடகம் என்று பண்டைக் காலத்தில் கருதப்பெற்றது. அக் காலத்தில் நாடகங்கள் இருந்திருக்க வேண்டும். மணிமேகலையில் "ஆடற் கூத்தினோ டவிநயந் தெரிவோர், நாடகக் காப்பிய நன்னூ னுனிப் போர்" என்றிருப்பதால் நாடகக் காப்பியங்கள் இருந்தன என்று தெரிகிறது.[1]

தொல்காப்பியம் அகத்திணை இயலில் ஒரு சூத்திரத்தில் 'நாடக வழக்கினும்' என்ற ஒரு சொற்றொடர் காணப்பெறுகிறது.[2] ஆனால் இதற்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் எழுதியிருக்கும் உரைகளிலிருந்து இச் சொற்றொடரின் கருத்திற்கும் நாடகத்திற்கும் நேரடியான சம்பந்தம் இல்லை என்றுதான் கொள்ள வேண்டும். நாடகம் என்ற பதம் தொல்காப்பியத்தில் ஏதோ ஒரு பொருளில் வந்திருக்கிறது என்ற அளவில் தான் இந்த சொற்றொடர் கவனத்திற்குரியது. அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரத்தையே 'நாடகக் காப்

---

1. மணிமேகலை. 19ம் காதை 89—90

2. நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்

—அகத்திணை இயல். 56.

'நாடக வழக்காவது சுவைபட வருவன வெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்" என்கிறார் இளம்பூரணர். 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்' என்பதற்கு புனைந்துரை வகையானும் உலக வழக்கத்தானும் புலவரிற் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம்" என்பர் நச்சினார்க்கினியர். முழுவதும் கற்பனையால் ஆக்கப் பெறும் பாட்டுக்களையோ நூல்களையோ நாடக வழக்கிற்குரியதாய்க் கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது. நாடகக் காப்பியங்களுக்கும் இவை பொருந்தும் என்று கருதினர் போலும்.

பியம் என்கிறார்.[1] 'புலன்' என்பதை விளக்கும் தொல் காப்பிய சூத்திர உரையில் பேராசிரியர் 'விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள்'' போல்வன என்று ஒரு நாடகச் செய்யுள் நூலைக் குறிப்பிடுகிறார்.[2] இது ஒரு நாடகக் காப்பியமாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது. ஏனென்றால் பேராசிரியர் இதை நாடக நூல் என்று சொல்லாமல் நாடகச் செய்யுள் என்று கூறியிருக்கிறார். பண்டைக் காலத்தில் இலக்கணத்தை நூல் என்றும் அதைச் சார்ந்த சூத்திரங்களை நூற்பா என்றும் கூறும் வழக்கம் இருந்தது. இது எவ்வாறாயினும் பண்டைக் காலத்தி லிருந்த நாடகத் தமிழ் நூல்கள் ஒன்றும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. இதனால் அக்காலத்தில் நாடகக் காப்பியங்கள் தோன்றவில்லை என்று சொல்ல முடியாது.

முத்தமிழ்ப் பாகுபாடு முதலாவதாகத் தமிழில் எக் காலத்தில் தோன்றியது என்று தெளிவதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை. பண்டைக் காலத்தில் எழுதப் பெற்ற முத்தமிழ் நூல்கள் எவை என்று தெரிய மார்க்க மும் இல்லை. சங்க காலப் புலவர் முத்தமிழுந் தெரிந் தவர் என்று அக நானூற்றின் பாயிரம் பகர்கிறது. திருவள்ளுவ மாலையிலுள்ள சீத்தலைச் சாத்தனாரின் பாட்டு முத்தமிழைக் குறிக்கிறது. அகத்தியம் முத் தமிழுக்கும் இலக்கணமாய் இருந்தது என்று தொல்காப் பியத்திற்கு உரை எழுதிய பேராசியரின் குறிப்பு ஒன்று

1. சிலப்பதிகாரம் அடியார்க்குநல்லார் உரை.—டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் (பதிப்பு 1920) பக்கம் 10.

2. தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியர் உரை. —ச. பவாநந்தம் பிள்ளை (1917) பக்கம் 529.

காணப் பெறுகிறது[1]. இப்போதுள்ள பண்டைத் தமிழ் நூல்களில் சிலப்பதிகாரம் முத்தமிழ் நூலாகக் கருதப் பெற்று வந்திருக்கிறது. அதை முத்தமிழ் நூல் என்று அடியார்க்கு நல்லார் தமது உரையில் பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார். 'முழுத்தும் பழுதற்ற முத்தமிழின் பாடல்' என்று அவர் அதைப் போற்றுகிறார். அடியார்க்கு நல்லார் காலத்திற்கு முன்பு சிலப்பதிகாரம் இவ்வாறு முத்தமிழ் நூலாகக் கொள்ளப் பெற்றதா என்று திட்டமாய்த் தெரியவில்லை. சிலப்பதிகாரத்திற்கு நூற் சிறப்புப் பாயிரமாக அடியிற்கண்ட பாட்டும்[2] இன்னொரு பாட்டும் காணப் பெறுகின்றன. இவ்விரண்டும் பழைய செய்யுட்களே என்றும் இயற்றியவர் பெயர் விளங்கவில்லை என்றும் அதன் பதிப்பாசிரியரான டாக்டர் சாமி

---

1. "மூன்று றுப்படக்கிய தன்மைத்தாயிற் றோன்று மொழிப் புலவரது பிண்டமென்ப" (செய்யுளியல். 172) என்ற சூத்திரத்திற்குப் பொருள் கூறும் பேராசிரியர் எழுதுவதாவது:—"தொல்காப்பிய மென்பது பிண்டம்; அதனுள் எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் பொருளதிகார மென்பன படலமெனப்படும்; அவற்றுள் ஓத்துஞ் சூத்திரமும் ஒழிந்த இரு கூறுமெனப்படும். தோன்றுமொழிப் புலவர் அது பிண்டமென்ப, என்றதனாற் பிண்டத்தினையும் அடக்கி நிற்பது வேறு பிண்டமுளதெனக் கொள்க. அது முதனூலாகிய அகத்தியம் போலும்; என்னை? அஃது இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ்என்று மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலையும்" (பக்கம் 479)-உவம இயலின் சூத்திரம் ஒன்றுக்கு உரையெழுதும்போது பேராசிரியர் அகத்தியனாரால் "செய்யப்பட்ட மூன்று தமிழினும்" என்கிறார் (பக்கம் 175) ஆனால் அகத்தியத்தைப் பற்றி அது தொல்காப்பியத்திற்கு முதல் நூல் என்று கூறும் பன்னிரு படலத்தின் பாயிரத்தில் அது முத்தமிழையும் பெற்றது என்று கூறப்படவில்லை.

2. நீடிருங் குன்ற நிழல் காலு மண்டிலத்துக்
கோடுகோடாய்த் தோன்றுங் கொள்கைத்தே-கூடலார்
கொண்டாடுஞ் செஞ்சொற் குடக்கோ முனிசேரன்
றண்டா வுரை முத் தமிழ்."

சிலப்பதிகாரம். இரண்டாம் பதிப்பு (1920)—டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு; பக்கம் 32.

நாதய்யர் கூறுகிறார். இவ்விரண்டு பாடல்களும் அடியார்க்கு நல்லார் காலத்திற்குமுன் தோன்றினவையா என்று தெரியவில்லை. "தெரிமாண்டமிழ் மும்மைத் தொன்மைப் பொருப்பன், பரிமா நிரையிற் பரந்தன்று வையை" என்ற பரிபாடல் பகுதியில் 'தெரிமாண்டமிழ் மும்மை' என்பதற்கு முத்தமிழ் என்று பரிமேலழகர் பொருள் கூறியிருக்கிறார்.[1] திருமூலரின் திருமந்திரத்தின் பாயிரத்திலுள்ள ஒரு செய்யுளில் "சதாசிவத் தத்துவம் முத்தமிழ் வேதம்" என்று காணப்படுகிறது.[2] மொழி, இசை, கூத்து ஆகிய இம் மூன்றிற்கும் மூலகர்த்தா பரம் பொருளே என்ற கருத்தைத் தான் திருமூலர் கூறுகிறார்.

கி. பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பின்னர் தோன்றிய நூல்களில் தான் 'முத்தமிழ்' என்ற தொடர் அதிகமாகக் காணப் பெறுகிறது. நம்பியாண்டார் நம்பி, தமது ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்தில் திருஞான சம்பந்தரை "வகைதகு முத்தமிழாகரன்" என்கிறார்.[3] "சங்கத்துப் பாடுகின்ற முத்தமிழ்" என்று பொய்யா மொழிப் புலவர் ஒரு பாட்டில் அமைத்திருக்கிறார்.[4] ஔவையாரின் விநாயகர் துதிப் பாட்டு ஒன்றில் 'சங்கத் தமிழ் மூன்றும் தா' என்றிருப்பது எல்லோருக்கும் தெரியும். முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி ஒன்றில்

---

1. பரிபாடல். முகவுரை பக்கம் 5.—டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு (1918).

2. திருமந்திரம் பாயிரம். பக்கம் 18.—மா. வே. விசுவநாத பிள்ளை பதிப்பு (1912) 112 பாடல்களடங்கிய இந்தப் பாயிரம் முழுவதும் திருமூலர் வாக்கு இல்லை என்று இப் பதிப்புக்கு அரிய முகவுரை எழுதியிருக்கும் டாக்டர் வி. வி. ரமண சாஸ்திரி கருதுகிறார்.

3. பதினோராந் திருமுறை.—ஆறுமுக நாவலர் பதிப்பு: பக்கம் 312.

4. பெருந்தொகை—மு. இராகவய்யங்கார். பக்கம் 333.

"முத்தின் சலாபமும் முத்தமிழ்ப் பொதியிலும்" என்று வரைந்திருக்கிறார். இந்த வரியின் சாயலையே பாண்டிய நாட்டின் சிறப்பைக் கூறும்போது கம்பன் "முத்து, முத்தமிழுந் தந்து முற்றலால்" என்று கிஷ்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில் பாடியிருப்பதில் பார்க்கிறோம். இரண்டாம் ராஜராஜன் மெய்க் கீர்த்தி ஒன்று அவனை "முத்தமிழுக்கும் தலைவன்" என்று கூறுகிறது. "முத்தமிழ்ச் சங்கத் தெய்வப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடு போற்றி" என்று அந்த நாட்டைத் திருவிளையாடற் புராணத்தை முதலாவதாக எழுதிய பெரும்பற்றப் புலியூர் நம்பி வாழ்த்துகிறார்.

ஆகையால் முத்தமிழ் என்ற பாகுபாடும் கருத்தும் மிகப் பழமையான காலத்திலிருந்தே தமிழ் இலக்கிய உலகில் ஓரளவு வழங்கி வந்திருக்கிறது. இடைக் காலத்திலும் பிற் காலத்திலும் சிறந்த தமிழ்ப் புலவரை முத்தமிழ்ப் புலவர் என்று உபசாரமாகக் கூறும் வழக்கமும் இருந்தது. எவ்வித அடிப்படையான கொள்கைகளைத் தழுவி பண்டைத் தமிழ்ப் புலவர் இந்தப் பாகுபாட்டைக் கற்பித்துக் கொண்டார் என்பது ஆராய்ச்சிக்குரியது. இக் காலத்துத் தமிழறிஞர் ஒருவர் இது சம்பந்தமாக ஒரு ஆழ்ந்த கருத்தைத் தெரிவித்திருக்கிறார்.[1] மூன்று என்ற எண்ணின் சிறப்பைக் கூறிவிட்டு, 'அறம், பொருள் இன்பம் ஆகிய பொருள் போன்றும்; சத்துவ, இராஜச, தாமஸ என்ற மூன்று குணங்கள் போன்றும், மனம், மொழி மெய் என்ற மூன்று கருவிகள் போன்றும், ஒரு பாகுபாட்டு முறையைச் சேர்ந்தது முத்தமிழ்' என்கிறார் அவர். அவர் எழுதுவதாவது;— "தூய மனத்தில் பொங்கி எழுந்தது இயற்றமிழ்; தூய வாயின் முழக்கமே இசைத்

1. பிறந்தது எப்படியோ.—தெ. பொ. மீனாட்சி சுந்தரனார். முத்தமிழ். பக்கம் 13—18.

தமிழ்; தூய மெய்யின் இயக்கமே கூத்துத் தமிழ்.'' சமயம், தத்துவம் முதலியவை விரிந்து வளர்வதற்கு முன்னுலேயே பண்டைத் தமிழகத்தில் இந்தப் பாகுபாடு தோன்றியிருப்பதால் நுண் கலைகளின் அடிப்படையான தத்துவத்தைத் தழுவியே இந்த முறை பிறந்திருக்க வேண்டும். தூய மனத்தின் நிகழ்ச்சியால் மாத்திரம் இயற்றமிழ் அல்லது கவிதை பிறக்காது; தூய வாயின் செயலால் மாத்திரம் இசைத் தமிழ் உண்டாகாது; தூய மெய்யின் இயக்கத்தால் மாத்திரம் கூத்துத் தமிழ் இயங்காது. இந்தக் கருவிகளுக்கு உயிர் கொடுத்து அவைகளை அரிய ஆக்க முயற்சியில் இயக்கக் கூடிய அருள் வலி வேண்டும். அதை இன்னதென்று ஒருவராலும் அறிய முடியாது. அதனுல் தூண்டப் பெற்று, புலன்கள் முறையான பயிற்சி பெற்று வளர்ச்சி அடைந்து இயங்கினுல், கலைத் திறனும் கற்பனையும் ஊற்றெடுக்கும். எல்லாவிதக் கலைகளுக்கும் ஆதிமூலம் மனிதனின் உடன் பிறப்பாகிய கற்பனைப் பண்பு. இதன் மலர்ச்சிக்கோ, வளர்ச்சிக்கோ, பொலிவுக்கோ, ஆற்றலுக்கோ ஒருவராலும் எல்லை கட்ட முடியாது. இந்த சக்தி தெய்வீகமானது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் "கற்பனை கற்பித்த கடவுளை" என்று கூறியிருப்பது இந்த உண்மையைத் தான் காட்டுகிறது. இது எவ்வாருயினும் பண்டைத் தமிழரின் முத்தமிழ்ப் பாகுபாடு நுண்கலைகளின் தத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டது என்று கருதலாம்.

# பண்டைத் தமிழரின் இலக்கிய நோக்கு

## இலக்கியக் கருவியும் பொருளும்

பண்டைக் காலத் தமிழ்ப் புலவர் வகுத்துக்கொண்ட பொருள் பாகுபாடும் முத்தமிழ்ப் பாகுபாடும் அவருடைய இலக்கிய தத்துவத்தின் முக்கியமான இயல்புகள் என்று மேலே ஒருவாறு விளக்கி யிருக்கிறோம். தமது நூல்களை ஆக்குவதற்கு அவர் கையாண்ட இலக்கியக் கருவி எத்தன்மையது என்று கவனிக்க வேண்டும். அவர் எடுத்துக் கொண்ட இலக்கியக் கருவி யாப்புக் கட்டுக்குள் எடங்கிய செய்யுள். செய்யுளின் உறுப்பு, அமைப்பு பொருள் முதலியவற்றின் இலக்கணம் நுண்ணிய கலைப் பாங்குடன் தொல்காப்பியத்தில் விரிந்து காணப் பெறுகிறது. உரை வகைகளைப் பற்றியும் நூல் வகைகளைப் பற்றியும் தொல்காப்பியம் வரைந்திருந்த போதிலும் அவைகளுக்கு உதாரணங்களாய் உள்ள பழைய நூல்கள் பெயரளவில் தான் இருக்கின்றன. செய்யுள் இலக்கணத்திற்குத் தான், அதை விளக்கும் இலக்கியம் அதிகமாக இருக்கிறது. ஆகையால் பண்டைத் தமிழ்ப் புலவர் செய்யுளுக்குத்தான் தனிச் சிறப்பும் முக்யத்வமும் அளித்தார். செய்யுளின் அசை, சீர் போன்ற அமைப்பிலக்கணத்தை ஆராய்வது இந்தக் கட்டுரைக்கு அவசியம் இல்லை.

பழைய இலக்கணம் வகுத்த யாப்பு விதிகளுக்குட் பட்ட செய்யுள்களாகவே சங்க காலப் பாடல்கள் எல்லாம் அமைந்திருக்கின்றன. அவைகளைப் பாடிய

புலவரில் பலர் நல்ல கவிகளாய் இருந்தார் என்பதை ஒருவரும் மறக்கக் கூடாது. கவிதைக்கு எத்தனையோ இயல்புகள் இருக்க வேண்டும். இருந்த போதிலும், திட்பமான வாக்கிலும் கற்பனு பாவத்திலும், ஓசைப் பண்புடன் பொருள் சமைக்கப்படுவது தான் இன்றி யமையாத இயல்பு. யாப்பு நடையில் இயங்குவதினுல் மாத்திரம் ஒரு கட்டுரை அல்லது பாட்டு கவிதை ஆகாது. இந்தக் கருத்து தொல்காப்பியத்திலேயே தென்படுகிறது என்று முன்னர்க் காட்டியிருக்கிறோம். புலவரின் மனோபாவத்திலும், கற்பனையிலும், வாக்கி லும் பாட்டுகள் பெறும் உருவமும், இசைத் தன்மையும் பொருட் பொலிவும் கவிதைக்கு உயிர் நாடிகள் போன் றவை. ஆகையால் உள்ளதை உள்ளபடி சரித்திரப் பான்மையுடன் கூறுவதோ விஞ்ஞானப் பாங்குடன் வரைவதோ கவிதை புனைவதற்கும் அதற்கியைந்த செய்யுளாக்கத்திற்கும் புறம்பாயுள்ள முயற்சியாகும்.

தமிழரின் சமுதாயத்தைப் பற்றியும் பழக்க வழக்கங் களைப் பற்றியும் பண்டைக் காலத் தமிழ்ப் பாடல்களில் கிடக்கும் சித்திரங்கள் ஓரளவு வாழ்க்கையைத் தழுவிய தாகவே இருக்கின்றன. ஆனுல் இவ்வித வாழ்க்கைச் சித்திரங்களும் வருணனைக் குறிப்புகளும் செய்யுள் நடை யால் ஆக்கப் பெற்ற கவிதையில் இருப்பதின் காரணத் தால் அவை புலவரின் கற்பனு சக்தியாலேயே தீட்டப் பெற்றிருக்கின்றன. விசேஷ கற்பனு விகாரமின்றி உள்ளதைக் கூறும் பெற்றியைக் கொண்ட தன்மை நவிற்சியில் விளையும் பாடல்களுக்கும் பின்னணியாகக் கற்பனைத் திரை அவசியமாயிற்று. ஏனென்ருல் பாடல் கள் எல்லாம் சுவை பயக்கும்படி எழுதப் பெற வேண்டு மென்ற அரிய இலக்கியக் கொள்கை புலவரின் சமய மாய் இருந்தது. ஆகவே சங்க காலப் புலவர் கவிகளாய் இருந்த காரணத்தால் அவர் பாடல்களின் பொருளில்

காணப் பெறும் சம்பவங்கள் நடைமுறையில், அவை களில் கூறப் பெற்றவாறே நிகழ்ந்தன என்றுவது, அவைகளைப் பற்றிய குறிப்புக்கள், பிரஸ்தாபங்கள் முழுவதும் நூற்றுக்கு நூறு சரித்திர உண்மைகள் என்றுவது கொள்ள முடியாது. இருந்தபோதிலும் பண்டைத் தமிழ் நாட்டின் நிலைமையைத் தெரிவதற்குச் சங்க கால இலக்கியம் இன்றியமையாத ஆதாரக் கருவியாய் அமைந்திருக்கிறது என்பதையும் மறக்க முடியாது.

பண்டைக் காலத் தமிழ்ப் புலவர் தங்கள் பாடல்களுக்கு எடுத்துக் கொண்ட பொருளின் முக்கியமான அம்சத்திலிருந்தும் அவருடைய இலக்கிய லட்சியத்தின் தன்மைகளை அறியலாம். முன்னுல் குறிப்பிட்டிருப்பது போல் அவர் இயற்றிய பாடல்களில் பெரும்பாலானவை பரிசில் பெறுவதற்காக அரசர் வள்ளல்கள் குறுநில மன்னர் முதலியோரைப் புகழ்ந்து போற்றிய வகையைச் சேர்ந்தவை. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்'[1] என்னும் கொள்கையில் பூரண நம்பிக்கை வைத்து, தங்களை ஆதரித்து, சோறு ஆடை காசு முதலியன கொடுத்து உபசரித்த அரசர், குறுநில மன்னர், பெரு நிலக்கிழார், வள்ளல்கள் ஆகியோரைப் புகழ்ந்து போற்றிக் கவிதை பாடுவதையே, தமது வாழ்க்கைப் பேருகவும் இலக்கிய லட்சியமாகவும் அவர் கொண்டார். இவ்வாறு பண்டைத் தமிழ்ப் புலவர் ஏராளமான பாடல்களை இயற்றி யிருப்பதால் இந்த லட்சியம் பண்டைத் தமிழ் இலக்கணத்திலும் இடம் பெற்றது. அதைக் கையாளும் முறைகளைப் பற்றி விதிகளையும் இலக்கணம் வகுத்திருக்கிறது.

தொல்காப்பியத்தில் புறத்திணை இயலில் வரும் பாடாண் திணை இந்த இலக்கணத்தைக் கூறுகிறது. இதைப் பற்றிய விபரங்கள் புறப்பொருள் வெண்பா

1. புறம்—18.

மாலையிலும் காணப் பெறுகின்றன. ஒருவனுடைய கீர்த்தியையும், கொடையையும், வலியையும், ஏனைய பெருமைகளையும் புலவர் போற்றிப் புகழ்ந்து பாடி அவனை மகிழ்வித்துப் பரிசில் பெறுவது பாடாண் திணையின் இயல்பு. இந்த முறையில் கடவுளைப் போற்றிப் பாடுவதும் பாடாண் திணையில் அடங்கும் என்று கருதப் பெற்றது. பண்டைத் தமிழகத்தில் மற்றத் திணைகளுக்கும் வாழ்க்கைக்கும் இருந்த தொடர்பு எவ்வாருக இருந்த போதிலும், பாடாண் திணையில் எழுதப்பெற்ற பாடல்கள் வாழ்க்கையைத் தழுவியே அமைந்திருக்கின்றன என்பது எளிதில் புலப்படும். பெரும்பாலும் புலவர் அரசருடைய அவையிலிருந்து அவருடைய பெருமைகளையே கவிதைப் பொருளாகக் கொண்டு பாடல்களைப் புனைந்தார். இவ்விதப் பாடல்களைப் பரிசில் பெறுவதற்கு அவர் இயற்றும்போது தாங்கள் சரித்திரம் எழுதி வைப்பதாகப் புலவர் கருதவில்லை. அரசருடைய பெருமைகளைக் கவிதா ரீதியாகப் புகழ்ந்து இலக்கியம் செய்வதையே தங்களுடைய லட்சியமாகக் கொண்டார். பரிசில் பெறுவதற்குப் பாட வேண்டியிருந்ததாலும், இயற்கையாகவே அரசர், மற்றெல்லா மனிதரைப் போல, புகழ்ச்சியால் மகிழ்ந்ததாலும், அவரைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்விக்க வேண்டிய அவசியம் புலவருக்கு ஏற்பட்டது. அதற்காகவே கற்பனைப் பாங்குடன் புகழ்ந்து புனைந்துரைகளை அவர் பாட வேண்டியதாயிற்று. சிலப்பதிகாரத்தில் மாடலன் சேர அரசனுக்கு அறிவுரை கூறும்போது[1] "அரும்பொருட் பரிசிலேனல்லனியானும்" என்று பீடிகையாகக் கூறியதாக இளங்கோ அடிகள் வரைந்திருப்பது ஊன்றிக் கவனிக்கத்தக்கது. இதிலிருந்து பரிசில் பெற வருவோர் உண்மையை மிகுத்துக் கூறுவதும் வெறும் கற்பனை யடிப்

1. சிலப்பதிகாரம், காதை-28.—17.

படையில் புகழ்ச்சிகளைக் கூறுவதும் புலவருக்கு இயல் பாயிருந்தது என்று தெரிகிறது.[1] எக்காலத்திலும் எந்த நாட்டிலும் புகழ்ச்சியை விரும்புவது மனித இயற்கை; ஆகையால் தெய்வங்களின் இயற்கையும் இதுவே யாக வேண்டுமென்று கொள்ளப் பெற்றது. இது தான் பண்டைத் தமிழ்ப் புலவர் கைக்கொண்ட பாடாண் திணையின் அடிப்படையான தத்துவம். இதைக் கையாண்டதால், அரசர், வள்ளல் முதலியோரின் கடமை புலவருக்குச் சலியாமல் கொடுப்பது என்றும் கொண்டு, அதைப் பற்றி எத்தனையோ பாடல்களைப் பாடியிருக்கிறார்.[2] இவைகளிலிருந்து பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய நோக்கின் ஒரு இயல்பு தெளிவா கிறது.

பரிசில் பெறுவதற்குப் புனைந்துரைகளும் புகழுரை களும் செய்வதற்குச் சற்றுப் புறம்பாக, அரசரின்

---

1. "இந் நக்கீரருக்கு (தொகை நூல்களில் காணப்பெறும் ஆசிரியரான நக்கீரர்) தமிழ்நாடு, தம்மைப் போன்றார் பெறும் பரிசிலின் பொருட்டு உளதாகிய உலகமாகத் தோன்றிற்று. இரவலருக்கு அருங்கலம் அருகாது ஈதலே அரசன் மேற்கொள்ள வேண்டும் ஒழுக்கமென இவர் கருதினார். (புறம்-56) செல்வத்தின் பயன் ஈதலே (புறம்-189) என வற்புறுத்துகின்றார். இப் பரிசிலின் பொருட்டுச் சேர சோழ பாண்டிய நாடுகளிலும் குறுநில மன்னர் நகர்களிலும் வள்ளல்கள் ஊர்களிலும் சுற்றித் திரிந்து பாடியிருக்கிறார்கள். தெய்வங்களைக்கூட மக்கட் பிறப்பு வரை இழித்துக் கொணர்ந்து, தாம் பரிசிலின் பொருட்டுப் பாடுகின்ற அரசர்களை ஒப்பிடக்கூடிய பொருள்களாக்கி விடுகின்றனர். மகளிர் பொற் கலத்திலேந்திக் கொடுக்கும் மதுவுண்டு களித்தலையே சிறந்த வாழ்வென அரசர்க்கு அறிவுறுத்தி ஆசி கூறுகின்றார்" திருமுருகாற்றுப் படை. இலக்கிய தீபம்.—எஸ். வையாபுரிப் பிள்ளை. பக்கம் 35.

2. உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும் விண்ணுலகத்தில் இல்லாததால் அதைவிடச் சிறந்தது சோழன் ஒருவனின் நாடு என்றும், ஏனென்றால் அங்கே புலவர் பாடிப் பரிசில் பெறலாமென்றும், பகைவர் நாட்டிலிருந்துகூட அவன் நாட்டிற்குப் பரிசில் பெறப் புலவர் வருகிறார் என்றும் ஒரு புறப்பாட்டில் காணப் பெறுகின்றன. புறம்-38.

உண்மை வரலாறுகளைக் கூறுவதும், அக்காலத்திலேயே தோன்றிப் பின்னர் பெரிதும் வளர்ந்த ஒரு முறையாக இருந்தது. இப்படிச் செய்வது மெய்க் கீர்த்தி வரைதல் என்று கொள்ளப் பெற்றது. அதற்கு இலக்கணம், பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், வச்சணந்தி மாலை முதலிய பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.[1] இதைப் பற்றிய பிரஸ்தாபம் தொல்காப்பியத்தில் இல்லை; அதன் ஆசிரியர் பாடாண் திணையிலேயே இது அடங்கும் என்று நினைத்தார் போலும். பன்னிரு பாட்டியலில் உள்ள பாட்டு கோவூர் கிழாரால் செய்யப் பெற்றதாகக் குறிப்பு இருக்கிறது. கோவூர்கிழார் சங்க காலத்துப் புலவரில் ஒருவர். அவர் பாடல்கள் பதினைந்து புறநானூற்றிலும் ஒவ்வொன்று நற்றிணையிலும் குறுந் தொகையிலும் தொகுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் மெய்க்கீர்த்தி வரைதல் என்பது ஒரு பழைய முறை என்றே கருதலாம்; இது பரிசிலுக்காகப் புலவர் பாடுவதினின்றும் வேறுபட்ட ஒருமுறை என்பது

---

1. "சீர் நான்காகி யிரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப் புகழெல்லாஞ் சொல்லியு
மந்தத்தவன் வரலாறு சொல்லியு
மவளுடன் வாழ்கெனச் சொல்லியுமற்றவ
னியற் பெயர்ப்பின்னர் சிறக்க யாண்டெனத்
திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி.
நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தியினந்த
முரையாய் முடியுமென வுரைத்தனரே.

—கோவூர்கிழார். பன்னிரு பாட்டியல் 311-312

சிறந்த மெய்க்கீர்த்தி யரசன் செயல்சொற்
றவையாயச் செய்யுள்
அறைந்த தோர் சொற் சீரடியாம்.

—நவநீதப் பாட்டியல் 53.

தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீரடியால்
எழிலரசர் செய்தியிசைப்பர்.

—வச்சணந்திமாலை. செய். 14.

வெளிப்படை. ஏனென்றால் வேந்தன் 'மெய்ப்புகழ் எல்லாம்' சொல்வது மெய்க்கீர்த்தி என்கிறார். இதனால் உண்மை இல்லாத வெறும் புகழ்ச்சிகளும் புனைந்துரைகளும் மெய்க்கீர்த்தி ஆகா என்பது தெளிவாகிறது. நவநீதப் பாட்டியலின் உரையிலும் அரசருடைய உண்மைப் புகழைக் கூறுவது மெய்க்கீர்த்தி என்றிருக்கிறது. இதில் வரும் 'அரசன் செயல்' என்பதிலிருந்தும், வச்சணந்தி மாலையிலிருக்கும் 'செய்தி இசைப்பர்' என்ற தொடரிலிருந்தும், இந்தக் கருத்து தெளிவாக்கப்பட்டிருக்கிறது. மெய்க் கீர்த்திகள் அரசருடைய போர்ச் செயல்களையும் கொடையையும், பிற விஷயங்களையும் உள்ளதை உள்ளபடி கூறும் பாடல்கள் ஆகும்.

கொள்கை யளவில் இலக்கணம் இவ்வாறு இருந்தும், நடைமுறையில் மெய்க் கீர்த்திகள், புலவரால் எழுதப் பெற்றதால், அவைகளில் உயர்வு நவிற்சிப் பான்மையில் சம்பவங்கள் பாடப்பெறும் தன்மையும், அரசரைப் பற்றிச் சரித்திர சம்பந்தமில்லாத வெறும் புகழ்ச்சிகளும் புனைந்துரைகளும் புகுந்திருக்கின்றன. மெய்ப் புகழுக்குரிய நிகழ்ச்சிகளும், இவ்வித புனைந்துரைகளுடன் கலந்து விடுவதால் அவைகளில் எவை உண்மையான வரலாற்றுரைகள் என்று, திட்டமான பிற சான்றுகள் இல்லாத போது, கண்டு பிடிப்பதில் கஷ்டங்கள் ஏற்படுகின்றன. சரித்திரம் சிக்கல்களுடனேயே இயங்கும் நிலைதான் எழுகிறது. உதாரணமாக கி. பி. பதின் மூன்றும் நூற்றாண்டிலிருந்த பாண்டியன் முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் மெய்க்கீர்த்தி ஒன்றைப் பார்க்கலாம். அதில் காணப்பெறும் முதல் பகுதி வெறும் புகழ்மாலை; இதில் கொஞ்சங்கூட சரித்திரப் பான்மை இல்லை.[1] பிற்பகுதியில் இந்த பாண்டியன்

1. "எண்டிசை யளவுஞ் சக்கரஞ் செல்லக்-கொங்கணர்-கலிங்கர், கோசலர், மாளுவர்-சிங்களர், தெலிங்கர், சீனர், குக்கரர்,

சோழ அரசனுகிய மூன்ரும் குலோத்துங்கனுடன் போர் செய்து வென்ற உண்மைச் செய்தியை மிகைபடுத்தி ஓங்கிய கற்பனைப் பாங்குடன் கூறப்பட்டிருக்கிறது.[2] வெற்றி பெற்ற பாண்டியன் தோற்ற சோழனின் ராஜ்யத்தை அவனுக்கே திரும்பக் கொடுத்த செய்தியும் புனைந்துரைக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இந்த பாண்டியன் போசள மன்னனுகிய வீர நரசிம்மனுல் தோல்வியுற்று, சோழ நாட்டை அந்த மன்னனின் ஆணையால் மூன்ரும் ராஜ ராஜனுக்குக் கொடுத்த செய்தி இந்த மெய்க்கீர்த்தியில் குறிப்பிடப்படவில்லை.[3] பிற்காலப் புலவர் அரசரைப் பற்றிய மெய்க் கீர்த்திகளிலேயே இவ்

---

வில்லவர், மாகதர், விக்கலர், செம்பியர்-பல்லவர் முதலிய பார்த்திவர் எல்லாம் உறைவிடம் அருள் என ஒருவர் முன் ஒருவர்-முறை முறை கடவதந்திறை கொணர்ந்திறைஞ்ச'' etc. மாற வர்மன் சுந்தர பாண்டியன் மெய்க்கிர்த்தி 1 பெருந்தொகை.—மு. இராகவய்யங்கார்—பக்கம் 212.

2. பாண்டியனேடு போர் புரிந்து தோற்றவன் மூன்ரும் குலோத்துங்கன் அல்ல என்றும் அவன் மகன் மூன்ரும் ராஜாதிராஜனே என்பர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார். பாண்டியர் வரலாறு பக்கம் 123.

3. மெய்க் கிர்த்தியில் தோற்ற சோழனை சுந்தர பாண்டியன் தானுகவே அழைத்ததாகவும் சோழன் வந்து ''வெற்றியரியணைக் கீழ் வீழ்ந்து தொழு திரப்ப'' அவனது நாட்டையும் முடியையும் கருணை கூர்ந்து அவனுக்குக் கொடுத்தான் என்று உண்மை திரித்துக் கூறப் பெற்றிருக்கிறது. 'இனி, சுந்தர பாண்டியன், தான் கைப் பற்றிய சோழ நாட்டைச் சில தினங்களுக்குள் ராஜ ராஜனுக்கு அளித்தமைக்குக் காரணம் போசள மன்னனுகிய இரண்டாவது வல்லாள தேவனும், அவன் மகன் வீர நரசிம்மனும் இடையிற் புகுந்து இச் சோழ மன்னனுக்குப் பல்வகையாலும் உதவி புரிய வந்தமையாம். அன்னேர் முயற்சி யிலதேல் சுந்தர பாண்டியன் சோழ நாட்டைத் திரும்பக் கொடுத்திருக்க மாட்டான் என்பது திண்ணம்.'' பிற்கால சோழர் சரித்திரம்—டி. வி. சதாசிவ பண்டாரத்தார். பக்கம் 188. மெய்க் கிர்த்திகளில் உண்மைச் செய்திகள் தான் எழுதப் பெறும் என்பதற்கில்லை என்பதற்கு இது ஒரு உதாரணம்.

வாறு கற்பனையுடன் சில செய்திகளை மிகுத்தும் வேறு சிலவற்றைத் தவிர்த்தும் எழுதியிருப்பதைக் கவனித்தால், பண்டைக் காலப் புலவர் பாடாண் திணையைத் தழுவி அரசரைப் புகழ்ந்திருக்கும் பாடல்கள் முழுவதும் சரித்திரப் பாங்குடையவை என்று எவ்வாறு கொள்ள முடியும்? இந்த விஷயம் மூன்ரும் பகுதியில் பின்னர் விரிவாக ஆராயப்பெறும்.

பண்டைக் காலத் தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப் படை என்ற ஒருவகைப் பாடல் வழங்கி வந்திருக்கிறது. இதற்கு இலக்கணமும் கூறப்பட்டிருக்கிறது. இவ்விதப் பாடல்களின் தன்மையைக் கவனித்தால் புலவர் அரசரையும் வள்ளல்களையும் வாயார வானளாவப் புகழ்ந்து பரிசில் பெற்ற முறையையே அவை வலியுறுத்து கின்றன. பத்துப் பாட்டில் உள்ள ஆற்றுப் படைகளும் புறநானூறு பதிற்றுப்பத்து ஆகிய தொகை நூல்களி லுள்ள சில பாடல்களும் இந்த இனத்தைச் சேர்ந் தவை.[1] பத்துப் பாட்டில் ஐந்து ஆற்றுப் படைகள்

---

1. ஆற்றுப் படையின் இலக்கணம் தொல்காப்பியத்தில் இவ் வாறு அமைந்திருக்கிறது:—

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கறிவுறீ இச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்

—தொல். பொருள் புறத்திணை இயல் 36

பின்னர்த் தோன்றிய பன்னிரு பாட்டியல் கூறுவதாவது:-

புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
விரவலன் வெயில்தெறும் இருங்கானத்திடை
வறுமையுடன் வருஉம் புலவர் பாணர்
பொருநர், விறலியர் கூத்தர்க்கண்டு அப்
புரவலன் நாடு, ஊர், பெயர், கொடை பராஅ
யாங்கு நீ செல்கென விடுப்பது ஆற்றுப்படை

—பன்னிரு பாட்டியல் 318.

தொல்காப்பிய இலக்கணத்தில் சேர்க்கப்படாத 'புலவர்' இதில் காணப் பெறுவதைக் கவனிக்க வேண்டும்.

அடங்கி யிருக்கின்றன; அவைகளில் திருமுருகாற்றுப் படை தனிச் சிறப்புடையது. தொல்காப்பியரின் இலக் கணப்படி இது ஆற்றுப் படை ஆகாது என்பதும், ஆகும் என்று கூறும் நச்சினார்க்கினியர், சூத்திரத்தை வலிந்து பொருள் கூறுகிறார் என்பதும் சில அறிஞரின் கருத்து.[1] திருமுருகாற்றுப் படையைப் பாடின புலவர் 'பெரு வளம்' என்பதற்கு விரிந்த பொருள் கொண்டு புலவர் பெறக்கூடிய பரிசிலைப் பொருட் செல்வமாகக் கொள்ளாமல் வீடு பேருகக் கொண்டு அழகாகக் கற் பித்துப் பாட்டைப் புனைந்திருக்கிறார். பாட்டின் தலைப் பும் ஆற்றுப்படும் புலவர் பெயரால் இல்லாமல் அவர் வணங்கப் போகும் முருகக் கடவுள் பெயரால் அமைந் திருக்கிறது. ஒரு குறிப்பிட்ட வகையான பாட்டுக்கு, அதன் பொதுக் கருத்துக்குட்பட்டு, புலவர் தமது மனோ தர்மப்படிப் பொருத்தமாய் அதை விரித்து வேறுபாடு செய்து கொண்ட கற்பனை முறை இது. மக்களுக்கே பொருத்தமான அகப் பொருள் துறைகளைக் கடவுள் மீதேற்றிப் பாடப் பெற்ற திருக்கோவை போன்ற கோவைப் பிரபந்தங்களும் இந்த விதியைத் தழுவியே எழுதப் பெற்றிருக்கின்றன. தவிரவும் பன்னிரு பாட்டி யலிலும் புறப் பொருள் வெண்பா மாலையிலும் திருமுரு காற்றுப் படை வகையைச் சேர்ந்த ஆற்றுப் படை பாடல்களுக்கும் இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது.[2]

1. திருமுருகாற்றுப் படை. முன்னுரை பக்கம் 3.—எஸ். வையாபுரிப் பிள்ளை. செந் தமிழ்ப் பிரசுரம் 68.

2. இருங்கண் வானத்திமை யோருழைப்
பெரும்புலவனை யாற்றுப்படுத்தன்று.
—புறப்பொருள் வெண்பாமாலை-230

உலவாவூக்க மொடு உன்னியது முடிக்கும்
புலவராற்றுப்படை புத்தேட்கு முரித்தே.
—பன்னிரு பாட்டியல் 320

இவை திருமுருகாற்றுப் படை தோன்றிய பின்னர் அதற்கே விதி செய்யும் முறையில் அமைந்திருக்கலாம். அப்படியே இருந்தாலும் அதில் குற்றம் ஒன்றும் இல்லை. இலக்கியம் தோன்றிய பிறகு தானே இலக்கணம் வரும்.

பத்துப் பாட்டிலுள்ள மற்ற ஆற்றுப் படைகளை ஊன்றி நோக்கினுல் சில விஷயங்கள் புலப்படுகின்றன. பண்டைக் காலத்தில் பெரும்பாலான புலவர் வறுமையில் வாடினுர். சமுதாயத்தில் அவர்களுக்குத் தனி மதிப்பு இல்லை அவருக்கு மற்றவரை அணுகியே வாழ்க்கைக்கு வேண்டிய பொருளைத் தேடிக் கொள்ள வேண்டியிருந்தது. உண்டியின் பொருட்டு அவர் அரசர், வள்ளல் முதலியோரைப் பாடிப் பரிசில் பெற்ருர். இவ்வாறு நல்குரவில் நலிந்து வாழ்ந்த புலவர் குழாத்தில் இயற்கையாகவே ஒருவரை யொருவர் நேசித்தார். ஒரு வள்ளலிடமிருந்து, அவனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுத் திரும்பும் புலவன் ஒருவன், வறுமையில் வறண்டு வழியில் வரும் மற்ருெரு புலவனைப் பார்த்து அவனிடம் மிகுந்த அநுதாபங்கொண்டு, அவனைத் தனக்குதவிய வள்ளலிடம் போய்ப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெறுமாறு கூறி அனுப்பி, அவ் வள்ளலிடம் போவதற்கு வழியையும் அவன் நாட்டின் பெருமைகளையும் வளங்களையும் காட்டும் பாவத்தில் இப் பாட்டுக்கள் அமைந்திருக்கின்றன. ஆற்றுப் படைப் பாடல்கள் நாடக வழக்கைச் சேர்ந்த கற்பனைச் சித்திரங்கள் அல்ல; உலகியல் வழக்கைச் சேர்ந்த அருமையான வருணனைப் பாடல்கள். இவைகளின் பொருள் தெளிவாயிருக்கிறது. பட்டினியால் வாடின இப் புலவருக்கு வள்ளல்கள் நல்ல சோறும் இறைச்சியையும் வழங்குவது கனிந்த உணர்ச்சியுடன் புலவரால் பாடப்பட்டிருக்கிறது. ஆனுல் வறுமையில் வாழ்ந்த அப்புலவருக்கு

அரசரும் வள்ளல்களும், அவர் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து, தேர்களையும், யானைகளையும் குதிரைகளையும் பொன்னால் செய்த பல அணிகளையும், லட்சக்கணக்கான பொற் காசுகளையும் பரிசில்கள் கொடுத்ததாகக் கூறப் பெறும் விபரங்களைக் கவிதைக்குரிய உயர்வு நவிற்சிப் பான்மையில் சொல்லப் பெறும் கட்டுரைகளாகக் கொள்வதே பொருத்தமாய் இருக்கும். அவைகளைச் செய்திகளாகக் கொள்வது பொருந்தாது.[1]

இன்னொரு விஷயத்தையும் இங்கே குறிப்பிட வேண்டும். பண்டைக் காலத்தில் தமிழகத்தில் புலவர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்றவர், நுண் கலைகளில் நல்ல தேர்ச்சி பெற்று மக்களுக்குத் தூய்மை யான மகிழ்ச்சியை யூட்டும் கலைப் பணியில் தங்கள் வாழ்நாள் முழுவதும் ஈடுபட்டிருந்தார். இருந்த போதிலும் அவர்களுக்கு, முன்னர்க் கூறியது போல், சமுதாயத்தில் உயர்ந்த ஸ்தானம் இருந்ததாகக் கூற முடியாது. அவருக்கெல்லாம் செல்வ முடையவரை அண்டி வாழும் வாழ்க்கை தான் கிட்டியிருந்தது. அரசர், சில புலவருக்கு உயர்ந்த மதிப்புக் கொடுத்து

---

1. சோழன் கரிகால் பெருவளவன் பட்டினப் பாலையைக் கேட்டு அகமகிழ்ந்து அதைப் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ண னருக்கு பதினறு லட்சம் பொன் அளித்தான் என்பதும், நார்முடிச் சேரலைப் பாடிய காப்பியாற்றுக் காப்பியனர், நாற்பது லட்சம் பொன் பெற்றூர் என்பதும், செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிய கபிலர், நூறுயிரம் காணமும், நன்றுவென்னும் குன்றேறி நின்று தம் கண்ணிற கண்ட நாடு முழுவதையும் வாங்கினர் என் பதும், இது போன்று பழைய நூல்களில் கூறப்பெற்ற பிற விபரங் களும் ஒவ்விய கற்பனைபாவத்தில் புலவரால் ஆக்கப்பெற்ற புனைந் துரைகளாகவே தோன்றுகின்றன. இவ்வளவு பெரும் பொருளை அவர் பெற்றிருந்தால் அதைப் பாதுகாப்பதிலேயே அவருடைய முழு கவனமும் சென்று புலமைத் தொழிலை நடத்தியிருக்க மாட் டார். பட்டினப் பாலைக்குக் கொடுத்த பரிசிலைப் பற்றி முதலாவ தாகப் பல நூற்றுண்டுகளுக்குப் பின் தோன்றிய சயங்கொண்டார் தமது கலிங்கத்துப் பரணியில் குறிப்பிட்டிருக்கிறூர்.

அவரைப் போற்றி ஆதரித்து அவரிடம் அரிய நட்புக் கொண்டிருந்த போதிலும், புலவர் குழாம் முழுவதற்கும், அவர் கலையின் பொருட்டு ஏற்றம் மேவி யிருந்ததாகக் கருத முடியாது. பாரி-கபிலர், கோப்பெருஞ் சோழன்-பிசிராந்தையார், பரணர் – செங்குட்டுவன் போன்ற தொடர்புகள் நட்பு காரணம் பற்றி எழுந்த உயிருறவு களே யொழிய, வெறும் புலமை காரணம் பற்றிப் பிறந்த தொடர்பு அல்ல. இவை விதிவிலக்காய் அமைந்த அருமையான நேசப் பண்பின் கவிதை. அரசரின் அலுவலுக்காகப் பிற நாடுகள் சென்ற புலவருக்கும், அரசரின் தேவியர் அந்தப்புரத்தில் ஊடல் செய்யும் காலங்களில் அவ்வூடலைத் தீர்க்கும் பணியைத் தலைமேற் கொண்ட வாயில் புலவருக்கும் தனி மதிப்பு இருந்தது. இதில் விந்தை யொன்றும் இல்லை.

பண்டைக் காலத்தில் பெரும்பாலான தமிழ்ப் புல வருக்குப் பரிசிலுக்காகப் பாட வேண்டிய வாழ்க்கையே கிட்டியிருந்தது என்பது உண்மை. இருந்த போதிலும் இதற்கு விலக்காகவும் சில புலவர் இருந்திருக்கிறார். தங்கள் கலையின் மேன்மையையும், அறிவின் திறத்தை யும், கவிதையின் சிறப்பையும் உணர்ந்து வள்ளல்களை அண்டிப் பிழைக்கும் வாழ்வை உதறித் தள்ளித் தன் மதிப்புடன் வாழ்ந்த புலவரும் சிலர் இல்லாமல் இல்லை. வேறு சிலர் கொடுக்கும் வள்ளல்களைப் போற்று வதுடன் நின்று விடவில்லை கொடுக்காதவரைப் பழிக் கும் துணிவும் கொண்டிருந்தார். ‘கொடுப்பாரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்’ என்பது பாடாண் திணையின் ஒரு துறை என்றும் இது மூன்று பிரிவுகளையுடையது என்றும் தொல்காப்பியம் வகுத்திருக்கிறது.[1] இதற்கு இளம்பூரணர் நேரடியான பொருள் தருகிறார். ஆனால் பின்னர் வந்த நச்சினார்க்கினியர், புலவர் கொடுக்காத

1. தொல். பொருள் 90. புறத்திணை இயல்.

வரை அக் காரணத்திற்காகப் பழிப்பது சரியாகா தென்று பிறர் கருதக் கூடுமென்று நினைத்துப் பின்வரு மாறு சமாதானம் கூறுகிறார்—"சான்றோர்க்குப் பிறரை இழித்துக் கூறற்கண் அது தக்க தன்றேனும், நன் மக்கள் பயன்பட வாழ்தலும், தீயோர் பயன்படாமல் வாழ்தலும் கூறக் கேட்டு ஏனையோரும் பயன்பட வாழ் தலை விரும்புவர் என்பது பயப்பக் கூறலின் இவர்க்கு இங்ஙன் கூறுதல் தக்கதாயிற்று"[2] இந்த உரையாசிரி யரின் சமத்காரம் தான் இதில் விளங்குகிறது. அரசர் பரிசிலை வரிசை யறிந்து கொடுக்க வேண்டும் என்றும் ஒரு புலவர் பாடியிருக்கிறார்.[1]

அரசருக்கு அவர் நன்மையைக் கருதிப் புத்தி சொல்லி அறவுரைகளை இடித்துக் காட்டி அவரை நல் வழியில் நடத்திச் செல்லும் ஆற்றல் பெற்ற புலவரும் சிலர் பண்டைக் காலத்தில் இருந்தார். இப்படிக் கூறு வதால் தாம் அரசரின் சீற்றத்துக் குள்ளாகலாம் என்ப தையும் பொருட்படுத்தாமல் அவர் தங்கள் கடமையைத் தைரியத்துடன் செய்தார். இவ்வாறு புலவர் கூறும் முறை பாடாண் திணையின் ஒரு துறையாகிய வாயுறை வாழ்த்தாயிற்று. அவர் பரிசில் பெறுவதை ஒருபொருட் டாக நினைக்காமல் தங்கள் உயர்வைத் தாங்களே மதித்துக் கொண்டு வெறும் புகழ்ச்சிகளைக் கூறாமல் அரசருக்கு நல்லறிவு புகட்டும் முறையில் பாடி யிருக்கிறார். சோழ அரசராகிய நலங்கிள்ளி, நெடுங் கிள்ளி என்ற இருவர் தமக்குள் பகைமை கொண்டு போர்ச் செயல்களில் ஈடுபட்டிருக்கையில், சோழர் குலத் தின் பெருமையை உன்னி, கோவூர்கிழார், அவரிருவ

1. தொல்காப்பியம் நச்சினார்க்கினியம். சி. வை. தாமோதரம் பிள்ளை: பதிப்பு பக்கம் 203.

2. கபிலர் மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது. புறம், 121.

ரிடமும் சென்று ஒரே வம்சத்தைச் சேர்ந்தவர் பகைமையால் கட்டுண்டு போர் செய்வது தகுதியற்றது என்று உருக்கமாகக் கூறி அவரை நல்வழியில் திருப்பினர்.[1] வேள் பேகன் ஒரு சமயம் பரத்தையரை அடைந்து, கற்புக் கரசியாகிய தமது மனைவி கண்ணகியை வெகு நாட்கள் துறந்து வாழ்ந்த காலத்தில் புலவர் திலகங்களான கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் பேகனிடம் சென்று அவன் தன் அருமை மனைவியைத் துறந்து பரத்தையரின் இன்பத்தில் வாழ்வது சரியில்லை என்று, அறிவுரைகளை நெஞ்சை உருக்கும் முறையில் கூறியதாகப் புறநானூற்றில் பல பாடல்கள் காணப் பெறுகின்றன. பெருஞ்சித்திரனர் என்ற சீரிய தன்மானமுடைய புலவர், பரிசில் பெற அதியமான் நெடுமான் அஞ்சியைக் காணப் போனபோது, அவ் வள்ளல், புலவரைப் பார்க்காமல் அவருக்கு ஏதோ ஒரு பரிசில் அனுப்பிவிட, அந்தப் புலவர், இவ்வாறு வள்ளல்கள் செய்வது தகுதியற்ற தென்றும், தாம் "வாணிபப் பரிசிலன் அல்லேன்"[2] என்றும், தமது தகுதி யறிந்து தரும் பரிசில் சிறிதாயினும் அதைத் தாம் இனிது ஏற்றுக் கொள்ள முடியும் என்றும் ஒரு அழகான பாட்டைப் பாடியிருக்கிறர்.[3]

---

1. புறநானூறு 44, 45.
2. ,, 208.
3. புறநானூற்றில் இந்த வகையைச் சேர்ந்த பாடல்கள் பல இருக்கின்றன. இவைகளுக்கு உதாரணமாக பிசிராந்தையார் "யாண்டு பலவாக நரையிலவாகுதல்" என்ற முதல் வரியையுடைய பாட்டையும், கணியன் பூங்குன்றனர் "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்று தொடங்கி யிருக்கும் பாடலையும் கூறலாம். தமிழறிஞர், பண்டைத் தமிழரின் லட்சியங்களைக் கூறும்போது இவ் விரண்டு பாடல்களையும் அடிக்கடி எடுத்துக் காட்டுவதை எல்லோரும் அறிவர்.

இதைப் போன்ற எத்தனையோ விபரங்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன.

ஆகவே, சங்க காலப் புலவர் மானிடம் பாடுவதையே தங்கள் இலக்கியக் குறிக்கோளாகக் கொண்டார் என்று தெளிவாகிறது. ஒரு சிலர் சிந்தனைக்குரிய அரிய கருத்துக்களையும் நல்வாழ்வுக்குரிய பண்புகளையும் தங்கள் பாடல்களில் பொதிந்து வைத்திருக்கிறார்.[3] ஆனால் பெரும்பாலோர் கடவுளைப் பொருளாகக் கொண்டோ, ஆத்மீக விஷயங்களைப் பற்றியோ பாடவில்லை. பண்டைத் தமிழ் இலக்கியத்தை எடுத்துக் கொண்டால் கடவுளை நேரடியான பொருளாகக் கொண்டு விரிந்த முறையில் உள்ளக் கிளர்ச்சியுடன் எழுதப் பெற்ற தனிப் பாட்டு திருமுருகாற்றுப் படை ஒன்றே. இதற்கு அடுத்தபடியாக பரிபாடலிலுள்ள சில பாடல்களைக் கூறலாம். அதிலுள்ள ஆறு பாடல்கள் திருமாலையும் எட்டு முருகக் கடவுளையும் போற்றிப் பாடப்பட்டிருக்கின்றன. ஆனால் திருமுருகாற்றுப் படையும் பரிபாடலும் சங்க காலத்திற்குப்பின் எழுதப் பெற்றவை என்று சில அறிஞர் கருதுகிறார். அவ்வாறே இவை, கிறிஸ்து சகம் முதல் மூன்று நூற்றாண்டுகளில் ஆக்கப் பெறவில்லை என்று கொண்டாலும், சமய குரவரின் காலத்தின் தொடக்கத்திலோ அதற்குச் சற்று முந்தியோ தோன்றியிருக்க வேண்டும் என்பதைப் பாடல்களின் அமைப்பும், நடையும் பொருளும் காட்டுகின்றன. சைவத் திருமுறைகளில் சேர்க்கப் பட்ட பாடல்களில் காலத்தால் முந்தியவை திருமுருகாற்றுப் படையும் காரைக்காலம்மையின் பாடல்களுமே. சமய குரவர் காலத்திற்கு முன்னுள்ள பக்தி ரசப் பாடல்களைத் திருமுறைகளில் சேர்க்க நம்பியாண்டார் நம்பி தேடும்போது இவைதான் கிடைத்திருக்கலாம். அல்லது கிடைத்த பழைய பாட்டுக்களில் இவைதான்

திருமுறை வகுப்பில் இருக்கத் தகுதியுடையன என்று அவர் கருதி யிருக்கலாம். பரிபாடலைத் தவிர மற்றத் தொகை நூல்களிலுள்ள பாடல்களில், பின்னர் பாரதம் பாடிய பெருந்தேவனுர் இயற்றிய கடவுள் வாழ்த்துப் பாடல்களைத் தவிர்த்தால், கடவுள்களைப் பற்றி வெறும் பிரஸ்தாபங்களே காணப் பெறுகின்றன. சிவபெருமானை அகநானூற்றில் ஒரு பாட்டும் புறநானூற்றில் ஐந்தும் குறிப்பிடுகின்றன. திருமாலை ஒரே ஒரு அகப் பாட்டு தான் குறிக்கிறது; முருகனைப் பற்றி ஏழு பாட்டுக்களில் குறிப்புகள் இருக்கின்றன. புறப் பாட்டு ஒன்றில் சிவன், முருகன், கிருஷ்ணன், பலராமன் ஆகிய நான்கு கடவுள்களும் பேசப்பட்டிருக்கின்றனர். ராமாயணம், பாரதம் ஆகியவைகளைக் குறிக்கும் சில பாடல்கள் புறநானூறு அகநானூறு முதலிய தொகை நூல்களில் காணப் பெறுகின்றன.

பண்டைக் காலத் தமிழ்ப் புலவர் அரசரையும் வள்ளல்களையும் போற்றிப் பாடுவதையே தமது வாழ்க்கையின் லட்சியமாகவும் இலக்கியத்தின் குறிக்கோளாகவும் கொண்டார் என்று மேலே கூறியிருக்கிறோம். இதனுல் அவருடைய இலக்கியக் கலைத் திறனும் பாடல்களின் கவி நயங்களும் சிறிதுகூடப் பாதிக்கப்படவில்லை என்று திட்டமாய்க் கூறலாம். வீர மன்னர் மீதும், அவரது கொடை மடம் மீதும், வள்ளல்கள் மீதும் அன்பு கொண்ட இப்புலவர் கவிதா தேவியைத் தொடர்ந்து உபாசனை செய்து வந்தார்; தங்கள் புலமையைப் பேணி வளர்த்துக் கவிதைக் கலைக்குச் சலியாத தொண்டு ஆற்றினர். அரசரையும் வள்ளல்களையும் போற்றும் முறையில், அவருடைய குணுதிசயங்களையும், நாடுகளின் இயற்கைச் செல்வத்தையும், வனப்புகளையும், நகரங்களின் நாகரிகத்தையும், மக்களின் வாழ்க்கையையும், பழக்க வழக்கங்களையும், பண்பாடுகளையும்,

கூர்மையான தர்சன சக்தியுடனும், எளிமை, அழகு, திட்பம் முதலிய குணங்கள் பொருந்திய கற்பனைத் திறனுடனும் புலவர் செம்மையான கவிதை புனைந்தார். அத்துடன் மனித உள்ளத்தில் எழக்கூடிய பல்வேறு உணர்ச்சிகளின் இயல்புகளையும் சித்திரித்திருக்கிறார். இவைகளைப் பாடிய புலவர் ஆண்மை பெண்மையின் இணை விழைச்சில் விளையும் காதல் உணர்ச்சியை எத்தனையோ பாவங்களில் கற்பனைப் பொலிவுடனும் விந்நியாச விகற்பங்களுடனும் படிப்போர்க்கு மட்டற்ற இன்பம் பயக்கும் முறையில் பாடிப் பண்டைத் தமிழ் இலக்கியத்திற்குத் தனிச் சிறப்பு தேடிக் கொடுத்திருக்கிறார். சங்க இலக்கியம் பண்டைத் தமிழ்க் கவிதையின் உச்ச நிலையைக் காட்டுகிறது என்று ஐயமின்றித் துணியலாம்.

இலக்கிய விமரிசனம் இந்த நூலின் நோக்கத்திற்குப் புறம்பான போதிலும் சங்க இலக்கியத்தின் பெருமையைப் பற்றி ஒரு வார்த்தை கூற வேண்டும். கவிதா ரீதியாக மாத்திரம் பார்த்தால், பத்துப் பாட்டில் மதுரைக் காஞ்சி, குறிஞ்சிப் பாட்டு, முல்லைப் பாட்டு நெடுநல் வாடை ஆகியவையும், புறநானூறு, குறுந் தொகை, நற்றிணை, கலித் தொகை நூல்களிலுள்ள பாடல்களில் சுமார் பாதியும், அகநானூறு, ஐங்குறு நூறு தொகைகளில் சுமார் மூன்றிலொரு பங்கும், பரி பாடலிலும் பதிற்றுப் பத்திலுமுள்ள பாடல்களில் ஒரு சிலவும் கற்றறிந்த ரசிகருக்கு அளவற்ற இன்பம் தர வல்ல முதல்தரமான கவிதை என்பதைத் தமிழ் மணம் நுகரக்கூடிய எவராலும் மறுக்க முடியாது. கவித்வ நயங் களில் சற்றுக் குறைந்திருக்கும் ஏனைய பாடல்களும் தமிழறிஞர் புறக்கணிக்கக் கூடியவை அல்ல. பண்டைத் தமிழரின் வாழ்க்கையை அவை சித்திரிப்பதால் அவை அரிய முக்யத்வம் வாய்ந்தவை.

இந்தத் தலைமுறையில் சங்க இலக்கியம் தமிழ் மாணவராலும், தமிழ் அறிவை நாடும் ஏனையோராலும், முன்னோர் பயின்றது போல், நன்றாய்ப் பயிலப் பெறாமல் இருப்பது தமிழரின் துர்பாக்கியமே. அதைப் பயின்ற ஒரு சிலர், சங்கப் பாட்டுக்களின் கவிதை யழகுகளையும் இலக்கியச் சிறப்புக்களையும் மறந்து, தங்களுடைய விருப்பு வெறுப்புகளுக்குட்பட்டுக் கற்பித்துக் கொள்ளும் பழந் தமிழரின் வாழ்க்கை வரலாற்றிற்கு ஆதாரமாகவே அவைகளைப் பயன்படுத்தி, இன்றும் அந்த வாழ்க்கையைச் சில இயல்புகளில் பின்பற்ற வேண்டும் என்று கருதி வருகிறார். சங்க காலத் தமிழின் இயல்புகளையும், சொற்களையும் இன்றையத் தமிழ் நடைக்குப் பூராவும் பயன்படுத்தலாம் என்றுகூட அவர் நினைக்கிறார். சென்ற தலைமுறையில் பழைய முறையில் தமிழ் கற்ற சிலர் சங்க இலக்கியத்திற்கு ஒப்ப தமிழில் வேறு கவிதை இல்லை என்று சொல்வதும், அதில் தற்காலத்தோர் படித்து இன்புறக்கூடிய கவிதை போதிய அளவில் இல்லை என்று சில புதுமைப் புலவர் சாதிப்பதும், இன்று தற்காலத்தில் இலக்கியப் பயிற்சிக்குப் பொதுவாக அவசியமான நிதான மனப்பான்மையை நாடு இழந்த நிலையையே காட்டுகின்றன. சங்க காலப் பாட்டுக்கள் கடினமானவை தான்; படித்துப் பொருள் தெரிந்து கொள்வதற்குப் பெரும் முயற்சி தேவை தான்; அவை சித்திரிக்கும் வாழ்க்கை வழக்கொழிந்த பழமையாதலால் அதை வாசகரின் கற்பனையின் மூலமே தெரிந்து கொள்ள இயலும். தற்கால மாணவருக்கு உதவும்படியான நல்ல முகவுரையுடனும் பொருள் எளிதில் தெரியக்கூடிய குறிப்புக்களுடனும், பொருள் இலக்கணத்தைச் சார்ந்த விளக்கங்களுடனும் கூடிய தெளிந்த பதிப்புக்களும் இல்லை. டாக்டர் சாமிநாதய்யர் முதலியோரின் அரிய பதிப்புகள் எல்லாம் தமிழ்ப்

பயிற்சியில் மிகுந்த புலவருக்கே பயன்படும் முறையில் இருக்கின்றன. சமீபத்தில் வெளி வந்திருக்கும் மலிவுப் பதிப்புகள், வரவேற்கத் தக்கனவாயினும், மாண வருக்குப் பயன்படும் முறையில் பதிப்பிக்கப் பெற வில்லை. இருந்த போதிலும் ஓரளவு தமிழ்ப் பயிற்சி பெற்றவர் சங்க இலக்கியத்தைப் படித்து அதிலுள்ள கவிதையை அநுபவித்து இன்புற முயல வேண்டும். ஏனென்றால் தமிழ் மொழியின் தன்மையையும் ஆற்றலை யும், தமிழ் இலக்கியத்தின் பரப்பையும் பெருமையையும், பண்டைத் தமிழ் இலக்கியப் பயிற்சி இல்லாமல் தெரிந்து கொள்ள முடியாது.

## பண்டைத் தமிழ்ப் புலவரும் இலக்கிய விமரிசனமும்

### தொகை நூல்களின் பிறப்பு

பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய ஆராய்ச்சித் திறனுக்கும் விமரிசனப் பண்புக்கும் கிடைக்கும் சான்று களைச் சற்று ஊன்றிப் பார்க்க வேண்டும். அவருடைய இலக்கியச் சுவைக்கும் கவித்வ ரசனைக்கும் கலையார்வத் திற்கும் முதல் சான்ருயிருப்பது, அவர் பண்டைத் தமிழ் இலக்கியப் பண்ணையில் செழித்து வளர்ந்த பலவிதக் கவிதைப் பயிர்களை அறுவடை செய்து போர் அடித்துக் கண்டு முதலைத் தொகுத்து வகுத்துக் களஞ்சியத்தில் சேர்த்துப் பாதுகாத்த முறையாகும். இவ்வாறு பண் டைத் தமிழ்ப் புலவர் செய்த முயற்சியில் விளைந்த பயனே எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும். பத்துப் பாட்டும் ஒரு தொகை நூல் தான். அது அளவில் பெரிய பாடல்களின் தொகுதி; ஒவ்வொன்றும் தனி யாகவும் இயங்கவல்லது. பாடல்களைத் தொகுத்ததில் பண்டைத் தமிழ்ப் புலவர் சில இலக்கியக் கொள்கை களைக் கையாண்டே தங்கள் பணியை ஆற்றியிருக்கிருர் என்பது சிந்தனை செய்பவருக்குப் புலப்படும்.

இன்று நமக்குக் கிடைத்திருக்கும் தொகை நூல் களைத் தொகுத்த புலவரும் தொகுப்பித்த அரசரும் வள்ளல்களும் அவரவர் காலத்தில் எழுதப் பெற்றிருந்த எல்லாப் பாடல்களையும் தொகுப்பதற்கு எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. அவைகளில் நயமும் சுவையும் உடைய பாடல்களையே அவர் தெரிந் தெடுத்துத் தொகுத்திருக்கிருர் என்று கொள்வது தான்

பொருத்தமாகும். தொகுத்திருக்கும் முறையைக் கவனித்தால் இந்த உண்மை விளங்கும். புலவர் பெயர் வரிசையில் பாட்டுக்கள் தொகுக்கப் பெறவில்லை. இதிலிருந்து பண்டைக் காலத்தில் தனிப் புலவருக்கு முக்யத்வம் கொடுக்கப்படாமல் அவர் ஆக்கிய பாடல்களுக்குச் சிறப்பு அளிக்கப்பட்டது என்று புலப்படுகிறது. சங்க இலக்கியத்தைப் பாடிய புலவரின் தொகை ஏறக்குறைய நானூற்று எழுபத்தைந்து. இவர் 2279 பாடல்களைப் பாடியிருக்கிறார். அவர்களில் 293 பேர் பாடிய பாடல்கள் ஒவ்வொன்றும், 61 பேர்களின் பாட்டுக்கள் தலைக்கு இரண்டும், 26 புலவர் இயற்றிய செய்யுட்கள் தலைக்கு மூன்றும் தான் தொகை நூல்களில் காணப் பெறுகின்றன.[1] இவைகளைப் பாடிய புலவர் மொத்தமே தொகுக்கப் பெற்ற அத்தனை பாடல்களைத் தான் இயற்றினர் என்று கொள்வது பொருத்தமாயிராது. பாடல்களில் சில மறைந்திருக்கக் கூடுமாயினும் ஒவ்வொரு புலவரும் எழுதிய பாட்டுக்களில் சுவையுள்ளவைகளையே தொகுத்த புலவர் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். சங்க காலத்தில் எத்தனையோ பரிபாடல்கள் இருந்திருக்கின்றன. இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் எழுபது பரிபாடல்கள் இருந்தன என்று கூறுகிறார். இப்போது இருபத்

---

1. சங்க இலக்கியம். இரண்டாம் பகுதி: பக்கம் 1404-5. சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் பதிப்பு: (1940). சங்க இலக்கியத்தை முதல் முதலாகப் புலவர் வரிசையில் பிரித்துப் பிரசுரிக்கப்பட்ட அருமையான பதிப்பு இது. இந்த சமாஜத்தாரின் சமயப் பணியும் தமிழ்ப் பணியும் மிகவும் போற்றத்தக்கன. இந்தப் பணி கடந்த சில ஆண்டுகளாக நடைபெறாதிருப்பது தமிழரின் துர்ப்பாக்கியம் தான். சமாஜத்தின் தலைவர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் சமீபத்தில் மறைந்தது தமிழ் இலக்கிய உலகிற்கும் சைவ சமய உலகிற்கும் ஒரு பெரிய நஷ்டமாகும்.

தைந்து பரிபாடல்கள்கூட முழு உருவத்தில் கிடைக்க வில்லை. சில மறைந்திருக்கலாம். சில, கவிநயமில்லாத தால் தொகுக்கப் பெருமல் இருந்திருக்கலாம்.

எட்டுத் தொகையைச் சேர்ந்த அகநானூறும் புற நானூறும் பொருள் பற்றியே தொகுக்கப்பட்டிருக் கின்றன. ஒவ்வொன்றிலும், தொகையின் பெயர் காட்டுவது போல் நானூறு பாடல்கள் இருக்கின்றன. நானூறு என்ற எண்ணுக்குப் பண்டைக் காலத்தில் ஏதோ ஒரு சிறப்பு இருந்திருக்கிறது. பண்டைத் தமிழ்ப் புலவர் அகப் பொருள் பாடல்களையே அதிகமாக எழுதி யிருக்கிருர். ஆகையால் தொகுக்கப் பெற்ற பாடல் களிலும் இந்த இனத்தைச் சேர்ந்தவை அதிகமாயிருக் கின்றன. எட்டுத் தொகையில் ஐந்து நூல்கள் அகப் பொருளுக்குரியன. அவைகளில் மூன்று நானூறு களாகத் தொகுக்கப் பெற்று விளங்குகின்றன. இவை அகநானூறு அல்லது நெடுந் தொகை, குறுந் தொகை, நற்றிணை ஆகியன. இவைகளில் நாலடி சிற்றெல்லை யாகவும் எட்டடி பேரெல்லையாகவும் உள்ள பாடல் களைக் குறுந் தொகையிலும், ஒன்பது அடிமுதல் பனி ரண்டு அடி வரையிலுள்ள பாடல்களை நற்றிணை யிலும், பதின்மூன்று அடியிலிருந்து முப்பத்தொன்று வரை அடியுள்ள செய்யுட்களை அகநானூற்றிலும் புலவர் தொகுத்திருக்கிருர். ஐங்குறு நூறில் ஒவ்வொரு திணைக்கும் நூருக ஐந்து திணைகளுக்கும் பாடல்கள் அமைந்து மொத்தம் 505 பாடல்கள் காணப் பெறு கின்றன. கலித் தொகை ஐந்திணைகளையும் பொரு ளாய்க் கொண்ட நூற்றைம்பது பாடல்கள் உடையது; பாலைக்கும் மருதத்திற்கும் ஒவ்வொன்றிற்கும் முப்பத்தி நான்கும், நெய்தலுக்கு முப்பத்தி மூன்றும், குறிஞ்சிக்கு இருபத்தொன்பதும், முல்லைக்குப் பதினேழுமாக, பாடல்கள் அமைந்திருக்கின்றன. பரிபாடல் தொகை

யில் இருபத்திரண்டு பாடல்கள் காணப் பெறுகின்றன. கலித் தொகையும் பரிபாடலும் அவைகளிலடங்கும் பாடல்களின் தன்மையிலிருந்து பெயர்களைப் பெற்றிருக்கின்றன.

ஆகவே, பாடல்களின் பொருளைப் பற்றி சிலவும், யாப்பமைதியைப் பற்றி வேறு சிலவும் ஒரே பொருளைப் பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட தொகுதி இயற்றப் பெறுங் கால் பாடல்களின் அளவைத் தழுவியும் தொகை நூல்கள் ஆக்கப் பெற்றிருக்கின்றன. இந்த முறை பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய விமரிசனப் பண்பின் விளைவுதான். பண்டைத் தொகை நூல்கள் எல்லாம் ஒரே காலத்தில் குறிப்பிட்ட அரசராலும், புலவராலும் முடிவாகத் தொகுக்கப் பெறவில்லை. பாடல்கள் எழுதப் பெற்ற காலம் வேறு; தொகுக்கப் பெற்ற காலம் வேறு; தொகுத்தலும் ஒரு குறிப்பிடத்தக்க காலத்தில் தொடங்கப் பெற்று மொத்தமாக எல்லாப் பாடல்களும் தொகுக்கப் பெற்று முடிவு பெறவில்லை. தொகுத்தல் முயற்சி சுமார் கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் தொடங்கியிருக்கலாம். தொடக்கத்தில் செய்யப் பெற்ற தொகைகளில் பின்னரும் பாடல்கள் சேர்க்கப்பெற்று வந்தன. புறநானூறு அகநானூறு போன்ற தொகைகளின் பெயர்களில் பாடல்களின் மொத்த எண் குறிப்பிடப் பட்டிருந்த போதிலும் முதலிலேயே நானூறு பாடல்களும் தொகுக்கப் பெற்றதாகக் கொள்ள முடியாது. இந்தப் பெயர்களைத் தொகுக்க ஆரம்பித்தவர் கொடுத்ததாகவும் கருத முடியாது; அவர்களே கொடுத்ததாக வைத்துக் கொண்டால் அவர்களுடைய உத்தேசத்தையே இப்பெயர்கள் காட்டும். நமக்குக் கிடைத்துள்ள எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும், இப்போதுள்ள இறுதியான அமைப்பையும் பெயர்களையும், அவை தொகுக்க ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் பெற

வில்லை என்பது திண்ணம்; அவைகளை சுமார் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டில் பெற்றிருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனென்ருல் நிச்சயமாய்ப் பிற்காலத்தில், அதாவது கி. பி. ஐந்து முதல் ஏழாம் நூற்றுண்டு வரையுள்ள காலத்தில் தோன்றியதாகக் கருதப்பெறும் சில பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கின்றன.

சங்க இலக்கியத்தைச் சேர்ந்த பெரும்பாலான பாடல்கள் சுமார் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டுக்கு முன்பு இயற்றப்பட்டிருக்க வேண்டும்; அவைகளில் பல அதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே பாடப் பெற்றிருக்கக் கூடும். கி. பி. ஆரும் நூற்றுண்டுக்குப் பின் சைவ சமய குரவரும் வைணவ ஆழ்வாரும், புதிய இனிய இசைத் தமிழ் சகத்தைத் தொடங்கி, பக்தி இயக்கத்தைப் பேரார்வத்துடன் பரப்பினுர். இந்தக் காலத்தில் சமணப் புலவர் வேருெரு துறையில் சிறந்த தமிழ்த் தொண்டாற்றி, தமிழ் இலக்கியத்தை வளர்த்தார். ஆரம்பத்தில் அவர் சொற் சுவையிலும் பொருட் சுவையிலும் மிகுந்த அற நூல்களையும், பின்னுல் ஒன்பது பத்தாம் நூற்றுண்டுகளில் காப்பியங்களையும், அதற்கும் பின்னுல் பதினெென்று, பனிரண்டாம் நூற்றுண்டுகளில் இலக்கண நூல்களையும், அவைகளுக்கு உரைகளையும் ஆக்கினுர். தொடக்கத்தில் அவர் ஆக்கின அற நூல்களில் தலைசிறந்தன திருக்குறளும் நாலடியாரும்.[1] அற நூல்கள் முழுவதும் பண்டைக்

---

1. திருவள்ளுவரின் சமயத்தைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. சிலர் அவர் சமணர் என்றும், வேறு சிலர் அவர் வைதிக சமயத்தைச் சேர்ந்தவர் என்றும் கூறி வந்திருக்கிருர். அவர் சமணராயிருக்கலாம் என்பதுதான் பெரும்பாலான தமிழறிஞருக்கு உடன்பாடு. இதைபபற்றி முடிவான அபிப்பிராயம் கூறுவதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லாததால் தான் பலவாருன கூற்றுகள் நிலவி வருகின்றன.

காலத்தில் குறட்பாவாலும் வெண்பாவாலும் இயற்றப் பெற்றன. இந்நூல்களைப் பண்டைத் தமிழ்ப் புலவர் உயர்வாக மதித்துப் போற்றிவந்தார். அதன் காரண மாக எட்டுத் தொகையையும் பத்துப்பாட்டையும் சேர்த்து, பதினெண் மேல்கணக்கென்றும், திருக்குறள் முதலிய அறநூல்களைப் பதினெண் கீழ்க்கணக்கென்றும் வகுத்து ஒரு வழக்கை ஏற்படுத்தினர். இதற்கு இலக் கணம் பன்னிருபாட்டியலில் காணப்பெறுகிறது.[1]

ஆகவே, பண்டைத் தமிழ்ப் புலவர், அக்காலத்தி லிருந்த நூல்களை மேல்கணக்கு கீழ்க்கணக்கு என்று

1. "அகவலுங் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம் பதிரு
மிகுத்துடன் தொகுப்பது மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறி
னெள்ளறு கிழ்க்கணக் கெனவுங் கொளலே"

"ஐம்பது முதலா வைந்நா நீரு
ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபில்
தொகுக்கப் படுவது மேற்கணக் காகும்"
அடிநிமிர் பில்லாச் செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்ப மடுக்கி, அவ்வத்
திறம்பட உரைப்பது கிழ்க்கணக் காகும்"

தொல்காப்பியம் செய்யுளியலில் வரும்,

"வனப்பி யனே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலோ
டம்மை தானே யடிநிமிர் பின்றே"

என்ற சூத்திரத்தில் காணப்பெறும் 'தாயபனுவல்' என்பது பதினெண் கிழ்க்கணக்கு என உணர்க என்கிறார் பேராசிரியர். ஆனால் இளம்பூரணர் இச்சூத்திரத்திற்குக் கொண்ட பாடத்தில் "தாயபனுவல்" தொடரேயில்லை. அவர் வேறு பாடங் கொண் டிருக்கிறார். பேராசிரியரின் கருத்தை ஏற்றுக்கொள்வதில் தடை என்னவெனில் கிழ்க்கணக்கு நூல்கள் எல்லாம், தொல்காப்பியத் திற்குப்பின் தோன்றியவை என்பது அறிஞரின் முடிவாயிருப்பது. ஒருகால் திருக்குறள்மாத்திரம் தொல்காப்பியத்திற்கு முந்தியதா யிருக்கலாம். அல்லது வேறு அறநூல்கள் தொல்காப்பியர் காலத்தில் இருந்திருக்கவேண்டும்.

சில விதிகளைத் தழுவிப் பாகுபாடு செய்திருப்பது அவரது விமரிசனப் பண்பை எடுத்துக் காட்டுகிறது. கீழ்க்கணக்கு நூல்களில் மிகப் பழமையானதும் பேரிலக்கியமாயும் இருப்பது திருக்குறள். இதற்கு அடுத்த படியாக இலக்கியப் பெருமை வாய்ந்தது நாலடியார் அல்லது நாலடிநானூறு. இது திருக்குறள்போல் ஒரே ஆசிரியர் செய்ததல்ல. இதிலுள்ள நானூறு வெண்பாக்களும் நானூறு சமணப்புலவரால் செய்யப்பெற்றன என்பதும், பதுமனர் என்பவர் அவைகளுக்குத் திருக்குறளைப் பின்பற்றி, பொருள் தொடர்பு ஏற்றி அதிகார முறையும் கொடுத்துத் தொகுத்தார் என்பதும் பழைய மரபு. பாட்டுக்களிலும் அதிகார முறையிலும் ஓரளவு தொடர்பும் பொருத்தமும் காணப்பெறினும் ஒவ்வொரு பாட்டும் தனித்தனிப் புலவரால் பாடப்பெற்றது என்ற கூற்றை முழுவதும் தள்ளிவிட முடியாது. ஒவ்வொரு செய்யுளும் தனியாய் இயங்கவல்லது; வெண்பாவின் கட்டமைப்பும் அது கூறும் பொருளும் அவ்வளவு திட்பத்துடன் இருக்கின்றன. ஆகையால் நாலடியாரை ஒரு தொகை நூலாகவே கருதலாம். பல சமணப் புலவர் பாடிய செய்யுட்களைத் திறமைவாய்ந்த ஒரு புலவர் செய்த தொகுதி நாலடியார். அதில் நானூறு பாடல்களைத் தொகுக்கப்பெற்றிருப்பனவும் கவனிக்கத் தக்கது; பழைய தொகை நூல்களில் முக்கியமானவைகளில் நானூறு பாட்டுக்கள் இருப்பவற்றைத் தழுவியே இந்தக் கீழ்க்கணக்கு நூலிலும் நானூறு பாட்டுக்களைத் தொகுத்திருக்கிருர். இதிலிருந்து பழைய தொகை நூல்களில் மிகப் பிந்தியவைகளின் காலத்திற்கும்

---

1. நாலடிநானூறு ஆக்கப்பெற்றதைப்பற்றி ஒரு கதை வழங்கி வருகிறது. அது சரித்திரப்பான்மையில்லாத ஒரு அருமையான கதையாதலால் நடைமுறையில் நிகழ்ந்த சம்பவம் என்று அதைக் கொள்ளமுடியாது.

நாலடியாரின் காலத்திற்கும் இடையீடு அதிகமாய் இருந்திருக்க முடியாது என்றும் ஊகிக்கலாம். பண்டைக் காலத் தமிழ்ப்புலவர் பாடல்களை இயற்றியதுமன்றி அவைகளில் சிறந்தவைகளைத் தொகுத்தும் வைத்துத் தமிழ்ப்பணி ஆற்றியிருப்பது அவருடைய இலக்கிய விமரிசனத் திறனைக் காட்டுகிறது.

# பண்டைத் தமிழ்ப்புலவரும் இலக்கிய விமரிசனமும்

## புலவரைப் போற்றும் பண்பு

பண்டைக் காலத்தில் ஒரு புலவர் இயற்றிய பாடல்களையோ நூல்களையோ மற்றப் புலவர் படித்துத் துய்த்து விமரிசனம் செய்யும் வழக்கம் எந்த அளவிலும் தன்மையிலும் இருந்தது என்பதைப்பற்றிப் பூராவும் தெரிய முடியவில்லை. அரசரவைகளுக்கு நூல்களைப் பரிசிலுக்காகவோ பரிசீலனைக்காகவோ புலவர் கொண்டுவந்த போது பிற புலவர் அவைகளைப்பற்றித் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்திருப்பார் என்று ஊகிக்கலாம். அரசரே தகுதியுடைய புலமை பெற்றிருந்தபோதும், ஏனைய புலவரின் உதவியை நாடுவதே முறை என்ற கருத்தும் நிலவியிருந்தது. தவிரவும் பண்டைக் காலத்தில் ஒரு சிறந்த நூலை அதற்கு வழி நூல்களையும் சார்பு நூல்களையும் ஆக்கியே புலவர் பெரும்பாலும் போற்றினர். இவ்வாறு நூல்கள் செய்வதை அவரது விமரிசனப் பண்பின் ஒரு தனி இயலாகக் கருதலாம்.

பண்டைத் தமிழ்ப் புலவரில் ஒரு புலவர், மற்றொரு கவியைப் போற்றி எழுதிய குறிப்புக்கள் தொகை நூல்களில் அருகியே தென்படுகின்றன. இவையும் நேரடியாகச் செய்யப்பெற்ற தனிப்பாடல்களாக இல்லை அரசரையும் வள்ளல்களையும் போற்றும் பாடல்களில் இடையிடையே உள்ளன. எட்டுத்தொகை பத்துப் பாட்டு ஆகியவைகளைப் பாடிய புலவரில் சிறந்த பெரிய கவிகள் என்று மதிக்கக்கூடியவர் ஏறக்குறைய பத்துப்

பேர்களே. அவர்களில் முதன்மையானவர் கபிலர் என்பது பழைய தமிழ் மரபு. நக்கீரருக்குத்தான் பண்டைத்தமிழ்ப் புலவர் இந்தப் பெருமையை அளித்ததாக சிலர் கருதுகிருர். இவ்விருவரில் யார் மற்றவரைவிடப் பெரிய புலவர் என்ற வாதம் இந்த நூலுக்குத் தேவையில்லை.

கபிலரை மற்றப் புலவர் ஆர்வத்துடன் பாராட்டியிருக்கிருர் என்று தெரிகிறது. பொருந்திலிளங்கீரனுர் மாந்தரஞ் சேரலிரும் பொறையைப்பாடிய ஒரு செய்யுளில்,

"செறுத்த செய்யுள்செய் செந்நாவின்
வெறுத்த கேள்விவிளங்கு புகழ்க்கபிலன்
இன்றுள்ள னுயின் நன்றுமனென் றசின்
ஆடுகொள் வரிசைக்கொப்பப்பாடுவன்"

புறம்—53

என்றும்,

மாருேக்கத்து நப்பசலையார் மலையமான் சோழிய வேனதி திருக்கண்ணனைப் புகழ்ந்த பாடலில்,

"இரங்கு புனல்நெரிதரு மிகுபெருங்காவிரி
மல்லல் நன்னுட்டல்லல் தீரப்
பொய்யா நாவிற் கபிலன்பாடிய
மையணி நெடுவரை"

புறம்—174

என்றும்,

நக்கீரனுர் அகநானூற்றுப் பாட்டு ஒன்றில்

"உலகுடன் திரிதரும்பலர் புகழ்நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழ்ச்சேய்நின்று"

அகம்—78

என்றும்,

பதிற்றுப்பத்தில் இளஞ் சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர் கிழார் பாடிய பாடலில்,

"கோடுபல விரிந்த நாடுகாணெடுவரைச்
சூடா நறவினுண் மகிழிருக்கை
அரசவைபணிய அறம்புரிந்து வயங்கும்
மறம்புரி கொள்கை வயங்குசெந்நாவி
னுவலைகூராக கவலையி னெஞ்சி
னனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன்பெற்ற வூரினும் பலவே"

பதிற்றுப் பத்து—85

என்றும் வாயாரத் தரமறிந்து புகழ்ந்து போற்றியிருக்கிறார்கள். "செறித்த செய்யுள் செய்", "பொய்யா நாவிற் கபிலன்" "பலர்புகழ் நல்லிசை வாய்மொழிக் கபிலன்" என்ற தொடர்கள் புலவரின் விமரிசனத் திறனையும் மனம் நெகிழ்ந்த உணர்ச்சியையும் அருமையாகக் காட்டுகின்றன. விரித்துக்கூறும் புகழ்ச்சிகளைவிட இத்திட்பமான சொற்களுக்கு அதிக சக்தி இருப்பதை ரஸிகர் உணருவர்.

இதேபோல் பரணர், மாங்குடி மருதன், பிசிராந்தையார் முதலிய புலவரைப் பாராட்டும் குறிப்புக்களும் தொகை நூல்களில் காணப்பெறுகின்றன. கோப்பெருஞ் சோழனின் ஆருயிர்த் தோழராயிருந்த பிசிராந்தையார், அவனுடன் சேர்ந்து உயிர்துறக்கச் சென்றதை, அவ்விருவரின் நண்பரான பொத்தியார் என்னும் புலவர் போற்றி நெஞ்சை உருக்கும் தன்மையில் பாடியிருக்கிறார். புலவரின் கவிநலத்தை யன்றி குணநலத்தையே புகழ்ந்த பாட்டு இது.

"இசை மரபாக நட்புக் கந்தாக
இனைய தோர்காலை ஈங்குவருதல்
வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுதுஇன்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே"

புறம்—271

புலவர் தங்களை ஆதரித்த அரசரைப்பற்றிப் பாடல்கள் இயற்றுவது இயற்கை. ஆனால் அரசர் தம் தோழராகிய புலவரைப்பற்றிப் பாடுவதும் உண்டு. ஏனென்றால் அரசரில் பலர் புலவரை ஆதரித்ததுமன்றி, தாங்களே சிறந்த புலமைபெற்றுக் கவியரங்கும் ஏறியிருக்கிறார். கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையாரைப் புகழ்ந்த பாட்டு புறநானூற்றில் காணப்பெறுகிறது. அதே தொகையில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மாங்குடி மருதனுக்கு ஒரு அழகான பாமாலையைச் சூட்டியிருக்கிறான். தம்முடைய பகைவரைத் தாம்வென்று வராவிட்டால் புலவர் தம்மைப் பார்த்துச் சிரித்து இகழ்ந்து பாடாமலிருக்கட்டும் என்று சபதம் செய்யும் தொனியில்,

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பில்
புலவர் பாடாது வரைக"

புறம்—72

என்று நெடுஞ்செழியன், தன்னையே பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு மதுரைக் காஞ்சி பாடிய மாங்குடி மருதனைப் புகழ்ந்து இந்த செம்மையான செய்யுளில் போற்றியிருக்கிறான். நெடுஞ்செழியன் காலத்துப் புலவர்க்கெல்லாம் மாங்குடி மருதன் தலைவனாயிருந்திருக்கிறான் என்ற அரிய செய்தி இந்தப் பாட்டிலிருந்து நமக்குத் தெரிகிறது. புலவர் பலர் இருந்ததையும், அவருக்குள் மாங்குடி மருதன் தலைவனாயிருந்ததையும், தெளிவாகக் கூறும் நெடுஞ்செழியனின் இந்தப் பாடல், தமிழ்ச் சங்கம் என்று ஒன்றிருந்ததாகப் பிரஸ்தாபிக்கவில்லை. இந்த விஷயம் ஆராய்ச்சியாளரின் சிந்தனைக்குரியது.

மேலே கூறிய பாராட்டுக் குறிப்புக்கள்தான் பண்டைத்தமிழ்ப் புலவரில் ஒருவர் மற்றவரின் பாடல்களைத் துய்த்ததற்கு அணுபோன்ற சான்றுகளாய் இருக்கின்றன. வேறு விபரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

# பண்டைத்தமிழ்ப் புலவரும் இலக்கிய விமரிசனமும்

## பாயிரங்களும் பதிகங்களும்

பண்டைத்தமிழ் நூல்களில் காணப்பெறும் பாயிரங்களையும் பதிகங்களையும் ஆராய்ச்சிகளாகவும் சிறிய அளவிலுள்ள விமரிசனங்களாகவும் ஒருவாறு கருதலாம். பாயிரம், பொது சிறப்பு என இருவகைப்படும். பாயிரத்திற்கு இலக்கணம் தொல்காப்பியத்தில் இல்லை. ஆனால் தொல்காப்பியத்திற்கே ஒரு கீர்த்திவாய்ந்த பாயிரம் இருக்கிறது. பல நூற்றாண்டுகளுக்குப்பின் தோன்றின நன்னூலில் பாயிரத்திற்கு இலக்கணம் விரிவாக

---

1. தொல்காப்பியம் பொருளதிகாரம் (653) மரபியலில் 'ஒத்த சூத்திரமுரைப்பிற்காண்டிகை' என்ற வரியுடன் தொடங்கும் சூத்திரத்திற்கு உரை எழுதும்போது பேராசிரியர் கூறுவதாவது: "ஒத்த சூத்திரமென்றதனான் நூலின் வேறாகிய இருவகைப் பாயிரமுஞ் சூத்திரத்தோடு ஒத்த இலக்கணத்த வென்பது கொள்க......இனி ஒத்த என்பதனாற் பொதுப்பாயிரமுஞ் சிறப்புப் பாயிர சூத்திரமுந் தம்மின் வேறென்றலும், அவ்விருவகைப் பாயிர வுரையுஞ் சூத்திரவுரையும் வேறெழுதப்படுமென்றலுஞ், சூத்திர வுரையுட் பாயிரவுரை மயங்கி வருவன உளவென்றலும், அவ்விரு வகையுரைக்கும் வேறாயினும் அவ்வுரை செய்தான் பெயர் கூறுதன் முதலாகிய பாயிரவுரைகூற அமையுமென்றலுஞ், சூத்திரந்தானே பாயிரமில்லாத வழிப் பாயிரம்போல நான்முகத்து நிற்குமென்றலும், அங்ஙனம் நின்றவழி பொதுப்பாயிரமும் சிறப்புப் பாயிரமும் உரைவகைத்தாற் பெய்துரைத்தலும் அவ் விருவகைப் பாயிரமுஞ் செய்தார் இன்னாரென்றலுமென்று இன்னோரன்ன கோடலாயிற்று. தொல்காப்பியம் பேராசிரியர் உரை.—ச. பவானந்தம்பிள்ளை பதிப்பு: பக்கம் 596, 598 இந்தக் குறிப்பு மிகவும் நுட்பமானது. இதே சூத்திரவுரையில் இளம் பூரணர் பாயிரங்களைப்பற்றிக் கூறவில்லை.

வரையப்பெற்றிருக்கிறது. இதன்படி பாயிரத்தில் நூல் அதன் தன்மை, ஆக்கியோன் பெயர், காலம், களன் முதலிய பதிஞேரு விஷயங்கள் இருக்கவேண்டும். நூலாசிரியனின் குரு, சீடன் அல்லது ஒருசாலே மாணுக்கன் ஆகியவரில் ஒருவர்தான் சிறப்புப் பாயிரத்தை எழுத உரிமை பெற்றவர். காலத்தை யுள்பட இலக்கணம் கூறும் பதினெரு விஷயங்களேப்பற்றித் தெளிவாகப் பாயிரங்கள் நூலாசிரியர் காலங்களிலேயே அவைகளுக்குரியவரால் இயற்றப் பெற்றிருந்தால் அவை இலக்கிய வரலாற்றுக்கு எவ்வளவோ பயனுடை யனவாயிருக்கும் ஆனுல் பண்டைத்தமிழ் நூல்களுக்கு இவ்வித பாக்கியம் கிட்டவில்லே. சிலவற்றிற் குள்ள பாயிரங்கள் பல ஐயப்பாடுகள் எழுப்பக்கூடியதால் தெளிவாய் இல்லே. அவை நூல்கள் காலத்திலேயே எழுதப்பட்டனவா அல்லது பின்னர் எழுதிச் சேர்க்கப் பெற்றனவா என்றும் தெரியவில்லே. பின்ஞல் சேர்க் கப்பட்டிருந்தால் ஆக்கியோர் தம் காலத்தில் செவி வழியாய் வந்து நிலேத்த விவரங்களேயே கொடுத்திருப் பார். இவை எந்த அளவிற்கு வரலாற்றுப் பான்மை யுடையன என்ற ஐயம் எழுகிறது.

பண்டைத்தமிழ் நூல்களுக்குள்ள பாயிரங்களில் தொல்காப்பியத்தின் பாயிரம் ஒன்றே சரித்திரத் தன்மை யிலும் இலக்கிய முறையிலும் அதிக முக்யத்வம் வாய்ந்தது. இது பதினேந்தே வரிகளேயுடைய சிறப்புப் பாயிரம்[1] அகத்தியரிடம் தொல்காப்பியருடன் கூடப்

1. தொல்காப்பியத்திற்கு 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப் பும்' என்ற முதல் வரியையுடைய ஒரு செய்யுள் பொதுப்பாயிரம் என்றும், இது ஆத்திரையன் பேராசிரியனல் ஆக்கப்பெற்ற தென்றும், பேராசிரியர் பொருளதிகாரம் (653 மரபியல்.) சூத்திர உரையில் கூறுகிஞர். ஆனுல் இந்தப் பாட்டில் தொல்காப்பி யத்தைப்பற்றி ஒருவிதக் குறிப்பும் இல்லே. அச்சிட்ட தொல் காப்பிய எழுத்ததிகாரப் பதிப்புகளில் இது சேர்க்கப்படுவதும்

படித்த பனிரண்டு மாணவர்களில் ஒருவரான பனம் பாரனர் இந்தச் சிறப்புப் பாயிரத்தை எழுதியவர். தொல் காப்பியர் தமது ஒப்பற்ற நூலை நிலந்தருதிருவின் பாண்டியன் என்ற பாண்டியன் மாகீர்த்தியின் அவை யில், அதங்கோட்டாசான் என்ற மறைஞானத்தில் சிறந்த பெரும் புலவர் கேட்டுத் திருப்தியடைந்த வகையில் அரங்கேற்றிப் புகழ்பெற்ற தவமுனிவர் என்று இந்தப் பாயிரம் கூறுகிறது. அத்துடன் நூலின் பொருளின் தன்மையையும் நயங்களையும் அது எவ்வாறு செய்யப்பெற்றது என்பதையும் அப்பாயிரம் சூத்திரப் பண்புடன் சுருக்கமாகவும் திட்பமாகவும் விளக்குகிறது பாயிரம் கூறும் விஷயங்கள் தெளிவாயிருக்கின்றன. அதில் கருத்துச் சிக்கல்கள் ஒன்றும் இல்லை. அகத்தியர் எந்தக் காலத்தில் வாழ்ந்தார். அவருக்குத் தொல்காப் பியர், பனம்பாரனர், அதங்கோட்டாசான் உள்பட பனி ரண்டு மாணக்கர் இருந்தார்களா? நிலந்தருதிருவின் பாண்டியன் யார்? அவன் எந்தக் காலத்தில் ஆட்சி செய்தான்? என்ற கேள்விகளுக்குத் திட்பமான விடை களையளிக்க வரலாற்றுப் பண்புடைய சான்றுகளோ அல்லது பிறநூல்களில் குறிப்புகளோ இல்லை. இருந்த போதிலும் இந்தப் பாயிரத்தில் உண்மைச்செய்தியின் முத்திரை பதிந்திருக்கிறது. அதில் கதைப்பான்மையோ புனைந்துரைத்தலோ இல்லை. பண்டைத் தமிழகத்தில் நூலரங்கேற்றல் சம்பந்தமான ஐயமற்ற ஒரே நிகழ்ச் சியை இப்பாயிரம் வரைவதால் அது வேறெந்தப் பாயிரங்களுக்கு மில்லாத அரிய சிறப்பு வாய்ந்தது.

---

இல்லை. இது எல்லா நூல்களுக்கும் பொருந்தக்கூடிய பொதுப் பாயிரமாதலால் தொல்காப்பியத்திற்கும் பொருந்தும் என்று பேராசிரியர் கருதினர்போலும். இந்தப்பாட்டை நூல்களின் பொதுப்பாயிர இலக்கணத்திற்கு உதாரணமாகக் காட்டி அதற்கு ஒரு விருத்தி உரை அரசன் சண்முகனர் தமது தொல்காப்பியப் பாயிர விருத்தியில் எழுதியிருக்கிறார்.

அரசரவையில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டு அது புலவரால் கேட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தும் இந்த அவையைப் பனம்பாரனுர் சங்கம் என்று கூறினுரில்லை. இது ஆராய்ச்சியாளரால் ஊன்றி நோக்கற்பாலது.

தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியர் என்று கருதப் பெறும் இளம்பூரணர் இப்பாயிரத்தின் பொருளைத் தெளிந்த தமிழ்ப் பண்புடனும், ஆழ்ந்த புலமையுடனும் எழுதியிருக்கிறுர். பின்னுல் வந்த சில உரையாசிரியரும் புலவரும், தங்கள் கல்வித் திறனை எல்லாம் உபயோகித்து இந்தப் பாயிரத்தை அலசி, அதற்குப் பொருள் கூறும் முயற்சியில் சில கட்டுக் கதைகளையும், கர்ண பரம்பரையாய் வந்திருக்கக் கூடிய கதைகளையும் சேர்த்து வரைந்து தமிழ் இலக்கிய வரலாற்றில் தீராக் குழப்பத்தை உண்டாக்கி யிருக்கிறுர். பாண்டியன் மாகீர்த்தி இருபத்தி நாலாயிரம் ஆண்டுகள் ஆட்சி புரிந்தான் என்றும், குமரி யாற்றின் தெற்கே நாற்பத் தொன்பது நாடுகளைக் கடல் கொண்டன என்றும், தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர்தான் வேதவியாசர் நான்கு வட மொழி வேதங்களைப் பாகுபாடு செய்து ஒழுங்காக அமைத்தார் என்றும், தொல்காப்பியர் அகத்தியரின் மாணுக்கராயிருந்தும், அவர்களுக்குள் சில காரணங்களால் பகைமை நேர்ந்தது என்றும், இந்தப் பாயிர உரையில், கி. பி. பதினுரும் நூற்றுண்டிலிருந்த புலவரான நச்சினுர்க்கினியர் கூறி, ஆன்றோர் போற்றி வந்ததால் அழியாப் பெருமை பெற்ற அவருடைய தொல்காப்பிய உரையின், பாயிரப் பகுதிக்கு புராணத் தன்மையைக் கொடுத்திருக்கிறுர்.[1] இளம்பூரணர்,

---

1. அகத்தியரைப் பற்றி எத்தனையோ கதைகளும் புராணச் செய்திகளும் தமிழ் நாட்டில் மிகப் பழமையான காலத்திலிருந்தே நிலவி வருகின்றன. இவைகளில் சரித்திர உண்மையைப் பார்ப்பது அரிது. ஆனுல் தொல்காப்பியர் அகத்தியரின் மாணுக்கர்

நச்சினார்க்கினியர் ஆகியோர் எழுதிய பாயிர உரைகளை அலசி சில கருத்து வேறுபாடுகளைக் கூறி, கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்த சிவஞான முனிவர் தொல்காப்பியப் பாயிர விருத்தி ஒன்று எழுதினார். இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் ஆகிய மூவருமே தங்களுடைய பாயிர உரைகளில் ஏற்றுக் கொள்ளத் தகாத பல விஷயங்களைக் கூறியிருப்பதாகக் காட்டி 'சண்முக விருத்தி' என்ற பெயரில் தொல்காப்பியப் பாயிரத்திற்கு ஒரு விருத்தி உரை இருநூற்றைம்பது பக்கங்களில், சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு இருந்த மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரில்

---

என்றும், தொல்காப்பியத்திற்கு, அகத்தியர் செய்த முத்தமிழ் இலக்கணமாகிய அகத்தியம் முதல் நூல் என்றும், தமிழ்ப் புலவர் வெகு காலமாகவே எழுதி வந்திருக்கிறார். இவ்விதக் குறிப்புகளில் மிகப் பழமையானது பன்னிரு படலத்தில் காணப் பெறுகிறது. "அகத்திய னென்றும் அருந்தவனுக்கிய முதனூல், பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர், நல்லிசை நிறுத்த தொல்காப்பியனும்" என்று பன்னிரு படலம் கூறுகிறது. அதன் வழி நூலாகிய புறப்பொருள் வெண் பாமாலையின் சிறப்புப் பாயிரத்தில் "மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்; தென் மலையிருந்த சீர் சான் முனிவரன், தன்பாற் றண்டமிழ் தாவின்றுணர்ந்த, துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன்" என்று காணப் பெறுகிறது. தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகியோரும்-பின்னர் தொல்காப்பியப் பாயிர விருத்தி எழுதிய சிவஞான முனிவரும் இந்த மரபை ஏற்றுக் கொண்டிருக்கிறார். தற்காலத் தமிழ்ப் புலவரில் ஒரு சிலர் இதை ஒப்புக் கொள்ளத் தயங்குகிறார். 'அகத்தியம்' என்ற பண்டைத் தமிழிலக்கணத்தை எழுதிய தமிழ்ப் புலவர் அகத்தியர் என்ற ஒருவர் இருந்தார் என்பதையும், அவருக்குத் தொல்காப்பியர் சீடராயிருந்தார் என்பதையும் மறுப்பதற்குப் போதிய காரணங்கள் இல்லை. இவ் வகத்தியரைப் பற்றி வேறு விபரங்கள் தெரியவில்லை. மற்றபடிப் புராணக் கதைகளில் கூறப் பெற்றிருக்கும் அகத்தியரும், தொல்காப்பியரின் ஆசானான அகத்தியரும் ஒருவர் என்று கொள்ள வேண்டியதில்லை. புராண அகத்தியர் சரித்திர வாழ்வு பெற்றவராயிருந்தால் அவரும், தொல்காப்பியரின் குருவும் வெவ்வேறு காலத்தவராயிருக்கலாம்.

ஒருவரான அரசன் சண்முகனுர் எழுதி வெளியிட்டார். இவர் அரிய தமிழ்ப் புலமை பெற்றிருந்த போதிலும், முன்னிருந்த உரையாசிரியர்களின் உரைகளில் பிழைகள் இருக்கக் கூடுமாயினும், இளம்பூரணர், நச்சினுர்க்கினியர், சிவஞான முனிவர் வரிசையில் நிற்கத் தகுந்த இலக்கியப் பணி ஆற்றியிருக்கிருரா என்ற ஐயம் பிறக்கும். இவ்வாறு தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கு அளவிற் கதிகமாக நடைபெற்ற ஆராய்ச்சி உரைகளால் தமிழ் நாட்டின் சரித்திரத்திற்கோ, இலக்கியத்திற்கோ விசேஷ பயன் விளைந்ததாகத் தெரியவில்லை. எனினும் தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரம் நல்ல ஆராய்ச்சிக் குறிப்பாய் விமரிசனப் பண்புடன் அமைந்திருப்பதையே நாம் இங்கு முக்கியமாய்க் கவனிக்க வேண்டும்.

எட்டுத் தொகையில், அகநானூறு, பதிற்றுப் பத்து ஆகியவை தவிர மற்றத் தொகைகளுக்கும் பத்துப் பாட்டுக்கும் பாயிரங்கள் இல்லை. பதிற்றுப் பத்தில்[1]

1. பதிற்றுப் பத்தின் பாடல்களின் பாயிரக் குறிப்புகளைப் பற்றி மு. இராகவய்யங்கார் எழுதுவதாவது;— "இப் பத்துக்கள் ஒவ்வொன்றின் முடிவிலும் பதிகங்களும் வாக்கியங்களும் இந் நூலைத் தொகுத்த புலவரால் அமைக்கப்பட்டுள்ளன. தொகுத்த புலவர் இன்னுரென்று தெரியவில்லையேனும், பழமையுடையவராகவே தோன்றுகிருர். அவர் கூற்ருகவுள்ள பதிகங்களும் வாக்கியங்களும் அவ்வச் சேரனைப் பற்றிய செய்திகள் பலவற்றை அறிவிப்பதோடு, பாடினேர் பெயர் முதலிய வரலாறுகளையும் அப் புலவர் பெற்ற பரிசில்களையும் பாடல் பெற்ற அரசரது ஆட்சி காலங்களையும் நன்கு விளக்குவனவாம்". சேரன் செங்குட்டுவன் (1947) பக்கம் 9. புலவர் பெற்றதாகக் கூறும் பரிசில் விபரங்களை வெறும் புனைந் துரைகளாகவே கொள்ளத் தகுந்தன என்று முன்னர்க் கூறியிருக்கிரேம். மற்ற விபரங்கள் பூராவும் சரித்திர உண்மைகள் என்று கருதுவதற்கில்லை என்று பி. டி. சீனிவாசய்யங்கார், தமது 'தமிழரின் வரலாறு' என்ற ஆங்கில நாலில் கூறியிருக்கிருர். எழுதப் பெற்றவை எல்லாம், அதிலும் விசேஷமாகச் செய்யுளில் எழுதப் பெற்றவை எல்லாம் சரித்திரம் என்று நினைப்பது தவறு.

ஒவ்வொரு பத்துக்குப் பின் ஒரு பாயிரம் இருக்கிறது. இதை எழுதிய புலவர் பாடப் பெற்ற அரசரைப் பற்றிச் சரித்திரப் பான்மையுள்ளதாகத் தோன்றும் சில விபரங்களைக் கொடுத்திருப்பதால் சரித்திர ஆராய்ச்சியாளர் அவைகளைப் பயன்படுத்தி யிருக்கிறார். பாடல்களின் இலக்கியச் சுவை பற்றி இந்தப் பாயிரங்கள் குறிப்பிடவில்லை. அக நானூற்றின் பாயிரமும், பதிற்றுப் பத்தின் பாயிரப் பாடல்கள் போல், நூலுக்குப் பின் வைக்கப் பெற்றிருக்கிறது. இதை எழுதியவர் இடையள நாட்டு மணக் குடியைச் சேர்ந்த பால்வண்ண தேவனான வில்லவதரையன். நெடுந் தொகைக்குக் கருத்து இவர் இந்தப் பாயிரத்தில் எழுதி யிருப்பதாக மிகைபடுத்திச் சொல்லப்பட் டிருந்தபோதிலும், அக நானூற்றுப் பாடல்களை இயற்றிய புலவரின் கவிதைப் பெருமை இதில் போற்றப்பட்டிருக்கிறது.[2] இந்தப் பாயிரம் நூல் தொகுத்த காலத்திற்குப் பின்னாலே எழுதிச் சேர்க்கப் பட்டதாகத் தெரிகிறது.

பாரத வெண்பா பாடிய பெருந் தேவனார் ஐந்து தொகை நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கிறார். பத்துப் பாட்டுக்கு, திருமுருகாற்றுப் படையே கடவுள் வாழ்த்தாக அமைந்திருக்கக் கூடும் என்றும், பின்னால் அதன் நீளத்தையும் சிறப்பையும் நோக்கிப்

---

2. "நின்ற நீதி வென்ற நேமிப்
பழுதில் கொள்கை வழுதியர வைக்கண்
அறிவு வீற்றிருந்த செறிவுடை மனத்து
வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
யருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை
யாய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டு
நெடிய வாகிய யடிநிமிர்ந் தொழுகிய
வின்பப் பகுதியின் பொருட்பாடல்
நானூறு எடுத்து நூல் நவில் புலவர்"

என்று இந்தப் பாயிரம் புலவரின் கவித் திறத்தை ஆர்வத்துடன் செறிந்த வாக்கில் போற்றுகிறது.

பாடற்ருெகுதியுடன் சேர்த்துப் பத்துப் பாட்டு என்று அழைக்கப்பட்டிருக்கலாம் என்றும் சில அறிஞர் ஊகிக்கிருர். இந்த ஊகம் பொருத்தமான தென்று கொள்வதற்கு, பேராசிரியர் தமது தொல்காப்பிய உரையில் இவைகளைக் குறிப்பிடும் போதெல்லாம் 'தொகையும் பாட்டும்' என்கிருரே யொழிய எட்டுத் தொகையும் பாட்டும் என்று குறிப்பிடாததைக் காட்டுகிருர். ஆனல் பேராசிரியருக்கு முன்னிருந்த இளம்பூரணர், தமது தொல்காப்பியப் பொருளதிகார உரையில், பத்துப் பாட்டை ஆசிரியப்பாவுக்கு எல்லை கூறும்போது உதாரணமாகக் காட்டுகிருர். இளம்பூரணரின் இந்த உரையில் தான் பத்துப் பாட்டு என்ற தொடர் முதலாவதாகக் காணப் பெறுகிறது. இளம்பூரணர் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பாதியிலும், பேராசிரியர் அதே நூற்ருண்டின் பிற்பாதியிலும் வாழ்ந்தவர் என்று இடைக்கால ஆராய்ச்சியை விரிக்கும் இந்த நூலின் இரண்டாம் பகுதியில் காட்டப்பெறும். கி. பி. பதினன்காம் நூற்ருண்டில் இருந்த மயிலை நாதர், தமது நன்னூல் உரையில் 'எண் பெருந் தொகையும்' என்று கூறிப் பத்துப் பாட்டையும் குறிப்பிடுகிருர். ஆகையால் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு என்ற பாகுபாடு தொல்காப்பிய உரையாசிரியர் காலத்திற்கு முன்பே வழக்கிலிருந்தது. இப்போதுள்ள அமைப்பில் எட்டுத் தொகை பத்துப் பாட்டு முழுவதையுமே, பாரத வெண்பா பாடிய பெருந் தேவனரே முடிவாக ஒழுங்கு படுத்தி யிருக்க வேண்டும் என்று கருத இடமிருக்கிறது.

இவ்வாறு கருதுவது தவறு என்றும், தொகை நூல்களில் அக நானூறு, கலித் தொகை, குறுந் தொகை, ஐங்குறு நூறு ஆகியவைகளை முறையே மதுரை உப்பூரி குடிகிழார் மகனை உருத்திரசன்மனும், நல்லந்து

வனரும், பூரிக்கோவும், புலத்துறை முற்றிய கூடலூர் கிழாரும் தொகுத்ததாகவும், நற்றிணையை பன்னுடு தந்த பாண்டியன் மாறனும், ஐங்குறு நூற்றை யானைக் கட்சேய்மாந்தரஞ் சேரலிரும் பொறையார் தொகுப் பித்ததாகவும், குறிப்புக்கள் இருக்கின்றன என்றும், ஆகையால் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டில் இருந்த பெருந் தேவனர் தொகை நூல்களைத் தொகுத்தார் என்று சொல்வது பொருந்தாது என்றும் ஒரு அறிஞர் கூறுகிருர்.[1] மேலே கூறப் பெற்ற பெயர்களைப் பற்றிய குறிப்புக்கள் இருக்கின்றன என்பது உண்மைதான்; ஆனல் அவர்கள் காலத்தில் அத் தொகை நூல்கள் முழுவதும் முடிவாகத் தொகுக்கப் பெற்றன என்று கொள்வதற்கு ஆதாரங்கள் இல்லை. தொகை நூல் களைப் பாரத வெண்பாப் பாடிய பெருந் தேவனர் முதன் முதலாகத் தொகுத்தார் என்று கூறினல் அது தவருகும். இத் தொகை நூல்கள் சம்பந்தமாக, அவைகளை அவர் முடிவாக ஒழுங்குபடுத்தினர் என்று கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. தொகை நூல்களில் இப்போதுள்ள எல்லாப் பாடல்களும் ஒரே காலத்தில் தொகுக்கப் பெற்றிருக்க முடியாது. தொகுத்தல் வேலை தொடங் கியது பெருந் தேவனருக்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்பு தான் என்பதில் சந்தேகம் இல்லை. அக் காலத் தில் தொகுத்தல் வேலை பூர்த்தியாகவில்லை; தொடர்ந்து நடந்து கொண்டே வந்திருக்க வேண்டும். சில காலத் தில் நின்றிருக்கவும் கூடும். முடிவான அமைப்பு இத் தொகை நூல்களுக்கு கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டில் பெருந் தேவனரால் கொடுக்கப் பெற்றது.[2] அதற்கு

1. இலக்கிய தீபம். —எஸ். வையாபுரிப் பிள்ளை: பக்கம் 99.

2. "இப் பெருந் தேவனர் (பாரத வெண்பா ஒன்பதாம் நூற்ருண்டில் பாடியவர்) எட்டுத் தொகையின் தொகுப்பாளர் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். களப்பிரர் குழப்பத்தால்

முன் முடிவாகத் தொகுக்கப் பெற்றிருந்த தொகை நூல்களுக்குப் பெருந் தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடிச் சேர்க்க வேண்டிய அவசியம் இல்லை. தவிரவும் சரித்திர விபரங்களை அதிகமாகக் கொண்ட தாகக் கருதப் பெறும் புறநானூறு, பதிற்றுப் பத்து ஆகியவைகளையும் பரிபாடலையும், தொகுத்தார் யார், தொகுப்பித்தார் யார் என்பவைகளைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய தொகைகளிலுள்ள சிலபாடல்களே கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றுண்டு வரையிலுள்ள காலத்தில் பாடப் பெற்றிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர் பலரின் துணிபு. ஆகையால் இப்போது கிடைத்திருக்கும் பண்டைக் காலத்தமிழ் இலக்கியம் எல்லாம் கவனிப்பாரின்றி அங்கு

---

பாண்டிய அரசு திடீரென விழ்ந்ததாக வேள்விக்குடிப் பட்டயம் பகர்கிறது. அதனுல் அதற்கு முன்னரே சங்கம் முற்றுப் பெற்ற தாகக் கூற முடியாது. அது திடீரென்று நின்று விட்டதாதல் வேண்டும். பின்னர் வந்த பாண்டியர் எவரும் அதைப் பற்றிக் கவலை கொண்டதாகவும் தெரியவில்லை. பல நூல்கள் அழியக் காரணம் களப்பிரர் குழப்பம், முதல் இடைக்காலப் பல்லவரின் குழப்பமான அரசாட்சி, பல நாட்டார் செய்த போர்கள், திகம்பர சமணர் புத்தர் இவர்தம் இடையீடு இன்ன பிறவற்ருல் பழந் தமிழ்ச் செய்யுட்கள் அழிந்தொழிந்தன. ஓரளவு அமைதியும், பல்லவர் பாண்டியர் நட்பும் உண்டான நந்தி வர்மன் இறுதிக் காலத்தில் கிடைத்த பழைய பாடல்களைப் பெருந் தேவனர் முறைப் படுத்திச் சேர்த்திருத்தல் கூடியதே என்க. மூன்ரும் நந்தி வர்மன் 'பைந்தமிழை ஆய்ந்த நந்தி' ஆதலாலும், பாண்டிய நாடு தன் உறவு கொண்டமையாலும் இந்நன் முயற்சியில் ஈடுபடுமாறு தன் அவைப் புலவரை வேண்டியிருக்கலாம். அவரும் அதற்கு உடன் பட்டுப் பாக்களைத் தொகுத்துக் கடவுள் வாழ்த்துக் கூறி முடித்திருக்கலாம் என்று வரலாற்று ஆசிரியர் சிலர் எண்ணுதல் ஆராய்ச்சிக்குரியதே ஆகும்''. பல்லவர் வரலாறு. —ராசமாணிக்கனர் பக்கம் 328.

இதே கருத்தை 1917-ல் பிரசுரித்த 'பண்டைக் கால தக்கணம்' (Ancient Dekhan) என்ற நூலில் திரு. கே. வி. சுப்பிரமணிய அய்யர் தெளிவாகக் கூறியிருக்கிருர் (பக்கம் 94-95)

மிங்கும் பல ஊர்களில் சிதறிக் கிடந்திருக்க வேண்டும் என்றும், அவைகளை முறையாகக் கணக்கிட்டு ஒழுங்கு படுத்தி முடிவாக அமைத்துப் பாதுகாக்கப்பட்டது கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டில் நடைபெற்றிருக்க வேண்டும் என்றும், இந்த அரும் பணியில் பாரத வெண்பாப் பாடிய பெருந் தேவனரும், அவர் காலத்தி லிருந்த புலமை சான்ற பெருந்தகையாரும் ஈடுபட் டிருக்க வேண்டும் என்றும் ஊகிப்பதில் தவறு ஒன்றும் இல்லை. இப்படிக் கொள்வதற்குச் சில சான்றுகளும் இல்லாமல் இல்லை. இந்த உண்மையைத் தெரிந்து கொண்டால் தமிழ் இலக்கிய சரித்திரத்திலுள்ள சில சிக்கல்கள் தீரும் என்று மூன்ரும் பாகத்தில் காட்டப் பெறும்.

சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய பழைய காப்பி யங்களின் பதிகங்களும் மிகவும் முக்கியமானவை. இவை களை யார், எக் காலத்தில் எழுதினர் என்று தெரியவில்லை. இப் பதிகங்களை நூலாசிரியரே பாடியிருப்பதாகச் சிலப் பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கருதுகிருர். இந்தக் கருத்தை ஏற்றுக்கொண்டு மு. இராகவய்யங்கார் எழுதுவதாவது:— "சாத்தனர் தாம் பாடிய மணி மேகலையை இளங்கோவடிகளைத் தலைமையாகக்கொண்ட அவைக் கண்ணே அரங்கேற்றினர் என்பதும், அடி களும் சிலப்பதிகாரத்தைச் சாத்தனர் முன்பு அரங் கேற்றின ரென்பதும், அவ்விருவரும் பாடிய பதிகங் களால் வெளியாகின்றன."[1] ஒரு புலவர் தாம் எழுதிய ஒரு நூலை மற்ருெரு புலவருக்குப் படித்துக் காட்டும் முறையை அரங்கேற்றல் என்பது மிகுத்துக் கூறுவ தாகும். இவ்வாறு படித்துக் காட்டும்போது ஒரு அவை கூட்டப் பெற்றதாகவோ, அல்லது தற்செயலாக

1. சேரன் செங்குட்டுவன். —மு. இராகவய்யங்கார் (1947) பக்கம் 124.

அமைந்ததாகவோ பதிகங்கள் கூறவில்லை. பதிகங்களையும் நூலாசிரியரே பாடினர் என்ற முடிவு இக்காலத்தில் ஏற்றுக்கொள்ளத் தக்கதில்லை. அதற்குக் காரணங்களைக் கீழே விளக்குவோம்.

நூலாசிரியர் ஒருவர், தாம் எழுதிய நூலுக்குத் தாமே பாயிரம் அல்லது பதிகம் எழுதும் வழக்கம் பண்டைக் காலத்தில் இல்லை. அவ்வாறு எழுதுவது முறையல்ல என்று புலவர் கொண்டதை நன்னூல் எடுத்தாளும் அடியிற்கண்ட சூத்திரம் காட்டுகிறது.

"தோன்ரு தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்தல் தகுதியன்றே."

—நன்னூல். பாயிரம் 51

இந்த சூத்திரம் மிகப் பழையது. இது ஆசிரியர் பனம்பாரனரால் ஆக்கப் பெற்றது என்றும் பனம்பாரம் என்ற இலக்கணத்திலுள்ளது என்றும் மயிலைநாதர் சுட்டிக்காட்டுகிருர். இதற்குச் சில விலக்குகளும் கூறப் பட்டிருக்கின்றன. இருந்தபோதிலும். "நூல் செய்தான் பாயிரம் செய்வானலல்லன்" என்கிருர் இளம்பூரணர். இந்தக் கொள்கையை நச்சினர்க்கினியரும் மற்ற உரையாசிரியரும் குறிப்பிட்டிருக்கிருர்[2] ஆகை

2. நூலாசிரியர் தாங்களே சிறப்புப் பாயிரம் எழுதக்கூடாது என்ற கொள்கை வலியுற்றிருந்த போதிலும் சில நூலாசிரியர், தற்சிறப்புப் பாயிரம் என்று தாமே பாயிரம் எழுதும் வழக்கமும் இருந்ததாகத் தெரிகிறது. பிரயோக விவேக நூலாசிரியர் "சம்பந்தர், சடகோபர் முதலாயினரும் திவாகரரும் பதினெண் கீழ்க்கணக்கு செய்தாரும் முன்னுக, பின்னுக பதிகங் கூறுவது காண்க" என்று எடுத்துக் காட்டியிருக்கிருர். ஆனல் இது பிற்கால வழக்கு. கீழ்க் கணக்கு நூல்களிலுள்ள பாடல்களைப் பதிகங்கள் என்று கூறுவது மிகுத்துக் கூறுவதாகும். அவைகளில் மிகச் சிறந்தான திருக்குறளுக்கும் நாலடியாருக்கும் பதிகங்கள் இல்லை. சேந்தன் திவாகரத்தில் இடையிடையே யுள்ள பாடல்கள் அவரே இயற்றினர் என்று சொல்வதற்கில்லை. ஆனல் சமயத் தலைவர்களான சம்பந்தரும் சடகோபரும், தங்கள் பதிகங்களில் சாற்றுப்

யால் தெளிந்த ஒரு பழைய மரபிற்கு எதிராக இளங்கோ வடிகளும் கூலவாணிகன் சாத்தனரும், தங்கள் நூல் களுக்குத் தாங்களே பதிகங்களை எழுதிக்கொண்டார்கள் என்று கொள்வது பொருத்தமில்லை. மேலும் பதிகங் களின் வாசகங்களைப் பார்த்தாலும் அவை நூலாசிரிய ரல்லாத பிறரால் எழுதப்பெற்றிருக்க வேண்டும் என்ற முடிவு வலியுறுகிறது. சிலப்பதிகாரப் பதிகத்தின் முடிவில்,

"இவ் வாறைந்தும்
உரையிடை யிட்டபாட் டுடைச்செய்யு
ளுரை சாலடிகளருள மதுரைக்
கூலவாணிகன் சாத்தன் கேட்டனன்

—பதிகம் 86-89

என்று படர்க்கை நிலையில் கூறப்பட்டுள்ளது. இளங் கோவடிகள் இவ்வாறு தம்மையே படர்க்கையில் குறிப் பிட்டெழுதியிருப்பார் என்று கருதுவது சரியில்லை. தம்மைப்பற்றி ஒருவர் படர்க்கையில் வரைவது உலகிய லுக்கு முரணானது. அதேபோல் மணிமேகலைப் பதி கத்தின் இறுதியில்,

"இளங்கோ வேந்தனருளிக் கேட்ப
வளங் கெழுகூல வாணிகன் சாத்தன்
மாவண்டமிழ்த்திற மணிமேகலை துற
வாறைம் பாட்டினுள றிய வைத்தனனென்"

—பதிகம் 95-98

என்றும் அடிகள் வருகின்றன. இவ்விரண்டு பதிகங் களின் நீளத்தையும், தன்மைகளையும் சிந்தித்துப் பார்த் தால் அவை வேறொரு புலவரால் எழுதப்பெற்றிருக்க

பாடல்கள், தங்கள் பெருமையைக் கூறி அமைத்திருப்பதாகத் தான் பொதுவாகக் கருதப் பெறுகிறது. இது எம்மட்டிற்கும் உண்மை என்பது இப்போது தெரிய மார்க்கமில்லை.

வேண்டும் என்று கொள்வதுதான் பொருத்தமாயிருக்கும். இவ்விரு பதிகங்களையும் எழுதியவர் நூலாசிரியர் காலத்தவரோ என்பதுகூடத் தெளிவாயில்லை. நூல்கள் தோன்றின காலத்திற்குப் பின்னும் அடியார்க்கு நல்லார் காலத்திற்கு முன்னும் யாரோ ஒரு புலவர் காப்பியங்களிலுள்ள கதைகளையும் கருத்துக்களையும் குறிப்புக்களையும் வைத்து, அவைகளுக்கு இவ்விரண்டு பதிகங்களையும் வேறு சில கட்டுரைகளையும் எழுதி இடையிடையே சேர்த்திருக்கிருர் என்று கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.[1] பதிற்றுப்பத்துப் பாடல்களுக்குப் பாயிரங்கள் இருக்கும் முறையிலேயே இந்நூல்களில் பதிகங்களும் இடைக்கட்டுரைகளும் அமைந்திருக்கின்றன. தவிரவும் பிரயோக விவேக நூலார் மிகவும் நுட்பமாகத் தாங்களே பதிகங்களை முன்னும் பின்னும் கூறிக்கொண்டதாகக் கொடுத்திருக்கும் புலவர் பெயர்களில் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆசிரியரின் பெயர்கள் இல்லை என்பதும் கவனிக்கத்தக்கது. சில கீழ்க்கணக்கு நூல்களின் ஆசிரியர் தாங்களே பாயிரங்கள் எழுதிக்கொண்டார் என்று கூறியவர், அவர் காலத்தில் தமிழ்ப் புலவர் குழாத்தில் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆசிரியர், தங்கள் நூல்களுக்குத் தாங்களே பதிகங்கள் எழுதிஞர் என்ற கருத்து நிலவியிருந்தால், அதைக் குறிப்பிடாமல் இருக்கமாட்டார். இந்த விஷயம் ஆராய்ச்சியாளரின் சிந்தனைக்குரியது.

---

1. The poem (Silappadikaram), as we now have it is interspersed with a number of prologues and epilogues, apparently by later hands than those of the author. It has already been pointed out that one of the prologues contradicts the statements in third canto (page 380). History of the Tamils by P. T. Srinivasa Iyengar: page 596.

இவ்விரு பதிகங்களும் அளவுக்கு அதிகமாகவே நீளமாக அமைந்திருக்கின்றன. நூல்கள் எழுதப் பெற்ற சூழ்நிலையைப்பற்றியுள்ள கதைகளும், அவை களின் தன்மையும் கதைகளின் சுருக்கமும், நூல்களின் பிரிவுகளாயுள்ள காதைகளின் தலைப்புப் பெயர்களும் அவைகளில் காணப்பெறுகின்றன. ஐம்பெருங்காப்பி யங்கள் என்று பிற்காலத்தார் வகுத்துக்கொண்ட தொகு தியில் மிகச் சிறந்தவை சிலப்பதிகாரமும் மணிமேகலை யும். இவை ஆக்கப்பெற்ற சூழ்நிலையைப்பற்றி அவை களின் பதிகங்களில் காணப்பெறும் விபரங்கள் முழு வதும் சரித்திரப் பாங்குடையனவா என்பது ஆராய்ச்சிக் குரிய விஷயம். அவைகளில் சில ஆபூத தன்மைபெற்ற அற்புதங்களாயிருப்பதால் நம்பத்தகுந்ததில்லை என் பதும், நூல்கள், புராணத்தன்மை பெற்று, புலவரின் கற்பனையில் விளைந்த அருமையான காப்பியங்கள் என்பதும், அவை சரித்திர சம்பவங்களைக் கூறவில்லை என்பதும், சுமார் கி. பி. ஆறும் நூற்றாண்டுக்குப்பின்னர் இயற்றப்பெற்றிருக்க வேண்டும் என்பதும் தற்கால அறிஞர் பலரின் துணிபு. [1] இந்தக் கருத்துக்குப் போதிய சான்றுகள் இருந்தால், சிலப்பதிகாரமும் மணிமேகலை யும், இதுவரை தமிழ்ப்புலவர் பலர் கருதி வந்தபடி, கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த கடைச்சங்க கால நூல்கள் அல்ல என்று ஏற்படும். ஆனால் வெகு காலமாகவே பிற்காலப் புலவரால் இவை சங்க காலத்து நூல்களாகவே கருதப்பெற்று வந்திருக்கின்றன. இந்த மரபிலிருந்து கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பின் னரும் சில நூற்றாண்டுகள்வரை தோன்றிய நூல்களும்

---

1. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களின் காலம், சரித்திரத்தன்மை முதலியவை, தற்கால ஆராய்ச்சி உரைக்கப் பெறும் மூன்றும் பாகத்தில் ஆராயப்பெறும்.

சங்க காலத்தைச் சேர்ந்தனவாக முன்னோர் கொண்டார் என்று தெரிகிறது. உதாரணமாக பதினெண் கீழ்க் கணக்கு நூல்களைக் கூறலாம். கடைச்சங்கம் என்று ஒன்று இருந்ததாகக்கொண்டு, அது கி. பி. இரண்டு அல்லது மூன்றும் நூற்றுண்டில் முடிந்தது என்றும் கொண்டு, சில நூல்களைச் சங்க காலத்தவை என்று கருதி, அக்காரணத்தினுல் அவை கி. பி. மூன்றும் நூற் ருண்டுக்கு முந்தியவை என்று சொல்லும் கூற்று வலி யற்றது. கடைச்சங்கம் இயங்கியிருந்தால், அது கி. பி. இரண்டு அல்லது மூன்றும் நூற்றுண்டில், முற்றிலும் எவ்வாற்ருனும் தொடர்ந்து இயங்க முடியாத அளவில் அழிந்துவிட்டது என்று பண்டைத்தமிழர் நினைக்க வில்லை. இக்காலத்து அறிஞர் சிலர் அவ்வாறு நினைப் பதற்கும் போதிய சான்றுகள் இல்லை. தற்காலத் தமிழ் ஆராய்ச்சியை விளக்கும் மூன்றும் பாகத்தில் இந்த விஷயமும் இதைத் தழுவிய பல ஐயப்பாடுகளும் விரிவாய் ஆராயப்படும்.

இனி பண்டைத்தமிழ் இலக்கியத்தின் மணிமுடி யாய் விளங்கும் திருக்குறளின் பாயிரத்தைக் கவனிக்க வேண்டும். இதன் பாயிரம், ஏனைய நூல்களின் பாயிரங் களைப்போல அதன் தன்மை, ஆசிரியர் பெயர் காலம் முதலியவைகளைப்பற்றி ஒன்றும் கூருமல். நூலின் பொருளின் பொதுப்பகுதியாக அமைந்திருக்கிறது. கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை. அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அத்தியாயங்களைக் கொண்ட இந்தப் பகுதியை முன்னோர் பாயிரம் என்று கூறியிருந்தபோதிலும் அதில் சாதாரணமான பாயிரத் தின் தன்மைகள் பெரும்பாலும் இல்லை. பாயிரமானது நூலை விளங்கவைக்க வேண்டுமென்ற கருத்தை நச்சினுர்க்கினியர், தமது தொல்காப்பிய உரையில் கூறி அதற்கு மேற்கோளாக,

"பருப் பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண் பொருட்டாகிய நூல்இனிது விளங்கும்"

என்று இறையனுர் அகப்பொருள் உரையில் வரும் ஒரு மேற்கோளை எடுத்துக் காட்டுகிருர். இளம்பூரணர் "பாயிரத்திலக்கணம் பகருங்காலை, நூனுதல் பொருளைத் தன்னகத்தடக்கி, ஆசிரியத்தானும் வெண்பாவானும் மருவிய வகையானுவரல் வேண்டும்" என்று வேருெரு சூத்திரத்தை மேற்கோளாகக் காட்டி விளக்குகிருர். ஒரு நூலுக்குப் பாயிரம் என்று ஒன்று தனியாக இல்லா விட்டால் நூற்பொருளின் முதல் சூத்திரங்களையோ அவை விரிக்கும் பொருளையோ பாயிரமாகக் கொள்ள லாம் என்று பேராசிரியர் எழுதியிருப்பது பண்டைத் தமிழ்ப் புலவரின் மரபைத் தெரிந்துகொள்ளத் துணையா யிருக்கிறது. மேலே காட்டப்பெற்ற கொள்கைகளின் படி திருக்குறளின் பாயிரம் அதற்குரிய இலக்கணத் துடன் இருக்கிறது என்று கொள்ளலாம்[1]

இந்தப் பாயிரத்திலுள்ள முதல் மூன்று அதிகாரங் களும் பிற்காலப் புலவர் ஒருவரால் எழுதிச் சேர்த்த இடைச்செருகல் என்பது நாட்டன்பிலும் தமிழ்ப்புலமை யிலும் சிறந்த அறிஞர் வ. உ. சிதம்பரம்பிள்ளையின் துணிபு. இந்த முடிவுக்கு அவர் கூறும் காரணங் களாவன:—

திருக்குறட் சுவடிகளில் பாயிரத்தில் முதல் மூன்று அதிகாரங்களாகக் காணப்படும் 'கடவுள் வாழ்த்து' 'வான் சிறப்பு' 'நீத்தார் பெருமை' என்னும் மூன்று அதிகாரப் பாக்களும் திருவள்ளுவரால் இயற்றப்பட் டவை யல்லவென்றும், அவை திருவள்ளுவர் காலத்

---

1. *திருக்குறளின் பாயிரமும், பாயிரத்தின் லட்சணங்களை யுடையது என்று ஒரு விரிவான கட்டுரையை செந்தமிழின் பத்தி ராதிபராயிருந்த திரு. நாராயணய்யங்கார் எழுதியிருக்கிருர். —செந்தமிழ் தொகுதி* 10 *பகுதி* 11. *பக்கம்* 469—476.

திற்குப் பிற்காலமும், முந்திய உரையாசிரியர் காலத்திற்கு முற்காலமுமாகிய இடைக்காலத்துப் புலவர் ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டவையென்றும் யான் கருதுகிறேன். அவ்வாறு யான் கருதுவதற்குரிய காரணங்களிற் சில 1 இம்மூன்று அதிகாரங்களிலும் காணப்படும் பாக்கள் நூலின் பாக்களைப்போலச் சொற்செறிவும் பொருட்செறிவும் உடையன அல்ல. 2 இப்பாக்களிற் பலவற்றின் பொருள்கள் பல தடைகளுக்கு இடம் கொடுக்கின்றன. 3 'மெய்யுணர்தல்' 'துறவு' என்னும் அதிகாரங்கள் நூலின்கண் இருக்கின்றமையால் 'கடவுள் வாழ்த்து' 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரங்களைப் பாயிரத்தில் கூறவேண்டுவதில்லை. 4. மெய்யுணர்தலில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங்களையும் 'கடவுள் வாழ்த்தி'ல் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டு அதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என்பது நன்கு விளங்கும். அவ்வாறே 'துற'வின் பாக்களையும் 'நீத்தார் பெருமை'யின் பாக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவ்விரண்டு அதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என்பது நன்ருக விளங்கும். மழையைச் 'சிறப்பிற்றணிப் பாருமில்லை வறப்பிற்றருவாருமில்'லாகையால் "வான்சிறப்பை"க் கூறுதலால் பயன் ஒன்றும் இல்லை.[1]

மேலே கூறப்பெற்றிருக்கும் கருத்துக்களும் வாதங்களும் நுண்ணியவை. அவைகளை ஆராய்ந்தால் விரியும். திருக்குறளின் பிற அதிகாரங்களையும் ஊன்றிப் பார்த்தால் சில முரண்பாடுகள் தோன்றும். ஆனல் அவை உண்மையில் முரண்பாடுகள் அல்ல. அவைகளின் கருத்தை ஒற்றுமைப்படுத்தித் தெரிந்துகொள்ள

1. திருவள்ளுவநாயனர் திருக்குறள் —வ.உ. சிதம்பரம்பிள்ளை விருத்தியுரை அறப்பால் (1935) உரைப்பாயிரம் பக்கம் 2-3,

வேண்டியது வாசகர் கடமை. வாழ்க்கையைச்சார்ந்த பொருள்களை எல்லாம் பல இயல்புகளாக்கி, ஒவ்வொன்றுக்கும் தனிச் சிறப்பேற்றித் தனி அதிகாரங்களாக்கி, பத்து குறட்பாக்களைத் திருவள்ளுவர் பாடியிருப்பதால், தத்துவ ரீதியாகவும் தர்க்க ரீதியாகவும் இப்பாக்களைப் படித்தால் சில முரண்பாடுகள் தென்படும். இதைக் கருதியே நமது முன்னோர், ஒரு பொருளுக்குத் தனி யேற்றம கொடுத்து அதையே சிறப்பித்துக்கூறும் முறையைக் குறளதிகார முறை என்று அழகாகக் கூறி யிருக்கிறார். தவிரவும் குறட்பாக்களில் பெரும்பாலானவை கவிதை என்பதையும் கற்பனைப் பொலிவுடன் எழுதப்பெற்ற திட்பமான வாசகம் என்பதையும் நாம் மறக்கக்கூடாது. பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களும் சொற்செறிவிலும் பொருட்செறிவிலும் ஏனைய அதிகாரங்களைவிடக் குறைந்து விளங்குகின்றன என்பதைத் தமிழ் அறிஞர் ஏற்றுக்கொள்ளத் தயங்குவர். மழையின் சிறப்பைப் போற்றுதலால் பயன் ஒன்றும் இல்லை என்னும் கருத்து விந்தையானது. உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதன காற்றும் நீரும்; இயற்கையன்னை உலகத்திற்கும் மனித குலத்திற்கும் அளித்த வரப்பிரசாதங்கள் இவை. ஆகையால் புலவர் இவைகளைப் பாடுவதில் பொருத்தம் இருக்கிறது. அதனால் தான் சிலப்பதிகார ஆசிரியர் தமது நூலின் முதற் பாடலில் "மாமழைபோற்றுதும், மாமழை போற்றுதும்" என்று பயனுறப்பாடி யிருக்கிறார். ஆகையால் திருக்குறளின் பாயிரத்தைச்சேர்ந்த முதல் மூன்று அதிகாரங்களை இடைச்செருகல் என்று துணியமுடியாது.

## விமரிச ரத்தினமாலை

தமிழிலுள்ள வேறு எந்தப் பழைய நூலுக்கும் இல்லாத பெருமையும் வாய்ப்பும் திருக்குறளுக்குக் கிட்டியிருக்கின்றன. பண்டைத்தமிழ்ப் புலவரில், மிகச் சிறந்தவருள்பட பலர் திருக்குறளின் இலக்கிய நயங்களைப்போற்றிப் பாடல்கள் இயற்றித் திருவள்ளுவருக்குக் காணிக்கை வைத்தார். இப்பாடல்கள் எல்லாம் திருவள்ளுவமாலை என்ற பெயரில் தொகுக்கப் பெற்றுப் பயிலப்பெற்று வருகின்றன. இந்த அரிய மாலை திருக்குறள் பதிப்புக்களில் சேர்த்து அச்சிடப் பெற்று வருகிறது. இந்த மாலையிலுள்ள ஒவ்வொரு பாடலைப்பாடிய புலவரும், கவிதைப் பண்புடனும் கருத்துச் செறிவுடனும் திருக்குறளின் பெருமையைத் தரமறிந்து தங்களுடைய பாட்டில் புகழ்ந்திருப்பது தான் நமது கவனத்திற்குரிய விஷயம். பண்டைத்தமிழ் இலக்கியத்தில் காணப்பெறும் ஒரே விமரிசன ரத்தின மாலைதான் திருவள்ளுவ மாலை. ஆகையால் இதைத் தெளிவாய் ஆராயவேண்டும்.

திருவள்ளுவ மாலையிலுள்ள வெண்பாக்களை எழுதிய புலவரில், ஒரிருவரைத் தவிர மற்றவரெல்லாம் சங்க காலத்தைச்சேர்ந்தவர். இவரில், பெரும் பாலோர் திருவள்ளுவரின் காலத்திலே வாழ்ந்தவர். இருந்தபோதிலும் எல்லாப் புலவரும் ஒரே காலத்திலிருந்து இப்பாடல்களை எழுதினதாகக் கருதமுடியாது. இப்பாட்டுக்கள் எல்லாம் வெவ்வேறு சமயங்களிலும்

காலங்களிலும் எழுதப்பெற்றிருக்கின்றன. திருக்குற ளுக்குச் சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் யாரோ ஒரு புலவர் இவைகளைத் தொகுத்துத் திருவள்ளுவமாலையை உருவாக்கினார்.

இவ்வாறு திருவள்ளுவ மாலை உருவாக்கப்பெற்றது சுமார் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இருக்கலாம் என்று சில அறிஞர் கருதுகிறார். ஏனென்றால் திருவள்ளுவ மாலையில் கவிசாகரப் பெருந் தேவனார், குலபதி நாயனார் என்ற இரு புலவரின் பாடல்களும் காணப் பெறு கின்றன. பாரதம் பாடிய பெருந் தேவனார் என்ற சங்க காலப் புலவரைத் தவிர, கவிசாகரப் பெருந் தேவனார் என்ற ஒரு புலவரின் பெயரும் காணப் பெறு கிறது. இவர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து அருந் தமிழ்ப்பணி ஆற்றிய பாரத வெண்பா பாடிய பெருந் தேவனார் என்று தோன்றுகிறது. குலபதி நாயனார் யார் என்று தெரியவில்லை. அறுபத்து மூன்று நாயன்மார்களில் குலச்சிறை நாயனார் என்று ஒருவர் இருந்தார்; திருஞானசம்பந்தரின் முயற்சியால் சமணத் தைக் கைவிட்டு சைவத்தைத் தழுவிய கூன்பாண்டி யனின் மந்திரி இவர். ஞான சம்பந்தரை மதுரைக் கழைத்த பெருமை இவருக்குரியது. இவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். குலபதி நாயனார் என்பவர் இந்தக் குலச்சிறை நாயனாராக இருக்கலாமோ என்று ஐயம் பிறக்கிறது. அவர் திருக்குறளின் பெருமையைப் பற்றி ஏன் பாடியிருக்கக் கூடாது? இது ஒரு வெறும் ஊகம் தான். இதன் உண்மை எவ்வாறாக இருந்த போதிலும் திருவள்ளுவமாலை முடிவாக ஒன்பதாம் நூற்றாண்டிலோ அதற்குச் சற்றுப் பின்னரோ தொகுக் கப் பெற்றிருக்க வேண்டும். பண்டைக் காலத் தமிழ் இலக்கியம், இந்த நூற்றாண்டில் முடிவாகத் தொகுத்து ஒழுங்குபடுத்தப் பெற்றது என்று முன்னர்க் கூறியிருக்

கிறேம். இந்த முயற்சியைத் தழுவியே திருவள்ளுவ மாலையும் தொகுக்கப் பெற்றிருக்கலாம்.

திருவள்ளுவ மாலையின் முக்யத்வத்தையும் இலக்கிய நயங்களையும் உணராமல் சிலர் அதைப் பற்றிக் குறைவாகவே மதித்து எழுதியிருக்கிருர். திருவள்ளுவ மாலை முழுவதும் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டிலிருந்த ஒரு கவியின் சிருஷ்டனையாயிருக்கலாம் என்கிருர் ஒரு அறிஞர்.[1] அடிக் குறிப்பில் காணும் செய்யுள் ஔவையார் செய்ததாகக் கருதப் பெறும் நல்வழியின் இறுதிப் பாட்டு. இந்த ஔவையார் பிற்காலத்தவர் என்பதில் சந்தேகம் இல்லை. திருவள்ளுவருக்கு ஔவையார் என்ற ஒரு சகோதரி இருந்தார் என்றும், அவரும் கவிபாடக் கூடியவர் என்றும் வழங்கி வரும் பழைய கதை நம்பக் கூடியதாயிருப்பினும், இந்தப் பாட்டை எழுதிய ஔவையார் திருவள்ளுவரின் சகோதரி இல்லை. மேலும் திருவள்ளுவரும் மாணிக்க வாசகரும் ஒரு காலத்தவர் என்று இப் பாட்டுக்குப்

---

1. "The subjoined eulogistic verse, usually attributed to Avvai, the renowned sister of Tiruvalluvar is enough to discredit the truth and antiquity of the Tiruvalluvamalai:

"தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசக மென்றுணர்

This stanza makes Tiruvalluvar, a contemporary of Manickavachakar; what we are inclined to think is that Tiruvalluvamalai or the 'garland of Tiruvalluvar', like every other account relating to this famous moralist is a strange mixture of doubtful legends, traditions and absurd fictions, written by some later Dravidian author of the ninth century to popularise the celebrated work of Tiruvalluvar" —Tamil Studies M. Srinivasa Iyengar Page 249.

பொருள் ஆகாது. 'ஒரு வாசகம்' என்பதற்கு ஒத்த பெருமையுடைய வாசகம் என்று பொருள்.

திருக்குறள் கடைச் சங்கத்தில் அரங்கேற்றப்பட்டதாக வழங்கி வரும் கதைகளில் சிறிதளவேனும் உண்மையிருந்தால், அக்காலத்து வழக்கத்திற்கொப்ப அவை குறிப்பிடப் பெற்ற ஒரு பாயிரம் இருக்கும் என்பதும், அப்படிக் கூறும் ஒருவிதப் பாயிரக் குறிப்பும் இல்லாததால் அரங்கேற்றல் கதைகளில் உண்மை இல்லை என்பதும் சில அறிஞரின் துணிபு. திருவள்ளுவ மாலையிலுள்ள பாட்டுக்களும் திருக்குறளின் மாண்பையும் நயங்களையும் எடுத்தோதிப் புகழ்கின்றனவே யொழிய அந்நூல் அரங்கேற்றப் பெற்றதாக வழங்கும் கதைகளைக் கூறவில்லை. அசரீரி, நாமகள், இறையனர் சொன்னதாக இருக்கும் மூன்று வெண்பாக்களையும் பெயர்கள் தெரியாத மூன்று புலவர் எழுதினதாகக் கொள்ளலாம். மற்றப் பாட்டுக்களில் கீரந்தையார் எழுதியதாக இருக்கும் ஒரே பாட்டில் தான் "வை வைத்த கூர்வேல் வழுதி மனமகிழ" என்ற வாசகம் காணப் பெறுகிறது. இதிலிருந்து அரங்கேற்றல் முறையாக நடந்தது என்று வருவித்துக் கொள்ள முடியாது. ஒரு பாண்டியன் திருக்குறளைக் கேட்டு மகிழ்ந்தான் என்பது தான் இதன் பொருள். மற்றக் கதைகளைப் பற்றித் திருவள்ளுவ மாலையில் ஒருவித பிரஸ்தாபமும் இல்லை. திருவள்ளுவ மாலையின் முதல் செய்யுளைச் சிவபெருமானே ஆக்கியதாகவுள்ள ஒரு பழைய கதையைக் கல்லாடத்திலுள்ள ஒரு பாட்டு கூறுகிறது. அது வருமாறு:

*"சமயக் கணக்கர் மதிவழி கூறா*
*துலகியல் கூறிப் பொருளிது வென்ற*
*வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்*
*முதற் கவி பாடிய முக்கட் பெருமான்."*

—*கல்லாடம்*-14

இந்தப் பாட்டில் தான் முதன் முதலாகத் திருக்குறள் புலவரவையில் அரங்கேற்றம் செய்ததைப் பற்றிப் பிரஸ்தாபம் இருக்கிறது. ஆனால் சிவபெருமானை இறையனார் என்று கொண்டால், அவருடைய பாட்டு திருவள்ளுவ மாலையில் முதலாவதாக இல்லாமல் மூன்றா வதாகத் தான் இருக்கிறது. இந்தக் கதைகள் எல்லாம் சரித்திர சம்பந்தமானவை என்று கொள்வது பொருத்த மில்லை. அவைகளின் உட் பொருளையே நாம் பார்க்க வேண்டும். கல்லாடத்தை எழுதிய புலவர் காலத்தில் (அதாவது கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில்) திரு வள்ளுவ மாலையும் அது போற்றும் திருவள்ளுவரின் திருக்குறளும் புலவராலும் மக்களாலும் பெரிதும் போற்றப் பெற்று வந்தன என்று தெரிகிறது. அந்த நூற்றாண்டில் தான் திருக்குறளுக்குப் பல உரைகள் எழுதப் பெற்றன. ஆகையால் கல்லாடர், சிவபெரு மானே திருவள்ளுவரைப் போற்றி, புலவரவை முன் முதற்கவி பாடினார் என்று கூறி அரிய கற்பனையுடன் திருக்குறளை ஏத்தினார். அத்துடன் திருவள்ளுவர், தம் காலத்திலிருந்த சமயங்களைப் பற்றியோ அவைகள் கூறும் பொருள்களைப் பற்றியோ நூல் இயற்றாது உல கியல் பொருளைப் பற்றியே நூல் செய்திருப்பதைக் கல்லாடர் ஆர்வத்துடன் பாராட்டியிருக்கிறார். இது ஒரு அருமையான விமரிசனக் கருத்து.

மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குத் திருவள்ளுவர் வந்து திருக்குறளை அரங்கேற்ற முயன்றதாகவும் அதன் விளைவாகச் சில சம்பவங்கள் நிகழ்ந்து கடைச் சங்கமே அழிந்து போனதாகவும் வழங்கி வரும் கதைகள் சரித் திரப் பான்மை இல்லாதவை. திருக்குறளின் அரங் கேற்றலாலோ வேறெந்தக் காரணத்தாலோ கடைச் சங்கம் முற்றிலும் அழிந்தது என்று துணிவதற்குச் சரித்திரச் சான்றுகளோ தெளிந்த இலக்கியச் சான்று

களோ இல்லை. ஆனால் திருக்குறளின் அரங்கேற்றலோ அல்லது அதற்கொப்ப ஒரு நிகழ்ச்சியோ நடந்திருக்கவே முடியாது என்று திட்டமாய்க் கூறுவதற்கில்லை. பழைய கதைகளைச் சார்ந்த அபூதமான, அசம்பாவிதமான தன்மைகளைத் தள்ளி அவைகளின் உட்பொருளை ஒருவாறு ஊகித்தல் நலம். திருவள்ளுவர் தமது அரிய நூலைப் படித்துக் காட்ட, பாண்டியன் தலைநகராகிய மதுரைக்கு வந்து, அங்குள்ள சங்கப் புலவரை அணுகித் தமது நோக்கத்தைத் தெரிவித்திருக்கலாம். புலவர் குழாத்திற்கு இயல்பாயுள்ள கல்விச் செருக்கினாலும், பொருமையினாலும், அல்லது ஒருவித காரணமுமில்லாத அசட்டையினாலும், வந்திருக்கும் வேற்றுப் புலவரின் மேதையையும் தெய்வீக ஆற்றலையும் உணராது அக்காலத்துச் சங்கப் புலவர் அவரை முதலில் மதிக்காமல் இருந்திருக்க வேண்டும். இப்படியிருப்பதற்குத் தொடக்கத்தில் தகுந்த காரணங்கள்கூட இருந்திருக்கலாம். சங்கப் புலவர் பொதுவாகப் பாடி வந்த பொருளுக்கும் நடைக்கும் புறம்பாகப் புதிதாகத் திருக்குறள் அமைந்திருந்ததால், அவர் அதைச் சந்தேகக் கண்ணுடன் நோக்குவது இயல்பு. நூலின் சிறந்த நயங்களைப் பின்னர் தெரிந்தவுடன், தங்களுடைய அபசாரத்திற்குப் பரிகாரமாகவோ, அல்லது தாங்கள் அடைந்த இன்பத்தால் தூண்டப் பெற்றோ அக்காலத்துச் சங்கப் புலவரில் சிலர் ஆளுக்கொரு பாட்டுப் பாடித் திருவள்ளுவருக்குக் காணிக்கையாகச் சமர்ப்பணம் செய்திருக்கலாம். இதைப் பார்த்துப் பின்னர் தோன்றிய சங்க காலப் புலவரும் திருக்குறளைப் பாராட்டிப் பாடல்கள் இயற்றி யிருக்கலாம். திருவள்ளுவ மாலையிலுள்ள பாடல்கள் இவ்வாறு தான் தோன்றியிருக்கக் கூடும். இவை, கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலோ அதற்குச் சற்றுப் பின்னரோ

தொகுக்கப் பெற்று திருவள்ளுவ மாலை என்று புகழுடன் வழங்கி வந்திருக்கிறது. இப்படிக் கொள்வதில் தவறு அல்லது முரண்பாடு ஒன்றும் இல்லை.

இதற்கு மாருகத் திருவள்ளுவ மாலையிலுள்ள பாடல்கள் எல்லாம் பிற்காலப் புலவன் ஒருவனின் சிருஷ்டியாயிருக்கலாம் என்ற கொள்கைக்கு ஒருவித ஆதாரமும் இல்லை. பல புலவர் பாடியதாகப் பல்வேறு பாவங்களில் வேறுபட்ட கருத்துக்களுடனும், உணர்ச்சிகளுடனும் கற்பனையுடனும் பாட்டுக்களை ஒருவனே புனைவது எளிதல்ல. அவ்வாறு புனைந்து பண்டைக் காலப் புலவர் பாடியதாகப் பொய் கூறுவதற்கு அவசியமும் இல்லை. இவ்வளவு துணிகரமான இலக்கிய சிருஷ்டனைக்குப் போதிய காரணமும் இல்லை.[1] திருக்குறள் தோன்றிய நாளிலிருந்து திருவள்ளுவரின் புகழ் பரவி நிலைத்திருந்தது. தொகை நூல்களிலுள்ள சில பாடல்களிலும், சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய நூல்களிலும் பிற கீழ்க் கணக்கு நூல்களிலும் திருக்குறட் பாக்கள் எடுத்தாளப் பெற்றிருக்கின்றன. ஆகையால் திருக்குறளின் பெருமையை விளங்கச் செய்ய இவ்வித பொய் சிருஷ்டிக்குக் கொஞ்சமும் தேவை இல்லை. திருவள்ளுவ மாலையின் பெரும்பாலான பாட்டுக்களின் அற்புதமான வாக்கையும் பொருட் செறிவையும் பார்த்தால் அவைகளைப்பாடிய புலவர் தங்களுடைய ஆத்மாநுபவத்தையே அரிய கற்பனைத் தன்மையுடனும் ஆர்வத்துடனும் வரைந்திருக்கிருர் என்பது எளிதில் புலப்படும்.

---

1. "இது ஒரு பொய்யே கட்டிப் பேசியதாகக் கூற இயலாது. இதனுல் திருக்குறள் அரங்கேறியது பாண்டியன் அவையகத்தென்றும் ஆண்டுப் புலவரும் உடனிருந்து கேட்டனரென்றும் கேட்டார் பலர் பாயிரம் சொற்ருர் என்றும் தெரியலாகும். இத் திருவள்ளுவ மாலையை எடுத்தாண்டது நேமிநாத நாலுரையாகிய வைர மேக விருத்தியாகும்". தமிழ் வரலாறு; —ரா. இராகவய்யங்கார் பக்கம் 56.

பல புலவரின் உள்ளக் கிளர்ச்சியை அறியவோ அறிந்த தாக நடிக்கவோ ஒரு புலவனுக்குச் சாதாரணமாக இயலாது.

திருவள்ளுவ மாலையிலுள்ள பாடல்கள் எல்லாம் பண்டைக் காலப் புலவரால் பாடப் பெறவில்லை என்று தமிழ்ப் புலவரான டி. வி. சதாசிவ பண்டாரத்தார், வ. உ. சிதம்பரம் பிள்ளை போன்றவர் கருதுகின்றார். முதல் கூறிய புலவர் எழுதுவதாவது: "திருவள்ளுவ மாலையில் காணப்படும் வெண்பாக்கள் எல்லாம் அந் நூல் அரங்கேற்றப்பட்ட போது சங்கப் புலவர்களால் இயற்றப் பெற்றவை அல்ல. அவற்றைப் பாடிய புலவர்களில் பலருடைய பெயர்கள் சங்கத் தொகை நூல்களில் காணப்படாமை அறியத் தக்கது. அப் பாடல்களில் பல, சங்கப் புலவர்களின் வாக்கு என்பதற் கேற்றவாறு அத்துணைச் சிறப்பும் பொருளமைதியும் உடையனவாகக் காணப்படவில்லை. எனவே அப்பாடல் களின் துணைகொண்டு திருக்குறள் கடைச் சங்கத்தின் இறுதிக் காலத்தில் அரங்கேற்றப்பட்டதென்று கூறுவ தற்குச் சிறிதும் இடமில்லை."[1] இரண்டாவது புலவர் கூறுவதாவது: "திருவள்ளுவ மாலைப் பாக்களில் சில மேற்கண்ட மூன்று அதிகாரங்களையும் திருக்குறட் பாயிரம் எனக் கூறுகின்றனவே எனின், அப் பாக்களைப் பாடியவர்களாகக் குறிக்கப்பட்டுள்ள புலவர்கள் திரு வள்ளுவர் காலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்தவர் களென்றும், அவர்களிற் சிலர் தாம் திருக்குறளைப் படித்த காலங்களில் அதன் பெருமையைப் பற்றிப் பாக்கள் பாடித் திருக்குறட் சுவடிகளில் சேர்த்தனரென்றும், அவர்களில் பல வேறு சிலர் தமிழ் நூல்களில் அழிவுற்ற காலத்தில் திருக்குறளில் உள்ளவை இன்னவை என்று

1. தமிழ் இலக்கிய வரலாறு கி. பி. 250 முதல் 600 வரை —டி. வி. சதாசிவ பண்டாரத்தார். பக்கம் 13.

பிற்காலத்தார் தெரிந்து கொள்ளும் பொருட்டுத் தமக்குக் கிடைத்த திருக்குறட் சுவடிகளில் கண்டபடி பால், இயல் அதிகாரங்களின் தொகைகளை வரையறையிட்டுப் பாக்களைப் பாடித் திருக்குறட் சுவடிகளில் சேர்த்தனரென்றும், அப் பாக்களெல்லாம் சேர்ந்து அவர்களுக்குப் பிற்பட்ட காலத்தார் ஒருவரால் கொடுக்கப்பட்ட 'திருவள்ளுவ மாலை' என்னும் தலைப் பெயருடன் வழங்கி வருகின்றனவென்றும் விடை தருக.[1]''

இவ்விரு புலவரும் வெவ்வேறு கருத்துக்களுக்கு ஆதரவு தேடவே திருவள்ளுவ மாலையைப் பற்றி மேலே கூறியவாறு எழுதியிருக்கிறார். திரு. பண்டாரத்தார் திருக்குறள் கடைச் சங்க காலத்திற்கு மிகவும் முந்திய நூல் என்று நிலைநாட்டுவதற்காகவே திருவள்ளுவ மாலையை அவ்வாறு குறிப்பிடுகிறார். திரு. சிதம்பரம் பிள்ளை, திருக்குறளின் பாயிரத்தின் முதன் மூன்று அதிகாரங்கள் இடைச் செருகல் என்று கூறவே திருவள்ளுவ மாலைப் பாக்களைப் பற்றித் தமது கருத்துக்களைக் கூறியிருக்கிறார். இதைப் பற்றி முன்னர் நாம் எழுதி யிருக்கிறோம்.

கடைச்சங்க காலம் என்பது கிறிஸ்து சகத்தின் முதல் மூன்று நூற்றாண்டுகள் என்பது பொதுவாகப் பல ஆராய்ச்சியாளர் கொண்டிருக்கும் முடிபு. திருவள்ளுவ மாலையிலுள்ள பாக்களில் பெரும்பாலானவை இக்காலத்திலுள்ள புலவராலேயே எழுதப்பெற்றிருக்கின்றன என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.[2] மொத்தமுள்ள ஐம்பது புலவரில் இருவர்தான் பிற்காலத்தவர்

---

1. திருவள்ளுவர் திருக்குறள். அறப்பால் —வ. உ. சிதம்பரம் பிள்ளை விருத்தி உரை. உரைப் பாயிரம் பக்கம் 4.

2. இதனால் திருவள்ளுவரின் காலமும் இதுவே என்று ஏற்படினும் கால ஆராய்ச்சி இந்தப் பகுதிக்குப் புறம்பானது. அது பின்னர் கவனிக்கப்படும்.

என்று முன்னல் காட்டப்பட்டிருக்கிறது. மீதமுள்ள புலவரில் முப்பத்து மூன்று புலவரின் பெயர்கள் தொகை நூல்களில் பாடியிருக்கும் புலவர் பட்டியலில் காணப் பெறுகின்றன. பதினேழு பெயர்கள் அப்பட்டியலில் இல்லை. இவைகளில் சுமார் பதின்மரின் பெயர்கள் ஒன்றிரண்டு எழுத்துக்களாலுள்ள சொற்ப வித்தியாசத் துடன் அதில் காணப்பெறுகின்றன. ஏழு பெயர்கள் தான் புதிதாயிருக்கின்றன. இந்தப் பெயர்கள் சங்க காலத் தொகை நூல்களில் காணவில்லை என்பதால் அவர் அக்காலத்தில் வாழவில்லை என்று திட்டமாய்க் கூறமுடியாது. ஏன்? தொகை நூல்களில் இருக்கும் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்களை ஆக்கிய புலவரின் பெயர்கள் தெரியவில்லை. திருவள்ளுவ மாலையில் காணப்பெறும் சில புலவர் இவவாறு ஆசிரியர் பெயர் கள் இல்லாமல் தொகுக்கப்பட்டிருக்கும் தொகை நூல் களிலுள்ள பாடல்களை எழுதியிருக்க முடியாது என்று எவ்வாறு சாதிக்க முடியும்? தவிரவும் சங்க காலத்தில் வாழ்ந்த எல்லாப் புலவரின் பாடல்களும், ஒன்று விடாமல் தொகுக்கப்பெற்றன என்பதற்குச் சான்றுகள் எங்கே இருக்கின்றன?

சில பெயர்கள் இல்லை என்ற வாதம் வலியுற்றிருப் பது வெளிப்படை. ஆனல் இருக்கும் பெயர்களை எவ்வாறு ஒதுக்கமுடியும்? சங்கத் தொகை நூல்களில் காணப்பெறும் புலவரில் முப்பத்துமூவர் திருவள்ளுவ மாலையிலுள்ள பாடல்களைப் பாடியிருக்கிருர். இவர்களில் மிகச் சிறந்தவரான கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனர் மாங்குடி மருதன், மருத்துவன் தாமோதரனர் போன்ற வரின் பெயர்களும் இருக்கின்றன, பிற்காலப் புலவர் பலர் திருவள்ளுவ மாலையிலுள்ள பாக்களையும் எழுதி தங்களுக்குப் பண்டைக் காலத்திலிருந்த சிறந்த சங்கப் புலவரின் பெயர்களையும் வைத்துக்கொண்டு தமிழ்

மக்களை ஏமாற்றியிருக்கிறார் என்று கொள்வது பொருந்துமா? இவ்வாறு கொள்வது, உண்மைக்கு மாறானதுமன்றி தமிழ்ப்புலவர் மரபையே அவமதிப்ப தாகும். ஆகையால் பிற்காலப் புலவரின் பாடல்கள் ஒன்றிரண்டு சேர்ந்திருந்தபோதிலும், பண்டைக் காலத் தமிழ்ப் புலவர் பலர் திருக்குறளைப் போற்றிப் பாடிய பாடல்களின் தொகுதியே திருவள்ளுவமாலை என்பதில் சிறிதும் ஐயமில்லை. திருக்குறளின் அரங்கேற்றலுக்கும் இதிலுள்ள பாடல்கள் பலவற்றிற்கும் தொடர்பு இருந்ததோ என்பதைப்பற்றி முடிவாக ஒன்றும் கூற முடியாது. ஆனால் பாடல்கள் போலியோ, அல்லது பிற் காலத்தில். ஒருவராலோ பலராலோ ஆக்கப்பெற்ற சிருஷ்டனையோ ஆகா.

திருவள்ளுவ மாலையிலுள்ள பெரும்பாலான பாடல் களில் சங்ககாலச் செய்யுள்களின் வாக்கு நயமும் பொரு ளமைதியும் இல்லை என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளத் தக்கதில்லை. இம்மாலையிலுள்ள பல பாடல்கள் உயர்ந்த கவிதைப் பண்புடைய செம்மையான வாக்கில் அமைந் திருப்பதும், சங்ககாலப் பாடல்களின் பொருளமைதியும், சில அதற்கும் அதிகமாயுள்ள பொருளமைதியும் கருத் தழகும் பெற்றிருப்பனவும், தனி இலக்கியக் கண்ணோடு பார்ப்போருக்கு எளிதில் புலப்படும். உதாரணமாக மாங்குடி மருதனால் பாடப்பெற்றதாகவுள்ள பாட்டு இது.

“ஓதற்கு எளிதாய், உணர்தற்கு அரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கத்—தீதற்றோர்
உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு”

இந்தப் பாட்டின் அற்புதமான வாக்கைக் குறை வாக மதிக்க முடியுமா? அதில் பொதிந்து கிடக்கும்

பொருளின் ஆழத்தையும் அழகையும் பார்ப்பதில் என்ன தடை இருக்கிறது? இதன் நயங்கள் சங்ககாலப் பாடல்களின் நயங்களுக்குக் குறைந்தவை என்று ரஸிகர் சொல்லத் துணிவாரா? இதேபோல் கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனூர், கல்லாடர் சீத்தலைச்சாத்தனூர், அரிசில்கிழார், வெள்ளிவீதியார், நப்பாலத்தனூர், மதுரைப் பாலாசிரியனூர், ஆலங்குடிவங்கனூர் இயற்றிய வெண்பாக்கள் ஆழ்ந்த பொருட்செறிவுடைய கவிதா ரத்தினங்கள். திருவள்ளுவமாலை சிறந்த விமரிசன ரத்தினமாலையாய்த் திகழ்கிறது.

திருவள்ளுவமாலையிலுள்ள பெரும்பாலான பாடல்களை இயற்றிய கவிகள் அருட்புலமைபெற்ற சான்றோர்களாதலால், தெய்வப்புலமை படைத்த திருவள்ளுவரின் இதயத்தின் ஆழத்தையும் அறிவின் ஆற்றலையும், ஞானத்தின் தெளிவையும் எளிதில் உணர அவருக்கு முடிந்தது. அவ்வாறு உணர்ந்து தாங்கள் பெற்ற இன்பத்திற்கு, கனிந்த கற்பனையுடன் செய்த பாக்களில் எழிலுருவம் கொடுத்தார். தமிழ் இலக்கியத்திலுள்ள ஏனைய சிறந்த நூல்களைப் போற்றும் பாடல்களும் தனியன்களும், தனியாகவோ, பாயிரங்களுடன் சேர்ந்தோ இருப்பினும், அவை, திருவள்ளுவமாலையின் அளவில் பல்வேறு நயங்களுடனும், இலக்கியச் சிறப்புக்களையே நோக்கிச்செய்த விமரிசனப் பண்புடனும் இல்லை. திருஞான சம்பந்தர்மீது நம்பியாண்டார் நம்பி பாடிய பாடல்கள்,நம்மாழ்வார்மீது கம்பர் இயற்றியதாகப் பக்தர் கருதும் சடகோபரந்தாதி, சைவசமயகுரவர் நால்வர் மீது சிவப்பிரகாச சுவாமிகள் செய்த நால்வர் நான்மணிமாலை போன்ற பிரபந்தங்கள் எல்லாம் சமய நூல்களாகவே அமைந்திருக்கின்றன. ஞானசம்பந்தர் முதலிய நான்கு சைவசமய குரவரும் நம்மாழ்வாரும் சிறந்த கவிகளாயிருந்த போதிலும் அவர்களைப் போற்றி

பாடப்பெற்ற இந்த நூல்கள் இலக்கிய நோக்குடன் எழுதப்பெற்றவையல்ல. வள்ளுவரின் பெருமையைப் பாராட்டி இயற்றப்பெற்ற திருவள்ளுவமாலையின் பாடல்கள் திருக்குறளின் சொற்சுவை, பொருட்சுவை முதலிய இலக்கிய நயங்களையே பாடுகின்றன என்பது கவனிக்கற்பாலது.

ஆகவே, இதுகாறும் கூறியவைகளில் பண்டைக் காலத்தமிழ்ப் புலவர் செய்த ஆராய்ச்சி எந்தெந்தத் துறைகளில் எவ்வாறு நடைபெற்றது என்பது சுருக்கமாக வரையப் பெற்றிருக்கிறது. பண்டைத்தமிழ்ப் புலவர் கைக்கொண்ட பொருள் பாகுபாடும், முத்தமிழ்ப் பாகுபாடும், அவருடைய இலக்கிய தத்துவத்தின் முக்கிய அம்சங்கள் என்றும், அவர் தங்கள் கவிதைக்கு எடுத்துக்கொண்ட பொருளிலிருந்து அரசர் வள்ளல்கள் முதலியோரைப் போற்றிப் புகழ்வதே பெரும்பாலும் தங்களுடைய இலக்கிய நோக்காகக் கொண்டார் என்றும், இந்த நோக்கத்தினுல் அவர் கவிதையின் நயங்கள் குறைவுபடவில்லை என்றும், அவர் இலக்கிய விமரிசனக் கலையையும் ஓரளவு பேணி வளர்த்தார் என்றும் எடுத்துக் காட்டப் பெற்றிருக்கின்றன.

# தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி

## சமயப் பாடல்களின் தொகுப்பு: திருமுறைகள்

இடைக் காலத்தில் நடைபெற்ற தமிழ் ஆராய்ச்சியின் தன்மை இந்தப் பகுதியில் கவனிக்கப் பெறும். இடைக் காலம் என்பது சுமார் கி. பி. ஒன்பதாம் நூற்றூண்டிலிருந்து தொடங்கும் ஒன்பது நூற்றூண்டுகள் காலம் என்று முன்னுரையில் விளக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காலத்தின் தொடக்கத்தில் தமிழரின் சமய வாழ்வும் கலை வாழ்வும் நாகரிகமும் பல துறைகளிலும் ஓங்கின. அதற்கு முன்னிராத ஆர்வத்தையும், சக்தியையும் ஒளியையும் சமய வாழ்வு பெற்று, மக்களுக்குப் புத்துயிர் கொடுத்து அவருடைய கவிதையையும் கலைகளையும் செழிக்கச் செய்தது. வாழ்வின் எல்லா இயல்களையும் ஆக்க முறையில் செம்மைபடுத்தக் கூடிய ஒரே சக்தியாக சமயம் இயங்கியது. அது கவிதையை வளம் பெறச் செய்தது; அதே போல் கவிதையும், சமயத்தையே பெரும்பாலும் பொருளாகக் கொண்டு அது போற்றும் பேரின்பத்தைப் பற்றிப் பாடி, மக்கள் மனத்தைக் கடவுள் பால், காந்தம் இரும்பை இழுப்பதுபோல் பிடித்திழுத்தது. மக்கள் தங்கள் சமய வாழ்வில் ஒரு புதிய இன்பத்தைப் பருகினார்கள்; அதன் மூலம் ஆன்ம

வாழ்வு என்று ஒன்று இருப்பதைக் கண்டார்; அவ் வாழ்வுக்கு மூல காரணமாயிருக்கும் பரம்பொருள் தான் ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டிருக்கும் அண்ட கோடிகளை ஆட்டி வைக்கும் சக்தி என்றும், தகுந்த முறையில் முயன்ருல் அது மனித அறிவால் பார்க்கக் கூடிய நிலைத்த உண்மை என்றும் தேர்ந்தார். ஆதலால் மக்கள், தங்கள் கலைகளையும் செல்வங்களையும் சமயப் பணிக்கே அர்ப்பணம் செய்தார்கள். இவ்வாறு சமய வாழ்வுக்குப் பயன்படுத்தப் பெற்ற கலைகள் எல்லாம் சிறந்த மேம்பாடு அடைந்தன.

இந்த சூழ்நிலையில் தான் தமிழ்ப் புலவர் வாழ்ந்து தமிழ்ப் பணி ஆற்றினர். அவர் செய்த தமிழ் ஆராய்ச்சி பல துறைகளிலும் மிகவும் பயனுற்றதாயிருந்தது. இக் காலத்தில் நடைபெற்ற தமிழ் ஆராய்ச்சியின் விளைவு கள் மக்களின் சமுதாய வாழ்வைப் பண்படுத்தின. இவ் வாராய்ச்சியின் ஒரு சிறந்த பயன் தான் சைவ, வைணவ சமயங்களுக்கு ஜீவாதாரமாயுள்ள திருமுறைகள், திவ்யப் பிரபந்தம் ஆகியவைகளின் தொகுப்பு. இந்த நிகழ்ச்சி ஏறக்குறைய கி. பி. பதினௌன்ரும் நூற் ருண்டின் தொடக்கத்தில் நடைபெற்றது. சிவபெரு மானின் முழு முதற் கடவுள் தன்மையையும், திரு வுருவப் பொலிவையும், சக்தியையும், அடியார்களைத் தடுத்தாட் கொள்ளும் பேரன்பையும் போற்றும் இனிய பக்திச் சுவைப் பாடல்கள் அடங்கிய தேவார, திருவாச கம் முதலிய பதிகங்களை, சைவத் திருமுறைகளாக நம்பி ஆண்டார் நம்பி அடிகள் தொகுத்தார். திருமாலின் பரத்வத்தையும் சௌலப்ய குணங்களையும், லீலா விபூதியையும், அவதார மாண்புகளையும், பக்தர் மீது கொள்ளும் அளவற்ற வாஞ்சையையும், கனிந்த உள்ளக் களிப்புடன் ஆழ்வார்கள் பாடின அழகான பாசுரங்களை ஒழுங்குபடுத்தி நாலாயிரத் திவ்யப் பிர

பந்தமாக நாதமுனிகளும் தொகுத்தார். இவ்விரு பெருந் தகையார், வேதங்களின் பொருளையும் சாரத்தையும் கொண்ட பாடல்களைத் தொகுத்ததின் மூலம், தமிழருக்கு வேதத்தைத் தமிழிலே அருளித் தமிழ் நாட்டில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் மூட்டிய சமய உணர்ச்சிக் கனலை வளர்த்துப் பெரும் ஜ்வாலையாக்கி அதன் சோதியைப் பாரத நாடெங்கும் ஒளி வீசச் செய்தார்.

இவைகளில் எது முதலில் தொகுக்கப் பெற்றது என்று நிச்சயமாய்த் தேர்ந்து கூறுவதற்குத் தெளிவான சரித்திரச் சான்றுகள் இல்லை. சைவத் திருமுறைகளே முதலில் தொகுக்கப் பெற்றிருக்கலாம் என்று கருதுகிறார் ஒரு அறிஞர்.[1] தமிழ் நாட்டின் இவ்விரு வேதவியாசர்களும் ஏறக்குறைய ஒரே தலைமுறையில் தோன்றி, திருமுறைகளையும் திவ்யப் பிரபந்தத்தையும் முறையே

---

1. "Perhaps the Aryan Vaishnavas had not cared so mnch for the presrevation of the sacred writings of the Dravidian saints before the days of Nammalwar, and perhaps, in imitation of the Saivas, the Vaishnava Acharyas may have got into their head the idea of collecting the works of Alwars and compiling them into one sacred volume, probably subsequent to the loborious undertaking of Nambi Andar Nambi, of the Saiva sect."—Tamil Studies M. Srinivasa Iyengar. Page 332. இன்றுள்ள ஆதாரங்களைக் கவனித்தால் முதல் ஏழு திருமுறைகள் முதலில் தொகுக்கப் பெற்றிருக்கலாம். அதற்கப்புறம் நாலாயிரத் திவ்யப் பிரபந்தமும், பின்னர் எட்டு முதல் பதினொரு திருமுறைகளும் தொகுக்கப் பெற்றிருக்க வேண்டும் என்றும் இவை எல்லாம் ஒரே தலைமுறையில் நடைபெற்றிருக்க வேண்டும் என்றும் தெரிகிறது. இது விரிவாக இந்தப் பகுதியில் ஆராயப்பட்டிருக்கிறது.

தொகுத்திருப்பது, தமிழரின் இலக்கிய வரலாற்றில் நிகழ்ந்த ஒரு அற்புதம் என்று தான் சொல்ல வேண்டும். இதற்குக் காரணம் கண்டு பிடிப்பது எளிதல்ல. எனினும், இவ்வாறு தெய்வீகமான சமயப் பாடல்களைத் தொகுப்பதற்கு, அதற்கு சுமார் இரண்டு நூற்றாண்டு களுக்கு முன்பு, சங்க காலத் தொகை நூல்களுள்பட, கிடைத்த பழைய தமிழ் இலக்கியம் முழுவதும் ஒருவாறு ஒழுங்குபடுத்தப் பெற்றிருக்கும் பணியே ஒரு வழி காட்டியாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

தமிழ் இலக்கியத்தின் சரித்திரத்தைச் சற்று நுட்ப மாக ஆராய்ந்தால் இந்த உண்மை விளங்கும். சைவ சமய குரவரும் வைணவ ஆழ்வார்களும் சுமார் கி. பி. ஆறும் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குள் ளான காலத்தில் தோன்றியவர். இது ஆராய்ச்சியாள ரின் தெளிந்த முடிபு. சமய உணர்ச்சி மேலீட்டால் இந்த முடிவுக்கு இழுக்கு கூறலாமே யொழிய சரித்திர ஆராய்ச்சிச் சான்றுகளால் அசைக்க முடியாது. இந்த ஐநூறு வருஷ காலத்தில், அதற்கு முன்னலேயே சில நூற்றாண்டுகளாக ஒருவாறு நிலை பெற்றிருந்த சமண மும் பௌத்தமும் தமிழ் நாட்டில் வெகுவாகப் பரவி வேரூன்றி யிருந்தன. சைவமும் வைணவமும் பேராக்க முற்றுத் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து சமணத்துடனும் பௌத்தத்துடனும் வாதப் போர் புரிந்து அவைகளின் ஆதிக்கத்தைத் தொலைத்தன. அதனல் சமணமும் பௌத்தமும் வலியற்ற போதிலும் இவைகளைச் சார்ந்தவரின் தமிழ் இலக்கியப் பணி ஆங் காங்கே தொடர்ந்து நிகழ்ந்தது.

திருமுறைகளும் திவ்வியப் பிரபந்தமும் தொகுக்கப் பெறுவதற்கு முன்னரும் அவைகளிலுள்ள சில பாடல் கள் ஆலயங்களின் வழிபாடுகளில் சில இடங்களில் பாடப்பெற்றன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள்

கிடைத்திருக்கின்றன.[1] இருந்தபோதிலும், கி. பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் சைவசமய குரவரின் பாடல்களும் ஆழ்வார்களின் பாசுரங்களும், அவைகளின் பெருமைக்குரிய அளவில் மக்களால் பயிலப் பெறவோ, ஆலயங்களில் ஓதப்பெறவோ இல்லை என்று தெளிவாகத் தெரிகிறது; திருத்தொண்டத்

1. "சிவன் கோவில்களில் திருமுன்னர், பூசாகாலங்களில் தேவாரத் திருப்பதிகங்களும், மணிவாசகர் திருச்சாழல் திருவெம்பாவை முதலிய பாக்களும், அகோபிலம் போன்ற வைணவத் திருப்பதிகளிலும் நாலாயிர ப்ரபந்தங்களும் பாடுதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. தஞ்சாவூர் இராசராசேச்சுவரத்தில் தேவாரத் திருமுறைகளை விண்ணப்பஞ்செய்ய இசைத்தமிழ் வல்லார் நாற்பத்தெண்மர் நியமனம் பெற்றிருந்தனர் என முன்னர் கண்டோம். திருமுறைகளையும் நாலாயிர ப்ரபந்தங்களையும் தொகையாக 11-ஆவது நூற்றாண்டில் முறையே நம்பியாண்டார் நம்பியாலும் நாதமுனிகளாலும் வகுக்கப்பெறும் முன்னரே கோவில்களில் இவை ஓதப்பெற்றனவென்று பல கல்வெட்டுகள் கூறுகின்றன. முதல் பராந்தகன் காலத்திலேயே ஆத்தூர், லால்குடி கோயில்களில் தினசரி பூசாகாலங்களில் திருப்பதியம் ஓதுவதற்காக ஓதுவார்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இன்னும், இதற்கு முன்னதாகவே கோயில் சிப்பந்திகளில் திருப்பதியம் பாடுதற்கான ஓதுவார்கள் நியமனம் பெற்றிருந்தனரெனப் பல்லவன் விசயநந்தி விக்கிரமன் காலத்துத் திருவல்லம் கல்வெட்டுக் கூறுகின்றது. முதல் பராந்தகன் காலத்திலும் சோழ-தொண்டை மண்டலங்களில் பல கோவில்களில் வாத்தியங்களுடன் திருப்பதியங்கள் ஓதப்பெற்றமை பல கல்வெட்டுக்களால் தெரிகின்றது. ஆகவே நம்பியாண்டார் நம்பிகளுக்கு முன்னரே திருப்பதியங்கள் தெய்விக வழிபாட்டுக்குத் தெய்விகத்தன்மை எய்திய செய்தி கிடைப்பதாகின்றது. திருவிடைவாசல் கல்வெட்டு ஒன்றில் ஒரு திருமுறையிலும் இதுவரை அகப்படாத ஞானசம்பந்தரது தேவாரப் பதிகம் ஒன்று பொறிக்கப்பட்டிருப்பதும் இங்கு குறிக்கப்படுவதாகும்" சோழர் கோயிற்பணிகள்—ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை (1950) பக்கம் 150-151. சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் எழுதப்பெற்ற தஞ்சை திரு கே. எஸ். சீனிவாசப்பிள்ளையின் தமிழ் வரலாறு என்ற நூலிலும் மேலே கூறப்பெற்ற விவரங்கள் எடுத்துக் காட்டப்பெற்றிருக்கின்றன.

தொகையை இயற்றியவரும் நல்ல தமிழ் இசைக்கவியாயும் இருந்தவருமான சுந்தரமூர்த்தி சுவாமிகள், அத் தொண்டர் கூட்டத்திற்கு ஒப்புயர்வற்ற தலைவராயும் இசைத்தமிழில் தெய்வப்புலமை பெற்றவராயும் திகழ்ந்த அப்பர், ஞானசம்பந்தர், ஆகியோரின் தேவாரப் பாடல்களின் பெருமைகளைப் போற்றினாரே யொழிய அவைகளைத் தொகுக்கும் பணியில் ஈடுபடவில்லை. சோழ அரசன் முதல் இராசராசன் நம்பி ஆண்டார் நம்பி ஆகியோர் காலத்தில் முதலி மூவரின் தேவாரங்களில் பெரும்பகுதி மக்களுக்குத் தெரியாமலே இருந்தது என்பது உண்மைதான்.[1] அதேபோல் வைணவத்திலும் ஆழ்வார்களின் பாசுரங்களிலும் பெரும்பகுதி பயிலப்பெறவில்லை என்றுதான் தெரிகிறது. திருவாய்மொழியிலுள்ள சில பாசுரங்களையும் மதுரகவி யாழ்வாரின் ஒரு பதிகத்தையும் தவிர, மற்றவை முழுவதும் மறைந்து போயின என்றே குரு பரம்பரைக் கதைகள் கூறுகின்றன. இந்த நிலையில் திடீரென பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தேவாரப் பாடல்களும் பிரபந்

1. நம்பியாண்டார் நம்பி ஆதித்த சோழனின் (கி. பி. 871-907) இறுதிக் காலத்தில் வாழ்ந்தவர் என்று திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கூறுகிறார். இதற்கு ஆதாரமாக திருத்தொண்டர் திருவந்தாதியில் "சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம்பலமுகடு, கொங்கிற் கனகமணிந்த ஆதித்தன் குலமுதலோன்" என்று நம்பியாண்டார் நம்பி பாடியிருப்பதைக் காட்டுகிறார். (பிற்காலச் சோழர் சரித்திரம் Vol I. பக்கம் 33) இந்தப் பாட்டிலிருந்து நம்பி ஆதித்தனைக் குறிப்பிடுகிறார் என்று கொள்வது தான் பொருத்தம். அவர் ஆதித்தன் காலத்தில் வாழ்ந்தார் என்று கொள்ள முடியாது. பிற்கால சோழ வம்சத்திற்கு முதன்மையாக ஆதித்த சோழன் இருந்ததைத்தான் 'குலமுதலோன்' என்ற தொடர் குறிப்பிடுகிறது. உண்மையில் அவன் குலமுதலோன் இல்லை. அவன் தந்தையாகிய விசயாலயனே குலமுதலோன். ஆனால் கவி இங்கே ஆதித்த சோழனின் சிறப்பையும் புகழையும் பாடவே இத்தொடரைக் கையாண்டிருக்கிறார். நம்பியாண்டார் நம்பி கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் அல்ல.

தப் பாசுரங்களும் தொகுக்கப்பெற வேண்டும் என்ற எண்ணமும் உறுதியும் எவ்வாறு எழுந்தன என்பது சரித்திரத்தின் மூலம் நேரடியாகத் தெரிய முடியவில்லை. சமய உணர்ச்சியும் இலக்கியக் கலை ஆர்வமும் ஒருங்கே கலந்த ஒரு இயக்கத்தின் விளைவாகவே திருமுறைகளும் திவ்யப் பிரபந்தமும் தொகுக்கப் பெற்றிருக்க வேண்டும் என்பதில் ஐயம் இல்லை.

திருமுறைகளும் திவ்யப் பிரபந்தமும் செறிந்த கவிதைப் பண்புடைய சிறந்த இசைத்தமிழ் இலக்கியம் என்பதை ஒருவரும் மறக்கக்கூடாது. தமிழரின் சமுதாயத்தில் சமய உணர்ச்சி உரத்தால் செழித்து வளர்ந்த பக்தியில், காய்த்துப் பழுத்த தீஞ்சுவைக்கனிகள் இப் பாடல்கள். அந்தக் காலத்தில் சமயமும் இலக்கியமும் வெவ்வேருகக் கருதப்படாத அளவுக்குப் பிணைக்கப்பட்டிருந்தது, தமிழரின் கலைவாழ்வின் ஒரு முக்கியமான இயல்பு. நாடோடியாக அடியார்களும் தொண்டர்களும் ஆயிரக்கணக்காகக் கிளம்பி பக்திச் சுவைப் பாடல்களைப் பாடிப் பிரசாரம் செய்து மக்களைச் சமயத்தில் ஈடுபடச் செய்த காலம் அது. இவ்விதப் பணிசெய்த சிவனடியார் கூட்டங்களையே நம்பி ஆரூரர் 'பத்தராய்ப்பணிவார்' 'பரமனையே பாடுவார்', 'சித்தத்தைச் சிவன்பால் வைத்தார்' 'அப்பாலுமடிச் சார்ந்தோர்' போன்ற அழகான பொருள் பொதிந்த சொற்ருெடர்களால் தமது திருத்தொண்டத் தொகையில் வணங்குகிருர். இக்கூட்டங்களின் சமய சேவை மிகப்பெரிதே; இருந்த போதிலும் அக்காலத்தில் நிலைத்துப் பரவியிருந்த சமயங்களின் சக்திக்கும், மக்களிடம் வளர்ந்த தீவிர சமயப் பற்றிற்கும், அவைகளில் விளைந்த பலதிறப்பட்ட கலை வாழ்விற்கும், அதன் ஆற்றல்பெற்ற சிருஷ்டி சக்தியைக் காட்டக்கூடியதும், சிற்பக்கலையின் சீர்மிக்க காப்பியங்கள் என்று கருதக்கூடியதுமான கம்பீரமான ஆல

யங்களுக்கும், இவ்வாலயங்களில் மனிதனின் ஆத்ம ஞானத்தையும் பக்திப்பண்பையும் கிளரும் நோக்கத்துடன் நடைபெற்ற ஆகம வழிபாட்டு முறைகளுக்கும், இவைகளுக்கென்று உள்ளக் கிளர்ச்சியுடன் பயன்படுத்தப்பெற்ற நுண்ணிய தமிழ்ப்பண்களால் சமைக்கப்பெற்ற இசைத்தமிழ்ப் பெருக்குக்கும், ஏனைய நுண்கலைப்பெருக்குக்கும், வறுமை, கவலை பிணி முதலியவைகளை மறந்த மக்களின் ஆனந்தப் பெருவாழ்விற்கும், அத்திருக்கூட்டங்களில் முதன்மை பெற்று செம்மையான கவிகளா யிருந்த மூவரின் நெஞ்சை உருக்கும் பாடல்களே சான்று பகர்கின்றன. அவை கடவுளையே கவர்ந்தன. அவைகளின் செஞ்சொற் கவியின்பத்திலும் இசை வெள்ளத்திலும் அக்காலத்து மக்கள் மூழ்கித் திளைத்ததில் என்ன வியப்பு இருக்கிறது?[1]

திருமுறைகளை வகுத்ததில் நம்பியாண்டார் நம்பி எந்த அளவுக்குச் சைவ சமயப் பணி ஆற்றினரோ அந்த அளவுக்கும் ஒரு படி மேலாகவே தமிழ் இலக்கியப் பணி

---

1. உலகத்திலுள்ள சமயங்களின் பிறப்பையும் வளர்ச்சியையும் நோக்கினல், எல்லா சமயங்களுக்குமே ஆதியில் இசையும் கவிதையும் ஆடல்களும் இன்றியமையாத கருவிகளாய் இருந்திருக்கின்றன. வெகு காலத்திற்குப் பின்புதான் சமயக் கணக்கர் விரிந்த வழிபாட்டு முறைகளை வகுத்தார்; ஞானபண்டிதர் தத்துவ சாத்திரங்களைத் தோற்றுவித்து அவைகளை விளக்கப் பல நூல்களை ஆக்கினர். வழிபாட்டு முறைகளும் தத்துவங்களும் விரிந்து வளர்ந்த பின்புதான் ஒரே சமயத்தைச் சேர்ந்தவர் கூடக் கொள்கைகளிலும் வழிபாடுகளிலும் வித்தியாசங்களைக் கற்பித்துக்கொண்டு பல பிரிவுகளானர். இவ்வித உட்பிரிவுகள் இல்லாத சமயங்களே உலகத்தில் இல்லை. பிற்காலத்தில் இவைகளைச் சேர்ந்த பலர், சமயங்களின் அடிப்படையான கடவுள் தத்துவத்தையும் அருள் இயக்கத்தையும், அறவே மறந்து, அவைகளிலிருந்து இயற்கையாகவே விளையக்கூடிய ஆன்ம வாழ்க்கையையும் மனிதப் பண்புகளையும் துறந்து சமயப் பூசல்களிலும் பிணக்குகளிலும் ஈடுபட்டுச் சமயங்களுக்குக் கெட்ட பெயரைத் தேடித்தந்திருப்பது சரித்திரம் படித்தவருக்கு எளிதில் புலப்படும்.

யும் செய்தார். இந்தக் கருத்தைச் சற்று விரிவாக விளக்கவேண்டும். அவர் எவ்வாறு திருமுறைகளை வகுத்தார் என்பதைக் கவனிக்க வேண்டும். நம்பி யாண்டார் நம்பி அதி பால்யத்திலேயே திருநாரையூரில் எழுந்தருளிய பொல்லாப்பிள்ளையாரின் அருளால் சைவ சமயத்தில் ஈடுபட்ட பெரும் தமிழ்ப் புலவராய் இருந்தார். கி. பி. 985 ல் அரியணை அமர்ந்த பிரபல சோழ வம்ச அரசனான இராசராசன் காலத்தவர். இந்த சோழ மன்னன் ஆங்காங்கே மூவர் தேவாரப் பாடல்கள் சில வற்றைப் பாடக் கேட்டு, அவைகளின் இசையிலும் பக்திச் சுவையிலும் கவிதையிலும் பெரிதும் ஈடுபட்டான். முதலி மூவரின் பாடல்கள் முழுவதையுமே கண்டுபிடிக்க வேண்டுமென்று அவாவுற்று நம்பியாண்டார் நம்பியின் துணையை வேண்டினான். நம்பியும் அதற்குடன்பட்டுப் பொல்லாப்பிள்ளையாரின் உதவியை நாடி, மூவரின் பாடல்களடங்கிய சுவடிகள், சிதம்பரம் பெரிய கோவிலி லுள்ள ஒரு அறையிலிருப்பதாகத் தேர்ந்து, சோழ அரசனுடன் அங்கே சென்றார். தேவாரக் கருவூலமுள்ள அறையைத் திறக்கும்படி சோழ அரசர் தில்லை அந்தணர் களை வேண்ட அவர்கள் முதலி மூவரும் எழுந்தருளினால் தான் அது முடியும் என்று பதிலுரைத்தார்கள். அரசன் மூவருக்கும் அருச்சனை அபிஷேகம் முதலியவைகளைச் செய்து, அவர்களை அர்ச்சாரூபமாக எழுந்தருளப் பண்ணி, அறையின் முன் நிற்கவைத்தான். அவன் அறிவையும் பக்தியையும் வியந்த அந்தணர் அறையைத் திறந்தார். மூவர் தேவார ஏடுகளில் பெரும் பகுதி செல்லரித்து அழி வடைந்திருந்ததைக் கண்ட இராசராசனும் நம்பியாண் டார் நம்பியும் வருத்தமுற்றுச் செயலற்று நின்றார்கள். அப்போது அசரீரி வாக்காக, அக்காலத்திற்குத் தேவை யான பாடல்களை வைத்து விட்டு மீதமுள்ளவைகளைத் தாமே வன்மீகத்தால் அழித்துவிட்டதாகச் சிவபெரு

மானே தெரிவிக்க அரசனும் நம்பியும் மகிழ்ச்சியுற்று மன நிறைவு பெற்றார்கள். நம்பியாண்டார் நம்பி நல்ல நிலையிலிருந்த சுவடிகளை எடுத்துத் துடைத்துச் செப்பனிட்டு ஒழுங்குபடுத்திக் கிடைத்த திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரரின் பதிகங்களை ஏழு திருமுறைகளாகத் தொகுத்தார்.

இப்பதிகங்களுக் கெல்லாம் பண்முறை தெரியவில்லையே என்று அரசரும் நம்பியும் ஏங்கினர் என்றும், மீண்டும் அசரீரியின் உதவியால் திருநீலகண்டப் பெரும்பாணர் மரபில் உதித்த ஒரு பெண்ணின் மூலம் தேவாரப் பாடல்களுக்குப் பண்முறைகளைத் தெரிந்து வகுத்தார் என்றும் தெரிகிறது. இதற்குப் பின்னர் பல வருடங்களுக்கப்பால் மணிவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர் இயற்றிய இருபத்தொன்பது பதிகங்கள் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலரின் திருமந்திரம் பத்தாந் திருமுறையாகவும், திருவாலவாயுடையாரின் திருமுகப் பாசுரமும், மற்றும் பதின்மர் பாடிய இருபத்தொன்பது பிரபந்தங்களும் பதினோராம் திருமுறையாகவும் நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப்பெற்றன. நம்பியும் சிறந்த தமிழ்ப் புலவராதலால் பல பாடல்களை இயற்றி யிருந்தார். தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி முதலிய பத்து நூல்களைச் சோழ அரசனின் வேண்டுகோளின்படி இத் திருமுறையின் இறுதியில் வைத்தார். இவ்வாறு சேர்க்கப்பட்ட நம்பியின் பாடல்களில் ஆறு திருஞான சம்பந்தரைப் பற்றி உள்ளன. ஒன்று திருநாவுக்கரசரைப் போற்றிய பாடல்.

மேலே கூறப்பெற்ற வரலாறு திருமுறை கண்ட புராணத்தில் காணப்பெறுகிறது. இச்சிறு புராணம் உமாபதி சிவாசாரியாரால் இயற்றப் பெற்றது என்பது

சைவ மரபு. இந்தப் புராணத்தில் உண்மை யற்றதும் பொருத்த மில்லாததுமான பல விஷயங்கள் இருக்கின்றன என்றும் அவைகளை ஏற்றுக்கொள்வதில் பல தடைகள் தோன்றக் கூடியன என்றும் இக்காலத்துப் புலவர் சிலர் கருதுகிருர்.[1] சிறந்த சிவநெறிச் செல்வரும் சந்தானுசாரியர் நால்வரில் கடைசியானவரும், மெய் கண்ட சாத்திரங்கள் பதினுன்கில் எட்டு நூல்களை இயற்றினவரும் கி. பி. பதினுன்காம் நூற்ருண்டில் இருந்தவருமான உமாபதி சிவம் திருமுறை கண்ட புராணத்தையாவது சேக்கிழார் புராணத்தையாவது எழுதியிருக்க முடியாது என்பதும் இவருடைய துணிபு. இவ்வாறு கொள்வதற்கு ஆதாரம் ஒன்றும் இல்லை. முன்னேரின் நூல்களைத் தற்கால மனப்பான்மையுடன் பார்ப்பது பொருத்தமில்லை. அத்துடன் புராண நூல்களை அவ்வித பரிசீலனைக் குட்படுத்துவது சரியில்லை. ஏன்? புராணங்களைப் புராணங்கள் என்ற தன்மையில் தான் அறிய முயலவேண்டும். புராணங்கள் சரித்திரங்களோ காப்பியங்களோ அல்ல. மகாத்மா காந்தியின்

1. "நம்பிக்கே காலத்தாற் பிற்பட்டவராகக் கருதத் தக்க அடியார் பலர் பாடல்களை ஒன்பதாந் திருமுறையாகவும், அப்பர் சம்பந்தர் காலத்திற்கு முற்பட்டவரான திருமூலர் பாடிய திருமந்திரத்தைப் பத்தாந் திருமுறையாகவும், நாயன்மார் காலத்தவரும் நம்பி காலத்தவருமான கபில தேவர் பட்டினத்தார் போன்ற அடியார் பாக்களைப் பதினேராந் திருமுறையாகவும் நம்பி தொகுத்தார் என்று திருமுறைகண்ட புராணம் கூறுகிறது. நம்பிக்குப் பிற்பட்டவர் பாக்களை நம்பியே தொகுக்க முடியுமா? காலத்தால் முற்பட்ட அடியார் பாக்களைப் பின் வைக்க இயலுமா? அங்ஙனம் வைப்பதில் ஒருவகைப் பொருத்தமேனும் இருக்க வேண்டும் அல்லவா? இவ்விவரங்களை வரலாற்று முறையிலும் ஆராய்ச்சி முறையிலும் இருந்து கவனிப்பின் நம்பி முதல் ஏழு திருமுறைகளையே தொகுத்தனர். பிற்பட்ட திருமுறைகளை அவை கிடைக்கக் கிடைக்கப் பின் வந்த அறிஞர் முறைப்படுத்தினர் என்று கொள்வதே மிகவும் பொருத்தமாகத் தெரிகிறது"—சேக்கிழார். மா. இராசமாணிக்கம் (1945) பக்கம் 76-77.

சரித்திரத்தை ஒரு பெண் புலவர் 'காந்தி புராணம்' என்ற தலைப்பில் பாடிய ஒரு நூலுக்கு முன்னுரை வரைந்தவரும், சைவ சமய அறிவிலும் தமிழ்ப் புலமையிலும் ஒருங்கே சிறந்து விளங்கியவருமான திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதுவதாவது:—"பண்டை வழக்குப்படி இந்நூல் புராண மென்னும் பெயரால் உலவ வேண்டுமென்பது அம்மையார் விருப்பம் போலும்! நம் பழம்புராணங்களில் மெய்க் கதைகளுண்டு; பொய்க் கதைகளுண்டு; மெய் குறிக்கும் புனை கதைகளுமுண்டு."[1] எந்தப் புராணத்திலும் இம்மூன்று வகையான கதைகள் காணப்பெறும். இவ்விரண்டு புராணங்களிலும் எல்லாப் புராணங்களிலும் காணக் கூடிய சில அற்புதங்களும், உயர்வு நவிற்சிப்பான்மையில் கூறப்பெறும் சில விஷயங்களும் காணப்பெறினும், அக் காரணங்களால் அவைகளைக் குறைவாக மதிக்கமுடியாது. செய்யுட்களின் நடையும் வாக்கும் சுவையுடன் அமைந்திருக்கின்றன. உமாபதி சிவாசாரியார் இப் புராணங்களை எழுதினார் என்ற பழைய மரபை ஒதுக்குவதற்குத் தகுந்த காரணங்கள் இல்லை. இப்புராணங்களின் உட்பொருளைத் தெரிந்துகொள்ள முயல வேண்டும். அது சரித்திர ஆராய்ச்சியின் முடிவுகளுக்கு முரண்படுகிறதா என்று கவனிக்கவேண்டும்.

திருமுறைகண்ட புராணம் கூறும் முக்கியமான செய்தி என்னவென்றால் இராசராச சோழனால் தூண்டப் பெற்று நம்பியாண்டார் நம்பி பதினொரு திருமுறைகளைத் தொகுத்தார் என்பதுதான். முதல் ஏழு திருமுறைகளை நம்பியாண்டார் நம்பிதான் தொகுத்தார் என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. மற்ற

1. காந்தி புராணம்—ஸ்ரீமதி. பண்டிதை அசலாம்பிகை அம்மாள் 1923. முன்னுரை, திரு. வி. கலியாணசுந்தர முதலியார், பக்கம் - 7.

நான்கு திருமுறைகளையும் நம்பி தொகுத்திருக்க முடியாது என்று திட்டமாய் வரையறுத்துக் கூறுவதற்குப் போதிய சரித்திரச் சான்றுகள் இல்லை. நம்பியாண்டார் நம்பி எப்போது இறந்தார் என்பதைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. அவர் இராசராசன் காலத்திலும் அவன் மகன் இராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்தார் என்று கருத இடமிருக்கிறது. எட்டு முதல் பதினொன்று வரையுள்ள திருமுறைகள், முதல் ஏழு திருமுறைகளுக்கு வெகு காலத்திற்குப் பின்னால் தொகுக்கப் பெற்றன என்பதற்கு இலக்கியச் சான்றோ சரித்திரக் குறிப்போ அல்லது புராணக் கதையோ இல்லை. சேக்கிழாரின் பெரியபுராணம் பனிரண்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் இயற்றப் பெற்று அவர் காலத்திலேயே பனிரண்டாம் திருமுறையாக ஏற்றுக்கொள்ளப் பெற்றது. ஆகையால் சேக்கிழார் காலத்திற்கு முன்பே திருமுறைகள் பதினொன்றாக வகுக்கப்பெற்றிருந்தன. நம்பியாண்டார் காலத்திற்குப் பின்னும், சேக்கிழார் காலத்திற்கு முன்னும் யாரோ சிலர் எட்டு முதல் பதினொரு திருமுறைகளைத் தொகுத்திருக்கக் கூடும் என்பதற்கு ஒருவித ஆதாரமும் இல்லை.

எட்டாந் திருமுறையாக மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் அமைக்கப் பெற்றன. மாணிக்கவாசகர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தார் என்பதுதான் பெரும்பாலான ஆராய்ச்சியாளரின் முடிபு. நம்பியாண்டார் மாணிக்கவாசகரின் பெருமையை உணர்ந்திருந்தார் என்பது அவர் பாடல் ஒன்றிலிருந்து விளங்குகிறது.[1] இது

1. வரு வாசகத்தின் முற்றுணர்ந்தோனை வண்டில்லைமன்னை
திரு வாதவூர்ச் சிவபாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார்தரு திருக்கோவை கண்டேயும் மற்றப்பொருளைத்
தெருளாத உள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே.
—கோயிற் றிருப்பண்ணியர் விருத்தம். 58 நம்பியாண்டார் நம்பி.

உண்மையானால் நம்பியாண்டார் நம்பி, தமது திருத்தொண்டர் திருவந்தாதியில் மாணிக்க வாசகரைப் பற்றி ஏன் பாடவில்லை என்று சிலர் கேட்கலாம். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையைப் பின்பற்றியே நம்பியாண்டார் நம்பி தமது அந்தாதியைப் பாடியதால், அவர் அதிலுள்ளோரையும் சுந்தரரையும் சேர்த்துப் பாடித் தனி நாயன்மார்களையும் நாயன்மார் கூட்டங்களையும் அறுதியிட்டு, அவர்களுக்குத் தனிப் பெருமையையும் மரபையும் முடிவாக அளித்தார். சேக்கிழாரும் சுந்தரரையும் நம்பியாண்டார் நம்பியையும் பின்பற்றியே திருத்தொண்டர் புராணத்தை இயற்றினார். ஆதலால் இவ்விருவரும் மாணிக்கவாசகரின் பெருமையை உணர்ந்திருந்தும் அவரை நாயன்மார் கூட்டத்தில் சேர்க்காமல் இருந்தார். திருத்தொண்டர் திருவந்தாதியைப் பாடும்போது நம்பியாண்டார் நம்பி சமய மரபைப் பின்பற்றிச் சமயப் பணியையே செய்தார். ஆனால் திருமுறைகளைத் தொகுக்கும்போது சமயப் பணியுடன் தமிழ் இலக்கியப் பணியும் அவர் ஆற்றினார். ஆகையால் சிவஞானப் பண்பும் தமிழ்த் தேனும் ஒழுகும் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் எட்டாந் திருமுறையாக நம்பி அமைத்ததில் என்ன வியப்பு இருக்கிறது? பக்திச் சுவையும் இசைச் சுவையும் மிகுந்த ஒன்பதின்மர் இயற்றிய பாக்கள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற பெயருடன் ஒன்பதாந் திருமுறையாக ஆக்கப்பெற்றன. ஆகமங்களின் உட்பொருளையும், சிவன் சக்தி வழிபாட்டின் தத்துவத்தையும், யோகத்தின் உண்மையான தன்மையையும் மாண்பையும், ஆத்மஞானத்தின் ஒளியையும் பற்றித் திட்பமான தமிழ்ப் பாடல்களடங்கிய ஞானக் களஞ்சியமாயிருந்த திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையாயிற்று. இலக்கியச் சுவையும் கவிதைப் பொலிவும் நிறைந்த பதினொரு

கவிகள் இயற்றிய பிரபந்தங்கள் பதினோராம் திருமுறையில் அடங்கின. ஒன்பதாந் திருமுறையும், பதினோராந் திருமுறையும் சைவ மணம் கமழும் தொகை நூல்கள். இவைகளை இயற்றிய புலவரில் கருவூர்த் தேவர் ஒருவர் தான் மற்றவர்களைவிடப் பிந்திய காலத்தவர். இவர் காலத்தில் நம்பியாண்டார் நம்பி வயோதிகராயிருந்திருப்பார். முதல் ஏழு திருமுறைகளைத் தொகுத்த பின் பல வருடங்கள் கழித்து நம்பியாண்டார் நம்பி பின்னுள்ள நான்கு திருமுறைகளையும் தொகுத்திருக்கிறார் என்று தெரிகிறது. முதல் ஏழு திருமுறைகள் தொகுக்கப்பெற்ற பின்னரும், பின் நான்கு திருமுறைகள் தொகுக்கப்பெற்றதற்கு முன்னரும் நாலாயிர திவ்யப் பிரபந்தம் நாதமுனிகளால் ஒழுங்குபடுத்தப் பெற்றிருக்க வேண்டும் என்று கொள்ளலாம். இது பின்னர் விளக்கப் பெறும்.

திருமுறைகளைத் தொகுத்ததில் பொருத்தமான முறை ஒன்றும் காணப் பெறவில்லை என்றும் காலத்தால் முந்தியவர் பாடல்கள் பின்னுள்ள திருமுறைகளிலும், பிந்தியவரின் பாக்கள் முன் வைத்த திருமுறைகளிலும் தொகுக்கப்பட்டிருப்பது ஒழுங்கல்ல என்று குறை கூறப்பட்டிருக்கிறது. இத்த வாதத்தில் வலியிருப்பதாகத் தெரியவில்லை. திருமுறைகளின் வைப்பு முறையிலிருந்தே அவை அமைக்கப்பெற்ற கொள்கைகளை ஊகித்தறியவேண்டும். இன்று, சிலருக்கு எது சரியான முறை என்று தோன்றக்கூடுமோ அதை நம்பி கைக்கொள்ளவில்லை என்று குறை கூறுவது நேர்மையான விமரிசன உத்தி அல்ல. திருமுறைகள் தொகுக்கப் பெற்றிருப்பதில் அவை தோன்றிய கால வரிசைப்படி வைக்கப் பெறவில்லை என்பது வெளிப்படை. பொதுவாக சரித்திர உணர்ச்சியும் கால உணர்ச்சியும் நமது நாட்டில் குறைவாகவே இருந்திருக்கின்றன; காலத்

தைத் தெளிவாகக் குறிப்பிட்டு எழுதி வைக்கும் முறை அருகியே காணப்பெறுகிறது. காலத்திற்கு முக்கியத்வம் அளித்து அதைத் தெரிந்துகொள்ளப் புலவர் அவாக் கொள்ளாமல் இருந்தது இந்த நிலைமைக்கு ஒரு காரணமாயிருக்கலாம். திருமுறைகளைக் கால வரிசையில் வைக்கவேண்டும் என்று ஏற்பட்டால், நக்கீரர், காரைக் கால் அம்மையார், திருமூலர், ஐயடிகள் காடவர்கோன், அப்பர், சம்பந்தர் என்ற வரிசையில் அவை தொகுக்கப் பெற்றிருக்கவேண்டும். அவ்வாறு செய்யப் பெற்றிருந் தால் திருமுறைகள் இப்போதுள்ள ஒழுங்கும் திட்பமும் பொருத்தமும் பெற்றிரா என்பது நிச்சயம். திருமுறை களின் ஒழுங்கும், அடைவும் வரிசைக்கிரமமும் ஏதோ சில கொள்கைகளைத் தழுவியே அமைந்திருக்கின்றன என்பதில் ஐயம் இல்லை. அவைகளைக் கண்டுபிடிக்கவே ஆய்ந்த சிந்தனையாளர் முயல வேண்டும். தவிரவும் இராசராசன், தனது கருத்தைத் தெரிவித்தவுடன் நம்பி யாண்டார்நம்பி ஒரு குறிப்பிட்ட காலத்திலோ, அல்லது சில வருடங்களிலோ திருமுறைகளைத் தொகுத்திருப் பார் என்று நினைப்பது தவறு. அவர் நீண்ட காலமாகப் பெரு முயற்சியில், பல புலவருடைய துணையுடன் ஈடு பட்டுத்தான் இப்பணியை முடித்திருக்கவேண்டும். தொகுப்பு வேலை முடிவதற்கு முப்பது அல்லது நாற்பது வருடங்கள்கூட ஆகியிருக்கலாம். நூற்றுக்கணக்கான திருப்பதிகளுக்குப் போய் ஆங்காங்கேயுள்ள பலரைக் கேட்டுச் சுவடிகளைப் பெற்ருே அல்லது பார்த்து எழுதிக் கொண்டு வந்தோ அவைகளைப் பரிசோதனை செய்து சரி பார்த்துத்தான் நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைத் தொகுத்திருக்க வேண்டும். அரசனுடைய ஆதரவு அவருக்கு ஊக்கம் கொடுத்துப் பெருந்துணையாய் இருந் திருக்கும் என்பது குறிப்பிடத் தக்கது.

திருமுறைகளைத் தேடித் தொகுக்கும் பணியை நம்பி யாண்டார் நம்பி முதலில் சமய நோக்குடனேயே தொடங்கினர். போகப் போகக் கிடைத்த பாடல்களைப் படித்துப் பாடி அவைகளின் அருமையையும் பல் வேறு நயங்களையும் துய்த்து இறுதியில் அதை ஒரு மாபெரும் இலக்கியப் பணியாகவே ஆக்கி முடித் தார். இந்த உண்மையை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால்தான் திருமுறைகளின் தொகுப்பு முறை யில் உள்ள ஏற்றமும் பொருத்தமும் விளங்கும். நம்பி யாண்டார் நம்பியின் நோக்கம் என்ன? சிவபெருமானை மனங்கசிந்து துதித்தும் அவர் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களைப் போற்றியும் சைவ சமயத்தின் அடிப் படையான தத்துவங்களையும் கொள்கைகளையும் விளக்கி யும் உள்ள பாடல்கள், இலக்கியம் ஆகியவைகளில் சிறந்தவை என்று தாம் கருதிய எல்லாவற்றையும் நம்பி யாண்டார் நம்பி தொகுக்க முன் வந்திருக்கிறார். தமிழ் நாட்டில் சிவன் விஷ்ணு கோவில்களும், இக்கடவுள் களைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடும் சமயங் களும் கிறிஸ்து சகம் ஆரம்பகாலத்திலேயே பரவியிருந் தன. இவைகளுடன் சமணமும் பௌத்தமும் நிலைத் திருந்தன. அக்காலத்தில் ஆலயங்களும், சமண பௌத்தப் பள்ளிகளும், பெரும்பாலும், மண், மரம் முதலியவைகளால் கட்டப்பெற்ற சாதாரணக் குடில் களாகவே அமைந்திருந்தன. பல்லவ அரசர் காலத்தில் தான் கற்பாறைகளில் குடைந்தாக்கப்பெற்ற குகைக் கோவில்கள் தோன்றின. சுமார் கி. பி. ஏழாம் நூற் றாண்டுக்குப் பின்னரே ஆலயங்கள் கற்களால் மிகப் பெரியதாயும் ஆகம முறைப்படியும் சிற்பக் கலையைத் தழுவியும் நாடெங்கும் கட்டப்பெற்ற கற்றளிகளாயின. சோழ வம்ச அரசரும் ஏனைய அரசரும், மக்களும் இவ் விதப் பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டதன் விளைவு

தான் இன்று தமிழ்நாட்டின் தனிச் சிறப்பாக விளங்கும் அற்புதமான கற்கோவில்கள். இவை தமிழரின் ஆன்ம வாழ்வையும் நாகரிகப் பண்பையும் எடுத்துக்காட்டக் கூடிய அழியாத கலைச் சின்னங்கள். கட்டிடக் கலையின் காவியங்களாயும் சிற்பக் கலையின் அற்புதங்களாயும் விளங்கும் இக் கோவில்களில் பெரும்பாலானவை சமய குரவர்களின் பாடல்கள் பெற்றவையாயிருப்பது சிந்திக் கத் தக்கது. நாயன்மார்கள் ஆழ்வார்கள் ஆகியவர்களில் தலை சிறந்தவர் இவ்வாலயங்களுக்குச் சென்று அங்கே எழுந்தருளி யிருக்கும் மூர்த்திகளைப் பற்றிப் பாடிக் கோவில்களைச் சிறந்த முறையில் புனிதமாக்கினது மன்றி, தமிழ் இலக்கியத்தை அரிய முறையில் வளம் பெறச் செய்தார். நாயன்மார், ஆழ்வார்களின் பாடல் களுக்கு அவர்களுடைய கவிதைப் புலமை, பக்தி ஆகியவைகளுடன், ஆலயங்களும் ஒரு முக்கியமான மூல காரணமாயிருந்தது மறக்க முடியாத ஒரு உண்மை. இந்தக் கருத்துடன் பார்த்தால் திருமுறைகளின் வைப்பு முறை ஒருவாறு புலப்படும்.

தமிழ்நாட்டில் சமண பௌத்தங்களின் ஆதிக்கத் தைக் குன்றச் செய்து, சைவத்தை நிலைநாட்டி, அச் சமயம் போற்றும் சிவத்தைப் பரம்பொருளாகக் கொண்டு, அப்பெருமான் ஜீவன்களை உய்விக்கும் பொருட்டு உலகத்தில் தோன்றித் தம் உறைவிடமாகக் கொண்டிருப்பதாகக் கருதப்பெறும் சிவாலயங்களின் மகிமையை எடுத்துக் காட்டிய முதலி மூவரின் பாடல் களுக்கு ஏற்றமும் முதன்மையும், தமது திருமுறைத் தொகுப்பில் நம்பியாண்டார் நம்பி கொடுத்திருப்பதற்குக் காரணமும் தேட வேண்டுமா? அவைகளின் இசை கலந்த கவிதைச் சுவை கற்றோர்க்கும் கல்லாதார்க்கும் அளவற்ற இன்பம் தரவல்லது. எனவே திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப்

பாடல்களுக்குத் தனிச் சிறப்பு அளித்து அவைகளை முதலில் ஏழு திருமுறைகளாக நம்பி வகுத்தது மிகவும் பொருத்தமானது. வேறு விதமாக அவர் இந்தப் பணியைச் செய்திருக்க முடியாது. பின்னர் தொகுத்த ஏனைய திருமுறைகளை அமைப்பதிலும். நம்பி, தமது சமயப் பற்றுடன், அறிவாற்றலையும் செந்தமிழ்ப் புலமையையும் காட்டியிருக்கிறார்.

இம் மூவரும் திருவருட் செல்வரா யிருந்தபோதிலும், ஒவ்வொருவரின்.வாழ்க்கையிலும் சமயப் பணியிலும் சில தனிச் சிறப்புகள் இருந்தபோதிலும், தமிழ் நாட்டுச் சிவனடியார் கூட்டத்திற்கெல்லாம் என்றென்றும் நிலைத்த தலைமை வகிக்கும் பெருமை ஞானசம்பந்தருக்கே உரியது என்பது சைவ சமய மரபையும் வரலாற்றையும் தெரிந்தவருக்கு எளிதில் புலப்படும்: ஏன்? பிள்ளைப் பருவத்திலேயே பேரின்ப ஒளியைப் பெற்றவர் அவர்; பிறப்பினால் வாழ்வில் ஏற்படக்கூடிய மாசு கொஞ்சங்கூடப் படிந்திராத பெருந்தகை; பரந்துபட்டிருந்த மக்களின் சிவ வழிபாட்டைப் பேராற்றலுடன் பண்படுத்திச் சைவ சமயமாக உருவாக்கி, அதைச் சமணரின் எதிர்ப்புகளுக்கிடையே நிலை நாட்டித் தொன்று தொட்டுத் தமிழ் வளர்த்த பாண்டிய வம்சத்தினரை இச் சமயத்தில் ஈடுபடச் செய்த ஞானச் செம்மல்; கல்லாமலே திருவருளால் கவிதைப் புலமை படைத்த தமிழ்க் கலைக் கடல். தாம் சென்று வணங்கிய பல தலங்களின் இயற்கை அழகுகளை அநுபவித்துப் பெற்ற உள்ளக் கிளர்ச்சியையும் பேரின்ப உணர்ச்சியையும் கற்பனைப் பாங்குடன் செறிந்த விருத்தப் பாக்களால் பாடிய இன்னிசைக் கவி.[1] இவருடைய பாடல்

---

1. இயற்கை அழகுகளில் திருஞான சம்பந்தர் ஈடுபட்டுப் பாடின பாடல்களுக்கு உதாரணமாக அவருடைய திருக்குற்றாலப் பதிகத்தைக் கூறலாம். இந்தப் பதிகத்தின் இசைச் சுவையையும்

களுடன் திருமுறைகளை நம்பி தொடங்கியிருப்பது எந்தக் கோணத்திலிருந்து ஆராய்ந்தாலும் பொருத்தமாயிருப்பது வெளிப்படை.

அப்பரோ செப்புதற்கரிய பெருமைகள் பெற்ற புலமை வாய்ந்தவர். அற்புதங்கள் மலிந்த வாழ்க்கை அவருக்குக் கிட்டியது. அதன் முற்பகுதியில் அவர் பல துறைகளிலும் கற்றுத் தேர்ந்து, சமணராய்ப் பல ஆண்டுகள் தம் வாழ்நாளைக் கழித்துப் பின்னர் சைவத்தைத் தழுவி, அச் சமயம் போற்றும் பரஞ்சோதிக்கு அடிமை பூண்டதால், சமணத்தைச் சேர்ந்த பல்லவ அரசனின் பல கொடுமைகளுக்காளாகித் திருவருளால் அக்கொடுமைகள் பயனற்றுப் போனதால், அவ்வரசனையும் சைவத்தைப் பற்றும்படி செய்து, ஆளுடைய பிள்ளையாரின் தோழமை பெற்று, ஒரு சமயம் அவர் போகும் முத்துச் சிவிகையைத் தம் தோளில் தாங்கித் திருத் தொண்டாற்றி, நாடெங்கும் சுற்றிச் சிவபெருமான்மீது, எளிய இனிய தமிழில், அனல் போன்ற உணர்ச்சியுடன் நூற்றுக்கணக்கான பதிகங்களைச் சமைத்தார்.[2] அவரை முன்னோர் திருநாவுக்கரசர் என்று அழைத்ததிலிருந்து அப்பரின் அமுத வாக்கின் சிறப்பு விளங்கும்.

---

இலக்கியச் சுவையையும் நோக்கினல் அது இந்த இனப் பாடல்களின் சிகரமாய் இருப்பது புலப்படும். இதற்கு இணையான பாடலைத் தமிழ் இலக்கியத்தில் பார்ப்பது அரிது; அதன் கவிதைச் சுவை அவ்வளவு பூரணத்வம் பெற்றிருக்கிறது.

2. அப்பரின் பாடல்களில் குறிப்பிட்ட ஒரு பகுதி மற்றப் பகுதிகளைவிடச் சிறந்தது என்று கூறுவது எளிதல்ல. அவர் இயற்றிய பதிகங்களில் பெரும்பாலானவை இசைத் தன்மையிலும் கவிதைச் சுவையிலும் உயர்ந்து விளங்குகின்றன. இவைகளுக்கு உதாரணமாக அவருடைய ஐயாற்றுப் பதிகங்கள், திரு ஆரூர்ப் பதிகங்கள், தனித் திருவிருத்தங்கள், தனிக் குறுந்தொகைகள், திருத்தாண்டகங்கள் போன்றவைகளைக் கூறலாம்.

இல்லறத் தொடர்பு இல்லாத வாழ்வு நிறைவு பெற்றதில்லை என்பதைக் காட்டுவது போல், தாம் சிவ சாயுச்சியம் அடைவதற்கு முன்னல் சம்பந்தர் மணம் செய்து கொண்ட போதிலும், அவரும் அப்பரும் துறவுப் பண்புகளைத் தழுவியே சமய வாழ்க்கையில் ஈடுபட்டு மெய்ஞ் ஞானப் பேற்றின் முழுமையையும் கண்டார். துறவிகள் பால் மக்கள் மரியாதையையும் வணக்கத்தையும் தெரிவிப்பது இயல்பு. ஆனல் உலகியல் வாழ்க்கையை நடத்திச் சமயப் பாதை மூலம் ஈசனின் திருவடிகளை அடைந்த பக்தர்களிடம் அளவற்ற அன்பு கொள்வது மக்களுக்கு இயல்பு. இந்த முறையில் சுந்தரரின் வாழ்க்கை மக்களைக் கவர்ந்தது. அவர், தம்பிரானுக்குத் தோழமை பூண்டதும், இரண்டு புண்ணியவதிகளைக் காதலித்து அதில் விளைந்த இன்ப துன்பங்களுக்காளானதும், தம்மைத் தடுத்தாட் கொண்ட சிவபிரானையே ஊடின ஒரு காதலியிடம் தூதனுப்பியதும், இது போன்ற சம்பவங்களும் கதைகளும் சுந்தரரின் வாழ்கையைச் சுவைபடுத்திப் புனிதமாக்கின. அவருடைய தேவாரப் பாடல்களில், சம்பந்தர், அப்பர் பாசுரங்களில் காணப்பெறும் இலக்கிய நயங்களும் இசைத் தன்மையும் பக்திச் சுவையும் பெரும்பாலும் காணப் பெறுகின்றன. அடியாரைத் தொழுது அவருக்குப் பணி செய்வதுதான் ஆண்டவனைப் போற்றும் முறைகளில் எல்லாம் சிறந்தது என்று வைணவத்தில் வலியுற்று நிலவிய ஒரு கருத்தைச் சுந்தரர் கொண்டு, திருத்தொண்டத் தொகையைப் பாடி நாயன்மார் வழிபாட்டை ஒழுங்குபடுத்தியதுடன் சுமார் மூன்று நூற்றுண்டுகளுக்குப் பின்னர் திருத்தொண்டர் புராணம் சேக்கிழாரால் பாடப் பெறுவதற்கும் விதை விதைத்தார்.

அடங்கல் முறை என்ற புனிதத் தன்மைபெற்ற இம் மூவரின் பதி இலக்கியத்திற்கும் சில பொதுவான இயல்புகள் இருக்கின்றன. இலக்கிய நோக்குடன் பார்ப்பவருக்கு இவை புலப்படும். விருத்தப்பா அமைப்பிலும், உணர்ச்சி வசப்பட்டுப் பாடும் மனக் கனிவிலும், சாதாரண மக்கள் பயிலும் அழகான தமிழ்ச் சொற்களை அடுக்கடுக்காக வைத்துத் தித்திக்கும் இசைத் தமிழைச் சமைக்கும் திறனிலும், வேதாகமங்கள் புராண இதிகாசங்கள் ஆகியவைகளிலிருந்து எடுத்தாளப் பெறும் கருத்துக்களிலும், கதைகளிலும் கற்பனையிலும் இப் பொதுமையைக் காணலாம். இம் மூவரின் கவிதைப் பெருமையை அவர் பாடல்களைத் தொகுத்துத் திருமுறைகளாக ஆக்கின நம்பியாண்டார் நம்பி மறக்கவில்லை. திருஞான சம்பந்தரை 'அருந் தமிழாகரன்' 'முத்தமிழாகரன்' என்றும், அப்பரைக் 'கவியோகி' என்றும், சுந்தரரை 'மதுரகவி' என்றும் நம்பியாண்டார் நம்பி போற்றியிருக்கிறார்.

தனி நாயன்மார் அறுபத்து மூவர் என்று அறுதியிட்டுச் சுந்தரரைப் பின்பற்றித் திருத்தொண்டத் திருவந்தாதியைப் பாடிய நம்பி, அவர்களில் புலவராயிருந்தவர் பாடல்களை எல்லாம் திருமுறைகளில் சேர்த்து, மிகச் சிறந்த கவிகளாயிருந்தவரின் பாடல்களையே முதல் ஏழு திருமுறைகளாகத் தொகுத்திருப்பது கவனிக்கத் தக்கது. நாயன்மார்களில் முதலி மூவரைத் தவிர்க் கவிகளாயிருந்தவரும் மூவரே. திருமந்திரம் இயற்றிய திருமூலரும் சில பிரபந்தங்களைப் பாடிய காரைக்கால் அம்மையாரும் சேரமான் பெருமாளுமே இம்மூவர். திருமூலர் தேவாரம் பாடிய மூவருக்கும் முந்தியவராயும் கவி என்ற முறையில் அவர்களுக்குச் சமமானவராயுமிருந்த போதிலும், திருமந்திரம் திருமுறைகளின் தொகுதியினின்றும் எக்காரணத்

தாலும் ஒதுக்க முடியாத வேறு சில பெருமைகளைப் பெற்றிருந்த போதிலும், அது முழுவதும் தலம் மூர்த்தி களையே பாடிய பதி இலக்கியமாக இல்லாததால் அதை நம்பி, எட்டாவது திருமுறையாகக் கொள்ளாமல் சற்றுப் பின்னுல் வைத்துப் பத்தாவது திருமுறையாக்கினுர் என்று ஊகிக்கலாம். திருமந்திரத்தில் சிவபெருமானின் முழு முதற் கடவுள் தத்துவமும் உமையின் அருளும் சக்தியும் பாடப் பெற்றிருந்த போதிலும், அதில் யோகம், தத்துவம், அறம் ஆகியவைகள் சம்பந்தமான பல விஷயங்களும் கலந்து பொருள் எளிதில் தெரியக் கூடாத பாக்களில் மறைந்து கிடக்கின்றன. இந்தக் காரணத்தால் சைவ சமயிகளில் பெரும்பாலோர் திரு மந்திரத்தைத் திருமுறை யென்பதற்காக வாயளவில் போற்றி விடுவார்களே யொழிய அதைப் படித்துப் பொருள் தெரிந்து அநுபவிக்க முயலுவதில்லை; இந்த நூலிலுள்ள பாடல்களும் பொதுவாகச் சிவாலயங்களில் தேவாரங்களைப் போல் வழிபாட்டுடன் பாடப் பெறு வதும் இல்லை.

ஆதலால் எட்டாந் திருமுறையாக மாணிக்க வாசகரின் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் நம்பியாண்டார் நம்பி அமைத்தார். திருக்கோவை யாரையும் எட்டாந் திருமுறையில் நம்பி வைத்தார் என்ற விபரம் திருமுறை கண்ட புராணத்தில் இல்லை. இதனுல் திருக்கோவையார், உமாபதி சிவாசாரியார் காலத்திற்குப் பின் எட்டாந் திருமுறையில் சேர்க்கப்பட் டிருக்க வேண்டும் என்று கொள்வது பொருத்தமில்லை. புராணத்திலுள்ள சிறு பிழைகள், விடுதல்கள் ஆகியவை களில் இதுவும் ஒன்று. இவ்வித பிழைகளுக்கு உதாரண மாக, புராணம் அப்பரின் தேவாரப் பாடல்களின் தொகையைக் கூறியிருப்பதும் மற்றென்று. சுந்தரர், தமது தேவாரத்தில் அப்பரின் பாடல்களின் தொகையை

"இணைகொள் ஏழெழு நூறிரு பனுவலீன்ற வன்திரு நாவினுக் கரையன்" என்று குறிப்பிட்டிருந்தும், திருமுறை கண்ட புராணம் இதை நாற்பத்தொன்பதாயிரம் என்று கூறுகிறது. ஆனால் நம்பிக்குக் கிடைத்த அப்பரின் பதிகங்கள் முந்நூற்றுப் பனிரண்டுதான். இதனால் சுந்தரர் காலத்திலிருந்த அப்பரின் பாடல்களின் பெரும் பகுதி நம்பியாண்டார் நம்பி காலத்தில் கிடைக்கவில்லை என்று தெளிவாகிறது. தவிரவும் புராணம் நேரடியாகச் சொல்லியிருக்கும் விஷயங்களே ஒப்புக் கொள்ளத்தக்கன அல்ல என்று சிலர் கருதும் இக் காலத்தில் அது திருக்கோவையாரைக் கூறவில்லை என்பதிலிருந்து, அந்நூல் எட்டாந் திருமுறையில் அமைக்கப் பெற்றிருக்கவில்லை என்று கூறுவது பொருந்தாது.

மாணிக்கவாசகர் தேவாரம் பாடிய மூவருக்கும் முந்தியவர் என்று நீண்ட நூல்களும் வாதாடும் கட்டுரைகளும் கடந்த ஐம்பது ஆண்டுகளில் எழுதப் பெற்றிருக்கின்றன. மாணிக்கவாசகர் கி.பி. மூன்றும் நூற்றுண்டைச் சேர்ந்தவர் என்பர் மறைமலை அடிகள், சி. கே. சுப்பிரமணிய முதலியார், கா. சுப்பிரமணிய பிள்ளை போன்ற சைவப் புலவர்; நான்காம் நூற்றுண்டைச் சேர்ந்தவர் என்று கே. ஜி. சேஷய்யர் போன்ற ஆராய்ச்சியாளர் கூறுகிருர். தமிழ்ப் புலமை பெற்ற மேனுட்டு அறிஞர் பலர், மாணிக்கவாசகருக்கு கி.பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து பத்தாம் நூற்றுண்டு வரையுள்ள காலத்தைப் பலவாருகக் குறிப்பிட்டிருக்கிருர். இவருடைய வாதங்கள் எல்லாவற்றையும் தமிழ் மாணவர் நன்கு அறிவார். மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலோ அல்லது பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்திலோ பாண்டிய மன்னன் இரண்டாவது வரகுணன் காலத்தில் இருந்திருக்க வேண்டும் என்பது தான் இக் காலத்திலுள்ள பெரும்பாலான

ஆராய்ச்சியாளரின் முடிபு. இது சரியானது என்று தோன்றுகிறது. மாணிக்கவாசகரின் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி இந்தப் பகுதிக்கு அவசியமில்லை யெனினும், இது சம்பந்தமாக சமீபத்தில் தோன்றிய ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையைக் குறிப்பிட வேண்டும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் நூற்றாண்டு மலரில் யாழ்ப்பாணத்துத் தமிழ்ப் புலவர் ஒருவர் ஒரு சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதி மாணிக்கவாசகர் மூவருக்கும் முந்தியவர் தான் என்றும் ஆனால் அவர் கி.பி. ஆறும் நூற்றாண்டில் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் கூறியிருக்கிறார்.[1]

இந்த ஆராய்ச்சியாளர் கூறும் காரணங்களாவன- மாணிக்கவாசகர் தமது குருவைப் பற்றித் திருவாசகத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அவர் தமது குரு சித்தாந்த சாத்திர சம்பிரதாயப்படி சிவபெருமானே என்று கூறிய போதிலும், அவர் மனித குலத்தைச் சேர்ந்தவர்; கோகழி நாட்டைச் சேர்ந்தவர்.[2] கன்னட பாஷையில் புலமை பெற்றவர்.[3] இவரைப் பற்றி மாணிக்கவாசகர் 'சந்திர தீபத்துச் சாத்திரனாகி' என்று குறிப்பிடுகிறார்.[4] ஆகையால் அவர் வங்காளத்தில் சந்திர கோமின் என்ற சிறந்த வடமொழி பௌத்தப் புலவர் வசித்த சந்திர தீபம் என்ற ஊருக்குப் போய்த் தமது

---

1. Annals of Oriental Research. Centenary Number. Madras University 1957. Pages 1 to 12. New Light on the Life and Times of Manicka Vachakar by S. Natesan B.A., B.L.

2. "நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி எழு கோகழிக்கரசை......"

5. பண்டாய நான்மறை. திருவாசகம்.

3. "அதெந்துவே யென்றருளாயே" அருள்பத்துப் பாடல்களின் இறுதியடி-அருள்பத்து-திருவாசகம்.

4. திருவாசகம்-கீர்த்தித் திருவகவல் 97.

பால்ய தசையில் அவரிடம் கல்வி கற்ருர். ஆனுல் மாணிக்கவாசகரின் குரு புத்த மதத்தைச் சேர்ந்த வரில்லை. அவர் பின்னர் தெற்கே வந்து உத்தர கோச மங்கையில் வசித்து மாணிக்கவாசகருக்கு குருவானுர் ஆதலால் சந்திர கோமின் என்பவர் காலத்தை வட மொழிப் புலவர் அறுதியிட்டிருக்கும் கி.பி. ஆரும் நூற் ருண்டே மாணிக்கவாசகரின் காலம். இக் காலத்தில் தமிழ் நாட்டில் பௌத்தம் வெகுவாகப் பரவியிருந்தது. மாணிக்கவாசகர், தமது குருவினிடமிருந்து புத்த சமயக் கொள்கைகளை நன்ருய்த் தெரிந்து கொண்டவராத லால், தில்லையில் இலங்கையைச் சேர்ந்த புத்த சமயி களுடன் வாது செய்து வெற்றி பெற்று அவர்களைச் சைவர்களாக்கினுர். "மிண்டிய மாயா வாதமென்னும், சண்டமாருதம் சுழித்தடித்தார்த்து" என்று மாணிக்க வாசகர் வரைந்திருப்பதில் அவர் சங்கராச்சாரியாரால் பிரபலமாக்கப்பட்ட அத்வைத வேதாந்தத்தைக் குறிப் பிடவில்லை.[1] நாகார்சுனர் தோற்றுவித்த புத்தமத உட்பிரிவான மாத்யமிக பௌத்த தத்துவத்தையே குறிப்பிடுகிருர். இந்த தத்துவத்திற்குள் மாயை என்ற கருத்து அடங்கி யிருக்கிறது. சரித்திரப் புலவர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியும் மாணிக்கவாசகர் தேவார மூவர்க்கும் முந்தியவர் என்று கொண்டிருக்கிருர்.[2]

---

1. போற்றித் திருவகவல் 54—55.

2. "My Conclusion is that Manickavasagar must be taken to have preceded the Thevaram trio" Pandyan Kingdom K. A. Nilakanta Sastry Page 67. இப்பேராசிரியர் 1950-ல் எழுதிய இந்திய சரித்திரத்தில் இந்த அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டிருக்கிருர். "Very different and much more exuberant are the out pourings of Tiruvasagam of Manickavasagar, a contemporary of Pandya Varaguna II, whose devotion is more impassioned and whose confessions are more out spoken" History of India. Vol I. Page 267 (1950)

ஆகவே திருவாசகத்தில் காணப்பெறும் 'கோகழி' 'அதெந்துவே' 'சந்திர தீபத்துச் சாத்திரனுகி' என்ற தொடர்களின் அடிப்படையில் இந்தப் புது ஆராய்ச்சிக் கட்டிடம் எழுப்பப் பெற்றிருக்கிறது.

இந்தக் கட்டுரையாளரின் ஆராய்ச்சித் திறன் நுட்ப மாயிருந்த போதிலும் அவருடைய முடிவை ஏற்றுக் கொள்வதற்கில்லே. ஏன்? மாணிக்கவாசகர் பல இடங் களில் சிவபெருமானையே தமது குருநாதராகக் கருதிப் பாடியிருக்கிருரே யொழிய, தமக்கு ஆசானுக இருந்த ஒரு மனித சந்நியாசியைப் பாடவில்லே. சாதாரண மாகக் குரு வணக்கம் தெரிவிக்கக்கூடிய நிலேயைக் கடந்து மெய்யுணர்வின் சோதியை அவர் பெற்றிருந்தது தான் இதற்குக் காரணம். 'சந்திர தீபத்துச் சாத்திரனுகி' என்பதற்கு அவருடைய குரு வங்காளத்தைச் சேர்ந்த சந்திர தீபத்திலிருந்த சந்திர கோமின் என்ற பௌத்தப் புலவரிடம் கற்றவர் என்று கொள்வது, மிகவும் வலிந்து, பல கருத்துக்களே வருவித்துக் கொண்டு பொருள் கொள்வதாகும். அப்படிக் கொண்டாலும் அவரது குரு 'சந்திர தீபத்துச் சாத்திரனுகி' என்பதால் பௌத்தராக இருந்தார் என்று தான் பொருள் படும். ஏனென்ருல் சந்திர தீபத்துச் சந்திர கோமனின் சாத்திரம் புத்த சமயத்தைச் சேர்ந்த யோகாசார உட்பிரிவைச் சேர்ந் தது ஆனுல் இந்தக் கருத்துத் தமக்கு உடன்பாடு இல்லே என்று கட்டுரையாளர் கூறுகிருர். தில்லேயில் மாணிக்கவாசகர் ஈழ நாட்டைச் சேர்ந்த அரசருடன் வந்த பல பௌத்தசமயிகளோடு வாதஞ் செய்து வென்று அவர்களேச் சைவர்களாக்கினுர் என்பது புராணக் கதையே யொழிய சரித்திர சம்பவம் இல்லே. இவ்வித நிகழ்ச்சிக்கு மாணிக்கவாசகரின் பாடல்களில் ஒருவிதக் குறிப்பும் இல்லே. ஈழத்தைச் சேர்ந்த ஏதோ ஒரு அரசனே மாணிக்கவாசகர் சைவத்தில் ஈடுபடச்

செய்தார் என்று கொள்ள வேண்டுமானால், நெல்சன் என்பவர், தமது மதுரை ஜில்லா சரித்திரத்தில் (Madura Manual) தமிழ் நாட்டிலிருந்து சைவாசாரியார் ஒருவர் ஈழ நாட்டிற்கு கி.பி. 819-ல் சென்று அக்காலத்திலிருந்த பௌத்த சமயத்தைச் சேர்ந்த அரசனைச் சைவ சமயத்தைத் தழுவச் செய்தார் என்று ராஜரத்னாகரி என்ற நூல் கூறுகிறதென்றும், இவ் வாசாரியார் மாணிக்கவாசகராய் இருக்கலாம் என்றும், ஆதலால் அவர் ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்றும் சொல்லியிருப்பது தான் பொருத்தமாயிருக்கும்.

மாயா வாதம் என்பது தமிழ் நாட்டில் ஆதிசங்கராச்சாரியாரின் அத்வைத வேதாந்தத்தைக் குறித்தெழுந்த சொற்றொடர். மாயம் அல்லது சூன்யம் என்ற கருத்து ஓரளவு நாகார்சுனரின் மாத்யமிக பௌத்த தத்துவத்தில் காணப்பெறினும், பௌத்தத்தின் நான்கு உட்பிரிவுகளில் மிகச் சிறிய பிரிவான மாத்யமிகத்தை மாயா வாதம் என்று முன்னோர் கொண்டதற்கு ஆதாரம் இல்லை. மாணிக்கவாசகர் புத்த சமயத்தைப் பொதுவாகவும் மொத்தமாகவும் குறிக்காமல் அதைச் சேர்ந்த ஒரு உட் பிரிவைப் பெரிதாகக் கூறினார் என்று கொள்வதும்பொருத்தமில்லை. மாணிக்கவாசகர்பௌத்தத்தைத் தோற்றுவித்த புத்த பகவானையே நேரடியாகக் குறிப்பிட்டு அச்சமயத்தை இகழ்ந்து கூறுகிறார்.[1] மணிமேகலையில் புத்த சமயக் கருத்துக்கள் விரிவாகக் கூறப்பட்டிருப்பதில் மாத்யமிக வாதமாவது, மாயா வாதமாவது குறிக்கப்படவில்லை. சைவ சித்தாந்த சாத்திரங்களில்

1. புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப்பட்டு நிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினால் தோணோக்க மாடாமோ.

திருவாசகம். திருத்தே, ஏணேக்கம்— 6.

மிகச் சிறந்த சிவஞான சித்தியாரில் அதை ஆக்கிய அருள் நந்தி சிவாசாரியார், பரபக்கத்தில் பௌத்தத்தின் உட் பிரிவான மாத்யமிகத்தை ஒரே பாட்டில் கூறி அதற்குப் பதில் சொல்லி விட்டு, மாயா வாதம் என்று சங்கரரின் அத்வை வேதாந்தத்தைக் காட்டி அதன் தத்துவத்தைப் பல பாட்டுக்களில் வரைந்து அதன் நுட்பங்களிலுள்ள குறைகளைக் கூறிப் பரிசீலனை செய்கிறார். அக்காலத்து வைணவ நூல்களும் மாத்வ தத்துவ நூல்களும் சங்கரரின் அத்வைத வேதாந்தத்தையே மாயா வாதம் என்று கூறி இகழ்கின்றன. ஆதலால் சங்கரரின் அத்வைத வேதாந்த தத்துவத்தின் அடிப்படையான கொள்கைகளில் மாயை என்ற கருத்தும் ஒன்றுதலால் அத் தத்துவத்திற்குத் தான் மாயா வாதம் என்ற பெயர் தமிழ் நாட்டில் எழுந்தது. இந்தப் பெயரைப் பெரும்பாலும் அந்தத் தத்துவத்தை ஏற்றுக் கொள்ளாதோர் தான் உபயோகித்தார். சங்கரர் இறந்த பின் அவருடைய சீடர்கள் தமது குருவின் ஞான தத்துவ சிகரமாகிய அத்வைத வேதாந்தத்தை ஆர்வத்துடன் நாடெங்கும் பிரசாரம் செய்ததையே "மாயா வாதமென்னும் சண்டமாருதம் சுழித் தடித்தார்த்து" என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். அத்வைத தத்துவம் ஆதிசங்கரர் காலத்திற்கு முன்னிருந்த போதிலும் அதை மிகச் சிறந்த முறையில் ஒரு அற்புத தத்துவமாக உருவாக்கியது அவர் தான். அவர் காலம் கி.பி· 788—820 என்பது பெரும்பாலான அறிஞரின் துணிபு இந்தக் காலத்திற்குப்பின் வாழ்ந்த மாணிக்கவாசகர் சங்கரரின் அத்வைத வேதாந்தத்தையே மாயா வாதம் என்று குறிப்பிடுகிறார் என்பதைப் பற்றி யாதொரு ஐயமும் இருக்க முடியாது. தவிரவும் கி.பி. ஆறும் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் முன்னேறிக் கொண்டிருந்த சமணம், சைவம், வைணவம் ஆகிய சமயங்களுடன்

பௌத்தமும் ஒருவாறு இயங்கி மற்ற சமயங்களுடன் நேசத்துடன் இருந்ததே யொழிய, அது அதி தீவிர மாகப் பரவி முன்னேற்றமடைந்து எதிர்ப்பைக் கிளப் பியது என்று கூறுவதற்குச் சான்றுகள் இல்லை. இந்த நூற்ருண்டின் இறுதியில் தான் சமயப் பூசல்கள் இலே சாகத் தொடங்கினதாகக் கொள்ளலாம். அதற்கு முன்னல் அவை தோன்றவில்லை என்று தமிழ் நாட்டின் சரித்திரத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது. ஆகை யால் மாணிக்கவாசகர் கி.பி. ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்தவர் என்றும் பௌத்த தத்துவமாகிய மாத்ய மிகத்தையே மாயா வாதம் என்ருர் என்றும் கொள்வது கொஞ்சமும் பொருத்தமில்லை.

தேவாரம் பாடிய மூவருக்கு முன் மாணிக்கவாசகர் வாழ்ந்திருந்தால் அவருடைய பெருமைக் கொப்ப அம் மூவரும் நேரடியாக அவரைக் குறிப்பிட்டுப் போற்றிப் பாடாததற்குத் திருப்திகரமான காரணம் ஒன்றும் இல்லை. இதற்குப் பலர் கூறி வந்திருக்கும் சமாதானங் களும் பொருத்தமானவை யல்ல. மாணிக்கவாசகரின் தமிழும், பாக்களும், பாவினங்களும் அவர் கையாண் டிருக்கும் சில செய்யுள் வகைகளும் பண்டைக் காலத் தவை அல்ல. திருக்கோவையாரில் இரண்டு பாடல் களில் அவர் பாண்டிய அரசன் வரகுணனைக் குறிப்பிடு கிருர்.[1] திருக்கோவையார் மாணிக்கவாசகரின் நூல் அல்ல என்று சிலர் கருதுகிருர் என்றும், அவ்வாறு கருதுவதற்கு ஆதாரங்கள் இல்லை என்றும் முன்னர்க் கூறியிருக்கிருேம். மாணிக்கவாசகர் மிகச் சிறந்த தமிழ்க் கவியாதலாலும், அவருக்குச் சிவபெருமான்மீது கரைகாணுக் காதல் ஏற்பட்டதாலும், தமிழ் இலக்கிய மரபைத் தழுவி அவர் தமது திருச்சிற்றம்பலக் கோவையை இயற்றியிருக்கிருர். இதில் வியப்போ,

1. திருக்கோவையார். 306, 327.

முரண்பாடோ ஒன்றுமில்லை. திருக்கோவையார் இலக்கியச் சுவையில், திருவாசகத்தைவிடக் குறைவாயிருக்கும் காரணத்தை வைத்து, அது மாணிக்கவாசகரின் நூலாயிருக்க முடியாது என்று கருதுவது தவறு. திருக்கோவையார் அகப் பொருள் இலக்கணத்தைத் தழுவி எழுதப்பெற்ற நூல். அதைத் திருவாசகத்துடன் ஒப்பிடக் கூடாது. தவிரவும் ஒரு கவி எழுதும் நூல்கள் எல்லாம் ஒரே தன்மையும் அளவும் உடைய நயங்களைப் பெற்றிருக்க வேண்டும் என்பதில்லை. திருவருள் பெற்ற கவிஞரும் மனிதரே. கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டிலிருந்த பேராசிரியர், திருக்கோவையாரை மாணிக்கவாசகர் இயற்றியதாகக் கருதி அதற்கு உரை எழுதியிருக்கிறார். அவர் கருதியது தவறு என்று கொள்வதற்குச் சில ஊகங்களைத் தவிர வேறு எவ்விதச் சான்றுகளும் இல்லை.

ஆகவே மாணிக்கவாசகர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ வாழ்ந்தவர் என்று கொள்வது தான் பொருத்தம். எனவே சைவ சமயாசாரியர் நால்வரில், முதலிருவர் ஏழாம் நூற்றாண்டிலும் மூன்றாவதாயுள்ளவர் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியிலும், நான்காவதான மாணிக்கவாசகர் அந்த நூற்றாண்டின் பிற்பாதியிலோ அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலோ வாழ்ந்தார் என்பது தெளிவாகிறது.[1]

---

1. சுந்தரர் இரண்டாம் நரசிங்க பல்லவன் காலத்தவர் என்றும் (தமிழ்ப் பொழில் துணர் 3 பக்கம் 206) மாணிக்கவாசகர் முதல் வரகுணன் காலத்தவர் என்றும் (பாண்டியர் வரலாறு பக்கம் 60) டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கருதுகிறார். இந்தக் கருத்து பெரும்பாலான தமிழ் அறிஞருக்கு உடன்பாடு அல்ல. அவர்கள் சுந்தரர் மூன்றும் நந்திவர்மன் காலத்தவர் என்றும் மாணிக்கவாசகர் இரண்டாவது வரகுணன் காலத்தவர் என்றும் கொண்டிருக்கிறார். இதுதான் பொருத்தமாய் இருக்கின்றது.

எட்டாந் திருமுறையிலுள்ள பாடல்கள், பெரும் பாலானவை மூவர் தேவாரப் பாடல்களைப் போல, தல மூர்த்திகளைப் பற்றிய நேரடியான தோத்திரங்களாக இல்லாத போதிலும், அவை முற்றிலும் பதி இலக்கியம் என்பதில் ஐயம் இல்லை. சிவபெருமானே நால்வரும் கண்டு அநுபவித்த பரஞ்சோதி. சிற்சில அரசர்களை இந் நால்வரும் குறிப்பிட்டிருந்த போதிலும் அவர்கள் மானிடம் பாடிய கவிகள் அல்ல. மூவர் தேவாரப் பாடல்களுக்கும் மாணிக்கவாசகரின் பாட்டுக் களுக்கும் இடையே சில வித்தியாசங்கள், நுட்பமாய் ஆராய்பவருக்குத் தென்படும். தேவாரங்களில் தத்துவ ஞானக் கருத்துக்கள் ஓரளவு ஆங்காங்கே சிதறிக் கிடக் கின்றன; இவை சைவ சித்தாந்தத்திற்கு விதைகள் போன்றவை. கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டில் இருந்த மெய்கண்ட தேவர் காலத்திற்குப் பின்னர் தான் சைவ சித்தாந்தம் முற்றிலும் வளர்ந்த ஞான தத்துவ மாயிற்று. இவ்வாறு ஆவதற்குச் சைவ சமயாசாரியரின் பாடல்களுடன் வட மொழியிலிருந்த சைவ ஆகமங் களும் முக்கிய காரணமாய் இருந்தன. மாணிக்கவாச கரின் திருவாசகத்தில் தத்துவ ஞானப் பொருண்மை வளம் பெற்று, தேவாரப் பாடல்களில் உள்ளதைவிட அதிகமாய்க் காணப் பெறுகிறது. திருவாசகத்தின் தத்துவ ஞானப் பொருண்மையை நுட்பமாகப் பரிசீலனை செய்தால் மாணிக்கவாசகரின் கொள்கைகள் பின்னுல் உருவெடுத்த சைவ சித்தாந்தக் கொள்கைகளுடன் முற் றிலும் ஒத்திருப்பதாகக் கூற முடியாது. சில பாடல்களில் அத்வைத தத்துவத்தின் த்வனியும் தென்படுகிறது. தாம் சிவனுடன் ஐக்கியமாவதாகவே கொண்ட கருத்து சில பாடல்களில் காணப் பெறுகிறது.[1] ஆனுல் உன்னதமான அநுபூதி நிலையிலிருந்து பாடப் பெறும்

1. கீழ்க்கண்ட பாட்டுக்களைப் பார்க்க.

பாசுரங்களிலும் கவிகளிலும் செங்கனல் போன்ற உணர்ச்சி தான் உருவெடுத்திருக்கும்; அவைகளில் புத்தி பூர்வமாய்த் தெளிந்து வாதம் செய்யக்கூடிய தத்துவ ஞானத்தைப் பார்க்கவோ எதிர்பார்க்கவோ கூடாது; ஏனென்ருல் அது ஞானத்தையும் கடந்த ஒரு நிலையைத் தெரிவிக்கச் சொற்களைக் கருவியாகக் கொண்டு செய்யப்பெற்ற ஒரு முயற்சி. இதில் மாணிக்க வாசகர் அற்புதமான வெற்றி யடைந்திருக்கிருர். அவருடைய பக்தி வெறியிலும், அவர் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கித் திளைத்து அநுபவித்த முறையிலும் அரிய அனல் தன்மை பெற்ற உணர்ச்சி ஒளிர்கிறது. தமிழ் மொழிக்குரிய மென்மை, இனிமை ஆகியவை முழுவதும் பூரண உருவமெடுத்திருப்பன போல் திருவாசகத்தின் பாடல்கள் அமைந்திருக்கின்றன. அவைகளின் மெருகு பெற்ற கட்டமைப்பும், எளிய நடையும், தித்திக்கும் ஓசைப் பண்பும், ரஸபாவங்களைக் காட்டக்கூடிய

---

கயல் மாண்ட கண்ணி தன்பங்கன் எனைக்கலந்தாண்டலுமே
அயல் மாண்டருவினைச் சுற்றமு மாண்டு அவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண்டு என்னுடைய
செயல் மாண்டவா பாடித்தெள் ளேணங் கொட்டாமோ.

—திருவாசகம். திருத்தெள்ளேணம்—11.

வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல் நீர்மண் கெடினுந்
தான் கெட்டலின்றிச் சலிப்பறியாத தன்மையனுக்(கு)
ஊன் கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபா டித்தெள் ளேணங் கொட்டாமோ.

—திருவாசகம். திருத்தெள்ளேணம்—18.

இதே உணர்ச்சியைத் திருமூலர் மிகுந்த தெளிவுடனும் திட்பத்துடனும் பாடியிருக்கிருர்.

ஒழிந்தேன் பிறவி, உறவு என்னும் பாசம்
கழிந்தேன், கடவுளும் நானும் ஒன்ருனேன்;
இழிந்தாங்கு இனிவரும் மார்க்கமும் வேண்டேன்;
செழும் சார்புடைய சிவனைக் கண்டேன்.

—திருமந்திரம்—2958

வெவ்வேறு விதமான மன நிலைகளின் சித்திரங்களும், பொங்கும் உணர்ச்சிப் பெருக்கும் மாணிக்கவாசகருக்கு, தமிழிலுள்ள தலைசிறந்த இசைக் கவிகளுக்குள் முதன்மையான இடத்தைக் கொடுத்திருக்கின்றன. தத்துவப் பொருண்மையை நோக்கினால் அவரும், திருமூலரும் நம்மாழ்வாரும் தன்னேரில்லா மூன்று ஞானக்கவி மூர்த்திகளாய் ஒத்த பெருமையுடன் விளங்குகிறார்கள்.

அடுத்தபடியாக ஒன்பதின்மர் பாடல்கள் கொண்ட ஒன்பதாந்திருமுறை தொகுக்கப் பெற்றது. அளவில் இது மிகச் சிறிய திருமுறை. அதில் மொத்தம் இருபத்தொன்பது பதிகங்கள் முந்நூற்றுமூன்று பாடல்களுடன் இருக்கின்றன. ஒன்பதாந்திருமுறை என்பதற்காக ஒன்பது புலவரின் பாடல்கள் எடுத்தாளப் பெற்றிருக்கலாம். இவ்வொன்பது சமயப் புலவரின் வாழ்க்கை விபரங்களைப் பற்றித் திட்டமாக ஒன்றும் தெரியவில்லை. இத்தொகுதியிலுள்ள பத்துப் பதிகங்களை இயற்றிய கருவூர்த்தேவர் ஒன்பதின்மரிலும் காலத்தால் பிந்தியவர். திருமாளிகைத்தேவர் பதிகங்கள் நான்கும் திருவாலியமுதனார் பதிகங்கள் நான்கும் காணப்பெறுகின்றன. இவர்களின் பெயர்களிலிருந்து அவர் ஆதியில் வைணவராயிருந்து பின்னால் சைவத்தைத் தழுவியிருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. இப்படிக் கருதுவதற்கு ஆதாரம் வேறு ஒன்றும் இல்லை. சேந்தனார் திருவிசைப்பாவில் மூன்றும் திருப்பல்லாண்டு பதிகமும் பாடியிருக்கிறார். பூந்துருத்திநம்பிகாடநம்பி, புருடோத்தமநம்பி ஆகியவர்களில், ஒவ்வொருவரின் பதிகங்கள் இரண்டே தொகுக்கப் பெற்றிருக்கின்றன. சேதிராயர், கண்ட ராதித்தர், வேணாட்டடிகள் ஆகியோரின் பதிகங்கள் ஒவ்வொன்றுதான் சேர்க்கப்பட்டிருக்கின்றது. ஒன்பதாந்திருமுறையிலுள்ள எல்லாப் பாடல்களும் அமைப்பிலும், இசையிலும், தன்மையிலும் மூவர் தேவாரங்களை

ஒத்தவை; இவைகளில் கவிதைச் சுவை நிரம்பிய பாடல்கள் அநேகம் இருக்கின்றன. பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தைப் பற்றி முன்னல் கூறப்பட்டிருக்கிறது. அது சொற்சுவையிலும் பொருட்சுவையிலும் சிறந்து விளங்கும் ஞானத் தமிழ் நூல்; சில இயல்புகளில், திருமுறைகள் எல்லாவற்றிலும் தலைசிறந்தது. பதினோராம் திருமுறை ஒரு பெரிய தொகை நூல். அதில் நம்பியாண்டார் நம்பியின் பாடல்களுள்பட பதினொரு புலவர் இயற்றிய முப்பத்தொன்பது பிரபந்தங்கள் அடங்கியுள்ளன; முதலிலுள்ள திருவாலவாயுடையாரின் திருமுகப் பாசுரத்தையும் சேர்த்தால் நாற்பதாகும். பதினொரு புலவர் செய்த இலக்கியம் பதினோராந்திருமுறையாயிற்று என்று தோன்றுகிறது. இத் திருமுறையிலுள்ள பாடல்கள் எல்லாம், ஏனைய திருமுறைகளிலுள்ள பாடல்களினின்றும் வேறுபட்டுப் பல்வேறு பிரபந்த வகைகளைச் சேர்ந்ததாகவே காணப் பெறுகின்றன.

பதினோராம் திருமுறையிலுள்ள பாடல்களின் பொருள் சமயச் சார்புடையதாய் இருந்த போதிலும், அவை பெரும்பாலும் இலக்கிய நோக்குடனேயே தொகுக்கப்பட்டிருக்கின்றன என்பது வெளிப்படை. முன்னுள்ள பத்துத் திருமுறைகளின் பாடல்கள் சிவபெருமானையே நடுநாயகமாகக் கொண்டு பாடப் பெற்றவை. ஆனல் பதினொன்ரும் திருமுறையில், சிவபெருமானுடன், விநாயகர், முருகன் போன்ற தெய்வங்களையும், ஞானசம்பந்தர் போன்ற சமயாசாரியரையும், திருத்தொண்டர் கூட்டங்களையும், நாயன்மார்களையும், விசேஷமாகப் போற்றி எழுதப்பெற்ற பாடல்களையும் காண்கிறோம். அத்துடன் அவை எல்லாம், அந்தாதி, இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, உலா, ஆற்றுப்படை' நான்மணிமாலை, கலம்பகம் போன்ற பிரபந்த வகை

களில் இயற்றப் பட்டிருக்கின்றன என்பது இத்திரு முறையின் இன்னொரு சிறப்பாகும். இவ்வாறு வெவ் வேறு காலங்களில் தோன்றிய பல திறப்பட்ட பாடல் களையும் பிரபந்தங்களையும் ஏன் தொகுத்தார் என்ற கேள்விக்கு ஒரே ஒரு விடைதான் உண்டு. சைவசமய விஷயங்களைப் பொருளாகக் கொண்டு நல்ல இலக்கியச் சுவையுடன் இயற்றப் பெற்றிருந்த பிரபந்தங்கள் எல் லாம் அக்காரணம் பற்றியே தொகுக்கப் பெற்றன என்று கொள்வதுதான் பொருத்தமாயிருக்கும். இது நம்பியாண்டார் நம்பியின் தெளிந்த இலக்கியப்பணி. மேலே கூறப்பெற்ற பிரபந்த வகைகள் எல்லாம் பிற் காலத்தில் தான் பெரிதும் வழங்கின. எனினும் அவை பழமையான காலத்திலேயே பெரிதும் புலவரால் ஓரளவு கையாளப் பெற்றிருக்கின்றன என்பதற்குப் பதினோராம் திருமுறையிலுள்ள பாடல்கள் சான்று பகர் கின்றன. தமிழ்க் கவிதைக்கலையும், அதற்கு உறு துணை யாயிருந்த யாப்புக்கலையும், வளர்ந்து கொண்டே வந்திருக்கின்றன. தேவாரங்கள், பிரபந்தம் எழுதப் பெற்ற காலத்தில் விருத்தப்பா புலவரால் பெரும்பாலும் கையாளப் பெற்றது; அத்துடன் பிரபந்த வகைகளும் தமிழ்ப் புலவரைக் கவர்ந்தன. இந்த நிலையைப் பிரதி பலிக்கும் முறையில் பதினோராம் திருமுறையிலுள்ள பிரபந்தங்கள் தொகுக்கப் பெற்றிருக்கின்றன என்பது அதன் இலக்கியச் சிறப்புகளில் ஒன்று. இத்திருமுறை யிலுள்ள பிரபந்தங்களில் கலம்பகத்தைத் தவிர, மற்றப் பாட்டுக்கள் எல்லாம், அந்தந்த பிரபந்த வகையில் முதல் முதலாக ஆக்கப் பெற்றவை என்பது கவனிக்கத் தக்கது. இந்தக் காரணத்தினலேயே அவை தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கின்றன என்று கருதுவதும் பொருத்தமாயிருக் கும். கலம்பக வகையில் நந்திக் கலம்பகம் போன்ற ஒன்றிரண்டு, திருமுறையிலுள்ள ஆளுடைய பிள்ளை

யார் திருக்கலம்பகத்திற்கு முன்னுல் தோன்றி யிருக்கின்றன.[1]

பத்துப்பாட்டைச் சேர்ந்த திருமுருகாற்றுப்படை பதினேராந்திருமுறையில் காணப் பெறுகிறது. பத்துப் பாட்டு சங்ககாலத்தைச் சேர்ந்ததாகக் கருதப் பெற்ற போதிலும், திருமுருகாற்றுப்படை, சங்ககால இலக்கியத்தின் நடையில் எழுதப்பெற்ற ஒரு பழமையான பாட்டாயிருந்த போதிலும், தொகை நூல்களிலுள்ள சில பாடல்களையும் நெடுநல்வாடையையும் இயற்றிய நக்கீரரே திருமுருகாற்றுப் படையையும் எழுதியிருக்கிருர் என்று சொல்வதற்கில்லை. சங்க காலம் என்று பொதுவாகக் குறிக்கப்படும் காலத்திற்குப் பின்னும் அப்பர், ஞானசம்பந்தர் காலத்திற்கு முன்னும் தோன்றிய நக்கீரர் என்ற பெயருடைய ஒரு புலவரால் இந்தப்பாட்டு ஆக்கப் பெற்றிருக்கவேண்டும் என்பது சில தமிழ் அறிஞரின் துணிபு. ஆனுல் இதைப் பற்றித் திட்டமாய் ஒன்றும் கூற இயலாது இது எவ்வாருக இருப்பினும் திருமுருகாற்றுப் படையின் முக்கியத்வத்தைத் தமிழ் மாணவர் எல்லாரும் அறிவர். பிற்காலச் சைவர் விரும்பக் கூடாத முறையில், வெறியாட்டம் குருதிச் சோறு கொடுத்து முருகனை வணங்குதல் முதலிய பண்டைத் தமிழரின் நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் சில இயல்புகள் அதில் காணப் பெற்றிருந்தும் திருமுருகாற்றுப்படை இன்றும் சைவரின் பாராயணப் பாடல்களில் ஒன்ருய் இருக்கிறது. பதினேராந்திருமுறையில் அது சேர்க்கப்பட்டிருப்பது இதற்கு ஒரு முக்கிய காரணம். முருகக் கடவுளைப் பற்றியுள்ள பழந்தமிழ்ப் பாடல்களில் இதுவே மிகச் சிறந்தது; அதன் கவிதைச் சுவை கற்ருேர்க்கு இன்பம் பயக்கும். சமயப் பொருளைக் கொண்ட முதலாவது

1. சமணத்தைச் சேர்ந்த திருக்கலம்பகமும் மிகவும் பழமையானது என்று கருதப் பெறுகிறது.

ஆற்றுப்படை நூலும் இதுவே. இக் காரணங்களால் தான் திருமுருகாற்றுப்படை திருமுறையில் இடம் பெற்றிருக்கிறது.

அந்தாதி வகைப் பாடல்களில் மிகப் பழமையானதாகக் கருதப்பெறும் காரைக்கால் அம்மையாரின் அற்புதத்திருவந்தாதி இத் திருமுறையை அலங்கரிக்கிறது. இதற்குத் துணையாக, ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த சேரமான் பெருமாள் நாயனாரின் பொன் வண்ணத்தந்தாதியுள்பட வேறு ஆறு அந்தாதிகளும் இருக்கின்றன. காரைக்கால் அம்மையாரின் அற்புதத்திருவந்தாதி அதன் பெயருக்கொப்ப மிகவும் அற்புதமான ஒரு பாடல். நாயன்மார் கூட்டத்தில் வீற்றிருக்கும் ஒரே பெண் புலவரான இந்த அம்மையாரின் கவித்திறம் வியந்து போற்றற்குரியது; அவருடைய பக்தி வெறிக்கேற்பக் கவிதையின் வேகமும் வாக்கும் அமைந்திருக்கின்றன.[1] சுந்தரரின் தோழரான சேரமான் பெருமாள் எழுதிய ஆதி உலாவாகிய திருக்கைலாய ஞான உலாவும் பதினொன்

---

1. வைணவத்தில் முதலாழ்வார்களான பொய்கையார் பேயார், பூதத்தார் ஆகிய மூவரும் மூன்று அந்தாதிகளைப் பாடியிருக்கிறார். இம்மூவரும் சம காலத்தவர் என்பது வைணவ மரபு. அவர் கி. பி. ஆறும் நூற்றாண்டில் இருந்தார் என்று சிலரும், ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று வேறு சிலரும் கூறி வந்திருக்கிறார். காரைக்கால் அம்மையாரும் இம்மூவர் காலத்தவராயிருக்கலாம். யாப்பருங்கல விருத்தியுரையில் ஆரிடச் செய்யுளுக்கு உதாரணங்களாகக் கொடுக்கப்பட்டிருக்கும் பாடல்களில் ஒன்று பூதத்தாரும் காரைக்காற் பேயாரும் சேர்ந்து பாடியதாகக் கூறப்பட்டிருக்கிறது. இவரிருவரும் சேர்ந்து ஆரிடம்பாட நேர்ந்த சந்தர்ப்பமோ அவசியமோ என்ன என்று தெரியவில்லை. உரைகாரரின் ஆதாரமும் இன்னதென்று புலப்படவில்லை. இருந்தபோதிலும் இவ்விருவரும் சமகாலத்தவர் என்பது பழைய மரபு என்று தெரிய வருகிறது. பதிற்றுப்பத்தில் நான்காம் பத்திலுள்ள 4, 5, 6-ம் பாடல்கள் அடியந்தாதியால் தொடர்ந்து வந்திருக்கின்றன என்று தமிழ்ப் பேரறிஞர் ரா. இராகவய்யங்கார் கூறுகிறார் (செந்தமிழ் 5-6- பக்கம் 274) ஆதலால் அந்தாதி வகைப் பாட்டு மிகப் பழமையானது என்று தெளியலாம்.

ராம் திருமுறையில் காணப் பெறுகிறது.[1] இத்திருமுறை யில் திருமுருகாற்றுப் படையுடன் அதை இயற்றிய

1. சேரமான் பெருமாள் நாயனாரைப் பற்றிச் சரித்திர விபரங்கள் தெளிவற்றுக் குழப்பத்தை உண்டுபண்ணக் கூடிய நிலைமையில் இருக்கின்றன. இவர் சேரநாட்டை ஆண்ட பெருமாள் கள் வழியில் கடைசியாகத் தோன்றிய அரசர் என்று தெரிகிறது. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். சுமார் கி. பி. நான் காம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு வரை சேரநாட்டை ஆண்ட பெருமாள்கள், சோழ, பாண்டிய வம்சங்களைச் சேர்ந்தவர் கள் என்றும், ஒவ்வொருவரும் நாட்டின் தர்மகர்த்தா என்ற முறை யில் பனிரண்டு ஆண்டுகள் அந்நாட்டின் சமயத் தலைவராயிருந்த நம்பூத்திரிகளின் ஆலோசனைக்குட்பட்டு அரசாட்சிசெய்து வந்தனர் என்றும் அவ்வாறு வந்தவரே சேரமான் பெருமாள் என்றும், அவர் மூன்று முறையாக முப்பத்தாறு வருடங்கள் ஆண்டார் என்றும், இறுதியில் மனவெறுப்படைந்து நாட்டைப் பிரித்துச் சில குறுநில மன்னரிடம் கொடுத்துவிட்டு அரபு தேசத்துக் கப்பலில் மெக்காவிற்குப் போய் இஸ்லாமிய மதத்தைத் தழுவினார் என்றும் ஒரு மலையாள ஆசிரியர் கூறுகிறார் (The Last of the Perumals by. O. K. Nambiar) கேரள நாட்டுச் சரித்திரத்தை எழுதிய பத்ம நாப மேனன் என்ற அறிஞர் இந்தக் கதைக்கு ஆதாரமில்லை என்று மறுத்து, கோழிக்கோடைச் சேர்ந்த ஜாமரின் வம்சத்தைச் சேர்ந்த ஒரு அரசன் தான் சில நூற்றாண்டுகளுக்குப் பின் இஸ்லாம் மதத்தைத் தழுவினான் என்று எழுதியிருக்கிறார். இந்த சேரமான் பெருமாள்தான் சிறந்த சிவபக்தனாகி, சுந்தரரின் தோழமை பெற்று வாழ்ந்தவராயிருக்கலாம். இவருடைய முன்னோர் ஒருவர்தான் வைணவ குலசேகரப் பெருமாளாயிருக்கலாம். திருவஞ்சைக் களத்திலுள்ள சிவன் கோவிலைச் சிறப்பாகக் கட்டியோ, அல்லது முன்னிருந்த ஆலயத்தைத் திருத்திப் பெரிதாக்கியோ சைவப்பணி செய்தவரும் இந்த சேரமான் பெருமாளாய்த் தானிருக்க வேண்டும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இக் கோவிலில் பாடித் தொழுது கொண் டிருக்கும்போது கைலாயம் சென்றதாயும் சேரமானும் பின் தொடர்ந்து சென்றதாயுமுள்ள கதைகள் இதையே வற்புறுத்து கின்றன. சேரமான் பெருமாள் தீவிரமாய்ச் சைவத்தைத் தழுவிய தையே, அடிப்படையாகக் கொண்டு, தவறுதலாக அவர் இஸ்லாமிய சமயத்தைச் சேர்ந்தார் என்ற கதை தோன்றியிருக்கலாம். சேரமான் அரசு துறக்கும்போது நாட்டின் தென்பகுதியை வேணாட் டடிகளுக்குக் கொடுத்ததாகவும் ஒரு கதை வழங்குகிறது. இவரே ஒருகால் ஒன்பதாம் திருமுறையிலுள்ள ஒரே ஒரு பாடலைப் பாடிய வேணாட்டடிகளாயிருக்கலாம்.

நக்கீரதேவர் பாடியதாக வேறு ஒன்பது பிரபந்தங்கள் இருக்கின்றன இவை நக்கீரர் என்ற பெயருடைய வேறொரு புலவரால் இயற்றப் பெற்றிருக்க வேண்டும் என்று பல அறிஞர் கருதுகிறார்.[1] அதேபோல் சில பாடல்கள் கல்லாடனார் கபில தேவநாயனார், பரண தேவ நாயனார் என்பவர்களால் எழுதப் பெற்றதாகக் காணப் பெறுகின்றன. இவர்களைப் பற்றிச் சரித்திரக் குறிப்புகள் ஒன்றும் கிடைக்கவில்லை. இவர் சங்ககாலப் புலவர் பெயர்களை வைத்துக்கொண்ட பிற்காலக் கவிகள் என்று மாத்திரம் கூறலாம்; இவர்கள் ஒருகால் நம்பியாண்டார் நம்பி காலத்தவராக இருக்கலாம். கல்லாடனார், பரண தேவர் பாட்டுக்கள் ஒவ்வொன்று தான் தொகுக்கப் பட்டிருக்கின்றது. அவ்வாறே ஐயடிகள் காடவர்கோன், இளம்பெருமானடிகள், அதிராவடிகள் இவர்கள் இயற்றிய பாடல்களில் ஒவ்வொன்றே சேர்க்கப் பட்டிருக்கிறது. பட்டினத்தாரின் ஐந்து அருமையான பிரபந்தங்களும் காணப் பெறுகின்றன. பட்டினத்தார் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் இருந்தவர்; செம்மையான பாடல்கள் இயற்றவல்ல கவியோகி.

நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி முதலிய பத்துப் பிரபந்தங்களுடன் பதினொன்றாம் திருமுறை முடிகிறது. சோழ அரசனின் வேண்டுகோளின் பேரில் இப்பிரபந்தங்கள் திருமுறைகளில் சேர்க்கப் பெற்றன என்று புராணம் கூறுகிறது. இது உண்மைச் செய்தியாய் இருக்கலாம். உலா, கலம்பகம், அந்தாதி இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை

---

1. நக்கீர தேவநாயனார், நக்கீரரைப் பற்றியுள்ள திருவிளையாடல் செய்திகளைப் பயன்படுத்தி அவர் பாடும் பாவத்திலேயே, கோபப் பிரசாதம் போன்ற பாடல்களை இயற்றியிருக்கிறார். இது ஒரு அரிய கற்பனை பாவத்தைக் காட்டுகிறது. அவ்வளவுதான்; இதற்கு மாறாக, கோபப் பிரசாதம் பண்டைக் கால நக்கீரராலே பாடப் பெற்றது என்று கருதுவது தவறு.

என்ற பாட்டு வகைகள் நம்பியின் பிரபந்தங்களில் அடங்கியிருக்கின்றன. நம்பியாண்டார் நம்பி கவித் திறம் படைத்த செந்தமிழ்ப் புலவர் என்பதை அவருடைய பிரபந்தங்கள் காட்டுகின்றன. அவர் இவ் வித அருமையான பாடல்களைப் பாடி சைவத்திற்குச் சேவை செய்தார். இனிய தமிழில் கனிந்த கற்பனை யுடன் பல புலவர்களால் பாடப்பெற்ற பதிகங்களைத் தொகுத்துப் பதினோராம் திருமுறையாக்கினர். இந்தப் பணி மிகவும் போற்றத் தக்கது. நம்பியாண்டார் நம்பி, தமது பாடல்களையும் பதினோராம் திருமுறையில் அமைத் தது தகுமோ என்று சிலர் கேட்கலாம். இப்படிக் கேட் பவர் பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழ சாம்ராஜ்யம் அதி உன்னத நிலையில் இருந்ததையும், அந்த வம்சத்து மன்னர் பேராற்றலுடன் சைவத்தை வளர்த்த சேவையையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பியின் அழியாப் புகழ்பெற்ற சாதனையையும் ஆழ்ந்த தமிழ்ப் புலமையையும் நேரில் தெரிந்து போற்றி வியந்த சோழ அரசனின் ஆணையாலேயே இது நடைபெற்றிருக்க வேண்டுமாதலால் நம்பியை இதற்காகக் குறைகூற முடி யாது. ஏன்? அக்காலத்தில் சிவனடியார்களை வணங்கு வதும் அவர்களுக்கு ஆலயங்களில் சிலைகள் வைப்பதும் வழக்கமாயிருந்திருக்கிறது. அது மாத்திரமா? முதல் இராசராசன் தனது சிலையையும் குடும்பத்தினரது சிலைகளையும், தான் எழுப்பிய தஞ்சைப் பெரிய கோவிலில் பிரதிஷ்டை செய்வித்தான் என்று தெரிகிறது. இதைக் கவனித்தால் நம்பியாண்டார் நம்பியின் பாடல்களைத் திருமுறையில் சேர்ப்பது மிகவும் பொருத்தமானது என்றுதான் சோழ அரசன் கருதியிருப்பான். தேவாரத் திருவாசகப் பாடல்களைத் தேடித் தொகுத்துத் திருமுறை களை வகுத்த புலவரின் பிரபந்தங்களை அவைகளுடன்

சேர்த்துப் புனிதமாக்குவதில் தவறு ஒன்றும் இல்லை என்றுதான் நினைத்திருப்பான்; ஏனென்றால் இத்திருமுறைகள் தான் சைவ சமயத்தின் உயிர்நாடிகள். பின்னால் தோன்றிய சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு உயர்ந்த தத்துவஞான நூல்கள் என்ற முறையில் ஏற்றம் இருந்தபோதிலும், அவைகளுக்கு, நால்வரின் பாடல்களுக்குரிய புனிதத் தன்மையும் பெருமையும் கிட்டியிருப்பதாகச் சொல்ல முடியாது.[1] ஆகையால் நம்பியாண்டார் நம்பியின் பாடல்களுடன் பதினோராந் திருமுறை அமைக்கப் பெற்றிருப்பதில் முரண்பாடு ஒன்றும் இல்லை. மொத்தமாகக் கருதுமிடத்துப் பதினோராந்திருமுறை ஒரு அற்புதமான கவிதைக் களஞ்சியம்; இலக்கிய நயங்களைக் கருதியே தொகுக்கப் பெற்ற சமயநூல்; சமயப் பற்றில்லாதவர் கூடப் படித்து இன்புறக்கூடிய பாடற்றொகுதி; ஆதிபிரபந்தங்கள் புல அடங்கிய அருந்தமிழ்க் கருவூலம்; திருமுறைகளுக்கு இலக்கியச் சுவைவேறுபாடுகள் அளித்த தமிழ்ப் பாமாலை; இதைத் தொகுத்தவர் சிறந்த தமிழ் ஆராய்ச்சியாளர் என்பது வெளிப்படை.

சுமார் நூறு வருஷங்களுக்குப் பின்னர் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் பனிரெண்டாம் திருமுறையாகத் தொகுக்கப் பெற்றதைக் கவனிக்கு முன்பு வைணவப் பாசுரங்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தமாகத் திரட்டப் பெற்றதை ஆராய வேண்டும்.

---

1. *இந்தக் கருத்தை அடியிற்கண்ட பாட்டு நன்றாய் விளக்குகிறது.*

*சொற்கோவும் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்*
*சிற்கோல வாதவூர் தேசிகனும்—முற்கோலி*
*வந்திலரேல், நீறெங்கே, மாமறை நூல் தானெங்கே,*
*எந்தைபிரானைத் தொழுதெங் கே?*

## II. சமயப் பாடல்களின் தொகுப்பு : நாலாயிர திவ்யப் பிரபந்தம்

பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களைத் தொகுத்து நாதமுனிகள் ஆக்கிய நூல் நாலாயிர திவ்யப் பிரபந்தம் என்று வழங்கி வருகிறது. இதைத் திராவிட வேதம் என்றும், இதன் முக்கியப் பகுதியாகிய திருவாய் மொழியைத் திராவிட உபநிடதம் என்றும் வைணவ சமயத்தார் போற்றி வருகிறார். அவர்களில் ஒரு சாரார் திவ்யப் பிரபந்தம் வடமொழியிலுள்ள நான்கு வேதங்களின் சாரமாயிருந்த போதிலும் அவைகளைவிடப் புனிதமானது என்று கொண்டாடுகிறார். நாதமுனிகள் தொகுத்த பாடல்களின் எண்ணிக்கை நாலாயிரத்திற்குச் சற்று குறைவாயிருந்தும், அந்தப் பேரெண்ணாலேயே தொகுதி பெயரிடப்பட்டிருக்கிறது பின்னால் திருவரங்கத்தமுதனாரால் இயற்றப் பெற்ற இராமாநுச நூற்றந்தாதியும் திவ்யப் பிரபந்தத்தின் ஒரு பகுதியாக அமைக்கப் பெற்று பாடல்களின் எண்ணிக்கை நாலாயிரமாக ஒருவாறு ஆக்கப் பெற்றது.

நாதமுனிகள் காலத்தைப்பற்றிச் சில கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் அதை ஓரளவு நிர்ணயிக்க முடிகிறது. குரு பரம்பரைக் கதைகளின்படி, அவர் கி. பி. 522-இல் பிறந்து 922 வரை வாழ்ந்தார் இதன்படி அவர் 340 ஆண்டுகள் வாழ்ந்திருக்க வேண்டும். வேறொரு குரு பரம்பரையின்படி அவர் 330-ஆம் வயதில் இறந்தார். முந்நூறு ஆண்டுகளுக்கு மேல் நாதமுனிகள் வாழ்ந்தார் என்னும் கூற்று இக்

காலத்தில் ஏற்றுக்கொள்ளத்தக்கதில்லை. "வேத நூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேனும்" என்று தொண்டரடிப்பொடி ஆழ்வாரே பாடியிருப்பதிலிருந்து சாதாரணமாக மனிதனுக்கு நீண்ட ஆயுள் என்பது நூறு வருஷம் என்று அக்காலத்தவரும் கருதினர் என்று தெரிகிறது. ஏகதேசமாக சிலர் நூறு ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்திருக்கிருர்; இன்றும் வாழலாம். ஆனல் ஒருவர் முந்நூறு ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்தார் என்பது நம்பத் தகுந்ததில்லை. அதை ஒரு அபூத சம்பவமாகவோ அல்லது புராணக் கதையாகவோ தான் கொள்ள வேண்டும். வைணவப் பேரறிஞரான மு. இராகவய்யங்காரும், நாதமுனிகள் கி. பி. 823-இல் அவதரித்து 918 வரை வாழ்ந்தார் என்று கருதுகிருர்![1]

பின்னல் தோன்றிய இராமநுசரைப் போல்வே நாதமுனிகளும் நீண்ட காலம் வாழ்ந்தார் என்பது பெரும்பாலான அறிஞரால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்த நீண்ட காலத்தை, இத்தனை வருடங்கள் என்று துல்லியமாய் நிர்ணயிக்கப் புகும்போது கருத்து வேறுபாடுகள் தோன்றியிருக்கின்றன. நாதமுனிகள் வீரநாராயணபுரம் அக்கிரகாரத்தில் பிறந்து வளர்ந்து விஷ்ணு பக்தியில் பெரிதும் ஈடுபட்டு நாடெங்கும் சுற்றித் தமது வயோதிக காலத்தைக் கங்கைகொண்ட சோழபுரத்தில் கழித்து அங்கேயே வைகுண்டப் பிராப்தியடைந்தார் என்று பின் பழகிய பெருமாள்ஜீயரின் குரு பரம்பரை கூறுகிறது. குரு பரம்பரை நூல்களில் இது தான் மிகப் பழமையானது. இதில் கூறப் பெற்றிருக்கும் இச்செய்தியில் உண்மை இருப்பதாகவே தோன்றுகிறது. வீரநாராயணபுரம் வீரநாராயணன் என்ற பெயருடைய சோழ அரசனை முதற் பராந்தகன்

1. ஆழ்வார்கள் கால நிலை, மு. இராகவையங்கார், பக்கம் 20.

(கி. பி. 906—946) என்பவனுல் ஸ்தாபிக்கப் பெற்ற ஒரு ஊர் என்று தெரிகிறது.[1] கங்கைகொண்ட சோழ புரத்தைச் சோழ அரசன் இராசாதிராசன் மகன் இரா சேந்திரன் பதினோராம் நூற்ருண்டின் முற்பகுதியில் புதிதாக நிர்ணயித்து அதைத் தன் தலைநகராக ஆக்கிக் கொண்டான் என்று சரித்திரம் கூறுகிறது. இந்நகர் சுமார் கி. பி. 1022-இல் நிர்ணயிக்கப்பட்டிருக்கலாம் என்று சரித்திரப் புலவர் கருதுகிருர். ஆகையால் பத்தாம் நூற்ருண்டின் முற்பகுதியில் கி. பி. 918 அல் லது 922-இல் நாதமுனிகள் கங்கைகொண்ட சோழ புரத்தில் திருநாடலங்கரித்தார் என்பது பொருத்தமில் லாத ஒரு கருத்து. கங்கைகொண்ட சோழபுரம் நிர்மா ணிக்கப்பெற்ற பிறகுதான் அவர் அங்கு வந்து வாழ்ந் திருக்க முடியும். நாதமுனிகள் கங்கைகொண்ட சோழ புரத்தின் பக்கத்திலுள்ள ஒரு கிராமத்தில்தான் முடி வடைந்திருக்க வேண்டுமென்றும், பிராபல்யத்தைக் கருதிப் பிற்காலத்தார் கங்கைகொண்ட சோழபுரத்தில் நாதமுனிகள் இறந்தார் என்று எழுதியிருக்கிருர் என் றும் சிலர் சமாதானம் கூறுகிருர். வேறு சிலர் நாத முனிகள் பிறந்தது வீரநாராயணபுரத்தில்தான் என்றும், ஆனுல் முடிந்தது கங்கைகொண்ட சோழபுரத்தில் இல்லை என்றும், அவ்வூரில் அவர் இறந்தார் என்று கொண்டால் வைணவ ஆசாரிய பரம்பரையின் கால வரைகளில் சிக்கல்கள் ஏற்படுகின்றன என்றும் கருது கிருர்.[2] பொதுவாக ஊர்களைக் குறிப்பிடும் விஷயத்தில் குரு பரம்பரைகளில் தவறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணம் இல்லை. மற்ற விஷயங்களைப்பற்றி, குரு பரம்

1. Tamil Studies by M. Srinivasa Iyengar, Page 335.

2. History of Sri Vaishnavas. T. A. Gopinatha Rao (1923) Page 31.

பரைகள் தரும் விவரங்கள் சில தவறுதலாய் இருப்பது வெளிப்படை. ஏனென்றல் ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஆகியோரின் வாழ்க்கைகளேப்பற்றிக் காணப்பெறும் விவரங்களில் சில, கற்பனையுடனும், அப்ராக்ருத, அமானுஷ்ய, அற்புதத் தன்மைகளுடனும் கூறப்பெற்றிருப்பதால் அவைகளைச் சரித்திர உண்மைகளாகக் கொள்வதில் பல தடைகள் இருக்கின்றன. உதாரணமாக, நாதமுனிகளின் ஆயுட்காலத்தைப்பற்றி குரு பரம்பரை நூல்கள் கூறும் விவரத்தை வைணவ சம்பிரதாயத்தில் முழு நம்பிக்கையுடைய ஆராய்ச்சியாளர்கூட ஒப்புக் கொள்வதில்லை. அதேபோல்தான் ஆசாரிய பரம்பரையைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கும் சில விவரங்கள் இருக்கின்றன. ஆளவந்தார் நாதமுனிகள் காலத்திலேயே பிறந்து அவர் இறக்கும்போது நடுவயதுடையவராயிருக்க வேண்டும். அதேபோல் நாதமுனிகள் இறப்பதற்கு முன்பே இராமானுசர் பிறந்து சிறு குழந்தையாய் வாழ்ந்தார் என்று கொள்ளவேண்டும். இவ்வாறு கொண்டால் சிக்கல்கள் மறைந்துவிடும். இவ்விரண்டு விஷயங்களைப் பற்றியும் குரு பரம்பரையில் காணப்பெறும் விவரங்கள் சரித்திர அடிப்படையில் இல்லை. அதனல்தான் கோபிநாத ராவ் அவர்கள் குறிப்பிடும் சிக்கல்களும் முரண்பாடுகளும் எழுந்திருக்கின்றன. ஆகவே நாதமுனிகளின் காலம் உத்தேசமாக கி. பி. 925 முதல் 1030 வரை இருந்திருக்கலாம் என்று கொள்வது தவருகாது.

இன்று சரித்திர ஆதாரங்கள் உள்ள நிலைமையில் நாதமுனிகள் காலம் இதுதான் என்பதற்கு வேரொரு காரணத்தையும் கூறலாம். ஆழ்வார்களின் காலங்களைப் பற்றிப் பல்வேறு கருத்துக்களை வைணவ சமய அறிஞரும் சரித்திரப் புலவரும் கூறி வந்திருக்கிருர்கள். அவைகளை இங்கு எடுத்துக் காட்டுவதற்கோ ஆராய்

வதற்கோ அவசியம் இல்லை. மொத்தத்தில், நாயன் மார்களைப் போலவே. எல்லா ஆழ்வார்களும் கி. பி. ஆறும் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு முடிய உள்ள ஐந்நூறு வருட காலத்தில் வாழ்ந்தவர் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். வைணவ சம்பிரதாயத்தைப் பின்பற்றுபவர் எவ்வாறு கருதிய போதிலும் ஆழ்வார்களில் கடைசியானவரும் காலத்தால் பிந்தியவரும், நம்மாழ்வாரும் மதுரகவி ஆழ்வாரும் என்பது பெரும்பாலான தற்கால ஆராய்ச்சியாளரின் முடிபு. நம்மாழ்வார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலோ பத்தாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியிலோ வாழ்ந்தவர் என்பதும் வரையறுக்கப் பட்டிருக்கிறது.[1] நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைத் தொகுத்து, அதன் பெருமையைப் பரப்பி, அதை வைணவ ஆலயங்களில் முழுவதும் அநுசந்தானம்

---

1. சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு எம். சீனிவாச ய்யங்கார், தாம் எழுதிய 'Tamil Studies' என்ற அருமையான ஆங்கில ஆராய்ச்சி நூலில் இந்தக் கருத்தைத் தக்க ஆதாரங்களுடன் விளக்கிக் கூறினார். (Tamil Studies page 334—338) நம்மாழ்வாரின் காலத்தைப் பற்றியும், அவர்தாம் கடைசி ஆழ்வார் என்பதைப் பற்றியும் அவர் கொண்டிருக்கும் முடிவு ஒப்புக்கொள்ளத்தக்கது. அது தவறு என்று இதுவரைச் சரியான காரணங்களை ஒருவரும் எடுத்துக் காட்டவில்லை. அவ்வாறு காட்ட முயன்ற தஞ்சை கே. எஸ். சீனிவாச பிள்ளையின் (தமிழ் வரலாறு, பிற்பாகம் பக்கம் 159—162) வாதங்களில் வலியில்லை. சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு ஆசிரியர் சுந்தரம் பிள்ளை திருஞானசம்பந்தரின் காலம், கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்று அறுதியிட்ட முடிவு எவ்வாறு நிலைத்திருக்கிறதோ அதேபோல நம்மாழ்வார்தான் ஆழ்வார்களில் பிந்தியவர் என்று எம். சீனிவாசையங்கார் வரையறுத்த முடிவும் நிலைத்துவிட்டது. இந்த இடத்தில் 1903-இல் செந்தமிழ் முதல் தொகுதி ஐந்தாம் பகுதியில் கோபிநாத ராவ் 'ஆழ்வாராதியர் கால நிர்ணயம்' என்னும் தலைப்புடன் எழுதிய ஒரு கட்டுரையில் நம்மாழ்வார் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினோராவது நூற்றாண்டின் தொடக்கத்திலும் இருந்தார் என்று கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. (பக்கம் 228—232.)

செய்வதற்கு அவசியமான ஏற்பாடுகளைச் செயது, வைணவ ஆசாரிய பரம்பரையைத் தோற்றுவித்து அதற்கு முதல்வராய் நின்ற நாதமுனிகள், நம்மாழ்வாருக்குப் பின் வந்தவர் என்பது வெளிப்படை. நாதமுனிகள் நம்மாழ்வாருக்கு எவ்வளவு காலத்திற்குப் பின் தோன்றினர் என்பதை ஆராயவேண்டும். நாதமுனிகள் நம்மாழ்வார் காலத்திலேயே இருந்தவர் என்றும், அவரிடமிருந்தே நேரில் நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்கள் முழுவதையும் தெரிந்து கொண்டார் என்றும் சிலர் கருதுகிறார். இந்தக் கருத்துக்குத் தகுந்த சான்றுகள் இல்லை.[1]

---

1. "We are therefore inclined to believe that Nathamuni was a direct disciple of Nammalwar and studied Thiruvoimoli and yoga philosophy when he was 20 or 25 years of age, under our most revered saint" Tamil Studies. M. Srinivasa Iyengar. Page 336. பிற்காலத்தவர் எழுதிய நம்மாழ்வாரின் வாழித் திருநாமத்தில் "நாதனுக்கு நாலாயிரமளித்தான் வாழியே" என்றிருப்பதை இதற்கும் நம்மாழ்வார்தான் கடைசி ஆழ்வார் என்பதற்கும் இந்த ஆசிரியர் ஆதாரமாகக் காட்டுகிறார். நம்மாழ்வார்தான் கடைசி ஆழ்வார் என்ற இவரது முடிவு ஏற்றுக்கொள்ளத் தக்கது என்று முன்னர்க் காட்டியிருக்கிறோம். ஆனால் நாதமுனிகள் நம்மாழ்வாரின் சீடராயிருந்து அவரிடமிருந்து நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தைக் கேட்டார் என்று கொள்வது பொருத்தமாயில்லை; அதற்கு ஆதாரங்களுமில்லை. நம்மாழ்வாரின் சீடராக நாதமுனிகள் இருந்திருந்தால் அதை அவர் கூறாமல் இருக்கமாட்டார். குரு பரம்பரைக் கதைகளும் இதைச் சொல்லாமலிருப்பதற்குக் காரணமில்லை. "நாதனுக்கு நாலாயிரமளித்தான் வாழி" என்று கவிதைப் பாங்குடனிருக்கும் போற்றுதல் வாசகத்தைச் சரித்திர ஆராய்ச்சிக்குப் பயன்படுத்த முடியாது. நம்மாழ்வார் காலத்திற்கு இரண்டு மூன்று தலைமுறைகளுக்குப் பின்னால்தான் நாதமுனிகள் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தைத் தொகுத்தார் என்று தெரிகிறது. முன் பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் கோபிநாத ராவ் அவர்களின் கட்டுரையில் நம்மாழ்வாரும் நாதமுனிகளும் சமகாலத்தவர் என்று கூறப்பட்டிருக்கிறது. இந்தக் கருத்தைத்தான் எம். சீனிவாசய்யங்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறார்.

ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஆகியோரின் வாழ்க்கைகளைப்பற்றி வைணவ குரு பரம்பரா பிரபாவ நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. இந்நூல்களை நம்பத் தகுந்த சரித்திரங்களாகக் கருதுவதற்கில்லை. அவைகளில் அநேக விபரங்களும் சம்பவங்களும் புராண ரீதியில் கூறப் பெற்றிருக்கின்றன; அத்துடன் உண்மைச் செய்திகளும் கலந்திருக்கின்றன. இவ்வாறுள்ள கலப்பற்ற சரித்திரத் தன்மை இல்லாததாயும், புராணத் தன்மை பெற்றதாயும் இருக்கும் குரு பரம்பரை நூல்களில் காணப்பெறும் விபரங்களிலிருந்துதான் நாதமுனிகளின் வாழ்க்கை வரலாற்றை நாம் தெரிந்து கொள்ள முயலவேண்டும். வெகு காலமாக பரம வைணவ பக்தராயும் யோகியாயும் இருந்த நாதமுனிகள் தமது வாழ்க்கையின் பிற்பகுதியில்தான் திவ்யப் பிரபந்தத்தைத் தொகுக்க வேண்டுமென்று முடிவு செய்திருக்க வேண்டும். வீரநாராயணபுரம் விஷ்ணு கோவிலுக்கு வந்து சேவித்த மேல்நாட்டு வைணவர் சிலர் திருவாய்மொழியிலிருந்த ஒரு பாசுரத்தைப் பாடியதைக் கேட்ட நாதமுனிகள், அப் பாசுரத்தின் இறுதியில் 'ஆயிரத்தில் இப்பத்து' என்றிருப்பதைக் கவனித்து மற்றப் பாசுரங்களைப்பற்றி அந்த பக்தர்களிடம் கேட்க, அவர்கள் தங்களுக்கும் தங்கள் நாட்டினருக்கும் தாங்கள் பாடிய பாட்டைத் தவிர வேறு தெரியாதென்று பதில் உரைத்தார்கள் என்றும் அதன் காரணமாக அவைகளை எப்படியாவது தெரிய வேண்டுமென்று திருக்குருகூருக்கு வந்து மதுர கவியின் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்த பராங்குச தாசரைச் சந்தித்து விசாரித்ததில் திருவாய் மொழியிலுள்ள மற்றப் பாசுரங்கள் கிடைக்கவில்லை என்றும், பின்னர் நம்மாழ்வாரை மதுரகவியின் ஒரே குரு வணக்கப் பாசுரத்தைப் பன்னீராயிரம் தடவை பாடித் தோத்திரம் செய்ய, அவர் அசரிரீ முகமாகத் தோன்றி நாலாயிரத்

திவ்யப் பிரபந்தத்தை அறிவிக்க, நாதமுனிகள் பட்டோலை பிடித்து எழுதிக் கொண்டார் என்றும் குரு பரம்பரைக் கதைகள் கூறுகின்றன. இவைகளின் உட்பொருளையே நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ஆழ்வார்களின் பாசுரங்களைக் கண்டுபிடித்துத் தொகுக்க வேண்டுமென்று நாதமுனிகள் தீர்மானித்து அதற்கு வேண்டிய முயற்சியில் ஈடுபட்டார். அவர் தொண்டை நாட்டில் பல ஊர்களுக்குப் போய்ப் பாகவத சிரேஷ்டரைக் கேட்டு முதலாழ்வார் மூவர், திருமழிசை ஆழ்வார் ஆகியோரின் பிரபந்தங்களை அறிந்திருப்பார். அப்புறம் சோழநாடு வந்து பல வைணவத் திருப்பதிகளைத் தரிசித்து ஆங்காங்கேயுள்ள பக்தர்களை வினவி, திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகிய மூவரின் பாசுரங்களைக் கேட்டு எழுதிக் கொண்டிருப்பார். அங்கிருந்து சேரநாடு ஏகி குலசேகரரின் பனுவல்களைக் குறித்துக் கொண்டிருப்பார். சேரநாட்டிலிருந்து பாண்டியநாடு வந்து ஸ்ரீவில்லிபுத்தூர் போய், பெரியாழ்வாரின் பதிகங்களையும் ஆண்டாளின் பாசுரங்களையும் சேகரித்துவிட்டுக் கடைசியாக நம்மாழ்வார் வாழ்ந்திருந்த குருகூருக்கு வந்து சில காலம் அங்கே வசித்திருக்க வேண்டும். மதுரகவி ஆழ்வாரின் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்த பராங்குச தாசரின் நட்புப் பெற்று அவருடைய உதவியால் திருவாய்மொழிச் சுவடிகளைப் பெற்று, அவைகளையும் தாம் கொண்டு வந்த மற்ற ஆழ்வார்களின் பாடல்களடங்கிய சுவடிகளையும் பரிசோதித்து ஒழுங்குபடுத்தி ஆயிரமாயிரமாக அவைகளை வகுத்து நாலாயிர திவ்யப் பிரபந்தமாகத் தொகுத்து நாதமுனிகள் தாம் மேற்கொண்ட மாபெரும் வைணவ சமயப் பணியை முடித்திருக்க வேண்டும். பின்னர் திவ்யப் பிரபந்தச் சுவடிகளை அவர் தம்முடைய ஊருக்குக் கொண்டுபோய்,

தமது மருமக்கள் இருவரின் உதவியால் அவைகளுக்கு இசை வகுத்திருக்க வேண்டும்.

மேலே கூறியதிலிருந்து ஒவ்வொரு ஆழ்வாரின் பாசுரங்களும் அவரவர் பிறந்து வாழ்ந்த நாட்டிலே தான் கிடைத்திருக்கும் என்று கொள்ளவேண்டிய தில்லை. ஆழ்வார்களில், மதுரகவி, தொண்டரடிப் பொடி, திருப்பாண் ஆகியோரைத் தவிர, மற்றவர் தல யாத்திரை செய்து பல திருப்பதிகளுக்குப் போய் ஆங் காங்கே எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பற்றிப் பாடியிருக்கிறார்கள். திருமங்கை ஆழ்வார்தான் அதிக மான திருப்பதிகளைத் தரிசித்துப் பாடியிருக்கிறார். குறுநில மன்னராயிருந்ததால் அவருக்குப் பல ஊர்களுக் குப் பரிவாரங்களுடன் பிரயாணம் செய்ய வசதிகள் இருந்தன. நம்மாழ்வாரும், திருமழிசையாழ்வாரும் பெரியாழ்வாரும் பல தலங்களைக் குறித்துப் பாசுரங் களைச் செய்திருக்கிறார். அதேபோல் பூதத்தாரும் பேயாரும் பொய்கையாரும் ஆண்டாளும் குலசேகரரும் சில ஆலயங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். தொண்டர டிப்பொடியார் ஒரு திருப்பதியையும் திருப்பாணர் இரண் டையும் பாடியிருக்கிறார். இவ்வாறு ஆழ்வார்களின் பாடல் பெற்ற திருப்பதிகளிலும் அவர்களின் பாடல்கள் கிடைத்திருக்கக்கூடும். தவிரவும், சீரங்கம், திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை போன்ற பெருங்கீர்த்தி வாய்ந்த வைணவத் திருப்பதிகளில் இருந்த ஆலயங்களிலும், மடங்களிலும், பாகவத குடும்பங்களின் இல்லங்களிலும் ஆழ்வார்களின் பாசுரங்களின் சுவடிகள் அகப்பட்டிருக் கலாம். ஆகையால் ஓரிடத்திலிருந்து கொண்டு ஒரு குறிப்பிட்ட காலத்தில் திவ்யப் பிரபந்தத்தை நாதமுனி கள் தொகுத்தார் என்று கொள்வது பொருந்தாது. பல வருஷங்களாக ஊரூராய்ப் போய்த் தேடித் திரிந்ததின் விளைவாகவே இப்பணி கைகூடியிருக்கும். நாதமுனிகள்

புகழ் பெற்ற வைணவ பக்தரும் யோகியுமாக இருந்த தால் அவருடன் பல சீடர்கள் எப்போதும் இருந்திருப் பார்கள்; அவருடைய சுற்றுப் பிரயாணங்களில் கூடவே போய் அவருக்குத் துணையாளராக இருந்து பணியாற்றி யிருப்பார் என்பதில் ஐயம் இல்லை. ஆழ்வார்கள் இயற்றியிருந்த எல்லாப் பாசுரங்களும் நாதமுனிகளுக் குக் கிடைத்தன என்று கருதமுடியாது. மதுரகவி யாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகியோரின் பதிகங்கள் ஒவ்வொன்றுதான் அவருக்குக் கிடைத்திருக்கிறது. அவ்விருவரும் வேறு பாசுரங்களை இயற்றியிருக்கமாட் டார் என்று நிச்சயமாய் எவ்வாறு கூறமுடியும்? மற்ற ஆழ்வார்களும், இப்போது கிடைத்திருக்கும் அவர்கள் பாசுரங்களைத் தவிர வேறு பாடல்களைச் செய்திருக்க மாட்டார்கள் என்றும் துணியமுடியாது. ஆகையால், தமது பெருமுயற்சியால் கிடைத்த பாடல்கள் எல்லாவற்றை யும் நாதமுனிகள் ஒழுங்குபடுத்தித் தொகுத்தார் என்று கொள்வதுதான் பொருத்தமாகும். இவ்வாறு தொகுத்த திவ்யப் பிரபந்தச் சுவடிகளை எடுத்துக்கொண்டு நாத முனிகள் தஞ்சைக்குச் சென்று அக்காலத்தில் ஆண்ட சோழ அரசனாகிய இராசேந்திரனுக்கு இந்த அரிய செய்தியைத் தெரிவித்து அவனுடைய ஆதரவுடன் சீரங்கம் முதலிய பிரபல வைணவத் திருப்பதிகளிலுள்ள ஆலயங்களில் நடைபெறும் வழிபாடுகளுடன், திவ்யப் பிரபந்தப் பாடல்கள் முழுவதும் பாடப் பெறுவதற்கு முயன்று வெற்றி பெற்றிருக்க வேண்டும். ஆல யங்களில் உத்சவ காலங்களிலும், சாதாரண நாட்களி லும் இப்பெருந் தொகுதியிலுள்ள பாடல்களை எந் தெந்த சந்தர்ப்பத்தில் எந்தெந்தப் பாசுரங்கள் எவ் வாறு பாடப் பெறவேண்டுமென்பதையும் நாதமுனி களே வகுத்தார் என்பது வைணவ சம்பிரதாயம்.

சோழ சக்கரவர்த்தியாயிருந்து கி. பி. 1014 முதல் 1044 வரை பெருங் கீர்த்தியுடன் ஆண்ட இராசேந்திரனின் ஆதரவும் நட்பும் நாதமுனிக்குக் கிடைத்திருந்தன என்பது வெளிப்படை. அவர் வாழ்வின் முக்கிய லட்சியமாயிருந்த திவ்யப் பிரபந்தத் தொகுப்பிற்கும் அவன் பேராதரவு கொடுத்திருக்க வேண்டும். இதில் வியப்பு ஒன்றும் இல்லை. அவன் தந்தையாகிய முதல் இராசராசன் ஆதரவில் நம்பியாண்டார்நம்பி அடிகள் திருமுறைகளைத் தொகுத்ததை இராசேந்திரன் நன்கு அறிவான். இராசேந்திரன் காலத்திலும் நம்பியாண்டார்நம்பி கொஞ்ச காலம் வாழ்ந்து திருமுறைகளைத் தொகுத்துக் கொண்டிருந்தார். இதேபோல் நாதமுனிகள் வைணவத்திற்குச் செய்துகொண்டிருந்த சேவையின் முக்யத்வத்தை அவன் அறிந்து அதற்கு ஆதரவு காட்டியிருப்பது இயற்கையே.[1] ஏனென்றால் அரசன் குடிகளின் சமயங்கள் எல்லாவற்றிற்கும் ஆதரவு காட்ட

---

1. "அவன் (சோழ அரசன் இராசேந்திரன்) காலத்திலும் திருவாய்மொழி பாட ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. தென்னார்க்காடு ஜில்லா எண்ணாயிரம் என்னும் ஊரில் இராசேந்திர சோழன் காலத்தில், ராஜராஜ விண்ணகர், குந்தவை விண்ணகர், சுந்தர சோழ விண்ணகர் முதலிய விஷ்ணு ஆலயங்களும் வேறு தேவதைகளுக்கு ஆலயங்களும் ஏற்பட்டுப் பூசை முதலியன செவ்வனே நடத்தப்பட்டு வந்தன. அவனது ஆட்சி 25-ம் ஆண்டிலும் அதை ஒட்டியும் பொறிக்கப்பட்டுள்ள சிலாசாசனத்தால் திருவாய்மொழிப் பிரபந்தத்தைப் பாடுவதற்கு நால்வர் நியமிக்கப்பட்டிருந்ததாயும் அவர்கள் ஒவ்வொருவருக்கும் தினம் முக்குறுணி நெல் பிரபந்தம் பாடுவதற்குக் கொடுத்து வந்ததாயும் அறியக் கிடக்கிறது. அவன் ஆட்சி 25-ம் ஆண்டு கி. பி. 1036-ம் ஆண்டாகும். இந்த சாசனங்களில் உள்ளவைகளை விரிவாய் மூன்றாங்காலப் பகுதியில் நாதமுனிகள் வைபவத்தைச் சொல்லுமிடத்துக் கூறுவேன். இராசேந்திர சோழன் காலத்து நாதமுனிகள் இருந்ததையும், அவனை நாதமுனிகள் விஷ்ணு பக்தனாகவும் செய்ததையும் ஆண்டுப் பார்க்க". தமிழ் வரலாறு கே. எஸ். சீனிவாச பிள்ளை, இரண்டாம் பாகம், பக்கம் 164.

வேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடித்தவன் இராசேந்திரன். அத்துடன் அக்காலத்தில் நாட்டி லுள்ள பல சமயங்களேயும் சார்ந்த ஆலயங்கள் எல்லா வற்றின் நிர்வாகமும் பொதுவாக அரசனின் மேல் பார்வையில் நடைபெற வேண்டும் என்ற முறையும் இருந்தது. நாதமுனிகளின் முயற்சியால் இராசேந் திரன் வைணவத்தின்மீது பக்தி பூண்டான் என்று சொல்வது மிகையாகும்.[2] இதற்குப் போதிய சான்று கள் இல்லே. ஆனல் வைணவ ஆசாரிய பரம்பரையின் முதல்வரும், பரமயோகியுமான நாதமுனிகள்மீது அவன் பெரும் மதிப்புக்கொண்டு, அவருடைய சமயப் பணியை ஆதரித்தான் என்று கொள்வதே பொருத்தமாகும். இக்காரணத்தால்தான் நாதமுனிகள் தமது சொந்த ஊரான வீரநாராயணபுரத்தை விட்டு இராசேந்திரன் தலேநகரான கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வந்து அங்கே வாழ்ந்திருக்க வேண்டும். இவ்வூர் சீரங்கத்திற் குப் பக்கத்திலிருந்ததும் ஒரு காரணமாயிருக்கலாம். திவ்யப் பிரபந்த அநுசந்தானத்தையும், அவைகளின் வழிபாட்டு நுட்பங்களேயும் பண்முறைகளேயும் ஒழுங்கு படுத்தி, சீரங்கம் கோயிலில் செயல்முறையில் கொண்டு வந்துவிட்டால், அவைகளே மற்ற வைணவ ஆலயங்

2. "இவன் (முதல் இராசேந்திரன்) சைவ சமயத்தில் பெரி தும் ஈடுபாடுடையவனுய் வாழ்ந்து வந்தவனெனினும் பிற சமயங் களிடத்தில் சிறிதும் வெறுப்புடையவனல்லன். அன்றியும் புறச் சமயங்களேயும் மதித்து அவற்றை அன்புடன் ஆதரித்தும் வந்தனன் ......... இவன் எல்லாச் சமயங்களேயும் ஆதரித்து வந்தனன் என்பது இனிது விளங்குதல் காண்க.'' பிற்காலச் சோழர் சரித் திரம் டி. வி. சதாசிவ பண்டாரத்தார் மூதற் புத்தகம், பக்கம் 186.

இராஜேந்திரன், தான் புதிதாய் நிர்மாணித்துக்கொண்ட கங்கைகொண்ட சோழபுரம் என்ற தலேநகரில் கங்கைகொண்ட சோழீச்சுரம் என்ற சிறப்பான சிவாலயத்தையே எழுப்பியதும் கவனிக்கத்தக்கது.

களும் எளிதில் பின்பற்றும் என்று நாதமுனிகள் கருதி, கங்கைகொண்ட சோழபுரத்தில் அரசனின் ஆதரவுடன் தங்கியிருக்கக்கூடும். ஆகவே நாதமுனிகள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைத் தொகுத்து முடித்தது பதினோராம் நூற்றுண்டின் முதல் இருபத்தைந்து ஆண்டுகளுக்குள்ளிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. அதற்குப் பின்னர் திவ்யப் பிரபந்தம் நாடெங்கும் பரவி எல்லா வைணவக் கோவில்களிலும் சேவைக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டதுமன்றி, அதற்கு, அதன் பெருமைகளையும் தத்துவார்த்தங்களையும் விவரிக்கும் முறையில் வியாக்கியான நூல்கள், வேறெந்த சமயத்தைச் சார்ந்த பாடல் தொகுதிக்கும் கிட்டாத ஒரு தனி முறையில் எழுந்தன. இந்தத் தனிமுறை என்ன என்பது பின்னர் விளக்கப்படும்.

நாதமுனிகள் வைணவ ஆசாரிய பரம்பரையின் முதல்வராயிருந்ததுடன் அரிய புலவராயிருந்து சில நூல்களையும் ஆக்கினுர். அவர் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தைத் தொகுத்தது எந்த அளவில் வைணவ சமயப் பணியாய் இருந்ததோ அந்த அளவில் தமிழ் இலக்கியப் பணியாயுமாயிற்று. என்ன கொள்கைகளைக் கையாண்டு திவ்யப் பிரபந்தத்தை இப்போதுள்ள அமைப்பில் தொகுத்தார் என்பதைத் தெரிய மார்க்கமில்லை. நாலாயிர திவ்யப் பிரபந்தம் இயற்பா, இசைப்பா என்று இருவகையாக அமைந்திருக்கிறது; சுமார் ஆயிரம் பாடல்கள் இயற்பாவாகவும் மற்றவை இசைப்பாவாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பாகுபாடு பழைய தமிழ் இலக்கிய மரபைத் தழுவியதாகும். இயற்பா பகுதியில் ஆறு ஆழ்வார்களின் பிரபந்தங்கள் இருக்கின்றன. அதில் முதலாழ்வார் மூவர் இயற்றிய திருவந்தாதிகளும் திருமழிசையாழ்வாரின் நான்முகன் திருவந்தாதியும், நம்மாழ்வாரின் திரு

விருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி ஆகிய வையும், திருமங்கை ஆழ்வாரின் திருஎழுகூற்றிருக்கை, சிறிய திருமடல் பெரிய திருமடல் ஆகிய பாடல்களும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. இத்தொகுதியின் பாடல் களில் பெரும்பாலானவை அந்தாதிகளாக அமைந் திருப்பது கவனிக்கத்தக்கது. பன்னிரு ஆழ்வார்களும் இயற்றிய பாடல்கள் இசைப்பா பகுதியில் காணப் பெறுகின்றன. பாடல்கள் ஆயிரமாயிரமாகத் தொகுக் கப் பெற்றிருப்பதால் இசைப்பா பகுதியில் மூன்று ஆயிரங்கள் உள்ளன. இவைகள் எல்லாம் பண் ணுடன் பாடப் பெறுவதற்குகந்தவை யாதலால் அவ் வாறே பாடப்படவேண்டும் என்ற காரணத்தால்தான் இசைப்பா என்று தனியாகப் பிரித்துத் தொகுக்கப்பட் டிருக்கின்றன. இசைப்பா பகுதியிலுள்ள பெரும் பாலான பாடல்களுக்குப் பண்களும் ஒருவாறு கிடைத் திருக்கின்றன. பிற்காலத்தவர் திவ்யப் பிரபந்தப் பாசு ரங்களுக்கு இராக தாளங்களும் அமைத்திருக்கிருர். ஆனுல் இப்போது வைணவக் கோவில்களில் பாசுரங் கள் பழைய பண்களைத் தழுவியோ, பிற்கால இராக தாள முறைகளின்படியோ பாடப் பெறுவதாகத் தெரியவில்லை. பாடல்கள், பொதுவாக, பலர் சேர்ந்த கோஷ்டியாரால் பாடப் பெற்று வந்திருக்கின்றன. இவ்வாறு வெகு காலமாகப் பாடப் பெற்ற அநுபவத்திலிருந்து எழுந்த ஒரு தனி ஸ்வர முறையிலும், இசைக்கலையைக் கடந்த ஒரு த்வனிப் பண்புடனும் பிரபந்தப் பாசுரங்கள் ஓதப் பெற்று வருகின்றன. இது எவ்வாருக இருந்த போதி லும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை நாதமுனிகள் இயற்பா, இசைப்பா என்று இலக்கியக் கருத்துக்களைத் தழுவியே வகுத்திருக்கிருர் என்பது திண்ணம்.

நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்கள் ஆழ்வார் களின் கால வரிசையில் அமைக்கப்பெறவில்லை என்பது

வெளிப்படை. பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டுடன் ஆரம்பித்து நம்மாழ்வாரின் திருவாய்மொழியோடு பிரபந்தம் முடிகிறது. இராமாநுச நூற்றந்தாதி நாத முனிகளின் காலத்திற்குப் பின்னர் பிரபந்தத்தில் சேர்க் கப் பெற்றது. ஆராய்ச்சியாளர் தேர்ந்த கொள்கைப்படி ஆழ்வார்களின் கால வரிசை உத்தேசமாக பின்வரு மாறு இருக்க வேண்டும். பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், திருமங்கையார், திருப்பாணர், தொண்டரடிப்பொடியார், குலசேகரர், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார் மதுரகவி என்று வரிசைக் கிரமம் இருக்கவேண்டும். பூர்வாசாரியாரின் முறைப் படி இந்த வரிசை வேறு விதமாக இருக்கிறது; அவர் களும் இது சம்பந்தமாக ஒருமித்த கருத்துக் கொண்ட தாகத் தெரியவில்லை. முதலாழ்வார் மூவரும், மற்றவர் களுக்கு முந்தியவர் என்று எல்லோரும் கருதியிருக் கிறார். திருவரங்கத்தமுதனாரும் பராசரபட்டரும் மதுர கவியை ஆழ்வார் வரிசையிலேயே சேர்க்கவில்லை. பின் பழகிய பெருமாள்ஜீயர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகியோர் ஆழ்வார்களின் வரிசைக் கிரமத்தை வெவ்வேருகக் கொண்ட போதிலும், நம்மாழ் வாரை நடுநாயகமாக வைத்து திருமங்கையாழ்வாரைக் கடைசி ஆழ்வார் என்று காட்டுகிறார்கள். இது சம்பந்த மாக நாதமுனிகள் கொண்ட கருத்து என்னவென்று தெரியவில்லை.

வேறெந்தக் கொள்கைகளைத் தழுவி நாதமுனிகள் திவ்யப் பிரபந்தத்தின் பாடல்களின் வைப்பு முறையை அமைத்திருக்கக்கூடும் என்பதை ஆராய முயல வேண்டும். வைணவ சம்பிரதாயத்தில் ஈடுபட்டவர் இந்த முறையைத் தத்வார்த்த ரீதியாக விளக்குகிறார்.[1]

---

1. 'திருப்பல்லாண்டு' முதல் 'அமலனாதிபிரான்' ஈறானவை பிரணவார்த்தங்களாகையாலே முதலில் வைக்கப்பட்டனவென்றும்

வேதங்களைத் தமிழில் செய்வதற்கும், அவ்வாறு செய்யப் பெறும் தமிழ் வேதங்களுக்கு வடமொழியிலுள்ள வேதங்களுக்குள்ளதைவிட அதிகப் புனிதத்துவம் கொடுப்பதற்குமே ஆழ்வார்களை, பரமன் அவதரிப்பித்ததாகக் கூறும் குரு பரம்பரைக் கதை சிந்தனைக்குரியது.[1] திவ்யப் ப்ரபந்தப் பாசுரங்களைப் பாடிய ஆழ்வார்கள் தமிழ்க் கவிகளாய் இருந்ததாலும், தங்கள் புலமையால் பகவானுக்குச் செந்தமிழில் இன்னிசை மாலைகளைத் தொடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே இவ்வற்புதமான பாசுரங்களைத் தமிழ் இலக்கிய, இலக்கண மரபுகளைத் தழுவி அவர்கள் பாடியிருப்ப

'கண்ணிநுண் சிறுத்தாம்பு நமஃஸப்தார்த்தத்தை விவரிப்பதாகையாலே அது அவற்றின் பின்பு வைக்கப்பட்டதென்றும், 'பெரிய திருமொழி' முதல் 'பெரிய திருமடல்' ஈறாகவுள்ள பிரபந்தங்கள் மந்திர சேஷமான நாராயண சப்த விவரணமாகையாலே அதன் பின்பு வைக்கப்பட்டனவென்றும் இந்தப் பிரபந்தங்களிலும் பொருட் பொருத்தத்தை கணிசித்தே பௌர்வா பர்யங்கள் ஏற்பட்டுள்ளனவென்றும், இவ்வாறு திருமந்திரார்த்த ப்ரதிபாதன்களான பிரபந்தங்கள் வைக்கப்பட்ட பின்பு, த்வயார்த்தமாய்த் தீர்க்க சரணாகதியை ப்ரதிபாதிப்பதாய் ஸாரதமமான திருவாய்மொழி எல்லாவற்றிற்கும் சரமப் பிரபந்தமாக வைக்கப்பட்டதென்றும் கொள்ளப்படுகின்றன. (நாலாயிர திவ்யப் பிரபந்தம் சே. கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு, முகவுரை பக்கம் 2) திருவாய்மொழியை மூன்றாவது ஆயிரமாகவும், இயற்பாவை நான்காவது ஆயிரமாகவும் வைக்கப்பெறும் முறையும் இருந்திருக்கிறது. இந்த முறைக்கும் தத்துவார்த்தம் கூறப்பட்டிருக்கிறது.

1. வைணவ சம்பிரதாயிகளின் கொள்கைப்படி நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம் ருக்வேத சாரம் என்றும், திருவாசிரியம் யசுர்வேத சாரம் என்றும், திருவாய்மொழி சாமவேத சாரம் என்றும் பெரிய திருவந்தாதி அதர்வ வேத சாரம் என்றும் கருதப்படுகின்றன. பொதுவாக நாலாயிர திவ்யப் பிரபந்தம் முழுவதுமே நான்கு வேதங்கள் ஆறு வேதாங்கங்கள் ஆகியவைகளின் சாரம் என்றும் சொல்லப்படுகின்றன. வேதங்களுக்கு வேதாங்கங்கள்போல், வேத சாரமான நம்மாழ்வாரின் பாசுரங்களுக்கு திருமங்கை ஆழ்வாரின் பாடல்கள் வேதாங்கங்கள்போல இருக்கின்றன என்றும் கருதியிருக்கிறார்.

தாலும், தக்க இலக்கிய காரணங்களைக் கொண்டே நாத முனிகள் பிரபந்தத் தொகுதியை அமைத்திருக்க வேண்டும் என்று தமிழ் அறிஞர் இக்காலத்தில் கருதி ஞல் அதில் தவறு ஒன்றும் இல்லை.[2] சுவையும் இசையும் மலிந்த தமிழ்ப் பாக்களை இயற்றி அவற்றைச் சர்வேசு வரனுக்கு அர்ப்பணம் செய்வதில் பேரானந்தம் கொண் டார்கள் ஆழ்வார்கள். திவ்யப் பிரபந்தப் பாடல்களைச் சற்று நுட்பமாக ஆராய்ந்தால், ஆழ்வார்கள், தாம், பரமனைப் பற்றித் தமிழ்ப் பாமாலைகளை இயற்றுவதில் பெருமிதம் கொண்டிருக்கிருர்கள் என்று தெரிகிறது. இப்பெரு மக்கள், தங்களுடைய வெறும் உள்ளங்களை விட, அவைகளில் கொந்தளித்தெழும் நானுவிதமான உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் கவிதையே பகவானுக்கு உகந்த காணிக்கை என்று கருதினுர்கள்.

தாம் பக்தராயும் கவியாயும் இருந்ததின் தத்து வத்தை, திருவாய்மொழியின் ஏழாம் பத்தின் ஒன்பதாம் திருவாய்மொழியில் நம்மாழ்வார் அழகாக விளக்கியிருக் கிருர்; பரமன், தம்மை ஆட்கொண்டு, தம்மிடம் அந்தர் யாமியாயிருந்து தமது சேதன சேஷ்டைகளுக்கெல்லாம் காரணமாயிருப்பதாகக் கருதி, தாம் பாடின பாசுரங்கள் பகவானுலேயே பாடப் பெற்றதாக நினைத்து, அப்பரஞ் சோதி, தம்மையே, தம் பக்தனின் செஞ்சொல் மூலம் பாடிக் கொள்கிருர் என்ற கருத்திலும் பாவத்திலும் பாடி யிருக்கும் பத்துப் பாடல்கள் மிகவும் ஆழ்ந்த தத்துவப்

2. "பாரத கீதைகளின் வேதோபநிஷத்துவம் போலே இது வும் (திவ்யப் பிரபந்தமும்) வ்யாக்யை; ஆனாலும் வேத ரஹஸ்ய மாம். உதார்த்தாதி, பதக்ரம ஜடவாக்ய பஞ்சாதி பாதவ்ருத்த, ப்ரச்ன, காண்டாஷ்ட, காத்யாயாம்ச பர்வாத்யலங்காரங்கள் போலே, எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, தொடை, நிரை ஓசை, தனியினம், யாப்பு, பாத்துறை, பண்ணிசை, தாளம், பத்து நாலாயிரம் முதலான செய்கோலம் இதற்குமுண்டு" (ஆசார்ய ஹிருதயம்.)

பான்மையுடையவை. கடவுளுடன் தாம் ஒன்றுபட்ட தன்மையை நம்மாழ்வார் கூறிய போதிலும், அந்த நிலையிலும், அவரது கவிதை வாழ்க்கையின் தனித் தன்மையும் உணர்ச்சியும் அவரை விட்டகலவில்லை. பேரின்ப வெள்ளத்தில் திளைத்திருக்கும் சமயங்களிலும் அவர், தாம் தமிழ்க் கவியாயிருப்பதை மறக்கவில்லை. நம்மாழ்வார், தம்முடைய இனிய பாடல்கள்மூலம் பரமன் தன்னையே பாடிக் கொள்கிறான் என்று தொடங்கி, சற்றுப் பின்னர், இந்தப் பெரும் பாக்கியத்தைத் தம்மைவிட உயர்ந்த கவிகளுக்கு அளித்துப் பாடல்களை அவர் பெறக்கூடாதோ என்ற புலவரின் அவையடக்கப் பண்புடன் எண்ணுகிறார்.[1] அப்புறம் சற்றுத் தெளிந்து முன்னிருந்த மனப்பான்மையை எய்துகிறார்.

நம்மாழ்வாரின் பாடல்களை அவைகளுக்குரிய பெருமையுடன் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் அக்காலத்தில் மதிக்கவில்லை என்றும், இதைக் கேட்ட

---

1. "*இன்கவி பாடும் பரம கவிகளால்*
*தன்கவி தான்தன்னைப் பாடுவியாது, இன்று*
*நன்குவந் தென்னுடனாக்கி, என்னால்தன்னை*
*வன்கவிபாடு மென்வைகுந்த நாதனே.*"

*திருவாய்மொழி*, 7—9—6

*இந்த அருமையான பாட்டில் நம்வாழ்வார், தம் பாடல்களை 'வன்கவி' என்று இறுதி வலியில் குறிப்பிட்டிருப்பது மிகுந்த அர்த்த புஷ்டியுடையது. 'வன்கவி' என்றால் வலியும் திட்பமும் உள்ள பாடல் என்று பொருள். பாடலுக்கு வலியும் திட்பமும் கருத்து வளத்தால் ஏற்படக்கூடிய குணங்கள். மற்ற ஆழ்வார்களின் பாடல்களினின்றும், தம் பாடல்கள் வேறுபட்டு ஆழ்ந்த தத்துவக் கருத்துக்களும் பரஞானமும் பொதிந்திருக்கும் பொருண்மையை நம்மாழ்வாரே உணர்ந்திருந்தார் என்பதற்கு இது ஒரு சான்றாகும். அவர் பாசுரங்களில் இசைத் தன்மை காணப்பெற்ற போதிலும், ஞானத் தமிழ் என்ற முறையில் அவை சிறந்திருப்பதைத்தான் 'வன்கவி' என்ற தொடர் காட்டுகிறது. 'வன்கவி' என்பதற்கு வேறு பொருள் கூறுவது பொருந்தாது; சிறப்பும் ஆகாது.*

குருகூர்வாசிகள் கோபித்தெழுந்து ஆழ்வார் சந்நிதி முன்பு சத்தியாக்கிரகம் செய்தார்கள் என்றும், ஆழ்வார் ஒரு பிராமண வேடத்தில் பிரசன்னமாகி அவர்களுக்கு அருள்புரியவே, அவர்கள் மதுரை சென்று ஒரு தெய்வீக சம்பவத்தை உண்டுபண்ணி சங்கப் புலவருக்குப் பாடம் கற்பித்தார்கள் என்றும் அதன்பின் அவர்கள் நம்மாழ்வாரின் பாசுரங்களின் கவிதை நயத்தையும் புனிதத் தன்மையையும் ஏற்றுக்கொண்டார் என்றும் ஒரு கதை குரு பரம்பரையில் காணப் பெறுகிறது.[1] இதற்கு வேறு எவ்விதச் சரித்திரச் சான்றுகளும் இல்லை. ஆனால் இக் கதைக்கு ஒரு பொருள் உண்டு. நம்மாழ்வார் எவ்வளவு உயர்ந்த ஞானச் செம்மலாயிருந்த போதிலும்' தமிழ்க் கவி என்ற முறையில் அக்காலத்து வழக்கத்திற்கொப்ப, சங்கப் புலவரின் போற்றுதலையும் அவருடைய பாடல்கள் பெறவேண்டும் என்ற கருத்து இருந்திருப்பது சிந்தனைக்குரியது. எம்பெருமான்மீது அளவற்ற காதல் கொண்டு, அவருடைய திருமேனியை திவ்ய செளந்தர்யத்துடன் கற்பித்துக்கொண்டு, நாயகன் நாயகி பாவத்தில் உள்ளங் கனிந்து நம்மாழ்வார் பாடியிருக்கும் பாசுரங்கள் எல்லாம் தமிழ் அகப் பொருள் இலக்கணத்தைத் தழுவியே இருக்கின்றன. இதே போல் திருமங்கை ஆழ்வார், ஆண்டாள் முதலியோரும் பாடியிருக்கிறார்கள். ஆகவே, நம்மாழ்வார் உள்பட எல்லா ஆழ்வார்களும், தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பயின்று அவைகள் கூறும் மரபைத் தழுவியே, தாங்கள் பெற்ற அருட் புலமையைப் பயன்படுத்

1. இந்தக் கதை வேறு விதமாகவும் நிலவுகிறது. நம்மாழ்வார் பெருமையை இகழ்ந்தது ஏகம்பநாடன் என்ற ஒருவனின் சீடர்கள் என்றும், அதை நிலைநாட்டியது மதுரகவிகள் என்றும், உள்ள வேறுபாடுகளுடன் காணப் பெறுகிறது. (திருவாய்மொழி. வி. கே. இராமாநுசதாசன் உரை. முகவுரை. பக்கம் 7.)

திப் பாடல்கள் இயற்றினர் என்பது நோக்கற்பாலது. இவ்வாறு தமிழ்ப் பாடல்களைப் பாடி அதன்மூலம் பகவான்மீது பக்தி பூணுவதே தங்களுடைய தனிச் சிறப்பு என்று ஆழ்வார்கள் உணர்ந்து எக்களிப்புடன் கூறியிருப்பதும் நமது கவனத்திற்குரியது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் பாக்களில், வெண்பாவும், பாவினங்களில் விருத்தமும், பிரபந்தங்களில் அந்தாதியும் பெரும்பாலும் காணப்பெறுகின்றன. ஆசிரியம், கலித்துறை, நெடுந்தாண்டகம், குறுந்தாண்டகம், எழுகூற்றிருக்கை போன்ற யாப்பினங்களும், பிள்ளைக்கவி, மடல் போன்ற பிரபந்த வகைகளும் கொஞ்சம் இருக்கின்றன முதலிரண்டு ஆயிரங்களில் அந்தாதிப் பாடல்கள் அதிகமாக இல்லை. மூன்றுவது ஆயிரமாகிய இயற்பாவின் பெரும் பகுதியும் நான்காவது ஆயிரமாகிய நம்மாழ்வாரின் திருவாய்மொழி முழுவதும் அந்தாதிகளாகவே அமைந்திருக்கின்றன. தமிழிலுள்ள அந்தாதிப் பாடல்களில் திருவாய்மொழியே மிகப் பெரிது; தலைசிறந்தது.[1] ஒவ்வொரு பத்திலுள்ள இறுதிப் பாட்டை நம்மாழ்வாரே பாடியதாகக் கொண்டால், அவர் ஆயிரம் பாடல்கள் பாட வேண்டுமென்ற ஒரு திட்டம் போட்டு அதன்படி பாசுரங்களை முறையாகப் புலமைப் பண்புடன் இயற்றினர் என்று கொள்ளவேண்டும்.[2] பெரியாழ்வார் கிருஷ்ணபகவா

1. திருவாய்மொழியைப் பொறுத்த வரையில் அது முழுவதும் ஒரே அந்தாதி என்று சிலர் கருதியிருக்கிறார். வேறு சிலர் அதை நூறு அந்தாதிகளாகக் கொள்ளவேண்டும் என்று கூறியிருக்கிறார்,

2. இவ்வித சாற்றுப் பாக்களை நம்மாழ்வாரே பாடியிருக்க மாட்டார் என்றும் பின்னுள்ளவர் பாடிச் சேர்த்திருக்கிறார் என்றும் ஒரு அறிஞர் கருதுகிறார். (செந்தமிழ். தொகுதி 21-பக்கம் 333—340. நாலாயிரப் பிரபந்தங்களின் சாற்றுப் பாக்கள். டிடாம்பி. அனந்தன்.) இந்தக் கருத்தை மறுத்து வேறொரு

னின் குழந்தைப் பருவத்தைப் பற்றிப் பாடியிருக்கும் பாசுரங்களே தமிழ் இலக்கியத்திலுள்ள ஆதிப் பிள்ளைக் கவியாகும். கவி நயத்தில் அதற்கு ஈடான பிள்ளைத் தமிழ் வேறு இல்லை. இவை போன்ற பாடல்கள்மூலம் ஆழ்வார்கள் செய்த சமயப் பணியால் தமிழ் இலக்கியம் பெற்ற அழியாக் கவிதைச் செல்வத்தை மதிப்பிடற்கரியது.

திவ்யப் பிரபந்தப் பாசுரங்கள் சம்பந்தமாக ஒரு முக்கியமான விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். பாசுரங்கள் நல்ல, இனிய தமிழ்ப் பாடல்களாயிருந்தும் அவைகளைப் பாடிய ஆழ்வார்களில் சிலர் உயர்ந்த கவிகளாயிருந்தும், தமிழ் மாணவர் பொதுவாக இலக்கிய ரீதியாக இப்பாசுரங்களைப் பயிலுவதில்லை. தென்னிந்திய வைணவ சமயத்தினருக்கு திவ்யப் பிரபந்தம் மூல நூலாகக் கருதப் பெற்று அது அவர்களுக்கே உரியது என்ற எண்ணம் பரவியிருந்திருக்கிறது. வைணவப் பேரறிஞரில் பெரும்பாலோரும் இவ்வாறே கருதினர். இதன் பயனாக, அவர், நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கு ஓரளவு வேதங்களையும் உபநிடதங்களையும் ஒட்டியும், இதிகாசங்களாகிய மகா பாரதம், இராமாயணம், விஷ்ணு புராணம், பாகவத முதலிய புராணங்கள், தசாவதார வைபவங்கள், தர்ம சாத்திரங்கள் ஆகியவைகளைப் பெரும்பாலும் தழுவியும், தங்களுடைய பக்தி, கல்வித் திறன், பௌராணிகப் பண்பு, விமரிசன வல்லமை முழுவதையும் காட்டி, சாதாரண மக்கள் எளிதில் படித்துப் பொருள் தெரிந்துகொள்ள முடியாத மணிப்ரவாள

---

அறிஞர், நம்மாழ்வார் ஞானசம்பந்தர் போன்ற அருட்செல்வர், தங்கள் பதிகங்களின் இறுதிப் பாடல்களைத் தாங்களே பாடியிருக்கிறார் என்றும், அவ்வாறு பாடுவதில், தற்புகழ்ச்சி இருப்பதாகக் கருதக்கூடாதென்றும் எழுதியிருக்கிறார். (செந்தமிழ் தொகுதி. 21-பக்கம் 429—442. ஆ. அரங்கராமாநுஜப் பிள்ளை.)

நடையில் விரிந்த வியாக்கியானங்களைச் செய்தார். இப் பேருரைகளில் காணப்பெறும் எண்ணிறந்த விஷயங் கள், கருத்துக்கள், கற்பனைகள், தத்துவங்கள் ஆகியவை கள்தான் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களின் உண்மையான பொருள் என்று கொண்டு வைணவ சமய சம்பிரதாயி கள், அதை ஸ்வாபதேசம் என்று பெரிதும் போற்றி அதில் ஈடுபட்டு வந்திருக்கிறுர்கள். அழகான பொன் நூலாலும் பட்டாலும் நெய்யப் பெற்றதைப் போன்ற இந்த ஸ்வாபதேசத்திரையாலே பிரபந்தப் பாசுரங்களில் ஒரு பகுதியை மறைத்து, மற்றத் தமிழர் அவைகளின் அருமையை உணராதபடி வைணவ சம்பிரதாயிகள் செய்தார் என்றுகூடச் சொல்லலாம். அவர் பாடல்களி லுள்ள செம்பொருளையும் தமிழ்க் கவிதையையும் அந்நியாபதேசம் என்று கருதி அதற்கு முக்யத்வம் கொடுக்கவில்லை. இதனுல் நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாசுரங்களின் இலக்கியப் பெருமைகளை, ஒரு சிலரைத் தவிர, பெரும்பாலான தமிழ் மாணவரால் உணரக்கூடாத நிலைமை ஏற்பட்டு நீடித்து வந்தது. வைணவ சமயி களும், பாசுரங்களின் உட்பொருள் என்று நினைத்து ஸ்வாபதேசத்தையே போற்றிப் பரிபாலித்து வழி வழி யாகப் பயின்று வந்திருக்கிறுர்கள். அத்துடன் பாசுரங் களின் உட்பொருளையும் அது சுமக்கும் தத்துவத்தையும் இரகஸ்யமாகவே வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஒரு கருத்தும் சமயிகளிடம் நிலவி வந்தது.[1] இக்கரர ணங்களால் பாசுரங்களின் இசைச் சுவையையும் இலக் கிய நயங்களையும் அவர் மறந்தார். ஆழ்வார்களே, தங்கள் பாசுரங்களைச் செந்தமிழ் மாலைகள் என்றும் இன்கவிகளென்றும் கருதிப் பெருமைப்பட்டதையும் இவர் பொருட்படுத்தவில்லை. இன்றும் இந்த நிலைமை

1. இராமாநுசரின் சீடர் இவ்வாறு நினைத்திருப்பது விந்தை யாகவே பலருக்கும் தோன்றும்.

தான் நீடித்து வருகிறது. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குக் குந்தகம் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் இந்த நிலைமை மாறவேண்டும். திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைத் தமிழ் இலக்கியமாகக் கற்று, அவைகளில் பொதிந்து கிடக்கும் கவிதையைத் தமிழ் மாணவர் சுவைத்து இன்புற வேண்டும். ஏனென்றால் தமிழ் இலக்கியத்தில் உள்ள மிகச் சிறந்த இசைப்பாக்களைக் கணக்கிட்டால் அவைகளில் மூன்றில் ஒரு பங்கு திவ்யப் பிரபந்தத்திலும், மற்றொரு பங்கு திருமுறைகளிலும், மீதமுள்ள ஒரு பங்கு தான் மற்றெல்லா நூல்களிலும் காணப்பெறும்.

நாதமுனிகள் திவ்யப் பிரபந்தத்தின் பாடல்களைத் தொகுத்த முறையைப்பற்றி வைணவ சமயிகளின் தத்துவமும் கொள்கைகளும் ஒருபுறம் இருக்க, பிரபந்தத்தை ஒரு இலக்கியத்தொகை என்ற ரீதியில் கவனித்துச் சிந்தனை செய்தால் சில நுட்பமான விஷயங்கள் தென்படும். ஆழ்வார் பன்னிருவர் என்று இருந்த போதிலும், ஒரு மரம் தோப்பு ஆகாது என்ற விதிக்கொப்ப, ஒவ்வொரு பதிகத்தைப் பாடிய திருப்பாணாழ்வார், மதுரகவி ஆழ்வார் ஆகியோரை நீக்கினால் பதின்மரே ஆவார். முதலாழ்வார் மூவரும் ஆளுக்கொரு அந்தாதியை இயற்றியிருக்கிறார். வைணவம் அப்போதுதான் தலைதூக்கிக் கொண்டிருக்கும் நிலையில் உள்ள சூழ்நிலையைத் தழுவி இம்மூவரும், இனிமை, திட்பம், எளிமை முதலிய குணங்களடங்கிய பாக்களால் தங்கள் ஞானத் தமிழ் வெண்பாக்களை ஆக்கியிருந்த போதிலும், அவரை உயர்ந்த கவிகள் என்று இலக்கிய ரீதியாக மதிக்க முடியாது. தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் திருமாலையில், ஆழ்ந்த சிந்தனையும், ஓசைப் பண்பும், கவிதைச் சுவையும் உடைய சில பாடல்கள் இருப்பினும் ஐம்பத்தைந்தே பாசுரங்களை இயற்றிய அவரையும் முதலாழ்வார் கூட்டத்தோடுதான் சேர்க்க

வேண்டும்.[1] திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தத்திலும் நான்முகன் திருவந்தாதியிலும் தீவிர வைணவப் பற்றுடன் தத்துவ ஞானக் கருத்துக்கள் திட்பமான செய்யுள்களில் எடுத்தாளப் பெற்றபோதிலும், மொத்தத்தில் அவரையும் பெரிய கவி என்று கொள்ளமுடியாது. ஆகவே ஆழ்வார்களில் பெரிய கவிகள் என்று சொல்லக்கூடியவர் பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகிய மூவருமே. ஆண்டாளும் குலசேகரரும் பாடிய பாடல்களின் தொகை குறைவாயிருந்தாலும் அவ்விருவரும் முதல்தரமான இசைக் கவிகள். நெஞ்சை நெருப்பாக்கும் காதலுணர்ச்சியின் தன்மையையும், அத்தகைய உணர்ச்சியுடன் காதலிக்கும் மணாளன் என்று கொண்டவன்மீது எழும் பாசத்தின் பரிணாமங்களையும் அவனுக்காக ஏங்கித் தவிக்கும் பெண்மையின் அவஸ்தைகளையும் வெறியுடன் ஆண்டாள் பாடிய தெய்வக் காதல் பாட்டுக்களைப்போல் தமிழில் வேறில்லை. குலசேகரரின் தன்னை மறந்த உணர்ச்சியைப் பொழிந்த பாடல்கள் மிகுந்த நயங்களுடையவை. கண்ணனது குழந்தைப் பருவ விளையாட்டுகளைக் காணப்பெறாத தேவகி, யசோதைக்குக் கிட்டிய அந்தப் பாக்கியத்தைத் தான் பெறவில்லையே என்று ஏங்கி, ஏங்கிப் புலம்புவதாகக் குலசேகரர் பாடியிருக்கும் "ஆலைநீள்கரும்பன்னவன்தாலோ" என்ற பதிகம் போல், தாய்மை உள்ளத்தின் அன்பையும், ஆழத்தையும், பண்புகளையும் சித்திரிக்கும் பாடல் தமிழில் வேறில்லை என்று துணிந்து கூறலாம்.

ஆழ்வார்களில் பெரிய கவிகளாய் இருக்கும் பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகியோ

---

1, திருமாலையையும், திருப்பள்ளியெழுச்சியையும் ஒரே புலவர் பாடியிருப்பாரா என்று சிலர் ஐயுறுகிறர். இந்த ஐயம் எழுவதற்குத் தகுந்த காரணங்கள் இல்லை.

ரின் பாடல்களை முதலிலும், நடுவிலும் இறுதியிலும் நாதமுனிகள் திவ்யப் பிரபந்தத்தில் வைத்திருப்பது பொருத்தமாய் இருக்கிறது. முதலாயிரத்தைக் கவனித்தால், மனிதன், சில ஆண்டுகள் தூய்மையான குழவிப் பருவத்தின் இன்பத்தைப் பருகிப் பின்னர் வாலிபம் அடைந்து காதல் வாழ்க்கையில் ஈடுபட்டு உழந்து, நின்று, அப்புறம் பகவானிடம் பக்தி கொண்டு, இறுதியில் ஞானம் பெற்று வளர்வதைக் காட்டும் முறையில் பாடல்களின் அடைவு இருப்பது சிந்திக்கத்தக்கது. கிருஷ்ணபகவானைக் குழந்தையாகப் பாவித்துப் பல பாவங்களில் மிகுந்த கற்பனை அழகுடன் பெரியாழ்வார் இயற்றியிருக்கும் பாடல்களில் ஊடுருவி யிருக்கும் குழந்தை உள்ளத்தின் கவிதையை பிரபந்தத்தின் தொடக்கத்தில் வைத்திருப்பது இயற்கையாயிருப்பதுடன் அதன் மங்களகரமான ஆரம்பத்தைக் காட்டுகிறது. இந்த மங்களகரமான தன்மைக்குக் கட்டியங் கூறி அதை உலகத்திற்குப் பறை சாற்றுவதுபோல் திருப்பல்லாண்டு அமைந்திருக்கிறது. உலக வாழ்க்கையில் இறங்கும் பருவம் எய்தியவர் அநுபவிக்க வேண்டிய இன்பத்தை, தெய்வீகமாக்கப் பெற்ற பெண்மையின் பேதைமை உள்ளத்தின் உணர்ச்சியின்மூலம் சித்திரிக்கும் தன்மையில் ஆண்டாளின் பாசுரங்கள் அடுத்து வைக்கப் பெற்றிருப்பது இயைபுடையது. சிறு காதல் முற்றி பக்தியாக மாறி பகவான்மீது கொள்ளும் பேரன்பையும், அதில் விளையும் பேரின்பத்தையும் நெஞ்சுருகப் பாடியிருக்கும் குலசேகரரின் திருமொழி, அதற்குப் பின் பொருத்தமாக அலங்கரிக்கிறது. இவ்வித பக்தி பழுத்து ஞானமாகப் பரிணமிக்கும் பண்பை திருமழிசையாரின் திருச்சந்த விருத்தமும் தொண்டரடிப்பொடியின் திருமாலையும் எடுத்துக் காட்டுகின்றன. திருப்பாணாழ்வாரின் 'அமலனாதிபிரான்' என்னும் பாசுரத்துடனும்,

மதுரகவி ஆழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற குரு பக்தியின் இதிகாசம்போல் அமைந்திருக்கும் பாட லுடனும் முதலாயிரம் முடிகிறது.

இரண்டாவது ஆயிரத்தில் திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழியும், திருக்குறுந்தாண்டகமும் திரு நெடுந்தாண்டகமும் அடங்கியுள்ளன. ஆயிரம் என்று சொல்லப்படினும் இதில் அதற்கு அதிகமாகவும், முத லாயிரத்தில் அதற்குக் குறைவாகவும் பாடல்கள் அமைந்திருக்கின்றன. முதலாயிரத்திலுள்ள பாடல் களைப் பாடியிருக்கும் ஏழு ஆழ்வார்களும் தூய்மையான பக்தி வாழ்க்கையை நடத்திய திருமாலடியார்கள். அவர் களில் இருவருடைய வாழ்க்கை வரலாறு தான் ஒருவாறு தெரிய முடிகிறது. பெரியாழ்வார் அறிவிற் சிறந்து விளங்கி அவர் காலத்துப் பாண்டிய மன்னனின் வணக் கத்தையும் ஆதரவையும் பெற்றவர். திருமழிசையாழ் வார் பல சமயங்களைக் கற்றுத் தேர்ந்து வெகுகாலம் சிவ னடியாராயிருந்து பின்னர் வைணவத்தைப்பற்றி அது போற்றும் பரமனைப் பாடி யோகியாய் இருந்தவர். இரண்டாவது ஆயிரத்தில் உள்ள பாடல்களை இயற்றிய திருமங்கை ஆழ்வாரோ உலக வாழ்கையில் பெரிதும் ஈடுபட்டுத் தமது புலன்களுக்கு அடிமையானவர். அவர் சோழ அரசனுக்குக் கீழ்ப்பட்ட ஒரு குறுநில மன்னனா யிருந்து, தாம் காதலித்த ஒரு அழகிய பெண்ணிற்காக வைணவனாகி, அவளைத் திருப்தி செய்ய, தமது செல் வத்தை எல்லாம் பாகவத கைங்கரியத்திற்காகச் செலவு செய்து, பணமுடை ஏற்பட்டதால் தமது குலத் தொழி லாகிய களவை, அக் கைங்கரியத்தைத் தொடர்ந்து செய்ய, பக்திப் பரவசத்துடனும் ஆரவாரத்துடனும் செய்து கொண்டிருக்கும்போது, பல அற்புதங்களை நிகழ்த்திப் பரமன் அவரை ப்ரீதியோடு ஆட்கொண்டதி னால் புனிதராகி, ஞானம் பெற்று நெஞ்சங் கசிந்து பல

பிரபந்தங்களைப் பாடியவர்.[1] அவர் அதிதீவிரமான வைணவ பக்தர். பாரத நாட்டிலிருந்த நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் எண்பத்தெட்டு தலங்களுக்கு திருமங்கை ஆழ்வார் சென்று அங்கே எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளைப் பாடிப் பரவசம் அடைந்தவர். "கற்றிலேன் கலைகளை" என்று அவர் சொல்லியிருந்த போதிலும் அரிய பாண்டித்யமும் அகண்டமான கல்வியும் பெற்ற தமிழ்ப் புலவர் அவர் என்பதற்கு, இலக்கியச் சுவையுடன் பல்வேறு பாட்டியல் வகைகளில் இயற்றப் பெற்றிருக்கும் அவருடைய பாடல்கள் சான்று பகர்கின்றன. ஒருவனுடைய செயல்கள் நல்லனவாயிருந்தாலும் சரி, தீயனவாயிருந்தாலும் சரி, சர்வேசுவரனுடைய நிர்ஹேதுக கருணைக்கு அவன் உரியவனானால் உய்யலாம் என்ற பாடத்தை, தெரிந்தோ தெரியாமலோ நாள்தோறும் எத்தனையோ பாபச் செயல்களைச் செய்து கொண்டிருக்கும் உலக மக்களுக்கு திருமங்கை ஆழ்வாரின் வாழ்க்கை கற்பிப்பதால் அவருடைய பாசுரங்களைத் திவ்யப் பிரபந்தத்திற்கு நடுநாயகமாக நாதமுனிகள் வைத்திருக்கிறார் என்று ஊகிக்கலாம்.[2]

---

1. திருமங்கை ஆழ்வாரின் வாழ்க்கையைப்பற்றி குரு பரம்பரைக் கதைகளில் உள்ள விவரங்கள் நம்பத்தகுந்தன அல்ல என்றும் அவரைப் போன்ற ஒரு சிறந்த பக்தரும் பெரியாரும் களவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கமாட்டார் என்றும் சிலர் கருதுகிறார். இப்படிக் கருதினால் ஆழ்வாரின் வாழ்க்கையின் தத்துவமும் அழகும் கவிதையும் நலிந்துவிடும். பரமனுக்காளாவதற்கு முன், அவர் செய்ததாகச் சொல்லப்படும் செயல்கள் அவருடைய பெருமையைக் குறைப்பதாகக் கருதமுடியாது.

2. ஈசுவரனின் நிர்ஹேதுக கருணையால்தான் ஜீவன்கள் உய்யலாம் என்பது வைணவ சமய பக்தி மார்க்கத்தின் முக்கியமான கொள்கைகளில் ஒன்று. பல பக்தர்களின் சரித்திரங்கள் இந்தக் கொள்கையை வற்புறுத்துகின்றன. கிறிஸ்து சமயத்தார் கொண்டிருக்கும் The Doctrine of Grace என்பதை இதனுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

நம்மாழ்வாரின் ஆயிரம் பாடல்கள் கொண்ட திருவாய்மொழி திவ்யப் பிரபந்தத்தின் நாலாவது ஆயிரமாக வைத்திருப்பதின் பொருத்தம் எளிதில் விளங்கும். திருவாய்மொழியை மூன்ருவது ஆயிரமாகவும் இயற்பாவை நாலாவது ஆயிரமாகவும் வைக்கும் சம்பிரதாயமும் இருந்திருக்கிறது. இம்மாதிரி மூன்ருவது நான்காவது ஆயிரங்களை இடம்பெயர்த்து வைத்தலால், பாடல்களின் பெருமை பாதிக்கப்படாது இருந்த போதிலும் திருவாய்மொழி பிரபந்தத்தின் இறுதியில் இருப்பதில்தான் அமைப்புப் பொருத்தம் சிறப்பாக இருக்கும். இயற்பா பெரிய திருமொழிக்கும் திருவாய்மொழிக்கும் இடையில் இருப்பதுதான் கிரமம். ஏன் ? திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழி பலதிறப்பட்ட உணர்ச்சிப் பெருங் கடல்; அதில் மூழ்கித் திளைத்தவர் கொஞ்சம் இளைப்பாறி மன அமைதி பெற்ற பிறகுதான், நம்மாழ்வாரின் ஞானப் பாற்கடலாகிய திருவாய்மொழியில் இறங்க முடியும். இது மனத்தின் இயல்பைச் சார்ந்த ஒரு தத்துவம். இவ்வாறு இளைப்பாறக் கூடிய இடமாகவே இயற்பா, பெரிய திருமொழிக்கும் திருவாய் மொழிக்கும் இடையே அமைந்திருக்கிறது என்று கருதலாம். திருவாய்மொழிப் பாடல்களோ, வைணவ சமயத்தின் உயிர்நாடிகளாகவும், அச்சமயத்தில் பின்னர் வளர்ந்த தத்துவங்களுக்கு விதைகளாகவும் இருக்கின்றன. அத்துடன், சமய விவகாரங்களை ஒதுக்கிவிட்ட கனிந்த மனித உள்ளம், தன்னைப் படைத்து இயங்கச் செய்து ஆட்டுவிக்கும் பரம்பொருளுக்கு, ஆயிரம் ரூபநாமங்களையும், அப் பரஞ்சோதியின் உண்மைக்கும் லீலா விபூதிக்கும், கணக்கற்ற தத்துவங்கள், சாத்திரங்கள், வேதங்கள், ஆகமங்கள் புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவைகளைக் கற்பித்துக்கொண்டு, அதனுடன் முழுவதும் ஐக்கியமாகியோ, அல்லது ஒன்றுபட்ட உணர்ச்சியுடன்

பக்கத்தில் அமர்ந்து கொண்டோ, அவாங் மன கோசர மாய் ஆனந்திக்கும் பரமமோன நிலையைக் கவிதையின் மூலம் காட்டமுயலும் பாடல் களஞ்சியமாய்த் திருவாய் மொழி திகழ்வதால் அதை நாலாயிர திவ்யப் பிரபந்தத் திற்கு முத்தாய்ப்பாய் நாதமுனிகள் வைத்திருக்கிறார். இது மிகவும் பொருத்தமாயிருப்பது, பிரபந்தத்தை வெறும் இலக்கியமாகப் படிப்பவருக்குக்கூடப் புலப் படும். வைணவரின் சம்பிரதாயப்படி ஆழ்வார்களில் உயர்ந்தவர் நம்மாழ்வார்.[1] கவிதா ரீதியாகப் பார்த் தாலும் அவரே தலைசிறந்தவர். மேலே கூறப் பெற் றவை எல்லாம் இலக்கிய விமரிசன முறையில் சொல் லப்பட்டிருக்கின்றன; அவை நவீன ஸ்வாபதேசம் அல்ல.

1. நம்மாழ்வாரை அவயவியாகவும் பிற ஆழ்வார்களை அவ ருக்கு அவயவமாகவும் கூறுவதுண்டு. இவருக்கு பூதத்தாழ் வாரைச் சிரமாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாக வும், பெரியாழ்வாரை முகமாகவும் திருமழிசை ஆழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடி ஆழ்வாரை மார்பாகவும், திருமங்கை ஆழ்வாரைக் கொப்பூழ் ஆகவும் மதுரகவி ஆழ்வா ரைப் பாதமாகவும் உரைப்பது வைணவ மரபு.

# III. திவ்யப் பிரபந்தம் திருமுறைகள் ஆகியவைகளின் முடிவான அமைப்பு

திவ்யப் பிரபந்தம் நாதமுனிகளால் தொகுக்கப்பெற்ற சில தலைமுறைகளுக்குப் பின்னர் கி. பி. பனிரண்டாம் நூற்றாண்டில் திருவரங்கத்தமுதனார் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியை அக்காலத்து வைணவப் பெரியார் பிரபந்தத்துடன் சேர்ந்தார். இப்படிச் செய்ததற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. முன்னர்க் கூறியிருப்பதுபோல, நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில், அதன் பெயருக்கொப்ப நாலாயிரம் பாடல்கள் இல்லாததால் அந்தக் குறையை நீக்குவதற்குத் திருவரங்கத்தமுதனார் பிரபந்தத்தைச் சேர்த்திருக்கலாம். ஆனால் இதைவிட முக்கிய காரணம் இருந்திருக்க வேண்டும்.

தென்னாட்டில் வைணவ சமயம் ஆழ்வார்களின் பாடல்களால் பெரும் வளர்ச்சியை அடைந்திருந்தபோதிலும், அதை எல்லாத் துறைகளிலும் பூரணமாக உருவாக்கினது இராமாநுசர்.[1] இவர் காலத்திற்கு

1. இராமநுசர் கி பி. 1017-ல் பிறந்து 1137ம் வருடம் முடிந்தார் என்பது தான் பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட அவர் காலம். அவர் இறந்த காலத்திற்குச் சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. ஆனால் பிறந்த வருஷத்திற்கு குருபரம்பரைகளிலும் கோயிலொழுகு முதலிய நூல்களிலும் காணப்பெறும் தகவல்களைத் தவிர வேறு சான்றுகள் இல்லை.' இவைகளை ஆதாரமாக வைத்து ஆழ்வார்கள் ஆசாரியர்கள், ஆகியோரின் காலத்தை, சோதிட முறையில் கணித்து நிர்ணயித்த பேரறிஞர் எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளை, தாம் கொண்ட முடிவுகள் சரியில்லை என்று பின்னால் தமது கருத்தை மாற்றிக் கொண்டார். அவர் எழுதுவதாவது:— The result of this change of front on my

முன்பு, வேதங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்த சமயத்திற்கும், பிரம்ம சூத்திரங்கள் உபநிடதங்கள் ஆகியவைகளைத் தழுவித் தோன்றிய தர்சனங்களுக்கும் தென்னாட்டில் வளர்ந்த வைணவத்திற்கும் இருந்த நெருங்கிய தொடர்பு மறைந்து மங்கிவிட்டது என்று கூறலாம். சில வைணவ புராணங்களும், ஆழ்வார்களின் தமிழ்ப் பாடல்களுமே தென்னாட்டு வைணவத்திற்கு ஆதார நூல்களாகக் கருதப் பெற்றன. வைணவ ஆலயங்களில் ஆகம முறைகள் அநுஷ்டிக்கப் பெற்ற போதிலும், மொத்தத்தில் வடமொழியிலிருந்த

part must be that we are altogether left without any help save that of the historical critic in regard to the times of the Alwars and early Acharyas, but that is not a result, which, however regrettable, need excite much surprise. …………It is this antecedent improbability of any attempt having been made to exactly determine the dates of birth of a number of religious founders who lived in succession to one another, that constitutes the chief difficulty in explaining these so-called records……….,. As I observed before, dates of death or of great events are more reliable because there is greater probability of their having been noted and recorded contemporaneously. This is the case with the dates I have noted in my pamphlet under Ramanuja and Manavala Mahamunigal. If the dates of birth were merely imagined even in regard to these great personages, it becomes possible to account for the preternaturally long lives assigned to some of them e-g Nathamani, Alavandar and Ramanuja" Speech made when presiding over T. A. Gopinatha Rao's lectures on the History of Sri Vaishnavas. Pages 60-61. முன்னர் கூறியிருப்பதுபோல இராமாநுசர் கி. பி. 1017-க்குப் பல வருடங்களுக்குப் பின் பிறந்திருக்க வேண்டும்; அல்லது அவர் பிறந்த காலத்தில் நாதமுனிகள் வயோதிகராய் வாழ்ந்திருக்க வேண்டும். இப் பெரியோர் பிறப்பு சம்பந்தமாக வைணவ நூல்களில் காணப் பெறும் வருடம் மாதம் திதி நக்ஷத்திரம் முதலியவை பிற்காலத்தாரால் கற்பனை செய்யப் பெற்றவை என்று கொள்ள வேண்டும் என்பது தான் பல ஆராய்ச்சியாளரின் துணிபு.

வேதங்கள், உபநிடதங்கள் பகவத்கீதை முதலிய இந்து மதப் பிரமாண கிரந்தங்களுக்கும், தென்னாட்டு வைண வத்திற்கும் தொடர்பு குறைந்து வந்தது. ஆழ்வார்கள் அருளிச் செய்த அற்புதமான தமிழ்ப் பாடல்கள் இந்த நிலைமைக்கு ஒரு முக்கியமான காரணமாயிருந்தன. இராமாநுசர், ஆழ்வார்களின் பாடல்களைப் பெரிதும் போற்றிய போதிலும், தென்னாட்டு வைணவத்திற்கும், இந்து சமய மூல கிரந்தங்களுக்கும் ஒருவாறு அற்றுப் போன தொடர்பை மீண்டும் நிலைநாட்டுவதே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டார். ஆகை யால் அவர் வடமொழியிலுள்ள வேதங்கள் வேதாங்கங் கள், உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், கீதை, புராண இதிகாசங்கள் முதலியவைகளை நன்றாய்க் கற்று, வேதாந்தத்தை விஷ்ணுபரமாக்கி, ஆதி சங்கரரினின் றும் வேறுபட்டு விசிஷ்டாத்வைதத்தை ஒரு தனிப் பெரும் வேதாந்தத் தத்துவமாக்கி, அதைத் தென்னிந் திய வைணவத்திற்குப் பக்கபலமாக்கினார். அத்துடன் தென்னிந்திய வைணவத்தில் அடங்கிய வழிபாட்டு முறைகள், சம்பிரதாயங்கள், பக்திப் பண்புகள் எல்லா வற்றையும் புத்தி, யுக்தி, பிரமாணம் ஆகிய கருவிகளின் மூலம் நிர்ணயித்து, ஆழ்வார்களுள் நம்மாழ்வார் இருந் ததுபோல், வைணவ ஆசாரிய பரம்பரைக்கு தனக்கு நிகரில்லாத தலைவராய் இராமாநுசர் விளங்கினார். பக்தி மார்க்கத்திற்குத் தனிச் சிறப்பளித்து வைணவத்தைப் பக்தி சமயமாகவே உருவாக்கினார். வைணவ சமயமும் வைணவ சித்தாந்தமும் இராமாநுச மதமாகவும், இராமா நுச தர்சனமாகவும் ஆயின. இவை வடநாட்டிலும் பரவி ஆங்காங்கே தோன்றிய பலதிறப்பட்ட பக்தி மார்க்க இயக்கங்களுக்கு மூலகாரணமாயிருந்தன.

இத்தகைய பெருமை வாய்ந்த ஆசாரியரைப் போற்றி, அவர், தாமே முனைந்து பெற்று அருளிய

சீடரான திருவரங்கத்தமுதனுர் ஒரு அற்புதமான அந்தாதியை இயற்றினுர். அதில் வைணவ சமயத்தின் பெருமையும், ஆழ்வார்களின் மகிமையும் இராமானுசரின் மேன்மையும் ஒருங்கே மிகுந்த உத்வேகத்துடனும் வாக்குவன்மையுடனும் பக்திப் பேரார்வத்துடனும் பாடப் பெற்றிருக்கின்றன. அதின் கவிதைச் சுவை எல்லோருக்கும் இன்பம் தரவல்லது. இந்த நூலை வைணவப் பெரியார் பிரபன்ன காயத்ரி என்று கொண்டு அதைப் போற்றி வந்திருக்கிருர். நம்மாழ்வாருக்கு மதுரகவிபோல் இராமானுசருக்குத் திருவரங்கத்தமுதனுர் விளங்கினுர்; இருவரின் ஆசாரிய பக்தியும் ஒரே மாதிரி சிறந்திருக்கிறது. இராமானுச நூற்றந்தாதி குரு பக்தியின் காவியமாகவே திகழ்கிறது. ஆதலால் இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்துடன் சேர்க்கப் பட்டதுமன்றி சேவைக்கும் பயன்படுத்தப் பெற்றது. இராமானுசரே இவ்வந்தாதியைக் கேட்டு மகிழ்ந்து அதன் அநுசந்தானத்தை அநுமதித்தார் என்று சொல்லப்படுகிறது. இராமானுச நூற்றந்தாதியுடன் திவ்யப் பிரபந்தம் முடிவாக அமைக்கப் பெற்றது.

இந்த இடத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். அது என்ன எனில் தமிழ்நாட்டில் சைவமும் வைணவமும் அநேகமாக ஒரே முறையில் வளர்ந்திருக்கின்றன என்ற உண்மைதான். சில காலங்களில் இவ்விரு சமயங்களுக்கிடையே பூசல்கள் தோன்றி சமயப் பிணக்குகள் ஏற்பட்டிருப்பதும் உண்டு. இருந்த போதிலும் இச்சமயங்களின் வளர்ச்சியிலும், திருமுறைகள், திவ்யப் பிரபந்தம் ஆகியவை தொகுக்கப் பெற்றிருப்பதிலும் பல பொதுவான தன்மைகளைப் பார்க்கலாம். இவைகளில் சில தற்செயலாக அமைந்திருக்கலாம். ஆனுல் வேறு சில ஒரு சமயத்தாரைப் பார்த்து மற்ற சமயத்தார் ஏற்படுத்திக்கொண்டதாகவே

தோன்றுகின்றன. திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைப் பாடிய ஆழ்வார் பன்னிருவர்; திருமுறைகளில் உள்ள பாடல்களைப் பாடிய புலவர் இருபத்தாறு பேர்களாயிருந்த போதிலும் திருமுறைகள் பனிரண்டாயின. ஆழ்வார்களின் பாடல் தொகுதியைவிட திருமுறைகளின் பாடல் தொகுதி அளவில் நான்குமடங்கு பெரிது. இருந்த போதிலும் இவ்விரண்டு தொகுதிகளிலும் சில பொதுவான இயல்புகள் இருக்கின்றன. ஆழ்வார்களில் ஒரு பேயாழ்வார் .இருப்பதுபோல் நாயன்மாரில் ஒரு பேயம்மையார் தோன்றினர். பிரபந்தத்தில் உள்ள சேரநாட்டு மன்னன் குலசேகரரின் பாடல்கள்போல் திருமுறைகளில் சேரமான் பெருமாள் நாயனாரின் பிரபந்தங்கள் இருக்கின்றன. பிரபந்தத்திலிருப்பதுபோல ஒரே ஒரு பெண் கவிதான் திருமுறைகளில் காணப் பெறுகிறார். பிரபந்தத்தில் இருக்கும் திருப்பாவை திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களுக்குச் சமமாகத் திருமுறைகளிலும் திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி ஆகியவை இடம் பெற்றிருக்கின்றன. திருமங்கை ஆழ்வாரும் மாணிக்கவாசகரும் திருச்சாழல் பாடல்களை இயற்றியிருக்கிறார். பிரபந்தத்தில் ஒரே ஒரு பதிகத்தைப் பாடிய மதுரகவி, திருப்பாணர் ஆகியோரைப்போல் ஒரே ஒரு பாடலைப் பாடிய கண்டராதித்தரையும் வேணாட்டடிகளையும் சேதிராயரையும் திருமுறைகளில் பார்க்கிறோம். பெரியாழ்வார் திருப்பல்லாண்டு பாடியதுபோல் சேந்தனாரும் ஒரு திருப்பல்லாண்டு பாடியிருக்கிறார். இவ்விரண்டு தொகைகளிலுமுள்ள பெரும்பாலான பாடல்கள் அந்தந்த சமயத்தைச் சார்ந்த தலமூர்த்திகளைப் பற்றியே பாடப் பெற்றிருக்கின்றன. பிற்காலத்தைப் பார்த்தால் விசிஷ்டாத்வைதத்தைத் தோற்றுவித்த இராமாநுசரின் குருவாயிருந்த யாதவப் பிரகாசர், எவ்வாறு அவருக்குச் சீடரானாரோ அதே

போல் சைவ சித்தாந்தத்தை உருவாக்கிய மெய்கண்ட தேவருக்கு, அவருடைய வித்யா குருவாகிய அருள்நந்தி சிவாசாரியார் சீடராய் அவருடைய தத்துவத்தை விளக்க சிவஞான சித்தியார் என்ற நூலை எழுதினர். இப்படி ஒப்புமைகளை அடுக்கிக்கொண்டே போகலாம். ஆழ்வார்களும் திருமுறைகளை ஆக்கிய கவிகளும் கி. பி. ஆரும் நூற்ருண்டிலிருந்து பத்தாம் நூற்ருண்டு வரையிலுள்ள ஐந்நூறு வருஷ காலத்தில் இருந்தார்கள். ஆகையால் அவர்கள் பாடல்களின் அமைப்பிலும், ஓசைப் பண்பிலும், வாக்கின் மென்மையிலும், கற்பனை முறைகளிலும் சொல்லடைவிலும், கவிதை நடையிலும், இசைத் தமிழின் சிறப்பியல்புகளிலும் பொதுமை இருப்பதில் விந்தை ஒன்றும் இல்லை.

பெரிய கவிகளை எடுத்துக்கொண்டால் இன்னிசைப் பாடல்களைப் பாடுவதில் திருஞானசம்பந்தருக்கு ஒப்பாகப் பெரியாழ்வாரையும், அப்பருக்கு ஈடாகத் திருமங்கை ஆழ்வாரையும், மாணிக்கவாசகருக்குச் சமமாக நம்மாழ்வாரையும் உத்தேசமாகக் கூறலாம். இவ்விரு திறத்தாருக்குள்ள வித்தியாசத்தைப் பார்க்க வேண்டுமானல் கவித்வ அனல், ஆழ்வார்களின் பாசுரங்களிலும், நல்ல மெருகு பெற்ற இனிய தமிழ் திருமுறைக் கவிகளின் பாடல்களிலும், ஒன்றில் இருப்பதைவிட மற்ருென்றில் சற்று அதிகமாகக் காணப்பெறுகிறது என்று குறிப்பிடலாம்

கி. பி. பனிரண்டாம் நூற்ருண்டில் திவ்யப்பிரபந்தத்துடன் இராமாநுச நூற்றந்தாதியை வைணவப் பெரியார் சேர்த்ததுபோல் அதே நூற்ருண்டில் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் என்ற பெரிய புராணத்தை அக் காலத்துச் சோழ அரசரும், சைவ சமயப் பெரியாரும், நம்பியாண்டார் நம்பி அடிகள் முன்னல் தொகுத்திருந்த பதினெரு திருமுறைகளுடன் பனிரண்

டாம் திருமுறையாகச் சேர்த்துத் திருமுறைகளுக்கு முடிவான அமைப்பைக் கொடுத்தார். சேக்கிழாரின் காலத்தைப்பற்றி இன்றும் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. சேக்கிழார், தமது தலைவராகிய சோழ அரசரை அநபாயன் என்று குறிப்பிட்டுப் பெரிய புராணத்தில் பத்து இடங்களில் போற்றியிருக்கிறார். இந்த அநபாயன் கங்கைகொண்ட சோழன் என்று இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகரும், முதல் குலோத்துங்கன் என்று டி. ஏ. கோபிநாதராவும், இரண்டாம் குலோத்துங்கன் என்று சூவல் (Sewell) துரையும், அரங்காச்சாரியார், கிருஷ்ண சாஸ்திரிகள், சி. கே. சுப்பிரமணிய முதலியார் ஆகியோரும் மூன்றாம் குலோத்துங்கன் என்று டி. வி. சதாசிவ பண்டாரத்தாரும் கூறியிருக்கிறார்கள். பெரும்பாலான அறிஞர் சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி· 1123—1148) காலத்தவர் என்று கூறியிருப்பதே பொருத்தமானது. சேக்கிழார் மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி. 1178—1218) காலத்தவர் என்று கொள்வதற்கு டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கூறும் காரணங்கள் இரண்டு. இரண்டாம் குலோத்துங்கன் பெரிய புராணத்தை இயற்றுவிக்க வேண்டுமென்று நினைத்திருந்தால், தன் குருவும் அவைக்களப் புலவருமான ஒட்டக்கூத்தரைத் தவிர வேறொரு புலவரையும் கேட்டிருக்கமாட்டான். இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் பெரிய புராணம் இயற்றப் பெற்றிருந்தால் ஒட்டக்கூத்தர் அதைக் குறிப்பிட்டுப் போற்றியிருப்பார். அவர் அவ்வாறு செய்யாததால் அவர் இறந்த பின் மூன்றாம் குலோத்துங்கனே சேக்கிழார் மூலம் பெரிய புராணத்தைப் பாடுவித்தான்.[1] அநபாயன் என்பது இரண்டாம் குலோத்துங்கனையே

1. பிற்காலச் சோழர் சரித்திரம் இரண்டாம் புத்தகம், டி. வி. சதாசிவ பண்டாரத்தார், பக்கம் 166—168.

குறிக்கும் என்பதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் இருக்கின்றன.[1] அவன், ஒட்டக்கூத்தர் இருக்கும்போது சேக்கிழாரைப் பெரிய புராணத்தைப் பாடும்படி கேட்டிருக்கமாட்டான் என்ற வாதத்திலும் ஒட்டக்கூத்தர் சேக்கிழாரைக் குறிப்பிடாததால், அவர் காலத்திற்குப் பின்தான் சேக்கிழார் பெரிய புராணத்தை இயற்றியிருக்கவேண்டும் என்னும் வாதத்திலும் வலியில்லை. திருத்தொண்டர் புராணத்தைப் பாடுவதற்குக் கூத்தரை விட சேக்கிழார் பொருத்தமானவர் என்று சோழ அரசன் கருதி அவரை இந்தப் பணியாற்றும்படி வேண்டியிருக்கக்கூடும். இந்த விஷயத்தில் தம்மை அரசன் பொருட்படுத்தவில்லை என்ற காரணத்தால் ஒட்டக்கூத்தர் சேக்கிழாரையோ, அவரது அரிய நூலையோ குறிப்பிட்டுப் போற்ருமலும் இருந்திருக்கக்கூடும். ஒட்டக்கூத்தரின் வாழ்க்கையைப்பற்றி நிலவி வரும் சில விபரங்களிலிருந்து அவரிடம், செருக்கு, பொருமை, கருணையின்மை போன்ற குணங்கள் குடிகொண்டிருந்ததாகத் தெரியவில்லையா?

திருத்தொண்டர் புராணம் சமயச் சிறப்பும் இலக்கியச் சிறப்பும் ஒருங்கே வாய்ந்த நூல். சோழ அரசரின் பேரமைச்சராயிருந்த சேக்கிழார் இந்த நூலை இயற்றிய சூழ்நிலையைப் பற்றியும், அது அரங்கேற்றப் பெற்ற விபரங்களைப் பற்றியும் உமாபதி சிவாசாரியார் பாடிய சேக்கிழார் புராணம் விரிவாகக் கூறுகிறது. சைவ நாயன்மார்களின் வாழ்க்கையைக் கூறும் நூலே பெரிய புராணம். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையையும் நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டத் திருவந்தாதியையும் பின்பற்றியே சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தை இயற்றியிருப்பதாகக்

1. சேக்கிழார் சுவாமிகள் காலம். பெரிய புராணம். சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு, பக்கம் 16—20.

கூறுகிறார்.[1] ஆகையால்தான் நான்காவது சைவ சமய குரவரும் திருவாசகத்தை அருளினவருமான மாணிக்க வாசகரின் வாழ்க்கையைப்பற்றி, சேக்கிழார் வரைய வில்லை. நாயன்மார் தொகையை நம்பியாண்டார் நம்பி அறுதியிட்டுக் கிழித்த கோட்டைத் தாண்டி அதில் மணி வாசகருக்கு இடம் கொடுக்கச் சேக்கிழார்கூடத் துணிய வில்லை. இப்புலவர் பெருமான் மாணிக்கவாசகரின் வாழ்க்கையைப் பாடியிருந்தால் அவருடைய காலத் தைப் பற்றியும் நூல்களைப் பற்றியும் தோன்றியிருக்கும் ஐயப்பாடுகள் தீர்ந்திருக்கும். பல நூற்றாண்டுகளுக்குப் பின் பாடப்பெற்ற வாதவூரர் புராணத்திற்குப் பெரிய புராணத்திற்குரிய மதிப்பை ஆராய்ச்சியாளர் கொடுக்கத் தயங்குவர்.

அறுபத்துமூவர் தனி நாயன்மார்களும் ஒன்பது தொண்டர் கூட்டங்களும் பெரிய புராணத்திற்குப் பொருளாக அமைந்திருந்த போதிலும், அது தேவாரம் பாடிய மூவரின் வாழ்க்கையைத்தான் மிக விரிவாகக் கூறுகிறது. அதில் மொத்தமுள்ள 4253 செய்யுட்களில் திருஞானசம்பந்தர் புராணம் 1256 பாக்களிலும், திரு நாவுக்கரசு நாயனார் புராணம் 429 பாடல்களிலும் வரை யப் பெற்றுள்ளன.[2] சுந்தரரின் வாழ்க்கை, சுந்தர மூர்த்தி நாயனார் புராணம், ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், சேரமான் பெருமாள் நாயனார் புராணம், வெள்ளானைச் சருக்கம் ஆகிய நான்கு பகுதி களில் 840 பாடல்களால் கூறப்பட்டிருக்கிறது. மீத

---

1, பெரிய புராணம் திருமலைச் சிறப்பு, பாடல்கள் 38—39.

2 பெரிய புராணத்தின் செய்யுட்களின் மொத்தத்தொகை 4253 என்று சேக்கிழார் புராணம் கூறுகிறது. இப்போதுள்ள பதிப்புக்களில் 33 பாடல்கள் அதிகமாக இருக்கின்றன. இவை இடைச்செருகல் என்று அறிஞர் கருதி அதைக் களையவும் முயன் றிருக்கிறார்.

முள்ள 1728 பாடல்களில்தான் மற்ற நாயன்மார், ஒன்பது தொண்டர் கூட்டங்கள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறு அமைந்திருக்கிறது. இவைகளில் ஒன்று முதல் மூன்று செய்யுட்களில் எழுதப்பெற்ற புராணங் கள் எட்டு இருக்கின்றன. ஆகையால் பெரிய புராணத் தின் கவிதையில் இலக்கியச் சிறப்புகள் இருந்த போதிலும், அது புராண ரீதியில் இயற்றப் பெற்றதால் அதன் அமைப்பு காவியக் கட்டுக்கோப்பிலேயோ அளவியலேயோ தழுவவில்லை.

இடைக்காலத் தமிழ் இலக்கியத்திலும், சைவ சமயத் தின் வரலாற்றிலும் பெரிய புராணத்திற்கு உயர்ந்த ஸ்தானம் உண்டு. அதில் உள்ள செம்மையான பாடல் களின் கவிதையையும் பிற அருமைகளையும் தமிழ் மக்கள் நன்கு அறிவர். சேக்கிழார் தமது நூலுக்குத் திருத் தொண்டர் புராணம் என்றே பெயர் கொடுத்தார். அதைப் பெரிய புராணம் என்று முன்னோர் போற்றி யிருப்பதே அதன் புகழுக்குச் சான்றாகும். அதில் காணப் பெறும் விபரங்கள் பல சரித்திரப் பான்மையுடன் இருப்பது அதன் பெருமையை அதிகப்படுத்தி யிருக் கிறது. சைவ நாயன்மார்களின் கதைத் தொகுதியே பெரிய புராணம். சுவை மிகுந்த கவிதைப் பாங்குடன் இதைப் பாடிய சேக்கிழார், தமது நூலை ஒரு புராண மாகவே கருதி அதை அவ்வாறே அமைத்திருக்கிறார். நாயன்மார்களின் வாழ்க்கைகளில் பல அற்புதங்களும் அபூத சம்பவங்களும் நடைபெற்றதாகக் கூறப்பெற் றிருக்கின்றன. ஆகையால் அது, சிலர் கூறி வருவது போல் முழுவதும் சரித்திர நூலல்ல. புராணத்திற்கும் சரித்திரத்திற்கும் வித்தியாசம் உண்டு. பெரிய புராணத் தில் பெருங் காப்பியத்தின் இயல்புகள் எல்லாம் அமைந் திருக்கின்றன என்றும், காப்பியத்தின் தலைவர் சுந்தரர் என்றும் தலைவியர் அவரது இரு மனைவியர் என்றும் இக்

காலத்துத் தமிழ் அறிஞர் சிலர் கருதுகிருர்.[1] பல நாயன்மார்களின் கதைகள் தொகுக்கப் பெற்ற புராணம் இது. இதில் பெருங் காப்பியத்திற்குரிய வருணனைகள் முதலிய சிறப்புகள் இருந்தபோதிலும், இப்புராணத்தை இலக்கிய ரீதியாக, சற்று வலிந்தே பெருங் காப்பியம் என்று கூறவேண்டும். பெரிய புராணத்திற்குரிய பெருமை, அதைப் பெருங் காப்பியம் என்று கூறுவதால் அதிகமாகாது. சமய நோக்குடன் பார்த்தாலும், இலக்கியக் கொள்கைகளை வைத்து ஆராய்ந்தாலும், மொத்தத்தில் தமிழில் உள்ள புராணங்களில் எல்லாம், காலத்தால் மூந்தியதும் நூல் நயங்களில் முதன்மையாயிருப்பதும் பெரிய புராணமே. அதில் சில நாயன்மார்களின் கதைகள் கனிந்த நாடகச் சுவையுடன் எழுதப்பெற்றிருக்கின்றன. இதற்கு அடுத்தபடியாகத்தான் தமிழிலுள்ள மற்ற நான்கு அல்லது ஐந்து சிறந்த புராணங்களைக் கூறவேண்டும். இத்தகைய சிறப்பு வாய்ந்த பெரிய புராணம் பனிரண்டாம் திருமுறையாக அமைந்ததுமன்றி அத்துடன் திருமுறைத் தொகுதியும் முற்றுப் பெற்றது.

ஆகவே, திருமுறைகளிலுள்ள பாடல்களையும் திவ்யப் பிரபந்தத்திலுள்ள பாசுரங்களையும் பாடியவர் திருவருள் பெற்ற இசைக் கவிகள் என்றும், சமயத்தையும் கடவுளையும் பொருளாகக் கொண்டு பக்திச் சுவையுடனுள்ள இந்தப் பாடல்கள், பல கவிகளின் அரிய தமிழ்ப் புலமையில் விளைந்த அழியாத இலக்கியம் என்றும், இதைத் திரட்டித் தொகுத்தவரும், சமயப் பற்றுடன் பெருந் தமிழ்ப் புலமையும் பெற்றிருந்தார் என்றும்,

---

1. கோவை சிவக் கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் தமது 'சேக்கிழார்' என்னும் நூலில் விரிவாக விளக்கியிருக்கிருர். இந்தக் கருத்தை ஒப்புக்கொண்டு வேறு சில தமிழ் அறிஞரும் எழுதியிருக்கிருர்.

அவர், தங்களுடைய அளவு கடந்த இலக்கியப் பயிற்சி, நுண்ணிய ஆராய்ச்சித் திறன் ஆகியவைகளைப் பயன் படுத்தியே திருமுறைகளையும், திவ்யப் பிரபந்தத்தையும் இப்போதுள்ள அமைப்பில் தொகுத்தார் என்றும், இவ்வாறு தொகுத்ததில் அவருடைய சமயப் பணியும் இலக்கியப் பணியும் ஒருங்கே சிறந்து விளங்குகிறது என்றும், இத்துடன் முடியும் மூன்று அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருக்கின்றன.

## IV. சமயத் தேவைகளில் விளைந்த மொழியும் உரைகளும்

இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் உள்ள தொடர்பு முன் அத்தியாயங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப் பெற்றிருக்கிறது. கி. பி. ஏழாம் நூற்றுண்டில் சைவ, வைணவ மதங்கள் புத்துயிர் பெற்றதின் பயனுக நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி இசைத் தமிழ் இலக்கியத்திற்குப் பேராக்கம் கொடுத்ததைப்பற்றி விரிவாகக் கூறியிருக்கிருேம். சமயமும், தமிழும் ஒன்றுக்கொன்று ஆதரவாய் இருந்தன. சமயம் இலக்கிய சிருஷ்டியையும் கலைகளையும் வளர்த்த ஆக்க சக்தியாயும் இருந்தது. சமய வாழ்வின் தேவைக்குத் தகுந்தவாறு மொழி வளர்ச்சி நிகழ்ந்ததும் இலக்கியம் இயங்கினதும் இந்தப் பகுதியில் ஆராயப் பெறும்.

மக்கள் எத்தனையோ கஷ்டங்களிடையே நாகரிகப் பாதையில் முன்னேறும்போது, மொழி, சமயம், கவிதை கலைகள், தத்துவம், விஞ்ஞான அறிவு, அதைப் பயன்படுத்திப் பல்வேறு தொழில்களை நடத்தி வாழ்க்கையின் தேவைகளை மிகுதியாக வகுத்துக்கொண்டு அவைகளைப் பூர்த்தி செய்தல் ஆகியவைகள் எல்லாம் விளையும். இது மனித இனத்தின் சரித்திரம் கண்ட உண்மை. ஒரு சமுதாயத்தின் மொழி வளர்ச்சியும் இலக்கியச் செல்வமும் மேலே கூறப்பெற்ற பிற சக்திகளாலும், அவை சமுதாயத்தை உருவாக்கும் முறைகளாலும் பாதிக்கப்பெறும், ஏனென்ருல் மொழியும், அதனுல் ஆக்கப் பெறும் இலக்கியமும் மனிதனின் நாகரிக வாழ்வின் முன்னேற்றத்திற்கு. அத்தியாவசியமான கருவிகளாக அமைகின்றன. அவை பல சக்திகளால் பாதிக்

கப்பெற்று இயங்கி வந்திருக்கின்றன. இவ்வாறு மொழியையும் இலக்கியத்தையும் பாதித்து வந்த பல சக்திகளில் சமயம்தான் மிகவும் முக்கியமானது; அதுவே மிகப் பழமையானது.

தமிழகத்தில் கிறிஸ்து சகத்தின் தொடக்கத்தில் நிலவியிருந்த சமயங்களைப் பற்றிச் சற்று நுட்பமாக ஆராய வேண்டும். அக்காலத்தில் தமிழ் மக்கள் எல்லோரும் ஒரே சமயத்தைப் பின்பற்றி வாழவில்லை. தமிழ்நாட்டில் பல சமயங்கள் இருந்தன. பௌத்தம், சமணம், சைவம், வைணவம் என்ற நான்கு சமயங்கள் ஆங்காங்கே மக்களிடம் ஆதிக்கம் பெற்றிருந்தன. இந்நான்கு சமயங்களையும் தழுவாமல், அவைகளுக்குப் புறம்பாயுள்ள பழைய தெய்வங்களைக் கும்பிட்டு வாழ்ந்த மக்களும் ஏராளமாய் இருந்தார்கள். பௌத்தமும் சமணமும் சுமார் கி. மு. ஆறும் நூற்றுண்டில் வடநாட்டில் தோன்றி வளர்ந்து, பின்னர் தெற்கே வந்த சமயங்கள். சைவமும் வைணவமும் சம்பந்தப்பட்ட வரையில், இவைகளும் வடநாட்டிலிருந்து வந்த வைதிக மதங்கள் என்று கருதப்பெற்ற போதிலும், அவை முற்றிலும் தமிழ் நாட்டிற்குப் புதிதல்ல என்று தெரிகிறது முக்கண்ணன், திருமால், முருகன் ஆகிய மூன்று முக்கியமான தெய்வங்களின் வழிபாடுகள் மிகப் பழமையான காலத்திலிருந்தே தமிழ் நாடடில் நிலவின என்பது பண்டைத் தமிழ் இலக்கியத்திலிருந்து தெரியவருகிறது. ஆகவே, வடநாட்டிலிருந்த வேதங்களையும் ஆகம புராண இதிகாசங்களையும் அடிப்படையாகக் கொண்டு வளர்ந்த சமயங்கள், தென்னுட்டில் இயங்கி வந்த மேலே கூறிய மூன்று தெய்வங்களின் வழிபாட்டு முறைகளை முற்றிலும் தழுவி ஏற்றுக்கொண்டதால் விளைந்த சமயங்களே தென்னுட்டில் பேராக்கம் பெற்ற சைவமும் வைணவமும்.

புத்த பகவான் தோற்றுவித்த அருள் சமயம் பௌத்தம். அசோக சக்கரவர்த்தியின் ஆர்வத்தாலும், அவருக்குப் பின் வந்தவரின் ஊக்கத்தாலும் புத்த மதம் சுமார் கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் தென்ஞட்டில் நுழைந்தது; இலங்கைக்கும் சென்று அந்த நாடு முழுவதிலும் பரவி இன்று வரை அங்கே நிலேத்திருக்கிறது. கி. மு. மூன்ரும் நூற்ருண்டிலிருந்து, சுமார் கி பி ஏழாம் நூற்ருண்டுவரை புத்த மதம் தமிழகத்தின் பல பாகங்களில் பரவியிருந்தது. காஞ்சியைத் தலேநகராகக் கொண்டு ஆண்ட பல்லவ அரசரில் சிலர் புத்த சமயத்தைத் தழுவி அதை ஆதரித்து வந்தனர். சேர, சோழ, பாண்டிய நாடுகளிலும் மக்களில் ஒரு சிலர் புத்த மதத்தில் ஈடுபட்டிருந்தார்கள். கி. பி. ஏழாம் நூற்ருண்டில் இந்தியாவிற்கு வந்து நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்த சீன யாத்ரிகனும் பௌத்த அறிஞனுமான யுவங்சிங் என்பவர் அக்காலத்தில் காஞ்சியில் நூறு பௌத்தப் பள்ளிகள் இருந்தன என்றும், அவைகளில் சுமார் பதிஞயிரம் பேர், புத்த தர்மம் வகுத்த சமய வாழ்க்கையைக் கைக்கொண்டிருந்தார் என்றும் கூறியிருக்கிருர் இக்காலத்தில்தான் தமிழிலுள்ள சிறந்த பௌத்த காவியமாகிய மணிமேகலே தோன்றியிருக்க வேண்டும் என்றும் சில அறிஞர் கருதுகிருர். கி. பி. ஏழாம் நூற்ருண்டுக்குப் பின் பௌத்தம் வலிகுன்றியிருந்த போதிலும் அது தொடர்ந்து நாட்டின் சில பாகங்களில் இயங்கி சுமார் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டு வரை, தென்ஞட்டில் இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. கடாரத்தரசன் வேண்டுகோளின் பேரில் சோழ மன்னன் இராசராசன் நாகபட்டினத்திலிருந்த ஒரு புத்தர் கோவிலுக்கு ஆதரவு அளித்து நிலங்கள் தானம் செய்தான் என்றும், இந்த தான சாசனத்தை இராசராசன் மகஞகிய இராசேந்திரன் என்ற கங்கை

கொண்ட சோழன் எழுதிக் கொடுத்தான் என்றும் தெரிகிறது. இது கி. பி. பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிகழ்ந்தது. சேர நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் புத்த மதம் சிறு அளவில் நிலவியிருந்தது என்பதைக் காட்டக்கூடிய முறையில் அம்மதச் சின்னங்கள் கிடைத்திருக்கின்றன.

புத்த மதம் தமிழகத்திற்கு வந்த காலத்திலேயே சமணமும் தெற்கே பரவியது என்று தெரிகிறது ஆனால் அது மைசூர் முதலிய பிரதேசங்களுக்கு முதலில் சென்றது. சற்றுப் பின்னர்தான் தமிழகத்தில் தோன்றியது புத்த மதத்திற்கும், சமணத்திற்கும் சில வேறுபாடுகள் இருப்பினும், வேதங்களின் பிரமாணத்தை மறுப்பதிலும், அஹிம்சையையும் ஒழுக்கத்தையும் முக்கியமான சமயக் குறிக்கோள்களாகக் கொள்வதிலும், அவைகளிடம் ஒற்றுமை இருந்தது. புத்த சமயத்திற்கு ஒரு அசோக சக்ரவர்த்தி கிடைத்த பாக்கியம், சமணத்திற்குக் கிட்டவில்லை. இந்த பாக்கியத்தால் புத்த மதம் இலங்கை கடாரம், திபேத், சீனா, ஜப்பான் முதலிய கிழக்கு ஆசிய நாடுகளில் வெகு தீவிரமாகப் பரவி வேரூன்றி உலக மதங்களில் முதன்மையான இடம் பெற்றது. அத்துடன் அது பிறந்த நாட்டிலிருந்து அநேகமாக மறைய நேர்ந்தது. இந்த முறைக்கு மாறாகவே சமணம் வளர்ந்தது. அது இந்தியாவிற்குப் புறம்பான வெளிநாடுகள் சென்று பரவியதாகத் தெரியவில்லை. சமணத்தின் ஆதிக்கம் அது பிறந்த நாட்டின் பல பாகங்களிலேயே நிலைத்திருந்தது. பெரும்பாலான மக்கள் பின்பற்றும் வைதிக சமயத்துடன் வாழ வேண்டியிருந்ததால், சமணம் வைதிக சமயத்தின் ஆசாரங்கள் முதலியவைகளைப் பின்னர் அநுஷ்டிக்க நேர்ந்தது. அவ்வாறு இந்து சமயத்துடன் தொடர்புபெற்ற சமணம்

இன்றும் இந்த நாட்டில் லட்சக்கணக்கான மக்களால் பின்பற்றப் பெற்று வருகிறது.

தமிழகத்தைப் பொறுத்த வரையில் சமணம் சுமார் கி. பி. ஏழாம் நூற்ருண்டுவரை வலியுற்றிருந்தது. கி. பி. ஏழாம் நூற்ருண்டின் முற்பகுதியில் சமணம் தமிழ் நாட்டில் பேராதிக்கம் பெற்றிருந்தது. அக்காலத்தில் வாழ்ந்த பல்லவ பாண்டிய மன்னர் சமணத்தைத் தழுவி யிருந்தார். காஞ்சியில் ஏராளமான சமணப் பள்ளி களும் இருந்தன என்று சீன யாத்ரிகன் யுவன்சிங் குறிப் பிட்டிருக்கிருன். சமணருடைய பள்ளிகளும் சங்கங் களும் நாடெங்கும் தோன்றியிருந்தன. சமணத் துறவிகள், பட்டினங்களின் அண்மையிலும் மலைக் குகைகளிலும் வசித்து தங்களுடைய சமய வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். மதுரையில் கி. பி. ஐந்தாம் நூற் ருண்டின் பிற்பகுதியில் வச்சிரநந்தி என்பவரால் ஒரு சமணச் சங்கம் நிறுவப்பெற்று அது சில நூற்ருண்டுகள் வரை சமயப் பணியும் தமிழ் இலக்கியப் பணியும் ஆற்றி வந்தது.[1] பின்னர் சோழ நாட்டில் பல நூற்ருண்டு களாக தீபங்குடி என்ற ஊரில் சமணர் வாழ்ந்து தங்கள் சங்கங்களை ஏற்படுத்தித் தமிழ்க் கல்விப் பணியில் வெகு காலமாக ஈடுபட்டு வந்தார். கலிங்கத்துப் பரணியை இயற்றிய சயங்கொண்டார் இந்த தீபங்குடியைச் சேர்ந்த சமணர் என்பது சில அறிஞரின் துணிபு.[2] பண்டைக்கால முதலே சமணத் துறவிகளில் பலர்

---

1. Tamil Studies by M. Srinivasa Iyengar (1914) page 251.

2. செய்யும் வினையுமிரு ளுண்பதுவும்
தேறுநறவு முனுமுயிரும்
பொய்யும் கொலையும் களவுந்தவிரப்
பொய்நீர் அறநூல்செய் வார்தமதூர்.

இந்தப் பாட்டு தீபங்குடியைப்பற்றி சயங்கொண்டார் பாடிய தாகக் கருதப் பெறுகிறது.

சிறந்த கல்விமான்களாகவும் புலவராயும் இருந்தார்; தமிழை நன்றாய்க் கற்று அதில் பல அறநூல்களை ஆக்கினார். திருக்குறள், நாலடி நானூறு உள்பட கீழ்க் கணக்கு நூல்களில் பெரும்பாலானவையும், ஐம்பெருங் காப்பியங்களிலும் ஐஞ்சிறு காப்பியங்களிலும் பெரும் பாலானவையும் சமணப் புலவரால் செய்யப்பெற்றவை. சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோ அடிகளும் சமணர் என்றே சில அறிஞர் கருதுகிறார். இவைகளை எல்லாம் விருப்பு வெறுப்பின்றித் தனி இலக்கிய நோக் குடன் பார்த்தால், எவ்வளவு அரிய தமிழ்ப் பணி சமணப் புலவர் செய்திருக்கிறார் என்பது விளங்கும். ஆனால் இந்த அரிய தமிழ்ப் பணி அவருடைய சமயப் பணியின் ஒரு பகுதியாகவே செய்யப் பெற்றது என்ப தையும் மறக்கக்கூடாது. இதனால்தான் சமணருடைய தமிழ்ப் பணியையும் ஒரு பொருட்படுத்தாது சைவ, வைணவ சமயத் தலைவர் சமணத்தை எதிர்த்து வெற்றி பெற்றார். கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கப்புறம் சமணம் வலிகுன்றிய போதிலும் அது, தமிழ்நாட்டில் ஒரு சிலரால் தொடர்ந்து தழுவப்பெற்று சிறிதளவு இன்று வரை நிலைத்திருக்கிறது. முன்னர்க் கூறியதுபோல் சமணம் வைதிக சமயங்களுடன் ஓரளவு தொடர்பு கொண்டே இயங்கி வந்திருக்கிறது. வைதிக சமயத் தின் வேள்விப் பண்பாடுகளில் சிலவற்றை சமணர் கைக்கொண்டிருக்கிறார். தமிழ்நாட்டில் இருந்ததைவிட கன்னட பிரதேசத்தில் சமணம் அதிகமாகப் பரவி யிருந்தது. தமிழ்நாட்டில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சமணத்தின்மீது சைவமும் வைணவமும் பகை கொண்டன. ஆனால் கன்னட நாட்டில் சமணம் சுமார் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை செழித்திருந்தது. இராமானுசரால் வைணவத்தைத் தழுவச் செய்த பிட்டிதேவன் என்ற விஷ்ணுவர்த்தனன்,

புதிதாய் மதம் மாறியவர் காட்டும் ஆர்வத்துடன், சம ணத்தை வெறுத்து, சமணப் பள்ளிகளை இடித்துத் தகர்த்து, பஞ்சநாராயணமூர்த்திகளை ஐந்து ஊர்களில் பிரதிஷ்டை செய்ததாகத் தெரிகிறது. சமய எதிர்ப்பு கள் எவ்வளவு தீவிரமாயிருந்த போதிலும், அதனால் தமிழ்நாட்டில் சமணப் புலவரின் ஊக்கமும் இலக்கியப் பணியும் தளரவில்லை. அப்பர் ஞானசம்பந்தர் காலத் திற்குப் பின்னர்தான் சமணப் புலவர் ஜீவகசிந்தாமணி. சூளாமணி ஆகிய சிறந்த காவியங்களைப் பாடினார். அவர் தமிழ்ப் பணியைத் தொடர்ந்து கி. பி. பதினாறும் நூற்றாண்டு வரை செய்து வந்தார். எத்தனையோ இலக்கணங்கள் உரைகள் நிகண்டுகள் முதலியவற் றைச் சமணப் புலவர் இயற்றியிருக்கிறார். தமிழ்ப் பணியைப் பொறுத்த வரையில், சமணர் பௌத்தர்களை விட மிகவும் அதிகமாயும், சைவர், வைணவர் செய்திருப் பதைவிடக் குறைவில்லாமலும், செய்திருப்பது நேர்மை யுடன் பார்க்கும் எவருக்கும் புலப்படும்.

சைவமும் வைணவமும் தமிழகத்தில் மிகப் பழமை யான காலத்திலிருந்தே நிலவின. முன்னர்க் கூறியது போல் முக்கண்ணன், திருமால், முருகன் ஆகிய தெய் வங்களை மக்கள் வணங்கி வந்திருக்கிறார்கள் என்பது பண்டைத் தமிழ் இலக்கியத்திலிருந்து தெரிகிறது. இத் தெய்வ வழிபாட்டு முறைகள், வேதங்கள் ஆகமங்கள் முதலியவைகளின் கலப்பும் தொடர்பும் கிடைத்த பிறகு தான், தெளிந்த சமயங்களாக உருவெடுத்துப் பெரும் சக்தியைப் பெற்று நாட்டில் அக்காலத்தில் ஆக்கம் பெற்றிருந்த சமணத்தையும் பௌத்தத்தையும் வலி குன்றுமாறுச் செய்தன என்பது சரித்திர உண்மை. பண்டைத் தமிழ் இலக்கியத்தை ஊன்றிக் கவனித்தால் கிறிஸ்து சகத்தின் தொடக்கத்தில் சைவமும் வைணவ மும் மக்களின் ஒரு பகுதியினரிடம் ஒருவாறு பரவி.

யிருந்தன என்று தெரிகிறதேயொழிய அவை பின்னர் கி. பி. ஏழாம் நூற்றுண்டிலும் அதற்கப்பாலும் பெற்ற ஆக்கம் அடைந்திருந்ததாகத் தெரியவில்லை. அக்காலத்தில் சைவ வைணவ சமயப் பாடல்களோ நூல்களோ வெகுவாக ஆக்கப் பெறவில்லை. இருந்த போதிலும் சைவ, வைணவ ஆலயங்கள் நாடெங்கும் இருந்திருக்கின்றன. கி. பி. ஏழாம் நூற்றுண்டுக்கு முன்னரே சில நாயன்மார்களும் முதலாழ்வார்களும் வாழ்ந்து சமயப் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். அப்பரும் திருஞான சம்பந்தரும் பல சைவத் திருப்பதிகளுக்குப் போய் அவ்வூர்களிலுள்ள ஆலயங்களிலுள்ள மூர்த்திகளைத் தரிசனம் செய்து பாடியிருக்கிறுர்கள். ஆகையால் அவர்கள் காலத்திற்குமுன்பே நாடெங்கும் சிவன்கோவில்கள் தோன்றியிருந்தன என்று புலப்படுகிறது. அதேபோல் பல வைணவ ஆலயங்களும் நாடெங்கும் இருந்தன. வடவேங்கடம், சீரங்கம் ஆகிய வைணவத் திருப்பதிகளைப்பற்றி சிலப்பதிகாரம் முதலிய பழைய தமில் நூல்களிலும் பாடல்களிலும் குறிப்புகள் இருக்கின்றன. முதலாழ்வார் மூவரும் திருமழிசை ஆழ்வாரும் வடவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் திருமால் கோவிலைக் குறிப்பிட்டிருக்கிறுர். திருமுருகாற்றுப்படையில் திருச்சீர் அலைவாய் (இப்போதுள்ள திருச்செந்தூர்) உள்பட முருகனின் ஆறுபடை வீடுகள் என்று ஆறு கோவில்கள் பாடப் பெற்றிருக்கின்றன. சோழ அரசன் கோச்செங்கணன் பல கோவில்களைக் கட்டின செய்தியைத் திருஞானசம்பந்தரும், திருமங்கை ஆழ்வாரும் தங்களுடைய பாடல்களில் குறிப்பிட்டிருக்கிறுர்கள். ஆகவே கி. பி. ஏழாம் நூற்றுண்டுக்கு முன்னரும், சமணத்தின் ஆதிக்கம் பரவி வந்த காலத்திலும் தமிழ் நாடெங்கும் சைவ, வைணவ ஆலயங்கள் இருந்தது

மன்றி அவைகளில் நடைபெற்ற வைதிகச் சமய வழிபாடுகள் மக்களின் வாழ்வைப் பண்படுத்தி வந்தன.

தமிழகத்தில் சைவமும் வைணவமும் தோன்றுவதற்கு முன்னரே சமணம் பரவியிருந்ததென்றும், பின்னர் வந்த வைதிக சமயங்களின் வேள்வி முதலிய முறைகளுக்கும், சமணரின் கொல்லாமை, ஒழுக்கப் பண்புகள் ஆகிய கொள்கைகளுக்கும் முரண்பாடு ஏற்பட்டதால் சமயப் பூசல்கள் ஏற்பட்டன என்றும் சிலர் கருதுகிருர்[1] இந்தக் கருத்துக்கு ஆதாரங்கள் இல்லே. இது சரித்திரத்திற்கு முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. இந்தியா பூராவையும் எடுத்துக் கொண்டால் ஆரியர் வருவதற்கு முன்னுள்ள நாகரிகத்தைத் திராவிட நாகரிகம் என்று கொள்ளலாம். இந்த நாகரிகத்திற்கும், சிந்து வெளிப் பிரதேசத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மொகஞ்சோடோரோ, ஹாரப்பா ஆகிய பக்கங்களில் நிலவிய பண்டை நாகரிகத்திற்கும் தொடர்பு இருந்ததா என்ப

1. இதனை (ஆரியர் வருமுன்னருள்ள நாகரித்தை) வசதியை முன்னிட்டு நான் திராவிட நாகரிகம் என்று அழைக்க விரும்புகிறேன். இக்காளில் திராவிட நாகரிகம் என்ற வார்த்தைகள் வீண் விதண்டாவாதத்தைக் கிளப்பியுள்ளனவாயினும் ஆரியர் வருமுன்னர் இங்கு வதிந்து வந்த திராவிட மக்களின் சமயம் சமணமாக இருந்ததால், திராவிட நாகரிகம் என்று கூறுவதே சரி என்று நான் கருதுகிறேன். இப் புதுக் கொள்கை சமண சமயத்தின் அடிப்படைக் கொள்கைக்கு முற்றும் முரணுக இருந்ததால், மக்களிடம் புரட்சி மனப்பான்மையை உண்டுபண்ணிற்று. எனவே மகா விரப் பெருமானின் காலத்தில் அஹிம்சைக் கொள்கையை மீண்டும் வற்புறுத்தி அதற்கு முதல் இடம் கொடுக்க வேண்டியதாயிற்று.'' ஆர். கே. சண்முகம் செட்டியார் (1943) மகா விர ஜயந்தியில் சென்னேயில் தலேமை வகித்துச் செய்த பிரசங்கம். (இளங்கோவடிகள் சமயம் யாது என்று டி. எஸ். பால் என்பவர் நூலில் எடுத்தாளப் பெற்றிருக்கிறது. பக்கம் 99.) "சேரர் செங்குட்டுவன் காலத்தில் இத் தமிழகத்தில் பல மதங்கள் இருந்தன. சமண மதம் தமிழர் சமயமாகவே இருந்தது. அத்துடன் வைதிக சமயமும் கலந்து கொண்டிருந்தன." மேலே குறிப்பிட்ட நூல், பக்கம் 39.

தைப்பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் ஆரியர் வட இந்தியாவிற்கு வந்த காலத்திற்கு முன்பே அங்கே மக்கள் சமண மதத்தைத் தழுவியிருந்தார்கள் என்று கூறுவது கொஞ்சமும் பொருத்தமில்லை. ஆரியருடைய வைதிக சமயக் கொள்கைகள், வேள்வி முறைகள் ஆகியவைகளில் சிலவற்றை எதிர்த்தே பௌத்தமும் சமணமும், அநேகமாக ஒரே காலத்தில் தோன்றின. மகா வீரர்தான் சமணத்தைத் தோற்றுவித்தவர். அவருக்கு முன்னாலே சமணம் இருந்தது என்பதும், அச்சமயத்தைச் சார்ந்த இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் மகாவீரரே கடைசித் தீர்த்தங்கரர் என்பதும், ஒவ்வொரு சமயமும் அது முழு உருவும், வளர்ச்சியும் பெற்ற பிறகு தனக்கென்று வகுத்துக் கொள்ளும் புராணங்களைப் போல, சமணரும் தங்கள் சமயத்திற்கு ஆக்கிக்கொண்ட புராணக் கொள்கைகளே. தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் சமணம் தோன்றுவதற்கு முன்னாலே ஆரியர் வந்து அங்கே குடியேறினர். அக்காலத்திலோ, அதற்குப் பிற்காலத்திலோ மக்களின் சமயம் சமணம் ஒன்றே என்று கருதுவதற்கு எவ்வித ஆதாரங்களும் இல்லை. அசோகரின் கல்வெட்டுக்களிலிருந்து பௌத்தம் தமிழகத்தில் வந்த காலம் சுமார் கி.மு. மூன்றும் நூற்றாண்டு என்று தெரிய முடிகிறது. ஆனால் ஏறக்குறைய அக்காலத்திலேயே சமணம் தெற்கே வந்தபோது முதலில் கன்னட தேசத்தில்தான் பரவியது. சற்றுப் பின்னர் தான் சமணம் தமிழ்நாட்டில் நுழைந்தது. சுமார் கி. மு. முதல் நூற்றாண்டில்தான் சமணம் தமிழகத்தில் தோன்றியது என்று கொள்வது தவறாகாது. அக்காலத்திலோ அதற்குப் பின்னுள்ள சில நூற்றாண்டுகளிலோ சமணத்திற்குத் தனி ஆதிக்கம் இருந்ததாகச் சொல்வதற்குச் சான்றுகள் இல்லை. இன்றுள்ள பண்டைத் தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்தால், அது சித்திரிக்கும்

வாழ்க்கையில், அதாவது கிறிஸ்து சகத்தின் முதல் மூன்று ஆண்டுகளில், தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கையில், எந்த ஒரு சமயத்திற்கும் தனி ஏற்றமோ ஆக்கமோ இருந்ததாகத் தெரியவில்லை. அக்காலத்தில் பௌத்தம், சமணம், சைவம், வைணவம் ஆகிய இந்நான்கு சமயங்களும் மக்களிடம் ஏறக்குறைய ஒரே மாதிரி பரவியிருந்தன.[1] தவிரவும் இச் சமயங்கள் எல்லாம் நேசப்பான்மையுடனேயே இயங்கின என்று தெரிகிறது. கி. பி. ஆரும் நூற்ருண்டு வரை தமிழகத்தில் சமயப் பூசல்கள் தோன்றவில்லை. இவை கி. பி. ஏழாம் நூற்ருண்டில் தான் தலைகாட்டின. வைதிக சமயங்களான சைவமும் வைணவமும் வீறு பெற்றெழுந்து சமணத்தையும் பௌத்தத்தையும் வலிகுன்றச் செய்ததை முன்னர்க் கூறியிருக்கிரும். சைவத்திற்கும் வைணவத்திற்கும் இடையே குடும்பச் சண்டைகள்போல் சிறு பூசல்களும் தோன்றின. இவைகளைச் சில நாயன்மார், ஆழ்வார்கள் ஆகியோரின் பாடல்களில் பார்க்கலாம். இந்த நூல் இலக்கிய ஆராய்ச்சியைப் பற்றியதேயன்றி சமய ஆராய்ச்சியைப்பற்றி யிலாமையாதலால் இலக்கிய ஆராய்ச்சிக்குத் தேவையான அளவுக்கு, சமய சரித்திர விஷயங்கள் இங்கே குறிப்பிடப் பெற்றிருக்கின்றன

வடநாட்டில் கி. மு ஆரும் நூற்ருண்டில் தோன்றிய சமணமும் பௌத்தமும் வேதங்களை அடிப்படையாகக் கொண்ட வைதிக சமயம் அல்லது இந்து சமயம் என்பதின் கொள்கைகளை மறுத்தன என்று கூறியிருக்கிரும். வேதங்கள் ஆகமங்கள் முதலிய இந்து சமய மூல நூல்கள் எல்லாம், வடமொழி என்று பண்டைத்

---

1. பத்துப் பாட்டிலுள்ள சில பாடல்களையும் சிறப்பாக மதுரைக் காஞ்சியையும் ஊன்றிப் படிப்பவருக்கு இந்த உண்மை எளிதில் விளங்கும். மதுரைக் காஞ்சியில் இது தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. (வரிகள் 453—488)

தமிழர் கூறி வந்த சம்ஸ்கிருதத்தில் இருந்தன. இந்த மொழியும் அதன் பயிற்சியும் கடினமாய் இருந்ததாலும், வேதங்களைக் கற்கச் சில வகுப்பினருக்கே தகுதியுண்டு என்று அக்காலத்தில் கருதப் பெற்று வந்ததாலும் ஒரு சிலருக்கே வடமொழியில் தேர்ச்சி இருந்தது. இலக்கிய சம்ஸ்கிருதம் எந்தக் காலத்திலாவது மக்களால் அன்றாட வாழ்க்கையில் பேசப் பெறும் மொழியாக இருந்ததா என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக் கின்றன. ஒருகால் மிகப் பழமையான காலத்தில் அது பேசப் பெற்ற மொழியாய் இருந்திருந்தால் ஒரு சில ருக்கே அது பேசும் மொழியாய் இருந்திருக்கும். பெரும் பாலான மக்களுக்கு அந்த மொழியில் பேசவோ, எழுத்து முறைகள் தோன்றிய காலத்திற்குப் பின் எழுதவோ முடியாத நிலைமைதான் இருந்தது. இந்த உண்மையை அறிந்த புத்தரும் மகா வீரரும், தங்களது சமயக் கொள்கைகளை மக்களுக்கு அறிவிக்க, சம்ஸ்கிரு தத்தைக் கையாளாமல், அவர்கள் பேசிவந்த சாதாரணக் கொச்சை மொழிகளையே உபயோகித்தார். அவர்கள் வேதங்களை மறுத்தது போலவே, அவை அமையப் பெற்றிருக்கும் சமஸ்கிருத மொழியையும் கையாள மறுத்தார்கள். புத்த மதத்தின் ஆதி சமய நூல்கள் எல்லாம் பாலி என்ற மொழியில் இருந்தன. சமண சமயத் தலைவர் தங்கள் சமயப் பிரசாரத்தை பிராகிருத மொழிகளிலேயே செய்தார். அவருடைய சமய, தத்துவ நூல்களும் அதே மொழிகளில்தான் செய்யப் பெற்றன. சம்ஸ்கிருதத்திற்கும் பிராகிருதங்களுக்கும் லிபி ஒன்று தான். ஆதியில் பிராம்மி எழுத்துக்கள், என்று இருந் தவை, வளர்ந்து சில மாறுதல்கள் பெற்று தேவநாகரி எழுத்துக்களாயின. பிராம்மி எழுத்துக்கள் ஆதி தசை யில் இருந்த நிலையில், சம்ஸ்கிருதத்திற்கும் பிராகிருதங் களுக்கும் லிபிகளாய் பண்டைக் காலத்தில் அமைந்தன.

பிராகிருதங்கள் அந்தந்தப் பிரதேசங்களில் மக்கள் பேசும் கொச்சை மொழிகளாய் இருந்தன. இவைகளையே சமணர் கையாண்டார்.[1] ஆரம்பத்தில் சம்ஸ்கிருதத்திற்கும் பிராகிருதங்களுக்கும் அதிக வித்தியாசங்கள் இல்லை. ஓரளவு தொடர்பும் இருந்தது என்று சொல்லலாம். பின்னால் பிராகிருதங்கள் வளர்ந்து உரு மாறி வேறு மொழிகளோ என்று சொல்லக்கூடிய அள

---

1. "During the period of its existence, classical Sanskrit had beside it, as competitor Middle Indo-Aryan (ie Prakrit) in its various forms, not only as a spoken language, but also as a language of literature. In the early period this competition was much more important than it was later; though it appears paradoxical at first sight, the Sanskrit language only reached its full development as a language of culture and administration at a time when it had ceased to be a mother tongue. The rise of Middle Indo-Aryan as a literary language coincided with the foundation of the new religions of Buddhism and Jainism about 500 B.C. The founders of these religions deliberately chose the vernacular, the dialect of Magadha in the first instance, as the vehicle of their teaching. It the third century B.C Asoka had his inscriptions engraved in various local dialects and ignored Sanskrit...In the South Prakrit remained in use longer and was not finally ousted by Sanskrit until the fourth or fifth century A.D...The Jains were slower in making a change than the Buddhists. They were the most conservative of the Indian sects and upto the time of the final constitution of the present canon of Swetambaras (at the Council of Valabhi in A.D. 526) they used Prakrit exclusively. But even they turned to the use of Sanskrit in the succeeding period. At the same time they continued to cultivate Prakrit seriously, besides Sanskrit, at a time, when, in other literary circles the traditional Prakrit was being employed as little more then a literary exercise". The Sanskrit Language by Prof. T. Burrow Page 57-58.

விற்குப் பல மாறுபாடுகளை அடைந்தன. ஆகவே பௌத்தரும் சமணரும், வேதங்கள் முதலிய இந்து மத நூல்களைச் சுமக்கும் சம்ஸ்கிருதத்தின்மீது வெறுப்புக் கொண்டு அதைச் சில நூற்றாண்டுகள் வரை அசட்டை செய்து பிராகிருதங்களையே கையாண்டு வளர்த்து வந்தார். பின்னர் சம்ஸ்கிருதம் வெற்றி பெற்று நாடெங்கும் இலக்கியத்திற்கும் சமயத்திற்கும், கலை களுக்கும் அரசியலுக்கும் பெருங் கருவியாகிப் பரவிய பிறகு பிராகிருத மொழிகளுக்கு ஏற்பட்டிருந்த முக்யத் துவம் குறைந்தது. இது வடநாட்டில் இருந்த நிலைமை.

இனி தென்னாட்டில் இருந்த நிலைமையை ஆராய வேண்டும். தமிழகத்தில் வந்து குடியேறிய பௌத்தரும் சமணரும் பிராகிருத மொழிகளையே முதலில் கையாண்டு வந்தார்கள். அத்துடன் தமிழ் மொழியையும் கற்று அதிலும் நல்ல தேர்ச்சி அடைந்திருந்தார். அவருடைய சமய நூல்கள் எல்லாம் சம்ஸ்கிருதத்திலும் பிராகிருதங் களிலுமே இருந்தன. இவைகளில் உள்ள உண்மை களை மக்களிடம் பரப்பவே அவர் தெற்கே வந்ததால் அவைகளைத் தமிழில் ஆக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதனால் விளைந்த நிலைமையைச் சமாளிப் பது அக் காலத்துச் சமயத் தலைவருக்கு மிகவும் கஷ்டமா யிருந்தது. தங்களுடைய சமயக் கருத்துக்களையும் தத்துவங்களையும் எளிதில் தமிழில் கொண்டுவர முதலில் அவர்களால் இயலவில்லை என்று கருதலாம். இந்த நிலைமையைச் சமாளிக்கச் சமணர் ஒரு புது வழியைக் கண்டார். அவர், சம்ஸ்கிருதம் அல்லது பிராகிருதத் தையும், தமிழையும் சேர்த்துப் புதிதாக, மணிப்ரவாளம் என்று பிற்காலத்தார் கொண்ட ஒரு கலப்பு மொழியைச் சிருஷ்டித்துக் கொண்டார். வாக்கியங்களின் அமைப்பு தமிழ் இலக்கணத்தைத் தழுவியே இருந்தது; எழுவாய்,

பயனிலே, செயப்படுபொருள் முதலிய உறுப்புகளுட னேயே அவை செய்யப் பெற்ற போதிலும், அவை அளவுக்கும் கலைப் பண்புக்கும் ஒவ்வாத அளவில் நீண் டிருந்தன. அத்துடன் அவைகளில் கையாளப்பெற்ற சொற்கள் சொற்றொடர்கள், உரிச்சொல்கள் முதலி யவைகளோடு பெரும்பாலும் வடமொழியைக் கலந்து ஒருவாறு அமைத்துக் கொண்டார். இந்த நடைக்கு மணிப்ரவாள நடை என்ற பெயர் எக்காரணத்தால் வந்தது என்பதைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக் கின்றன.[1] இவை நமது ஆராய்ச்சிக்குரியன அல்ல. தமிழ்நாட்டில் வந்து குடியேறின வடநாட்டுச் சமணரும் சமணத்தைத் தழுவிய தமிழரும், பின் னர் வைணவரும் தங்களுடைய சமயங்கள் சம்பந்த மான நூல்களை ஆக்குவதற்கு உகந்ததாக, பெரும் அளவில் இந்த நடையைக் கையாண்டதே நமது கவனத்திற்கு உரியது. சமயப் பற்றும் தேவை களும், தமிழ்மொழியின் வளர்ச்சியைப் பாதித்த முறை யில் மணிப்ரவாள நடை சிருஷ்டிக்கப் பெற்றது என்பது சரித்திரம் கண்ட உண்மை.

மணிப்ரவாள நடையைச் சிருஷ்டித்தவருக்கு ஒரு முக்கியமான பிரச்னைக்குத் தீர்வு காணவேண்டி யிருந்தது. சம்ஸ்கிருதம் அல்லது பிராகிருதப் பகுதி களை எந்த லிபியில் தமிழுடன் கலந்தெழுதுவது பொருத்தமாயிருக்கும் என்பதை அவர் ஆராய்ந்திருப் பார். வடமொழி நெடுங் கணக்குக்கும் தமிழ் நெடுங் கணக்குக்கும் சில வித்தியாசங்கள் இருந்தன. வட மொழியிலுள்ள மெய்யெழுத்துக்களின் தீர்க்கங்களுக் கும், ஸ, ஷ, ஹ போன்ற எழுத்துக்களுக்கும் வேறு சில ஒலிகளைக் குறிக்கும் கூட்டெழுத்

1. மணிப்ரவாளம் வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரி யார். செந்தமிழ் தொகுதி 12, பகுதி 11, பக்கம் 485—495.

துக்களுக்கும் தமிழில் வரி வடிவம் இல்லாததைக் கண்டிருப்பார்.[1] இவைகளை எழுதுவதற்கு ஒரு வழி காண வேண்டும். அக்காலத்தில் வடமொழிக்கு, இப்போதுள்ள அமைப்பில் தேவநாகரி லிபிகள் உருவா யிருந்தன. இந்த அமைப்பைச் சேர்ந்த கோடுகள் கால்கள், வளைவுகள் முதலியவற்றை அக்காலத்தி லிருந்த தமிழ் வட்டெழுத்துக்களின் வரி வடிவங்களு டன் சேர்த்து எழுதுவது பொருத்தமாய் அமையாது என்று கண்டார். அத்துடன், சமணர், பின்னர் சில காலம் சம்ஸ்கிருதத்தைக் கையாண்டு அதில் நூல்கள் எழுதிய போதிலும், பொதுவாக வெகு காலமாக வட மொழியை வெறுத்து வந்த மனப்பான்மையைக் கைவிடவில்லை. ஆகையால், தங்கள் சமயத் தேவை களுக்குத் தக்கவாறு மணிப்ரவாள இலக்கியம் செய்யவும் வேறு அவசியம் எழுந்தபோது சம்ஸ்கிருதத்திலோ பிராகிருதத்திலோ நூல்கள் எழுதவும், கிரந்தம் என்று கூறப்பெறும் புது லிபிகளைச் சிருஷ்டித்துக் கொண்டார் சமணப் புலவர். இந்த முக்கியமான நிகழ்ச்சி எந்தக் காலத்தில் நடைபெற்றது என்று திட்டமாய்த் தெரிய மார்க்கமில்லை. கிரந்த லிபிகள் தமிழ்நாட்டில் சுமார் கி. பி. நான்கு அல்லது ஐந்தாவது நூற்ருண்டில் சிருஷ் டிக்கப் பெற்றிருக்கலாம் என்று ஊகிக்கலாம் கி. பி. ஆரும் நூற்ருண்டைச் சேர்ந்ததாகக் கருதப்பெறும் வடமொழியிலுள்ள சில பல்லவ சாசனங்கள் கிரந்த லிபியில் எழுதப் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. இவ்வாறு எழுதப்பெற்ற சில தாமிர சாசனங்கள்

---

1. இவ்வாறு இல்லாதது தமிழ் நெடுங்கணக்கின் தனிச் சிறப் பையும், தமிழ் மொழியின் அடிப்படையான ஒலித் தத்துவங்களின் பெருமையையும் காட்டும் என்று ஒரு சாரார் வாதித்து வந்திருக் கிருர். இது மொழி நூல் சம்பந்தம் பெற்ற பெரிய விஷயம். மூன்ரும் பகுதியில், தற்காலத் தமிழ் ஆராய்ச்சியைக் கவனிக்கும் போது ஆராயப் பெறும்.

தஞ்சை ஜில்லாவில் சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

கிரந்த லிபிகளின் ஆக்கம், மொழி வரலாறுகளில் சில காலங்களில் நிகழக்கூடிய அற்புதங்களில் ஒன்று. தமிழ் வட்டெழுத்தின் வரிவடிவங்களுடன் எளிதில் பொருந்தி சேரக்கூடிய முறையில் இந்த லிபி ஆக்கப்பெற்றிருக்கிறது.[1] தமிழ் எழுத்துக்களின் அடிப்படையிலேயே இந்த லிபி ஆக்கப்பெற்றது என்றுகூடச் சொல்லலாம். மணிப்ரவாள நடைக்காகவே ஆதியில் ஆக்கப்பெற்ற கிரந்த எழுத்துக்கள் பின்னுல் சம்ஸ்கிருதம் எழுதுவதற்கும் பயன்படுத்தப் பெற்றது. ஏனென்ருல் தேவநாகரியைவிட இவ்வெழுத்துக்களை எழுதுவதற்குத் தமிழருக்குச் சுலபமாயிருந்தது, பனை ஒலைகளில் எழுத்தாணி வைத்து எழுதும் முறையே அக்காலத்தில் இருந்தது. இந்த முறையில் கிரந்த எழுத்துக்களையும் அவற்றைச் சார்ந்த கூட்டெழுத்துக்களையும் எளிதில் எழுத்தாணியால் எழுத முடிந்தது. ஆகையால் வெகு சமீப காலம் வரை தமிழ்நாட்டில் பல பல இடங்களில் வடமொழி நூல்கள் எல்லாம் பெரும்பாலும் கிரந்த லிபியிலேயே எழுதப்பெற்று வந்தன. இதனுல் தமிழகத்தில் தேவநாகரி லிபிக்கு ஆக்கம் குறைந்திருந்தது என்பது நன்ருய் விளங்குகிறது. அந்த லிபியை எழுதுவதிலுள்ள கஷ்டங்களினுல்தான் இன்று தமிழ் மக்களில்

1. *கிரந்த லிபிகளின் அமைப்பைப் பற்றியும் அவைகளுக்கும் பழைய தமிழ் வட்டெழுத்துக்களுக்கும் உள்ள தொடர்பைப் பற்றியும் நுட்பமாய் ஆராய்ந்து எம். சீனிவாசய்யங்கார் எழுதியிருக்கிருர்.* Tamil Studies. 128—131. *கிரந்த லிபிகளைப் பல்லவ கிரந்தம் என்று சொல்லும் வழக்கமும் இருந்திருக்கிறது. பல்லவர் காலத்து சாசனங்கள் செப்பேடுகள் முதலியனவும், வேள்விக்குடிச் செப்பேடுகள் போன்றவைகளிலுள்ள வடமொழிப் பகுதிகளும் கிரந்த லிபிகளிலேயே இருக்கின்றன.*

பெரும்பாலோர் அதை விரும்பவில்லை என்று கொள்ளலாம்.[1]

கடந்த ஐம்பது ஆண்டுகளாக, கிரந்த லிபிகளுக்குண்டான ஆக்கமும் முக்கியத்வமும் குறைந்து வந்திருக்கின்றன. அது கைவிடப்பட்டிருக்கிறது என்றுகூடச் சொல்லலாம். சம்ஸ்கிருத நூல்கள் எல்லாம் இப்போது பெரும்பாலும் தேவநாகரி லிபியிலேயே அச்சிடப் பெற்று வருகின்றன. இந்தியா முழுவதிலும், தேவநாகரி லிபி, மிகச் சில அமைப்பு மாறுதல்களுடன் அதன் பல பாகங்களிலும் வழங்கி வருவதால், அந்த லிபியிலேயே சம்ஸ்கிருத நூல்களை எழுதுவதும் அச்சிடுவதும்தான் பொருத்தம். அத்துடன் இந்தியாவின் அரசாங்க மொழியாகச் சட்டம் நிர்ணயித்திருக்கும் இந்திக்கும் தேவநாகரி லிபியாய் அமைந்திருக்கிறது. இதனால் அதன் முக்கியத்துவமும் பயிற்சியும் சற்று அதிகரித்திருக்கின்றன. இதனால் அதற்கு நாட்டின் சில பகுதிகளிலிருந்து எதிர்ப்பும் தோன்றியிருக்கும் விஷயமும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது எவ்வாறாக இருந்த

1. இன்று தமிழ்நாட்டில் வளர்ந்து வரும் இந்தி எதிர்ப்பு இயக்கத்திற்குள்ள பல காரணங்களில் அது தேவநாகரி லிபியிலிருக்க வேண்டும் என்று சட்டம் இயற்றியிருப்பதும் ஒன்று. அரசியல் சட்டம் 342 (1) பிரிவு கூறுவதாவது: "The official language of the Union shall be Hindi in Devanagari script". தமிழர் தேவநாகரி எழுத்துக்களைக் கடந்த பதினைந்து நூற்றாண்டுகளாக எளிதில் கையாளக்கூடிய நிலைமை இருந்திருந்தால் கிரந்த லிபிகளே தமிழ்நாட்டில் தோன்றியிரா. இது ஆழ்ந்த சிந்தனைக்குரிய விஷயம். இன்று பல சிறந்த அறிஞர் இந்திய மொழிகள் எல்லாவற்றிற்கும் ரோமன் லிபிகளை பயன்படுத்தினால் பல மொழிச் சிக்கல்கள் தீரும் என்று கூறி வருவதும் சிந்தனைக்குரியது. மொழிப் பிரச்னையில் லிபிப் பிரச்னையும் அடங்கியிருக்கிறது என்ற விஷயம் கவனித்தற்குரியது.

போதிலும், தமிழ்நாட்டில், முதலில் சமணரும், பின்னுல் பெரும்பாலும் வைணவரும், ஓரளவு சைவரும் கிரந்த லிபியைக் கையாண்டு வடமொழி நூல்களையும் மணிப்ர வாள இலக்கியத்தையும் செய்திருப்பது, தமிழ் மொழி யின் வளர்ச்சியின் வரலாற்றில் ஒரு சரித்திர முக்கியத் துவம் வாய்ந்த நிகழ்ச்சி. ஏனென்ருல் கிரந்த லிபி தோன்றிய பிறகுதான் வடமொழிச் சொற்கள் சற்று அதிகமாகத் தமிழில் கையாளப் பெற்றன. கிரந்த லிபி யையும் மணிப்ரவாள நடையையும் சமணர் சுமார் கி. பி. நான்கு அல்லது ஐந்தாவது நூற்ருண்டுகளில் சிருஷ் டித்த போதிலும், சுமார் கி. பி. பத்தாம் நூற்ருண்டுக்குப் பின்னர் தான் அவை மற்றவர்களால் வெகுவாகக் கையாளப் பெற்றன.

தமிழ்நாட்டில் வடமொழி பயில்வோர் எல்லோருக் கும் கிரந்த லிபி பொதுவாய் இருந்தது. ஆனுல் வட மொழியும் தமிழும் கலந்த மணிப்ரவாள நடை முதலில் சமணருக்கும் பின்னர் வைணவருக்குமே பெரும்பாலும் உரியதாயிற்று. மணிப்ரவாள நடையில் செய்யப் பெற்ற காவியம் சமண சமயத்தைச் சேர்ந்த ஸ்ரீபுராணம். இது அதன் மாபெரும் சமய நூலான மகா புரா ணத்தின் ஒரு பகுதி என்று சொல்லப்படுகிறது. கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டுக்குப்பின் வைணவ சமயி களில் பெரும் புலவரும் அறிஞருமாயிருந்தோர், நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கு உரைகளையும் குரு பரம்பரா ப்ரபாவ நூல்களையும் மணிப்ரவரள நடையில் எழுதிக் குவித்தார். தங்களுடைய சமயத் தேவைகளைக் கருதியே வைணவப் புலவர் மணிப்ரவாள நடையை மிகுதியாகக் கையாண்டார். மணிப்ரவாளம் ஒரு கடின மான நடை. சாதாரணமான தமிழ் நடையில் அதிக மான வடமொழிச் சொற்களைச் சேர்த்த நடையை

மணிப்ரவாளம் என்று சொல்ல முடியாது.[1] மணிப்ரவாள நடையில் வடமொழிச் சொற்கள், கூட்டுச் சொற்கள் முதலியவைகள் அவைகளின் முழு வடிவங்களுடன், சிறிதும் மாறுதல் இன்றிக் கையாளப் பெற்றிருக்கும். ஆகையால் மணிப்ரவாளத்திற்கும் தமிழுக்கும் தொடர்பு இருப்பினும் அதைத் தமிழ் நடை என்று கருதமுடியாது. அது வழக்கொழிந்த நடை. இன்று சாதாரணமாக ஒருவரும் அந்த நடையில் எழுதுவதில்லை. வைணவரின் மணிப்ரவாள நூல்களைப் படிக்கவோ அவைகளின் பொருள் தெரிந்துகொள்ளவோ தமிழில் மாத்திரம் பயிற்சியுள்ளோருக்கு முடியாது.[2] வடமொழியும் தமிழும் நன்ருய்த் தெரிந்தவருக்கே முடியும். அவ்வாறு தெரிந்தவரும், பொதுவாக அவைகளைப் பயில்வதில்லை. தெரிந்துகொள்ள முயல்வதும் இல்லை. இந்த நிலைமை வருந்தத் தக்கதுதான். நல்ல தமிழிலுள்ள சிறந்த திவ்யப் பிரபந்தப் பாசுரங்களையே தமிழ் மாணவர் இலக்கியம் என்ற முறையில் பயிலுவ

---

1. உதாரணமாக தாயுமானவர், அருணகிரிநாதர், இராமலிங்க சுவாமிகள் ஆகியோரின் பாடல்களில் வடமொழிச் சொற்கள் அதிகமாகக் காணப் பெறுகின்றன. அக்காரணம் பற்றி அவர்களின் நடையை மணிப்ரவாளம் என்று கூறமுடியாது. அது சிறந்த தமிழ் நடையே.

2. திருவாய்மொழியின் வ்யாக்யானமான நம் பிள்ளையின் 'ஈடு' என்னும் மணிப்ரவாள உரை நூலைத் தமிழாக்கி, சென்னைப் பல்கலைக்கழகத்தார் பிரசுரித்து வருவது குறிப்பிடத்தக்கது. ஒரே மொழியான ஆங்கிலத்தில், முற்காலத்தில் வழக்கிலிருந்த 'ஆங்கிலோ சாக்ஸன்' (Anglo-Saxon) நடையில் எழுதப் பெற்ற நூல்களையும், இடைக்காலத்தில் நிலவிய 'மிடில் இங்கிலீஷ்' (Middle English) என்பதில் ஆக்கப்பெற்ற நூல்களையும், தற்கால பிரிட்டிஷார் படித்துப் பொருள் தெரிந்துகொள்ளக் கூடாமலிருப்பதைக் கவனித்தால், வடமொழியும் தமிழும் கலந்து எழுதப்பெற்ற மணிப்ரவாளத்திலுள்ள வைணவ சமய இலக்கியத்தைத் தமிழர் படித்துப் பொருள் தெரியக்கூடாத நிலைமையில் இருப்பதில் வியப்பு ஒன்றும் இல்லை.

தில்லை என்று முன்னர்க் கூறியிருக்கிறோம். அப்பாசுரங்களுக்கு 'ஸ்வாபதேச' ரீதியாக மணிப்ரவாள நடையில் வைணவப் புலவரால் எழுதப்பெற்ற பிரம்மாண்டமான உரைகளைத் தமிழ் மாணவர் படிப்பதில்லை என்று குறை கூறுவது பயனில சொல்வதாகும். இருந்த போதிலும் ஏகதேசமாகவாவது சிலர் இந்த அற்புதமான உரைகளைப் படித்து இன்புறுவதற்கு அவர்களைத் தூண்டும் முறையில், இந்த உரைகளின் பெருமையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லவேண்டும்.

மணிப்ரவாளத்தில் இருக்கும் வைணவ இலக்கியத்தை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். இவைகளில் ஒரு பகுதி குரு பரம்பரா ப்ரபாவ நூல்கள். வைணவ ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஆகியோரின் வாழ்க்கைகளைப்பற்றிக் கூறும் நூல்கள் இவை. அவைகளில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களில் சில சரித்திரத் தன்மையுடனும் வேறு சில புராணத் தன்மையுடனும் இருக்கின்றன என்று முன்னால் கூறப்பட்டிருக்கிறது. இங்கே இந்நூல்களின் இலக்கிய நயங்களையே கவனிக்கவேண்டும். குரு பரம்பரையைக் கூறும் நூல்கள் பல இருப்பினும், அவைகளில் காலத்தால் முந்தியதும் மணிப்ரவாள நடையிலும் பிற நயங்களாலும் சிறந்ததுமாய் உள்ளது பின்பழகிய பெருமாள் ஜீயர் இயற்றிய குரு பரம்பரை. இது வைணவ அறிஞராலும் தமிழ்ப் புலவராலும் வெகுவாகப் போற்றப் பெற்று, வந்திருக்கிறது. அதன் வசன நடை அலங்காரமாயும் கம்பீரமாயும் எழுந்து செல்கிறது; பொருட்செறிவும் உடையது; அழகான சொற்களைத் திட்பத்துடன் கையாள்வதில் அதன் ஆசிரியர் மிகுந்த திறமையையும் ஆர்வத்தையும் காட்டியிருக்கிறார். இந்த நூலிலும், இதற்குப் பின்னர் தோன்றிய இது போன்ற நூல்களிலும் இரண்டு முக்கியமான அம்சங்களைப் பார்க்

கிறோம். நூலாசிரியர்களின் உள்ளங் கனிந்த ஆசாரிய பக்தி நூல்களின் ஒவ்வொரு பக்கத்திலும் காணப் பெறுகிறது. எல்லா சமயங்களைச் சார்ந்த பக்தர்களிட மும், அடியார்களிடமும், புலவரிடமும் பொதுவாக குரு பக்தி விளங்கிய போதிலும், வைணவ சமயத்தாரின் ஆசாரிய வணக்கமானது தனிப் பெருமையுடையது; அது பெரும் அளவில் மனித உணர்ச்சிப் பண்புகளுடன் கலந்து இயங்கியிருக்கிறது. வைணவ சமயத்தின் சிறப் பியல்புகளில் இது ஒன்று. குரு பரம்பரை நூல்களின் ஆசிரியர்கள் தங்களுடைய சமயத் தலைவரின் வாழ்க்கை வரலாறுகளையும் அவைகளைச் சார்ந்த சம்பவங்களையும், நல்ல நாடகச் சுவையுடனும் நகைச்சுவையுடனும் வாசகரைக் கவரும்முறையில் எழுதிப் போகிறார்கள். இவரைக் கதை சொல்லும் கலைஞர் என்று கூறலாம். சில குரு பரம்பரை நூல்களில் அவைகளின் ஆசிரியர்கள் சம்பவங் களைக் கூறும் முறையையும், சம்பாஷணைகளை அமைத் திருக்கும் அழகுகளையும் கவனித்தால், அவை அந்நூல் களை வசன காவியங்களாகவே ஆக்கியிருக்கின்றன.

இரண்டாவது பகுதியில், பெரும்பாலும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் உரை நூல்களும், சிறுபான்மை யாக வைணவ சித்தாந்தம் பற்றியுள்ள நூல்களும் அடங்கும். இவ்வுரை நூல்களும், குரு பரம்பரை நூல் களும் வைணவ சமய இலக்கியத்தின் தனிச் சிறப்பு என்று கூறலாம். திவ்யப் பிரபந்த உரைகள், சாதாரண மாகத் தமிழில் காணப்பெறும் இலக்கிய உரைகள் போன்றவை அல்ல. பாடல்களை எடுத்துக்கொண்டு, அவைகளை விளக்கும் முறையில், வைணவ சமயத்தின் சொரூபம், சம்பிரதாயங்கள், விஷ்ணுவின் அவதார மாண்புகள், விசிஷ்டாத்வைதத்தின் தத்துவ நுட்பங்கள் ஆகியவை எல்லாம், வேதங்கள், உபநிடதங்கள், புரா ணங்கள், இதிகாசங்கள் முதலியவைகளிலிருந்து எடுக்

கப்பெற்ற ஏராளமான மேற்கோள்களோடு விளக்கப் பட்டிருப்பதுமன்றி பாடல்களின் உட்கருத்தென்றும் தத்துவார்த்தம் என்றும் பல அரிய விஷயங்களை நுண்ணிய அறிவுப்பாங்குடன் உரையாசிரியர் கூறியிருக்கின்ருர். வடமொழியில் ஆதி காவியம் என்று போற்றப்பெற்று வரும் இராமாயணத்தின் கதைப் போக்கையும், பொருண்மையையும் சில உரையாசிரியர், தனி முறையில் கையாண்டு அவைகளுக்குச் சிறப்புப் பொருளும் விளக்கமும் கூறி, அம் மாபெரும் ஆதி காவியத்தை வைணவத்திற்கு ஒரு பிரமாண நூலாகவே ஆக்கிக் கொண்டதிலிருந்து அவ்வுரையாசிரியரின் இலக்கிய சிருஷ்டி வன்மையும் விரிந்த கற்பனு சக்தியும் விளங்குகின்றன. விஷ்ணு புராணம், பாகவதம் முதலிய வைணவ புராணங்களும், ஆழ்வார்கள் இராமாவதாரம், கிருஷ்ணுவதாரம் ஆகியவைகளின் மாண்புகளைச் சிறப்பித்துப் பாடியிருக்கும் பாசுரங்களும், இவ்வுரையாசிரியரின் சிந்தனைக்கு, மேலே கூறிய முறையில் ஆக்கமும், திருப்பமும் கொடுத்தன என்பதும் குறிப்பிடத்தக்கது.

நாலாயிர திவ்யப் பிரபந்தம் முழுவதற்கும் இவ்வாறு செய்யப்பெற்ற உரைகள் தோன்றிய போதிலும், அதன் மற்றப் பகுதிகளைவிட, நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்குத்தான் இவ்வித உரைகள் மிகுதியாகச் சமைக்கப்பட்டிருக்கின்றன.[1] இவ்வுரைகள் எல்லாவற்

---

1. *இராமாநுஜர் வேண்டும் என்றே திவ்யப் பிரபந்தத்திற்கு உரை செய்யவில்லை என்றும் தாம் உரை செய்தால் மற்றவர் பேருரைகளைச் செய்யமாட்டார் என்று கருதி இந்தப் பணியைச் செய்யாமல் விடுத்தார் என்றும் வைணவ சமயிகள் கருதி வந்திருக்கிருர்கள். எனினும் அவர், தமக்கு அபிமான புத்திரர் போலிருந்த திருக்குருகைப்பிரான் பிள்ளானைக் கொண்டு முதல் முதலாக, ஸ்ரீ விஷ்ணு புராண ப்ரகிரியையாலே திருவாய்மொழிக்கு ஆறுயிரப் படியாக ஒரு உரையைச் செய்வித்தார். இதற்கப்புறம்*

றையும் வைணவர் 'பகவத் விஷயம்' என்று கொண்டு அவைகளின் பொருளைப் பிரமாண வாக்கியமாகவே கருதிப் பெரிதும் போற்றி வந்திருக்கிறார். இந்த உரைப் பெருங்கடலில் இறங்கி நீந்த முயலுபவர் மிகச் சிலரே. இந்நூல்களை, சமய நோக்குடன் பார்க்காமல், வெறும் இலக்கியமாகவே கருதிப் படிக்க முயன்றாலும் அவைகளின் பெருமை தெரிய வரும். இவ்வுரையாசிரியர் தீவிர வைணவ பக்தராயிருந்திருப்பதுடன் சிறந்த கல்விமான்களாயும் இருந்தார்; அளவற்ற அறிவாற்றலும் உரைத் திறமும் படைத்தவர். தாங்கள் எடுத்துக்கொண்டு விளக்கும் பொருள் சமயத்தைச் சார்ந்த போதிலும், அவர் தமிழ்ப் புலமையில் தங்களுக்குள்ள ஈடுபாட்டையும், திறமையையும் ஆங்காங்கே காட்டிக்

---

நஞ்சியர், ஸ்ரீ பாஷ்ய ப்ரகிரியையாலே ஒன்பதினாயிரப்படி என்று ஒரு வ்யாக்கியானம் செய்தார், இந்த உரையுள்ள ஏட்டைப் படி செய்வதற்காக நம்பிள்ளையிடம் கொடுக்கப் பெற்றதாயும், அவர் அந்தத் தலைமீது வைத்துக்கொண்டு காவிரி நதியைக் கடக்கும் போது வெள்ளம் ஏட்டை அடித்துக்கொண்டு போய்விட்டதென்றும் நம்பிள்ளை பெரு வருத்தமுற்றுப் பின்னர், தாமே தமது குருவிடம் கேட்டபடி ஒரு உரையை எழுதி நஞ்சியரிடம் கொடுத்தாரென்றும், அவர் அதைப் படித்துப் பெரும் மகிழ்ச்சி அடைந்தார் என்றும் ஒரு குரு பரம்பரை கதை கூறுகிறது. நம்பிள்ளை, பின்னர் திருவாய்மொழிக்குச் சொன்ன வ்யாக்கியானத்தை ஈடு முப்பத்தாறாயிரமாக அவருடைய சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதப் பெற்றது. நம்பிள்ளையின் மற்றொரு சீடரான பெரிய வாச்சான் பிள்ளை, தமது குருவின் ஆணையின்படி, ஸ்ரீ ராமாயண ப்ரக்ரியையாலே இருபத்து நாலாயிரப் படியாக ஒரு சிறந்த உரை எழுதினார். பின்னர் பெரிய வாச்சான் பிள்ளையின் மகனான நயினாராச்சாரின் சீடரான வாதிகேசரி அழகிய மணவாளஜீயர், சப்தார்த்தம் விளங்கும்படி பன்னீராயிரப் படியாக ஒரு உரை ஆக்கினார். இவர்களுக்கெல்லாம் பின்னால் வந்த பெரிய பரகால சுவாமி முதலியோரும் திருவாய்மொழிக்கு வியாக்யானம் செய்தார். இன்று வரை பல வைணவ அறிஞரும் உரை எழுதி வந்திருக்கிறார். ஆனால் மணவாள மாமுனிகள் காலத்திற்கு முன்பு மணிப்ரவாளத்தில் பெரியோர் செய்த உரைகளையே மேலே குறிப்பிட்டிருக்கிறோம்.

கொண்டே போகிருர். சமய ரீதியாக, திருவாய்மொழி களின் உரைகளுக்கும் புனிதத்துவம் இருந்ததாகவே வைணவப் பெரியார் கருதினர்.

மணவாள மாமுனிகள், தமது உபதேச ரத்னமாலையில் "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப் பிள்ளை, மணவாள யோகி திருவாய்மொழியைக் காத்த, குணவாளரென்று நெஞ்சே கூறு" என்று பாடியிருக்கிருர். இதில் நம் பிள்ளையின் பெயர் இல்லாதது குறிப்பிடத்தக்கது. இதற்குக் காரணம் என்னவென்று புலப்படவில்லை. குரு பரம்பரை வரலாறுகளைக் கவனித்தால், திருவாய் மொழிக்கு உரை செய்த பணியில் ஈடுபட்டவரில் நம்பிள்ளைக்கு அதிக ஏற்றம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நஞ்சீயரின் உரை என்றிருப்பதை எழுதியது நம்பிள்ளை; இவருடைய வ்யாக்யானங்களைக் கேட்டே இவருடைய சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளையும், பெரியவாச் சான் பிள்ளையும் தங்களுடைய உரைகளை எழுதினர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கூரத்தாழ்வானின் பேரனை நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டர், முதலில் நம்பிள்ளைமீது பொருமை கொண்டு, பின்னர் அவருக் குச் சீடராய், அவர் திருவாய்மொழிக்குச் சொன்ன வ்யாக்யானத்தை ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் கிரந்தங்களில் எழுதி அவரிடம் காட்ட நம்பிள்ளை தமது அநுமதியின்றி எழுதப்பெற்ற அவ் வியாக்யான ஏட்டைக் கரையானுக்குக் கொடுத்தழித்தார் என்று குரு பரம்பரை கதை ஒன்று கூறுகிறது. வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுதின ஈடு முப்பத்தாருயிரத்தையும், அவர் நம்பிள்ளையின் அநுமதியின்றி ஆக்கிஞரென்றும்' அதனல் அவர் அந்த ஏட்டைத் தாம் வாங்கி வைத்துக் கொண்டார் என்றும், பின்னல் அர்ச்சாமுகமாக பெருமாள் கொடுத்த ஆணையின்படி நம்பிள்ளை அந்த வ்யாக்

யான ஏட்டை ஈயுண்ணி மாதவர் என்ற சிறியாழ்வானப்பிள்ளையிடம் கொடுத்து வாழ்வித்தருளினாரென்றும் குரு பரம்பரையில் காணப் பெறுகிறது. ஆகையால், திருவாய்மொழிக்கு உரைகள் செய்து அதைக் காத்தவரில், சிறந்த உரைகள் செய்த நம்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் முக்கியமானவர் என்று இக்காலத்தில் நாம் கொள்ளலாம்.

வைணவ சித்தாந்தத்தைப்பற்றி, மணிப்ரவாளத்தில் எழுதியவர்களில் தலைசிறந்தவர் பிள்ளை லோகாச்சாரியார். அவருடைய சகோதரரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் எழுதியிருக்கும் 'ஆசாரிய ஹிருதயம்' என்ற நூலும் மிகச் சிறந்தது; அது பெரிதும் போற்றப் பெற்று வந்திருக்கிறது. இதற்கும், பிள்ளை லோகாச்சாரியாருடைய வசன பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி ஆகிய மூன்று நூல்களுக்கும் மணவாள மாமுனிகள் உரைகள் எழுதியிருக்கிறார். அத்துடன் வைணவ தத்துவ, சம்பிரதாய விஷயங்களைப்பற்றி அரிய நூல்களையும் சில பாடல்களையும் இயற்றிப் பெரும் புகழ் பெற்றார். மணவாள மாமுனிகள், தமது ஆனந்த வாழ்வைப்பற்றிக்கூறிக்கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.[1]

---

1. மணவாள மாமுனிகள் தமது ஆர்த்திப் பிரபந்தத்தில் எழுதியிருக்கும் பாட்டு இது :—

"தென்னரங்கர் சேருளுக்கிலக் காகப்பெற்றோம்,
தேவனுறை திருப்பதியை யிருப்பாகப் பெற்றோம்,
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்,
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்,
முன்னவராம் நம்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்,
முழுதுநமக் கவைபொழுது போக்காகப் பெற்றோம்,
பின்னையொன்று தனிநெஞ்சு பேராமற் பெற்றோம்,
பிறர்மினுக்கம் பொருமையிலாப் பெருமையும் பெற்றோமே"

உபதேச ரத்னமாலையின் இறுதியில் எறும்பியப்பா என்பவர் தமது குருவாகிய முனிகளை இவ்வாறு போற்றுகிறார்.

மன்னுயிர்கா ளிங்கே மணவாளமா முனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.''

இந்த இடத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். சைவ சித்தாந்தத்தை விளக்குவதற்கு பதினுன்கு சித்தாந்த சாத்திரங்கள், தமிழ்ப் பாவில் எழுதப் பெற்றனபோல், விசிஷ்டாத்வைத தத்துவத்திற்கு மூல நூல்களாகத் தமிழ்ப் பாடல்கள் எழுதப் பெற்றதாகத் தெரியவில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் உள. இராமாநுசர் தமது சிறந்த வடமொழி நூல்களிலும் பாஷ்யங்களிலும் விசிஷ்டாத்வைதத்தை உருவாக்கினுர். ஆதலால் அவருக்குப் பின்னுல் வந்த வைணவப் புலவரும் சமயிகளும், இராமாநுசரைப் பின் பற்றி, மணிப்ரவாளத்தில் எழுதிய உரைகளிலும் நூல்களிலுமே இந்த தத்துவத்தை விளக்கி வந்தார். இதனுல் தமிழிலுள்ள சித்தாந்த சாத்திர நூல்களைப்போல விசிஷ்டாத்வைத சாத்திரங்கள் தமிழ் செய்யுள் நடையில் சூத்திரங்களாகவோ பாடல்களாகவோ ஆக்கப் பெறவில்லை. பிற்கால வைணவப் புலவரிலும் சமயிகளிலும் மிகச் சிறந்த கவியாயிருந்த வேதாந்த தேசிகரும் வடமொழியிலேயே பெரும்பாலும் தமது தத்துவ நூல்களையும் இலக்கிய நூல்களையும் ஆக்கினுர். இப் புலவர் பெருமான் தமிழிலும் நூல்களையும் பாடல்களையும் இயற்றியிருக்கிறுர். இவருக்குப் பின்னுல் தோன்றியவரும், தென்கலை வைணவ சம்பிரதாயத்திற்குத் தலைவருமாயிருந்த மணவாள மாமுனிகளும் தமிழ்ப் பாடல்கள் பாடியிருக்கிறுர். ஆனுல் இவை எல்லாம் அமைப்பிலும், பொருளிலும், சைவ சித்தாந்தத்தைப் பொருளாகக் கொண்டு இயற்றப் பெற்ற சித்தாந்த சாத்திரங்களைப்போல் விசிஷ்டாத்வைத தத்துவத்தையே பொருளாகக் கொண்டு செய்யப்பெற்ற தனிப் பாடல்கள் அல்ல என்று தெரிகிறது. இவ்விரு புலவரும் தங்களுடைய தத்துவ நூல்களிலும் உரைகளிலும்தான் விசிஷ்டாத்வைதத் தத்துவத்தின் நுட்பங்களை, சந்தர்ப்

பம் நேர்ந்தபோதெல்லாம் குறிப்பிட்டு விளக்கியிருக்கிறுர். இரண்டாவது காரணம் என்னவென்றுல் மணிப்ரவாளம் தோன்றிய பிறகு வைணவ சமயப் புலவர் அதைக் கையாண்டு நூல்களை ஆக்குவதிலேயே ஈடுபட்டிருந்ததுதான். தமிழ் நூல்களைச் செய்யும் விஷயத்திலும் தமிழ்ப் பாடல்களைப் பாடுவதிலும் அவருடைய ஊக்கம் குறைந்தது என்று கூறலாம். தமிழில் பாடுவதில் பெருமை கொண்டதுமன்றி, தமிழ்ப் பாடல்கள் பாடியே பகவானைத் துதித்து அவரிடத்தில் ஈடுபடுவோம் என்று ஆழ்வார்கள் எக்களித்துப் பறைசாற்றின மனப்பான்மை மறைந்து வந்தது. இந்த உணர்ச்சிக்கு, மணிப்ரவாளத்தின்மீது வைணவப் புலவருக்கு ஏற்பட்ட விருப்பும், விரிந்துகொண்டே வந்த சமயப் பிளவுகளும் குந்தகம் செய்தன.

மணிப்ரவாள நடையைப் பொறுத்த வரையில் அதைச் சைவ சமயத்தாரும் புலவரும் சிறப்பாகக் கையாளவில்லை. சிவஞானசித்தியாருக்கு உரை செய்த சிவாக்ர யோகிகளும் ஞானப்ரகாசரும் தங்கள் நூல்களில் மணிப்ரவாளத்தைக் கொஞ்சம் கையாண்டிருக்கிறுர் என்று தெரிகிறது. சைவ ஆகமங்களும், சைவ சமய தத்துவங்களுக்குள்ள சில மூல நூல்களும் வடமொழியிலிருந்தும், அச்சமயப் புலவர், வைணவப் புலவர்போல், மணிப்ரவாளத்தைக் கையாள வேண்டுமென்று கருதினுர் இல்லை. அவரில் பெரும்பாலோர் நேரே வடமொழியைப் பயின்றுர். தமிழிலேயே தங்கள் நூல்களை ஆக்கினுர். தவிரவும் வைணவ சமய உரைகளுக்கும் சைவ சமய உரைகளுக்கும் இடையே ஒரு முக்கியமான வித்தியாசம் காணப் பெறுகிறது. வைணவ உரையாசிரியரில் சிறந்தோர் நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்களாகிய அருள்வாக்கிற்கே உரை செய்தார். ஆனுல் சைவ சமயத்தைச் சேர்ந்த புலவர் அக்காலத்தில் நாயன்

மார்களின் தேவாரங்களுக்காவது ஏனைய திருமுறை களுக்காவது உரை செய்யவில்லை. பேராசிரியர் திருக் கோவையாருக்கு உரை செய்தது இலக்கியப் பணி யாகவே கருதப்பெற்றது. தேவாரம் முதலிய சைவத் திருமுறைகளுக்கு முன்னோர் உரைகள் செய்யாததற்குக் காரணம் புலப்படவில்லை. ஒருகால் பெரியோரின் அருள் வாக்குக்குச் சாதாரண புலவர் உரை செய்வது முறை யல்ல என்று கருதினர் போலும். வைணவ சமயப் புலவர் மணிப்ரவாளத்தைக் கையாண்டு திவ்யப்பிரபந்தத் திற்குப் பேருரைகள் செய்த காலத்தில் சைவப் புலவரின் இலக்கிய வேலை வேறு துறையில் நடைபெற்றது. சந்தானசாரியர் நால்வரும் சித்தாந்த சாத்திரங்களை எழுதி சைவ சித்தாந்த தத்துவத்தை உருவாக்கினர். பின்னல் சைவ சமயப் புலவர் உரைகள் எழுதும் முயற்சியைத் தொடங்கும்போது, சித்தாந்த சாத்திரங் களையே எடுத்துக்கொண்டு அவைகளுக்குப் பேருரைகள் செய்தார்.

இவ்வாறு எழுதப்பெற்ற உரைகளில், மெய்கண்ட தேவரின் சிவஞான போதத்திற்குச் சிவஞான முனிவர் எழுதிய மாபாடியம்தான் மிகச் சிறந்தது. இது கி. பி. பதினெட்டாம் நூற்ருண்டில் இயற்றப் பெற்றது. மெய் கண்ட தேவருக்கு வித்யா குருவாகவும் பின்னல் சீடராக வும் இருந்த அருள்நந்தி சிவாச்சாரியார் சிவஞான போதத்திற்கு வழி நூலாக சிவஞான சித்தியார் என்ற நூலை ஆக்கினர். இது ஒரு அற்புதமான தத்துவ நூல்; இதில் அதன் ஆசிரியர் சைவ சித்தாந்த தத்துவத்தைச் சார்ந்த நுண்ணிய கருத்துக்களை விளக்கி, பிற தத்துவங் களையும் கூறி அவைகளை விமரிசனம் செய்து அவைகளை விட சைவ சித்தாந்தமே மேலான தத்துவம் என்று திட்பமான பாடல்களில் வாதித்திருக்கிருர். உமாபதி சிவாசாரியாரும், தமது எட்டு சித்தாந்த சாத்திர நூல்

களின் மூலம் சைவ சித்தாந்தத்தை வலியுறச் செய்தார்.

வேதாந்த தத்துவங்களுக்கு வடமொழியில் சங்கரர் இராமாநுசர், மத்வர், பிரம்ம சூத்திரங்கள், உபநிடதங் கள் பகவத்கீதை ஆகியவைகளுக்கு விளக்கம் கொடுக் கும் முறையில் பேருரைகள் செய்தவை போல் சைவ சித்தாந்தத்திற்கு ஒரு பேருரை வெகு காலமாக எழுதப் பெறவில்லை. இந்தத் தேவையை சிவஞான முனிவர் தமது மாபாடியம் மூலம் பூர்த்தி செய்தார். அவருடைய கல்வியின் ஆழமும் தத்துவ வாதத்தின் திறனும் இந்த உரையில் பெரிதும் காணப்பெறுகின்றன. இது தோன்றின நாள் முதல் சைவ சமயிகள் அதை, அதன் பெருமைக்குரிய முறையில் போற்றி வந்திருக்கிறுர்கள். சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு வேறு பல உரை களும் தமிழில் இருக்கின்றன. அவைகளில் மதுரை சிவப்பிரகாசர் உமாபதி சிவாசாரியாரின் சிவப்பிரகாசத் திற்கு எழுதி யிருக்கும் உரை குறிப்பிடத்தக்கது. இது கி. பி. பதினைந்தாம் நூற்றுண்டில் எழுதப்பெற்றது; இப்போதுள்ள சைவ சித்தாந்த சாத்திர உரைகளில் காலத்தால் முந்தியது. இதில் உரை நயம் சிறந்து விளங்குவது மன்றி சைவ சித்தாந்த தத்துவம் தெளி வாக விளக்கப் பெற்றிருக்கிறது.

ஆகவே, பண்டைக் காலத்தில் சமணர், தங்கள் சமய தேவைகளுக்காக கிரந்தலிபியையும் மணிப்ரவாள நடையையும் சிருஷ்டித்ததும், இடைக் காலத்தில் வைணவ சமயத்தினர் இந்த மணிப்ரவாள நடைக்குப் பேராக்கம் கொடுத்து அதில் பல நூல்கள் ஆக்கியதும், சமய தத்துவ அறிவு பரவுவதற்காக உரை நூல்கள் பிறந்ததும், தமிழின் வரலாற்றில் எவ்வளவு முக்யத்வம் வாய்ந்தவை என்பது மேலே கூறியதிலிருந்து விளங்கும்.

## IV. இலக்கிய உரைகளும் நிகண்டுகளும்: இறையனார் அகப்பொருள் உரை

தமிழ்ப் புலவர் இடைக்காலத்தில் செய்த இலக்கிய ஆராய்ச்சியின் மற்றொரு விளைவாகவே பண்டைத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களுக்கு உரைகள் தோன்றின. தமிழ் இலக்கியத்தின் வரலாற்றில் இவ்வுரைகளுக்கு மிக உன்னதமான ஸ்தானம் உண்டு. தமிழ் மொழிப் பயிற்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் இவை பேருதவி செய்திருக்கின்றன. இடைக்காலத்தில் இவ்வித உரை நூல்கள் எழுதப் பெற்றது தமிழரின் பாக்கியம். அவை இயற்றப் பெறவிட்டால் தமிழ் இலக்கியத்தின் பழமையான பகுதி அழிந்து போயிருக்கும் என்று கூடக் கருதலாம். அவ்வாறு அழிந்து போகாமல் நமக்குக் கிடைத்திருப்பினும், அதன் பொருளைத் தெரிந்துகொள்வது மிகவும் கஷ்டமாய் இருக்கும். உரைகளை எழுதிய ஆசிரியர் ஆழ்ந்த கல்வியும் அறிவாற்றலும் பெற்றிருந்த தமிழ்ப் புலவர். அவர் தமிழுக்குச் செய்திருக்கும் சேவை நிலைத்த பெருமையுடையது. உரைகள் எழுந்த சூழ்நிலையையும், தமிழ் ஆராய்ச்சிக்கு அவை இன்றியமையாதனவா யிருப்பதையும், அவைகளின் பொதுவான முக்யத்வத்தையும்தான் இங்கு நாம் கவனிக்கவேண்டும்.

அதற்கு முன்பு, பண்டைக் காலத்தில் தமிழ் இலக்கியத்தில் நிலவிய உரைநடையையும் அந்த நடையில் ஆக்கப்பெற்ற உரை நூல்களின் நிலைமையையும் சற்று ஆராயவேண்டும். இலக்கணத்தை நோக்கினால், உரை நடைக்கு ஓரளவு முக்கியத்வம் இருந்திருக்கிறது. உரை

நடைக்கும் அதில் ஆக்கக்கூடிய நூல்களுக்கும் இலக்கணமும் விளக்கமும் தொல்காப்பியத்தில் பல சூத்திரங்களில் கூறப்பெற்றிருக்கின்றன.[1] இலக்கணம் நுட்பமாயும் விரிவாயும் இருந்த போதிலும், அதற்கு அடிப்படையாயும் உதாரணமாயும் உள்ள பழைய உரை நூல்கள் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. உரைநடையைக் கையாண்டு வெகுவாக பண்டைத் தமிழ்ப் புலவர் நூல்கள் இயற்றவில்லை என்று கொள்ளலாம். சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலும், அதற்குச் சற்றுப் பின்னர் தோன்றிய பாரத வெண்பாவிலும் உரை சிறிது வழங்கி வருகிறது. இந்தக் காரணத்தால் சிலப்பதிகாரம் "உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" என்று அதன் பதிகத்தில் கூறப்பட்டிருக்கிறது.[2] ஆகையால் பண்டைக்காலத்தில்

---

1. பாட்டிடை வைத்த குறிப்பினானும்
பாவின்றெழுந்த கிளவியானும்
பொருளொடு புணராப் பொய்மொழியானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப.

தொல். பொருள் 485 செய்யுளியல்

தொன்மைதானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே.

Do. 549.

சூத்திரத்துப் பொருளன்றியும் யாப்புற
வின்றியமையாதி யையபவை யெல்லா
மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே.

தொல். பொருள் 658 மரபியல்

இதுபோல் இன்னும் பல வருவன. மரபியலில் உரை வகை நூல்களுக்கும் இலக்கணம் சில சூத்திரங்களில் காணப் பெறுகிறது.

2. தகடூர் யாத்திரை என்ற நூலேயும், உரையும் பாட்டும் விரவிவந்த நூல்களுக்கு உதாரணமாக தொல்காப்பிய உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள்.

தமிழில் உரைநடை வளம் பெற்று விளங்கவில்லை என்பது வெளிப்படை.

தமிழ் இலக்கியத்தில் உரைநடையும் உரை நூல்களும் இடைக்காலத்தில்தான் தோன்றத் தொடங்கின. அக்காலத்தில் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்ட புலவர் சிறந்து விளங்கிய பண்டைக் கால நூல்களுக்கு உரைகள் எழுதுவதின் மூலமே தங்களது ஆராய்ச்சிக்கு உருவம் கொடுத்தார். இன்று நூலாராய்ச்சி செய்வது என்பதில் என்னவெல்லாம் அடங்குமோ அவைகளில் பெரும்பாலான இயல்புகளை இவ்வுரைகளில் பார்க்கிறோம். உரை எழுதுவதை அரிய இலக்கிய ஆக்க முயற்சியாகவே கருதித் தமிழ்ப் புலவர் அதைக் கையாண்டார். உரை செய்தலுக்குத் தெளிவான இலக்கணமும் முன்னோர் வகுத்திருக்கிறார். உரை யாக்கத்திற்கு, கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத்திரட்டல், அகலங்கூறல் என்ற நான்கு இயல்புகள் இருக்க வேண்டும் என்பது இலக்கணம்.[1] இலக்கிய விமரிசனம் அல்லது நூல் நயங்கோடல் என்பது அகலங்கூறல் என்பதில் அடங்கும் என்று கொள்ளலாம். இந்தக் கொள்கைகளைக் கையாண்டே தமிழ்ப் புலவர் பலர் இடைக்காலத்தில் சிறந்த உரைகளை இயற்றித் தமிழ்ப் பணி ஆற்றினர். தமிழில் உள்ள புகழ் பெற்ற உரை நூல்கள் எல்லாம் கி. பி. பதினோராம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னருமே எழுதப்பெற்றிருக்கின்றன. இவ்வுரை நூல்களில்தான் தமிழ் உரைநடை வெகுவாக உருவாக்கப் பெற்றிருக்கிறது; உரைகளே உரைநடை

---

1. *கருத்துரை கண்ணழிபு பொழிப்புத்திரட்ட*
*லகலக்கூற லெனநால் வகைத்தே*
*புகலுஞ் சூத்திரப் பொருளுரையென.*

*இது ஒரு பழைய சூத்திரம். உரையாசிரியர் பலர் இதை மேற்கோளாக எடுத்துக்காட்டி அதன் கருத்தை விளக்கி யிருக்கிறார்.*

யின் வளர்ப்புப் பண்ணைகளாய் இருந்தன. மணிப்ரவாள நடையிலுள்ள நூல்களை ஒதுக்கிவிட்டால் உரைகளாய் இல்லாத, தமிழ் உரைநடை நூல் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில்தான் முதல் முதலாகத் தோன்றிற்று ; அதுவும் தமிழனால் எழுதப்பெறவில்லை.[1]

இறையனார் அகப்பொருளுக்கு இப்போதிருக்கும் உரையே முதலில் நமது ஆராய்ச்சிக்குரியது. ஏனென்றால் இந்த உரைக்கு. சரித்திர ரீதியாக, அதன் உண்மையான தகுதிக்கு அதிகமான முக்யத்வம் ஏற்பட்டிருக்கிறது. களவியல் என்ற பெயரில் தமிழ்ப் புலவரால் பயிலப்பெற்று வந்த இறையனார் அகப்பொருள் என்ற நூலின் உரையில், அந்த நூலும் அதன் உரையும் எழுதப்பெற்ற சூழ்நிலையைப் பற்றியும் பண்டைக் காலத்திலிருந்ததாகச் சொல்லப்பெறும் தமிழ்ச் சங்கங்களைப் பற்றியும் சில விபரங்கள் காணப்பெறுகின்றன. இவை எல்லாம் சரித்திர உண்மைகள் என்று கொண்டு இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் அறிஞர் பலர் ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். ஆகையால் களவியலும், அதன் உரையும், விசேஷமாக உரையின் பாயிரப் பகுதியும் மீண்டும் ஆராயத்தக்கன. முதலில் இவைகளை, யார், எக்காலத்தில் எழுதினார் என்பதைத் தெரிந்து கொள்ள முயலவேண்டும்.

இறையனார் அகப்பொருளில் அதன் ஆசிரியர் தமிழ் அகப்பொருள் இலக்கணத்தை அறுபது சூத்திரங்களில் சுருக்கமாக அமைத்திருக்கிறார். ஆசிரியரின்

---

1. வீரமாமுனிவர் என்ற பெயர் கொண்ட இத்தாலியப் பாதிரி (Constantius Beschi) கி. பி. 1727-ல் எழுதிய வேதியர் ஒழுக்கமும் அதற்குப் பின் அவர் இயற்றிய அவிவேக பூரண குரு கதை என்ற நகைச் சுவை மிகுந்த ஒரு நூலும்தான் தமிழில் முதலாவது தோன்றிய தனி உரைநடை நூல்கள் என்று தெரிகிறது. அதற்கு முன்னிலிருந்த உரைநடை நூல்கள் எல்லாம் இலக்கண இலக்கியம் அல்லது சமய நூல்களின் உரைகள்.

பெயர் இறையனார் என்று கூறப்பெற்றிருக்கிறது. நூலின் உரைகாரரின் கொள்கைப்படி, சிவபெருமானே இந்த நூலை ஆக்கி, கடைத் தமிழ்ச் சங்கத்திற்குத் தலைவராயிருந்த நக்கீரர் மூலம் பாண்டியன் உக்கிரப் பெருவழுதிக்கு அளித்தார். கடவுள் நம்பிக்கையில் மிகுந்த ஆஸ்திகர் கூட இக்காலத்தில் இக்கூற்றை ஏற்க மறுப்பர். ஆகையால் இந்த நூலை இறையனார் என்ற பெயருடைய ஒரு புலவர் இயற்றினார் என்று கொள்ளவேண்டும்.[1] இது தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றியது. பெரும்பாலும் அதையே தழுவி எழுதப் பெற்றிருந்த போதிலும், சில விஷயங்களில் வேறு பாடுகளும் காணப்பெறுகின்றன. உதாரணமாக ஒரு விஷயத்தைக் குறிப்பிடலாம். தலைவனுக்கும் தலைவிக்கும் களவு ஏற்பட்டு அது கற்பில் முடிவதற்கு இவ்வளவு காலம் செல்லவேண்டும் என்று தொல்காப்பியத்தில் வரையறுக்கப் படவில்லை. ஆனால் இறையனார் அகப் பொருளில் இந்தக் காலம் அறுதியிட்டுக் கூறப்பெற் றிருக்கிறது. இக்காலம் இரண்டு மாதங்களுக்கு அதிக மாக இருக்கக்கூடாது என்பது களவியல் ஆசிரியரின் இலக்கணம்.[2] இறையனார் அகப்பொருள் தோன்றிய காலத்தில் நிலவிய ஒழுக்க வளர்ச்சியின் காரணமாகவே அதன் ஆசிரியர் இவ்வாறு வரையறுத்திருக்கிறார் என்று கருதலாம். களவியல் கடவுளால் செய்யப்பெற்றதாகவும்

---

1. கடவுள் மனித உருவத்திலும் வேறு உருவங்களிலும் அவதாரம் செய்வதுண்டு என்பதையும், மனிதன் தெய்வத் தன்மையை அடைய முடியும் என்பதையும் தமிழ் நாட்டு மக்கள் வெகு காலமாக நம்பி வந்திருப்பதால், இறையனார் என்ற புலவரைக் கடவுள் என்று முன்னோர் கொண்டதில் வியப்பு ஒன்றும் இருக்கமுடியாது.

2. களவினுட்டவிர்ச்சி வரைவினீட்டம்
திங்களிரண்டினக மெனமொழிக.

*இறையனார் அகப்பொருள்—32*

அதற்கு உரை நக்கீரரால் சொல்லப் பெற்றதாகவும் முற்காலத்தில் தமிழ்ப் புலவர் நம்பினர். அதனல் அவர், அந்த நூலின் தகுதிக்கு அதிகமாகவே அதைப் போற்றி வந்திருக்கிருர். நூலின் சூத்திரங்கள் திட்ப மாகவும் தெளிவாகவும் பொருட் செறிவுடனும் இருக் கின்றன என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது. இருந்த போதிலும், தொல்காப்பியத்தின் அகத்திணையியல், களவியல், கற்பியல் முழுவதிலும், பொருளியல், மெய்ப் பாட்டியல் ஆகியவைகளின் சில பகுதிகளிலும், அகப் பொருள் இலக்கணம் விரிந்தும், மிகவும் நுட்பமாயும் இருப்பதைக் கவனித்தால், களவியலால், அது அதிக வளம் பெற்றது என்று கூறமுடியாது. உண்மையில், இந்தச் சிறு நூலைவிட அதன் உரைக்கே புகழ் அதிகம் ஏற்பட்டது. இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. அதன் பாயிரவுரையில் மூன்று தமிழ்ச் சங்கங்களைப் பற்றிய விபரங்கள் கூறப்பெற்றிருப்பது ஒன்று. உரை கம்பீரமான நடையுடனும் பல இலக்கிய நயங்களுடனும் இருப்பது இரண்டாவது காரணம். இவ்விரண்டு அம்சங்களும் உரையாசிரியரின் உயர்ந்த கற்பனை சக்தியைக் காட்டுகின்றன.

இவ்வுரையை யார் எக்காலத்தில் எழுதினர் என் பதை ஆராயவேண்டும். இந்த உரையின் ஆசிரியர் கடைச்சங்க காலத்துப் புலவரான நக்கீரர் என்பது பழைய மரபு. சங்ககால நக்கீரர் இந்த உரையை எழுதி யிருக்கமுடியாது என்று இன்று எல்லோரும் ஒப்புக்

---

இதற்குப் பொருள் கூறும்போது அதன் உரையாசிரியர் எழுதுவ தாவது,

" இவ்வாற்ருனும் இந்து உலகத்து
இயல்புஅன்று என்பது பெற்ரும்
உலகத் தொழுக்கத்திற்குக் கால
வரையறை இல்லை யென்பது "

இறையனர் அகப்பொருள். தாமோதரம் பிள்ளை பதிப்பு. பக்கம்—135

கொள்கிருர்கள். இருந்த போதிலும் வாய்மொழியைக் கூறியது நக்கீரர்தான் என்றும், அது செவி வழியாக எட்டுத் தலைமுறைகளாகக் கேட்கப்பட்டு வந்தது என்றும், இறுதியாகக் கேட்ட முசிறியாசிரியர் நீலகண்டனுர் அதை எழுதி வைத்தார் என்றும் சிலர் கருதுகிருர். இவ்வாறு கருதுபவரும், முதல் சூத்திர உரையில் பாயிரமாகக் கூறப்பெற்றிருக்கும் விஷயங்கள் எல்லாம் நீலகண்டனுரின் சொந்தக் கட்டுரை என்று கொண்டிருக்கிருர்.[1] கர்ணபரம்பரையாக வந்த உரை, வந்தவாறே எழுதி வைக்கப்பெற்றது என்ற கூற்று பொருத்தமில்லை. யாப்பில் சமைத்த பாட்டு, மந்திரம், சூத்திரம் அல்லது பாட்டில் அமைந்த தொடர்நிலையாக வுள்ள புராணம் இதிகாசம் முதலியன வாய்மொழியாகக் கற்பிக்கப்பெற்றுக் கேட்போரை மனனம் பண்ணச்

---

1. "இதுகாறும் கூறிப் போந்தவாற்ருல் இறையனுரகப் பொருட் சூத்திர வுரை கண்டார் மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரர் என்பதூஉம் வரலாற்று முறையின் வந்த அவ்வுரைப் பொருளை உரைநடையிற் பாயிரத்தோடு எழுதி வைத்தார் முசிறி யாசிரியர் நீலகண்டனுர் என்பதூஉம், அங்ஙனம் பலகாலம் சென்ற பின்னர், ஒருவரால் எழுதி வைக்கப்பெற்றதாயினும், அதனை நக்கீரனுர் செய்ததாகவே ஆசிரியர் பலரும் கொண்டு போற்றி வந்தார் என்பதூஉம்...அதனுல் இறையனுர் அகப்பொருள் உரை 'கேட்டவை போற்றி விளக்கல்' என்னுமோர்வகை வரலாற்றுரையே யாமென்பதூஉம் பெறப்பட்டன." மு. இராகவய்யங்கார் ஞானசாகரம் பத்திரிகையில் எழுதிய கட்டுரை. இதே புலவர் பின்னர் களவியல் உரையாசிரியர் இளம்பூரண அடிகளாக இருக்கலாம் என்று ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினுர். அதில் அவர் கூறி யிருப்பதாவது:—"இப்போதுள்ள களவியலுரை நக்கீரனுர் செய்த உரையின் வேருதல் வேண்டுமென்பதற்குக் கூறப்படும் காரணங்கள், பிறரால் நியாய முறையினின்று மறுக்கப் படக் கூடியவையென்று தோன்றவில்லை"

இளம்பூரணர். ஆராய்ச்சித் தொகுதி. பக்கம்—401

இந்த உரை நக்கீரராலேயே எழுதப்பெற்றது என்று கொண்ட சுவாமி வேதாசலமும் முதல் சூத்திர உரையில் காணப்பெறும் பாயிர உரை இடைச் செருகல் என்று கொண்டார்.

சொல்லி, தலைமுறை தலைமுறையாகப் பயிலப் பெற்று வருவதற்கு ஏது உண்டு. அவ்வாறு வடமொழியிலுள்ள வேதங்கள் முதலியன பயிலப்பெற்று வந்ததாகச் சரித்திரம் கூறுகிறது; மொழிகளுக்கு லிபிகள் தோன்றுவதற்கு முன்னால் இவ்விதமாய்த்தான் இலக்கியம் பயிலப் பெற்றும் காப்பாற்றப் பெற்றும் வந்தது. ஒரு புலவரின் பொதுவான கருத்துக்களோ, தத்துவங்களோ குரு சிஷ்ய பரம்பரையாகப் பயிலப் பெற்று வரலாம். ஆனால் உரையில் அமையக்கூடிய வாக்கியத் தொகுதி, உதாரணம், மேற்கோள், நடை முதலியன சேர்ந்த ஒரு உரை நூல் முழுவதும், கர்ணபரம்பரையாகக் கற்பிக்கப் பெற்றுப் பின்னர் ஒரு காலத்தில் அவ்வாறே எழுதி வைக்கப்பெறுவது என்பது சாதாரண உலக இயலுக்கு ஒவ்வாதது. தவிரவும், களவியல் உரையைத் தாம் கேட்டவாறே முசிறியாசிரியர் நீலகண்டனார் எழுதி வைத்தார் என்பதற்கும் உரையில் ஆதாரம் இல்லை. அவர் பெயருக்குப் பின் உரையைக் கேட்டதாக வேறு பெயர்கள் குறிப்பிடப்படாததால் அவரே உரையை எழுதி யிருக்கவேண்டும் என்று அநுமானம் செய்ய

---

1. இனி உரை நடந்தவாறு சொல்லுதும், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம் மகனார் கீரங்கொற்றனார்க் குரைத்தார்; அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க்குரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ் சுவனார்க் குரைத்தார்; அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ் சேந்தனார்க் குரைத்தார்; அவர் செல்லூர் ஆசிரியர் ஆண்டைப் பெருங்குமரனார்க் குரைத்தார்; அவர் திருக்குன்றத்தாசிரியருக் குரைத்தார்; அவர் மாதவனார் இளநாகனார்க் குரைத்தார்; அவர் முசிறியாசிரியர் நீலகண்டனார்க் குரைத்தார். இங்ஙனம் வருகின்றது உரை ”

*இறையனார் அகப்பொருள். சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு பக்கம்—8.*

இதிலிருந்து முசிறியாசிரியர் நீலகண்டனார் உரையை ஏட்டில் தாம் கேட்டவாறே எழுதி வைத்தார் என்று எங்ஙனம் கொள்ள முடியும்?

முடியாது. அவர் தம்மையே "முசிறியாசிரியர் நீல கண்டனர்" என்று குறிப்பிட்டுக்கொண்டு தொடர்ந்து உரையை எழுதினர் என்று கொள்ளவும் இயலாது. சூத்திர உரையை எழுதியவரே பாயிர உரையையும் எழுதி யிருக்கிருர் என்பது "பாயிரத்தினும் உரைத்தாம்" என்று ஒரு தடவைக்கு மேல் நூலுக்குள் கூறப்பெற்றதி லிருந்து தெளிவாகிறது. ஆகவே இறையனர் அகப் பொருள் உரை எழுதியவரும், அதன் முதல் சூத்திரத் தில் பாயிர உரை எழுதியவரும் வெவ்வேருன புலவர் என்று துணிய முடியாது.

களவியல் உரையிலுள்ள அகச் சான்றுகளை ஆராய்ந்தால் அந்த உரை, நூலுக்கு வெகு காலத் திற்குப் பின் தோன்றியது என்பது புலப்படும். உரை யில் அகப்பொருள் துறைகளுக்கு மேற்கோள்களாகக் காட்டப்பெற்றிருக்கும் சுமார் 330 பாடல்கள் பாண்டிக் கோவை என்ற ஒரு பிரபந்தத்தைச் சேர்ந்தவை என்பது தமிழ் அறிஞருக்கு ஒத்த முடிபு. இக்கோவை கி. பி. 710 முதல் 765 வரை மதுரையில் ஆட்சி செய்ததாகக் கருதப்பெறும் அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்ற பாண்டிய அரசனின் கீர்த்தியைப் புகழ்ந்திருக்கிறது; அவன் ஆட்சி காலப் போர்ச் செய்திகளையும் கூறி யிருக்கிறது. ஆகையால் பாண்டிக்கோவை கி. பி. எட்டாவது நூற்ருண்டுக்குப் பின்னல் இயற்றப்பெற் றிருக்கவேண்டும்; ஆனல் எவ்வளவு காலத்திற்குப் பின்னல் எழுதப்பெற்றது என்பதைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. களவியல் உரை பாண்டிக்கோவைக்குப் பின்னர் தாம் என்று ஏற்படுகிறது.

இறையனர் அகப்பொருள் உரையின் சொல் லடைவைக் கவனித்தால் அது பிற்காலத்தில் எழுதப் பெற்றிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. தலைவ னும் தலைவியும், ஒருவரை யொருவர் விளித்துப் பேசுவ

தாகக் கூறும் சந்தர்ப்பங்களிலும், வேறு இடங்களிலும், இந்த உரையாசிரியர் "எம்பெருமான்" "எம்பெருமாட்டி" என்ற சொற்களை அடிக்கடி கையாள்கிருர். தமிழ் நாட்டில் நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகியோர் பாடிய பக்திச் சுவை இலக்கியம் தோன்றிய பிறகுதான் இச்சொற்கள் இலக்கியத்தில் அதிகமாக வழங்கி வருகின்றன. ஆகையால் இறையனுர் அகப்பொருளின் உரை, பக்தி இயக்கம் வலுப்பெற்றுப் பரவிய காலத்திலோ, அதற்குப் பின்னரோ எழுதப்பெற்றிருக்க வேண்டும். இதை வலியுறுத்தும் முறையில் வேருெரு சான்றையும் எடுத்துக்காட்டலாம். களவியல் முதல் சூத்திர உரையில் காணப்பெறும் "நன் ஞானங்கற்று வீடுபெறுவலென்றும்" என்பதில் நம்மாழ்வார் பாசுரம் ஒன்றின் சாயல் நன்ருய்த் தெரிகிறது.[1] இதிலிருந்து களவியல் உரை, நம்மாழ்வார் காலத்திற்குப் பின் தோன்றி யிருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது. நம்மாழ்வாரின் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பாதியோ அல்லது பத்தாம் நூற்ருண்டின் தொடக்கமோ என்று முன்னர்க் கூறியிருக்கிருேம்.

இறையனுர் அகப்பொருள் உரையை இளம்பூரணர் எழுதியிருக்கலாம் என்று திரு. மு. இராகவய்யங்கார் கருதியிருக்கிருர் என்று முன்னர் ஒரு அடிக்குறிப்பில் கூறியிருக்கிருேம். அவர் கூறும் காரணங்கள் கீழே காணப்பெறும் அடிக்குறிப்பில் காணலாம்.[2] சிறந்த ஆராய்ச்சித் திறன் பெற்ற இப்புலவர் கூறும் நுட்பமான காரணங்கள் பொருத்தமா யிருப்பதாகவே முதலில் தோன்றுகின்றன. ஆனுல் நன்ருய்ச் சிந்தனை செய்தால் அவருடைய முடிபை ஏற்றுக்கொள்வதற்குச் சில தடைகள் இருக்கின்றன. பேராசிரியரும், அடியார்க்கு நல்லாரும் இறையனுர் அகப்பொருள் உரையை

1. திருவாய்மொழி. 8—8—6.

நக்கீரரே எழுதி யிருப்பதாக வுள்ள பழைய மரபையே ஏற்றுக்கொண் டிருக்கிறார்கள். அத்துடன் இறையனார் அகப்பொருளைப் பற்றி பிற்காலத்தார்க்கு வேறொருவர் உரை எழுதினார் என்ற மிக முக்கியமான செய்தியைப் பேராசிரியர் குறிப்பிடுகிறார். இந்த உரைதான் இப்போதுள்ள இறையனார் அகப்பொருள் உரை என்று கொள்ளலாம். இந்த உரையை இளம்பூரணரே எழுதினார் என்று பேராசிரியர் கருதி யிருந்தால் அவர் அதைக் குறிப்பிடாமலிருப்பதற்குக் காரணங்கள் இல்லை, பேராசிரியரின் வாக்கியத்தின் கடைசியில் 'அவர்' என்பது 'பிற்காலத்தார்க்கு உரை யெழுதினோ'ரைக் குறிக்கும் என்று கொண்டு, அத்துடன் 'புலவுத் துறந்த நோன் புடையராகலாற் பொய்கூறு ராகலானும்' என்ற வார்த்தைகள் இளம்பூரணவடிகளைக் குறிக்கலாம் என்று அவ்

---

2. ஆராய்ச்சித்தொகுதி (1938) இளம்பூரணவடிகள். மு. இராகவய்யங்கார் பக்கம். 398—405 இவர் காட்டி யிருக்கும் ஆதாரங்களில் ஒரு தொல்காப்பிய சூத்திரத்தின் (தொல். பொருள் 659 மரபியல்) உரையில் பேராசிரியர் அடியிற் கண்டவாறு எழுதி யிருப்பது ஒன்று. "கடைச்சங்கத்தாருட் களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் 'இடைச் சங்கத்தார்க்குங் கடைச் சங்கத்தார்க்கும் நூலாயிற்று தொல்காப்பியம்'' என்றா ராகலானும், பிற்காலத்தார்க்கு உரை யெழுதினோரும் அது கூறிக் கரிபோக்கினா ராகலானும், அவர் புலவுத் துறந்த நோன்புடையா ராகலாற் பொய்கூறா ராகலானு மென்பது. (தொல், பொருள். பவாநந்தம் பிள்ளை பதிப்பு. பக்கம். 591) கட்டுரையாளர் கூறும் மற்றொரு ஆதாரமாவது! "இனி அடியார்க்கு நல்லார் 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்' என்ற சிலப்பதிகார அடி உரையிலே பின்வருமாறு எழுதுகின்றார். 'குமரியாறு கடல் கொண்ட செய்தி எற்றாற் பெறுதுமெனின் நக்கீரர் உரைத்த இறையனார் பொருளுரையானும், இளம்பூரணவடிகள் முகவுரை யானும் பெறுதும்' (ஆராய்ச்சித் தொகுதி பக்கம். 405) அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் முகவுரை கிடைக்கவில்லை. அது என்னவென்றும் தெரியவில்லை. முகவுரை என்ற தொடர் முதல் முதலாக நன்னூலில்தான் காணப்பெறுகிறது. அதற்கு முன் பாயிரம் என்ற சொல்தான் பெருவழக்கிலிருந்ததாகத் தெரிகிறது

வாராய்ச்சியாளர் முடிபு கட்டியிருக்கிறார். ஆனால் 'அவர்' என்பது நக்கீரரைக் குறிப்பதாகவே தோன்றுகிறது. தொல்காப்பியம் இடைச் சங்கத்திற்கும் கடைச் சங்கத் திற்கும் இலக்கணமா யிருந்தது என்று நக்கீரரும் பிற் காலத்தார்க்கு களவியல் உரை எழுதினவரும் சொல்லி யிருப்பதைத்தான் பேராசிரியர் எடுத்துக் காட்டுகிறார். அவர், தமது வாக்கியத்தின் இறுதியில் கூறியிருக்கும் விஷயம் நக்கீரருக்கும் பொருந்தக்கூடிய முறையில் இருப்பதும் கவனிக்கத்தக்கது. 'இளம்பூரணவடிகள் முகவுரையானும்' என்று அடியார்க்கு நல்லார் கூறி யிருப்பதில் தெளிவு இல்லை; அதை வைத்து ஒரு முடிபைத் தேர்ந்துகொள்ள இயலாது. இளம்பூரணரே களவியல் உரையை எழுதி யிருந்தால், அவர் தம் பெயரை மறைத்து வைக்கக் காரணம் இல்லை. அவர் துறவியாதலால், தாம் எழுதிய உரையை நக்கீரர் எழுதியதாகப் புலவர் தவறுதலாகக் கருதும்படித் தம் பெயரை மறைத்து வைத்திருக்கமாட்டார்.

இளம்பூரணரும் களவியல் உரைகாரரும் ஒருவ ராயிருக்க முடியாது என்பதற்கு வேறொரு முக்கியமான காரணம் இருக்கிறது. இளம்பூரணரின் தொல்காப்பிய உரை நடைக்கும் களவியல் உரை நடைக்கும் எளிதில் புலப்படக்கூடிய வித்தியாசங்கள் இருக்கின்றன. சொற் களைக் கையாளுவதிலும், வாக்கியங்களை அமைப்பதிலும், பொருளை விளக்குவதிலும், வித்தியாசங்கள் காணப் பெறுகின்றன. உதாரணமாகக் களவியல் என்ற தொட ரைப் பற்றி இளம்பூரணரும் களவியல் உரைகாரரும் கொடுத்திருக்கும் விளக்கங்களை ஊன்றிக் கவனித்தால் இவ்விரு விளக்கங்களையும் ஒருவரே எழுதியிருக்க முடி யாது என்பது விளங்கும். இளம்பூரணர் தமது தொல் காப்பிய உரையில் களவியல் அதிகாரத்தின் தொடக் கத்தில் அந்தத் தொடரை விளக்கிக் கூறுவதாவது:

"கள வென்பது அறம் அன்மையின் (எனில்) அற்றன்று. களவு என்னும் சொற் கண்டுழி யெல்லாம் அறப்பாற்படா தென்றல் அமையாது. களவாவது பிறர்க்குரிய பொருள் மறையிற் கோடல். இன்னதன்றி ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினுல், தமரை, மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலே வழாமல் நிற்றலால் இஃது அற மெனப்படும்."

எளிய முறையில் சுருக்கமாகவும் அழகாகவும் உரை யாசிரியர் விளக்கியிருக்கிருர். இதைப் பற்றி களவியல் உரைகாரர் வரைந்திருப்பதாவது:—

"இது களவியலன்றே? இது கற்க வீடுபயக்கு மாறென்னே. களவு, கொலே, காமம் இணே விழைச்சு என்பனவன்ருே சமயத்தாரானும் உலகத்தாரானும் கடியப்பட்டன? அவற்றுள் ஒன்றன்ருலோ இது?' எனின், அற்றன்று. களவெனுஞ் சொற் கேட்டுக் களவு தீ தென்பதூஉ மன்று; காமமெனுஞ் சொற் கேட்டுக் காமந்தீ தென்பதூஉ மன்று; மற்றவை நல்லவாமாறு முண்டு. என்னே? ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து, 'நஞ்சுண்டு சாவல்' என்னும் உள்ளத்தளாய், நஞ்சு கூட்டி வைத்து, 'விலக்கு வாரில்லாத போழ்து உண்பல்' என்று நின்ற இடத்து, அருளுடையாெருரு வன், அதனேக் கண்டு, 'இவள் இதனே யுண்டு சாவாமல் கொண்டு போய் உகுப்பல்' என்று அவளேக் காணுமே கொண்டு போய் உகுத்திட்டான்; அவளும் சன நீக்கத் துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்ருள், அது காணு ளாய் சாக்காடு நீங்கினுள். அவன் அக்களவினுன் அவளே உய்யக் கொண்டமையான், நல்லூழிச் செல்லு மென்பது. மற்றும் இது போல்வன களவாகா; நன்மை பயக்குமென்பது. ................இங்குப் பிறவும் கள

வுண்மை சொல்லி, அக்களவுகட் கெல்லாம் இக்களவு சிறப்புடைமை சொல்லும்; துறக்கம் வீடு பேறுகளை முடிக்குமாகலான் எனப்படுவதென்று சொல்லிச் சிறப் பிக்கப்பட்டது. அது பாயிரத்துள்ளும் உரைத்தாம். மற்றும் உலகத்துக் களவாயின எல்லாம், கை குறைப் பவும், கண் சூலவும், கழு ஏற்றவும் பட்டு, பழியும் பாவமு மாக்கி, நரகத் தொடக்கத்துக் கதிகளில் உய்க்கும். இது மேன் மக்களால் புகழப்பட்டு ஞான வொழுக்கத் தோடொத்த இயல்பிற்று ஆகலானும், பழி, பாவம் இன்மையானும், 'எனப்படுவது' என்று விசேடிக்கப் பட்டது.''

இருவரும் நுட்பமாய் எழுதி யிருப்பினும், நடை யிலும், பொருள் கூறும் முறையிலும், அதை விளக்கும் ஆற்றலிலும் எத்தனை வேறுபாடுகள் இருக்கின்றன? இளம்பூரணரின் நடை எளிதாயும், பொருளை நேரடி யாய்க் கூறுவதாயும், ஆடம்பரமின்றியும் இருக்கிறது. களவியல் உரையின் நடை இதற்கு நேர்மாறானது. அதில் கவிதைப் பான்மையும், செஞ்சொல் வளமும், அலங்காரமும் ஆடம்பரமும், சமத்காரமும் உரை நடை யின் தேவைக்கு அதிகமான அளவிலும் முறையிலும் காணப் பெறுகின்றன. ஆகையால் இளம்பூரணரே களவியல் உரையை எழுதியிருக்கக் கூடும் என்ற ஊகம் பொருத்தமில்லை. இந்தக் கருத்தை வலியுறுத்தவும், களவியல் உரை நடையின் இலக்கியத் தன்மையையும், பொருட் சிறப்பையும் விளக்கவும் ஓரிரு உதாரணங்கள் கொடுத்தல் அவசியம். இறையனார் அகப் பொருள் இரண்டாவது சூத்திரத்திற்கு களவியல் உரைகாரர் கொடுத்திருக்கும் மிக விரிவான விளக்கத்தில் அவர் கூறியிருப்பதாவது:—

'இவ்வகை அவளைத் தமியளாக்கிப் பிரிபவோ?' எனின், எட்டியும் சுட்டியும் காட்டப்படும் குலத்த

னல்லளா கலானும், பான்மையும் அவ்வகைத் தாக லானும், பிறவாறு நினையார் பிரிப என்பது. 'ஆயின் இவ் வகைப்பட்ட ஆயத்திடை மேனாள் பிரிந்து பயின்றறியாதாள் தமியளாய் நிற்குமோ' எனின், நிற்கும், தான் பயின்ற இடம் தன் ஆயத்திஞேடு ஒக்கு மாகலானென்பது. யாங்ஙனம் நிற்குமோ?' எனின், சந்தனமும், சண்பகமும், தேமாவும், தீம்பலவும், ஆசினி யும் அசோகமும், கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து, நாகமும், திலகமும், நறவும், நந்தியும், மாதவி யும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரி யும் பாவை ஞாழலும், பைங் கொன்றை யொடு பிணிய விழ்ந்து, பொரிப்புன்கும புன்ஞகமும் முருக்கொடு முகை சிறந்து, வண்டறைந்து தேஞர்ந்து வரிக் குயில் கள் இசைபாட, தண்தென்றல் இடை விராய்த் தனிய வரை முனிவு செய்யும் பொழிலது நடுவண், ஒரு மாணிக்கச் செய்குன்றின் மேல், விசும்பு துடைத்துப் பசும் பொன் பூத்து வண்டு துவைப்பத் தண்தேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள்' கண்டு பெரியதோர் காதல் களிகூர்ந்து, தம் செம்மலர்ச் சீரடிமேல் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப, அம் மலரணிக் கொம்பர் நடை கற்பதென நடந்து சென்று, நறை விரி வேங்கை நாண் மலர் கொய்தாள்; கொய்த இடத்து, மரகதமணி விளிம்படுத்த மாணிக்கச் சுனை மருங்கினதோர் மாதவிவல்லி மண்டபத்துப் போது வேய்ந்த பூநாறு கொழு நிழற் கீழ்க்கடிக் குருக்கத்தி கொடிப் பிடித்துத் தகடுபடு பசும்பொன் சிகரங்களின் முகடு தொடுத்து ஞான்று வந்து இழிதரும் அருவி, பொன் கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தொடு வயிரமுந்தி அணிகிளரருவி ஆடகப் பாறைமேல் அதிர் குரல் முரசின் கண்ணிரட்ட, வண்டும் தேனும் யாழ் முரல, வரிக் குயிலும் கிளியும் பாட, தண்தாது தவிசு

படப் போர்த்ததோர் பளிக்குப் பாறை மணித்தலத்து மிசை, நீல ஆல வட்டம் விரித்தாற் போலத் தன் கோலக்கலாவம் கொள விரித்து, முளையிள ஞாயிறு இள வெயில் எறிப்ப, ஓர் இளமயில் ஆடுவது நோக்கி நின்றாள். அப்பால் தலைமகனும் பற்பன்னூருயிரவர் கூர்வேல் இளைஞரொடு நளிர்மாமலைச் சாரல் வேட்டம் போய் விளையாடுகின்றான். ஆண்டெழுந்ததோர் கடு மானின் பின் ஓடி, காவலிளைஞரைக் கையகன்று, நெடு மான் தேரொடு பாகனை நிலவு மணல் கானியாற்று நிற்கப் பணித்து, தொடுகழல் அடியதிரச் சுருளிருங் குஞ்சி பொன் ஞாணிற் பிணித்து, கடிகமழ் நறுங் கண்ணி மேல் கொண்டு வண்டு மணம் அயர, அஞ்சாந் தின் நறுநாற்றம் அகன் பொழிலிடைப் பரந்து நாற, அடு சிலையொடு கணையேந்தி வடிவு கொண்ட காமன் போலச் சென்று, அவள் நின்ற இரும் பொழில் புகும். 'அஃதி யாங்ஙனமோ?' எனின், வட கடலிட்ட ஒரு நுகம் ஒரு துளை தென் கடலிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும், வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தங்கதி வழுவித் தலைப்பெய்தாற் போலவும் தலைப் பெய்து, ஒருவரொருவரைக் கண்டல் நிமித்தமாகத் தமியராவர்.''

'' 'அல்லதூஉம், யான் பிரியாது விடப் புறத்தார் உணர்வர். புறத்தார் உணரவே இவள் ஆற்றாளாம். ஆகலான், யான் பிரியவே, புறத்தார் உணரார். ஆகவே இவள் ஆற்றும்' எனக் கருதி, 'இவள் கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி, அளகமும் நுதலும் தகை பெற நீவி, ஆகமும் தோளும் அணி பெறத்தைவந்து, குளிர்ப்பக் கூறி, தளிர்ப்ப முயங்கிப் பிரிவல்' என்று வலித்தான்.........இவ்வாறு இவை கேட்டதலை மகள், 'எம்பெருமான் நின்னின் பிரியேன்; பிரியினும் ஆற் றேன்' என்கின்றாரால், பிரிவு என்பதும் ஒன்று உண்டு

போலும். கேட்ட தகைமையால் அது தம் காதலரைக் காணுதும் கேளாதும் கையினகன்று மெய்யின் நீங்குவது' எனக் கலங்கி, கார் மருங்கின் மின்னுப் போலவும், நீர் மருங்கின் கொடி போலவும், தளிரும் முறியும் ததைந்து குளிரும் நளிரும் கவினி எழா நின்றதோர் கவின் பெறு கொடிப் போலும், காரிகை. கண்ணுடி மண்டலத்து ஊது ஆவி போலக் காணக்காண ஒளி மழுங்கி, கனல் முன்னிட்ட மெழுகுபாவை போல, மன முருகிப் பசந்து காட்டினுள். காட்டியும் ஆற்றினுள், 'யான் ஆற்ருது இறந்துபடில் எம்பெருமானும் இறந்துபடும்' என. அங்ஙனம் ஆற்றினுளது நீர்மையைக் கண்டு, 'இவள் எவ்விடத்தும், எக்காலத்தும், தன் தன்மை என்பது ஒன்று இலள்; என் தன்மையளே போலும்' எனப் பெரியதோர் கழியுவகை மீதூர நின்று, வன்புறை என்பதோர் சொல் சொல்லும்.''

''இவ்வாற்ருல் தலைமகளை ஆற்றுவித்துப் பிரிந்த தலைமகன், அவளைத் தமியளாக விட்டு நீங்குமோ எனின் நீங்கான். அவள் தன்னைக் காணுமல், தான் அவளைக் காண்பதோர் அண்மைக்கண், மழைக் கொண்டலில் மின்னுப்புக்கு ஒளித்தாற் போல ஒரு தனிப் பொதும்பரிடை மறைந்து நிற்கும். நிற்க, தலைமகளும் தன் குழல் கற்றையும் கோதையும் துயல்வர, கொடியிடை நடுவு தளர, பரவை அல்குல் துகிலசைய, பைம் பொன்தோடு மின்னுப்படைப்ப, அரவ வண்டறையும் தாமரை அக இதழ் புரையும் அச்செஞ் சீறடிமேல் பைம்பொன் சிலம்பரற்ற, அன்னம் போல மென்மெல ஒதுங்கி, காம வல்லியும் கற்பகக் கொழுந்தும் நடை கற்பதென நடந்து சென்று, அணிவரைச் சாரல் அருகினதோர் மணியருவி மருங்கு ஒலுறுத்தப் பளிங்கு விளிம்படுத்த நீலப் பைஞ்சுனை மருங்கினதோர் மரகதச் சிலாவட்டத்து அயல் மாணிக்கச் சதுரப்பாறை மேல், தாது

தவிசு அடுத்த மாதவிப் பந்தர்ப் போது வேய்ந்த பூநாறு கொழுநிழல் இருந்தாள். இருந்தாளாக, தாதும் தளிரும், போதும் மேதக்கனவற்றுல் குறுங்கண்ணியும், நெடுங் கோதையும், விரவுத் தழையும் சூட்டுக் கத்திகையும், மோட்டு 'வலயமும், பிறவுமாகப் புனைந்து, வண்டும் தேனும்புடை மருட்ட, அடியுறை ஏந்தி, பிரிந்த ஆயம் புடை மருவப் பெயர்ந்தெய்தி, போற்றும் பல்லாண்டும் கூறி நின்ருர். நிற்க, அவளும் தாரகை நடுவண் தண்மதி போல்வதோர் பொலிவினளாய்க் காட்டினள். காட்டினுளைக் கண்டு, 'இவளை, யான் எய்தினேன் எனக் கருதினன். எய்தியது உண்டேல் கனுப் போலும். நனவேயாயினும், இவள் எனக்கு எய்துதற்கு அரியளாம்' என ஆற்ருனுயினன்."

மேலே கொடுக்கப்பட்டிருக்கும் பகுதியின் இலக்கியத் தன்மையையும் குணங்களையும் பற்றி சற்று சிந்தித்து ஆராய்தல் வேண்டும். அவ்வாறு செய்தால் இறையனுர் அகப்பொருள் உரை எக்காலத்தில் எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்பது ஒருவாறு புலப்படும். தமிழ் இலக்கியத்தில் வட மொழியின் தொடர்பினுல் எழுந்த காவியங்கள் காலத்திலும், தொல்காப்பிய உரையாசிரியர்கள் காலத்திலோ, அதற்குச் சற்றுப் பின்னரோ களவியல் உரை ஆக்கப் பெற்றிருக்க வேண்டும். அதன் பல பகுதிகள் உரை நடையில் இருப்பினும் அதில் கவிதைப் பான்மை விசேடமாகக் காணப் பெறுகிறது. உவமங்கள் அழகாக மலிந்து கிடக்கின்றன; நடை கம்பீரமாய் எழுந்து செல்கிறது. பண்டைத் தமிழ்க் கவிதையிலும், பின்னர் தோன்றிய சமயப் பாசுரங்களிலும் சாதாரணமாகக் காணப்பெருத ஆடம்பர நடையும் ஓசை மிகுந்த சொல் வளமும் இறையனுர் அகப்பொருளில் இருக்கின்றன. களவியல் உரை மிகவும் பிந்திய காலத்தைச் சேர்ந்தது என்பதற்கு அதன்

நடையே நல்ல சான்று ஆகும். இந்த நடையின் முக்கியமான இயல்புகள் இளம்பூரணரின் தொல்காப்பிய உரை நடையில் காணப் பெறவில்லை. இளம்பூரணர் பொருளை நேரடியாக விளக்குவதற்கு அவசியமான ஒரு எளிய நடையையே கையாள்கிறார்; அவசியமில்லாத சொற்களோ, சொற்றொடர்களோ அணிகளோ அவருடைய நடையில் அருகியே காணப்படுகின்றன. ஆகையால் இளம்பூரணரே களவியல் உரையை எழுதியிருக்கக் கூடும் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாயில்லை.

இறையனார் அகப்பொருள் உரைகாரர் சில சூத்திரங்களுக்கு பொருள் கூறும்போது, 'இதை ஓர் ஆசிரியர்' இவ்வாறு கூறுகின்றார் என்றும் "இனி ஒரு சாரார் உரைக்குமாறு" என்றும் "இனி ஒரு சாரார் சொல்வது" என்றும் வேறு உரையாசிரியர்களைப் பற்றிப் பல இடங்களில் குறிப்பிடுகிறார். இதிலிருந்து களவியலுக்கு, இந்த உரைக்கு முன்பு வேறு உரைகள் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. இவைகளில் ஒன்று நக்கீரரால் சொல்லப்பெற்று, வழி வழியாகக் கேட்கப்பெற்று இறுதியாக முசிறியாசிரியர் நீலகண்டனார் கேட்டதாகக் கருதப்பெற்று வரும் உரையாய் இருக்கலாமோ என்பது தெரியவில்லை. இதைத் தவிரவும் களவியலுக்கு வேறு உரைகளும் இருந்திருக்கலாம். அவ்வாறு இருந்திராவிட்டால் இக் குறிப்புக்கள் எல்லாம் தொல்காப்பியப் பொருள் அதிகார உரைகளையே குறிக்க வேண்டும். தொல்காப்பியத்திற்கு உரைகள் செய்த கல்லாடரும் தெய்வச் சிலையாரும் பொருள் அதிகாரத்திலுள்ள அகப்பொருள் பகுதிகளுக்கு உரைகள் செய்ததாகத் தெரியவில்லை. பேராசிரியர் களவியல் உரையைக் குறிப்பிடுவதால் அந்த உரை எழுதப்பெற்ற பிறகு தோன்றியவர். நச்சினார்க்

கினியரோ பேராசிரியருக்கும் பிந்தியவர். ஆதலால் இறையனார் அகப்பொருள் உரையிலுள்ள பிற ஆசிரியர்களைப் பற்றிய சொற்றொடர்களில் சில இளம்பூரணரின் தொல்காப்பிய பொருளதிகார உரையிலுள்ள விஷயங்களைக் குறிப்பதாக ஒருவாறு கொள்ளலாம். இதற்குச் சில அகச் சான்றுகளும் இருக்கின்றன. களவியல் உரைகாரர் அதன் இரண்டாம் சூத்திரத்தின் உரையில் "இனி காமப்புணர்ச்சி என்பது, இதை ஓராசிரியன் உள்ளத்தானே புணர்ந்தார் என்னும். என்னை?" என்று குறிப்பிட்டு மேல் எழுதிக்கொண்டு போகிறார். இவ்வாறு இங்கே குறிப்பிடப் பெற்றிருக்கும் ஓர் ஆசிரியன் யார் என்னும் விஷயம் ஆராயத் தக்கது. இவர் இளம்பூரணராய் இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனென்றால் இளம்பூரணரை உரையாசிரியர், ஆசிரியர் என்று குறிப்பிடுவது தமிழ் மரபு. நச்சினார்க்கினியரும் பிற உரையாசிரியர்களும் இளம்பூரணரைச் சில இடங்களில் ஆசிரியர் என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள். மேலும் தொல்காப்பியம் களவியல் சூத்திரம் ஒன்றுக்குப் பொருள் கூறும்போது இளம்பூரணர் எழுதுவதாவது:— "எனவே வேட்கையுற்றுழியும், அச்சத்தானுதல், நாணுனுதல், தானுதல் புணர்ச்சிக்கு இசையாது நின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது போந்தது. இவ்வாறு இருவரும் உள்ளப் புணர்ச்சியால் நின்று வரைந்தெய்தி மெய்யுறும்."[1] மேலே களவியல் உரைகாரர் குறிப்பிட்டிருப்பது இந்தப் பகுதியாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது. ஆகவே களவியல் உரை இளம்பூரணர் காலத்திற்குப் பின் தோன்றியது என்று கொள்ளலாம். தமிழ் வரலாறு என்னும் அருமையான நூலை எழுதிய கே. எஸ். சீனிவாச பிள்ளை "களவியலுரை இளம்பூரண அடிகள்

1. தொல்காப்பியம் பொருள் 96. (களவியல்).

உரை எழுதியதற்குப் பின்னர்த் தாம்" என்று கூறி யிருப்பது கவனிக்கத் தக்கது.[1]

இளம்பூரணர் காலத்திற்குப் பின் களவியல் உரை தோன்றியிருக்க வேண்டும் என்று ஏற்படுகிறது. பேராசிரியர் களவியல் உரையைக் குறிப்பிடுகிருர். ஆகையால் இந்த உரை இளம்பூரணர் காலத்திற்குப் பின்னும் பேராசிரியர் காலத்திற்கு முன்னும் எழுதப் பெற்றிருக்க வேண்டும். ஆகவே இளம்பூரணர் காலத்தை ஆராய முயல வேண்டும். இளம்பூரணரை உரையாசிரியர் என்று அவருக்குப் பின்வந்த சில உரை யாசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். ஆனுல் உரை யாசிரியர் கூற்ருக அவர் சொல்லியிருக்கும் விஷயங் களில் சில இளம்பூரணரின் உரையில் காணப் பெற வில்லை. ஆகையால் இளம்பூரணருக்கு வேருக தொல் காப்பியத்திற்கு உரை செய்தவர் ஒருவர் உரையாசிரியர் என்று இருந்திருக்க வேண்டும் என்று சிலர் ஊகித் திருக்கிருர். இதே கருத்தைத் தமது தொல்காப்பிய இளம்பூரணம் சொல்லதிகாரப் பதிப்பின் முகவுரையில் திரு. கா. நமச்சிவாய முதலியார் கூறியிருக்கிருர்.[2] இளம்

---

1. தமிழ் வரலாறு. பிற்பாகம். பக்கம் 124. இளம் பூரணர் உரையும் களவியல் உரையும், திருக்கோவையாரிலிருந்து அகப்பொருள் துறைகளுக்கு மேற்கோள் பாடல்களை எடுக்காத தால் மாணிக்கவாசகர் காலத்திற்கு முந்தியவை என்று இந்த ஆசி ரியர் கூறியிருப்பது பொருத்தமில்லை. புலவர், தங்கள் அறிவு. மனேபாவம், சுவை ஆகியவைகளுக்குத் தகுந்தவாறு மேற்கோள் செய்யுள்களை எடுத்தாள்வர். இதிலிருந்து, நிதர்சனமாய் இல்லாத போது, கால சம்பந்தமான அநுமானங்களைச் செய்வது சரியல்ல.

2. "அன்றியும் ஒருவன் (4, 41, 45, 259); ஒருவன் சொல் லுவது (6, 17); ஒருசார் ஆசிரியர் (17, 33, 43); என்பாரும் உளர் (24-26) ஒரு கருத்து (5, 53, 252) இரு திறத்தார் ஆசிரியர் (92); ஒரு சாரார் (222, 259. 261) இப்பகுதியர் ஆசிரியர் (236) என கூறுவதை நோக்கின் இவ்வுரையாசிரியருக்கு முன்பே தொல்காப்

பூரணர் சேனாவரையருக்கு முந்தியவர்; ஏனென்றால் சேனாவரையர் அவருடைய கருத்துக்கள் சிலவற்றைக் கூறி மறுக்கிறார். சேனாவரையரின் காலம் கி. பி. பதின் மூன்றாம் நூற்றாண்டின் இறுதிக் காலம் என்று தெரிகிறது. அத்துடன் நன்னூல் ஆசிரியரான பவணந்தி முனிவருக்கும் முந்தியவர் இளம்பூரணர் என்று சிலர் கருதி வருகிறார்.[3] பவணந்தி முனிவரின் காலம் கி. பி. பனிரண்டாம் நூற்றாண்டின் இறுதியோ அல்லது பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கமோ என்று துணியச் சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன.[4] இதற்கு எவ்வளவு முந்தியது இளம்பூரணரின் காலம் என்று வரையறுப்பதற்கு ஆதாரங்கள் இல்லை. ஆனால் இளம் பூரணரின் தொல்காப்பிய உரை யாப்பருங்கலக்காரிகை,

---

யத்திற்குப் பல்லோர் உரை வழங்கி வந்த தென்பது நன்கு விளங்கும்.'' இளம்பூரணவடிகள் உரைத்திறம். முகவுரை. பக்கம் 4. சிறப்புப் பற்றி இளம்பூரணரை உரையாசிரியர் என்று கூறியிருக்கிறாரே யொழிய அவர் தான் தொல்காப்பியத்திற்கு முதலாவதாக உரை செய்தார் என்ற கருத்து பற்றி அல்ல என்பது தெளிவாகிறது.

3. ''இவற்றால் சேனாவரையருக்கு முற்பட்டவர் பவணந்தியாரென்பதும், அப் பவணந்திக்கும் முந்தியவர் இளம்பூரணவடிகளென்பதும் வெளியாகின்றன'' ஆராய்ச்சித் தொகுதி. மு. இராகவய்யங்கார் பக்கம் 401. சேனாவரையர். சாசனத் தமிழ்க் கவி சரிதம். மு. இராகவய்யங்கார் பக்கம் 110.

4. பவணந்தி முனிவரை நன்னூல் எழுதச் செய்த சீயகங்கன் மூன்றாம் குலோத்துங்கனின் (கி. பி. 1178-1218) சிற்றரசனாய் இருந்தான் என்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. ஆகையால் நன்னூல் கி. பி. பனிரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலோ பதின் மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ இயற்றப் பெற்றிருக்க வேண்டும். இளம்பூரணர் பவணந்தி முனிவருக்கு முந்தியவரா என்னும் விஷயம் ஆராய்ச்சிக்குரியது.

ய்ாப்பருங்கலவிருத்தி என்ற நூல்களுக்குப்பின் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று கருத இடமிருக்கிறது.

களவியலுக்கு இப்போதுள்ள உரைகளுக்கு முன்னால் வேறு உரைகள் இருந்திருக்கின்றன. இதற்கு அந்த உரையிலேயே சான்றுகள் இருக்கின்றன. களவு நிகழும் காலம் இரண்டு திங்கள் ஆகி அதற்குள் அது கற்பாகி மணத்தில் முடிய வேண்டும் என்ற கொள்கை தொல்காப்பியத்தில் இல்லை என்று முன்னர்க் கூறப்பெற்றிருக்கிறது. இதைப் பற்றிய சூத்திரத்தை இறையனார் அகப்பொருள் தான் கூறுகிறது. இதன் உரையில் ஆசிரியர் 'இரண்டு திங்கள்' என்பதற்கு வேறு இரு சாரார் பொருள் கூறியிருப்பதைச் சுட்டி மறுப்பதிலிருந்து, களவியலுக்கே அதற்கு முன்னால் இரண்டு உரைகள் இருந்திருக்க வேண்டும் என்பது புலப்படுகிறது.[1] அவை இப்போது கிடைக்கவில்லை. இந்த உரைகளில் ஒன்ருவது தொல்காப்பிய உரையாக இருக்க முடியாது; ஏனென்ருல் தொல்காப்பியத்தில் இந்தச் சூத்திரம் இல்லை.

இங்கு ஒரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். இடைக் காலத்தில் தமிழில் பல சிறு இலக்

---

1. இனி ஒரு திறத்தார் திங்கள் இரண்டென்பதனைச் சொல்லுமாறு. மதித் திங்கள் பிறைத் திங்களென இரண்டு; அவற்றுட் பிறைத் திங்கள் முன்னொளியாய்ப் பின்னிருளாம்; மதித் திங்கள் முன்னிருளாய்ப் பின்னொளியாம்; அவை இரண்டுஞ் சந்தித்து நின்ற இருட்காலத்ததாக என்றவாறு. அது பொருந்தாது. என்னை காரணமெனின் இரவுக்குறிக்கே சொல்லினமையான். அல்லதூஉங் காலவரையறையின்றி எஞ்ஞான்றும் இருட்டிங்கட் கண்ணே இவ்வொழுக்கம் வேண்டப்பட்டதாமென்பது. இனி ஒரு சாரார் திங்களிரண்டினகம் என்பதனை ஒரு திங்களை இரண்டு கூறிட்ட ஒரு கூறென்று பதினைந்து நாளாகச் சொல்லும். அதுவும் பொருந்தாமை அறிந்து கொள்க." இறையனார் அகப்பொருள் உரை சூத்திரம் 32.

க்கண நூல்கள் ஆக்கப்பெற்றன. இக்காலத்தில் வட மொழியுடன் நெருங்கிய தொடர்பை தமிழ் வைத்துக் கொண்டதன் விளைவாகவே, பெரும்பாலும் இவை எழுதப் பெற்றன. இவைகளில் யாப்பருங்கலம், யாப் பருங் கலக்காரிகை, வீர சோழியம், தண்டி அலங்காரம், நம்பி அகப்பொருள், நேமிநாதம் நன்னூல் ஆகியவை குறிப்பிடத் தக்கவை. இவை எல்லாம் கி. பி. பதினோ ராம் நூற்றுண்டிலும் பனிரண்டாம் நூற்றுண்டிலும் இயற்றப் பெற்றவை. வீர சோழியமும் தண்டி அலங் காரமும் தவிர மற்றவை சமண சமயப் புலவரால் எழுதப் பெற்றன. வீர சோழியம் செய்த புத்த மித்திரனுர் புத்த சமயத்தைச் சேர்ந்தவர் என்று கருதப்பெறுகிறது. தண்டி அலங்காரத்தின் ஆசிரியரின் சமயத்தைப் பற்றி நிச்சயமாய் இதுதான் என்று கூற முடியவில்லே. யாப் பிலக்கணத்தைத் திட்பமாகவும் விரிவாகவும் கூறும் யாப் பருங்கலத்தையும் யாப் பருங் கலக்காரிகையையும் அமுதசாகரர் பதினேராம் நூற்றுண்டின் முற்பகுதியில் இயற்றினர். ஐந்திலக்கணங்களின் சுருக்கமாகிய வீர சோழியம், அந்த நூற்றுண்டின் பிற்பகுதியிலும், வட மொழி அணி இலக்கணமான தண்டி அலங்காரத்தைப் பின்பற்றி எழுந்த தமிழ் தண்டி அலங்காரம், பனிரண் டாம் நூற்றுண்டின் முற்பாதியிலும், அகப்பொருள் இலக்கணமான நாற்கவிராச நம்பியின் அகப்பொரு ளும், எழுத்து, சொல் ஆகியவைகளின் இலக்கணங் களேக் கூறும் நேமிநாதமும், இந்த நூற்றுண்டின் பிற் பாதியிலும் ஆக்கப்பெற்றன. நன்னூல் இதே நூற் றுண்டின் இறுதிப் பகுதியிலோ அல்லது கி. பி. பதின் மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்திலோ பவணந்தி முனிவரால் எழுதப்பெற்றது. அதில் இப்போது எழுத் திலக்கணமும் சொல்லிலக்கணமுமே இருக்கின்றன. ஆனல் அது ஐந்திலக்கணங்களேயும் கொண்டிருந்தது

என்று தெரிகிறது.[1] ஆகையால் மற்ற மூன்று பகுதிகளும் மறைந்து விட்டன. மேலே கூறிய சிற்றிலக்கண நூல்கள் எல்லாம் பெரும்பாலும் தொல்காப்பியத்தையும் அதற்கு முந்தியிருந்த இலக்கண நூல்களையும் தழுவியே எழுதப் பெற்ற போதிலும், சில விஷயங்களில் அவைகளினின்றும் வேறுபட்டிருக்கின்றன. வளர்ந்து கொண்டு வந்த தமிழ் இலக்கியத்திற்குத் துணை செய்யும் முறையில் இவ்வித வேறுபாடுகள் அமைந்தன. ஏனென்றால் இலக்கண மரபும், விதிகளும் காலத்தால் மாறுவது இயல்பு. இவ்வாறு தோன்றிய இலக்கண நூல்களில், தொல்காப்பிய உரைகளைப் பற்றி நேரடியான குறிப்புக்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

இவ்விலக்கண நூல்களில், ஒவ்வொன்றும் அந்தந்தத் துறையில் சிறந்த நயங்களை யுடையது. யாப்பருங்கலக் காரிகையும் நன்னூலும், அவை தோன்றிய

---

[1] "இந்நூல், ஐந்ததிகாரங்களை யுடையதாகவே ஆதியிற் செய்யப் பெற்றதென்பதை, 'பல்வகைத் தாதுவின்' என்னும் சூத்திரத்தின் விசேட வுரையிலுள்ள 'சொல் எழுத்தாற் பெறப்படுதலின், எழுத்து, சொற், பொருள் அணியென்னும் நான்கினும் நடப்பது யாப்பென்பதாயிற்று; ஆகவே ஐந்ததிகாரங்களும் தம்முள் ஒன்றையொன்று இன்றியமையாவெனக் கொள்க' என்பதும், 'பழையன கழிதலும்' என்னுஞ் சூத்திரத்தின் கருத்துரையிலுள்ள 'இந்நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்க நோக்காய் நிற்பதொரு புறநடை யுணர்த்துதல் நுதலிற்று' என்பதும், இந்நூல் விருத்தியுரையில் 'இயற்றமிழை அரும் பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய பொருள், யாப்பு அணிகளென்னும் மூன்றதிகாரங்களும் அக் காலத்திலுள்ளன போலும்' (சிறப்பு உரை) என எழுதப்பெற்றிருத்தலும், 'தமிழ் நன்னூற்றுறை களஞ் சுக்கிலக்கியம்' (பெரிய திருமொழித் தனியன்) என்றதும், அதனுரையாசிரியரான ஸ்ரீ பிள்ளை லோகாசாரியசியர், 'தமிழுக்கு, எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூலென்று ஒரு சாஸ்திரம் உண்டு'' என்று அதற்கு ஒரு வகையாகப் பொருள் செய்திருத்தலும் வலியுறுத்துகின்றன. நன்னூல், மயிலைநாதர் உரை. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு. முகவுரை பக்கம் 13.

நாள் முதல், தொடர்ந்து போற்றப்பெற்றும் பயிலப் பெற்றும் வந்திருக்கின்றன. யாப்பருங்கலத்தையும் அதன் அற்புதமான விருத்தி உரையையும் பயிலாத தமிழ்ப் புலவரைப் பார்ப்பது அரிது. தண்டி அலங் காரமும், நம்பி அகப்பொருளும் அவ்வாறே பெரு மதிப் புடன் தமிழ்ப் புலவரால் கருதப் பெற்றன. இருந்த போதிலும் அக்காலத்தில் தோன்றிய பல பெரிய தமிழ்ப் புலவருக்கு இச் சிற்றிலக்கணங்கள் திருப்தியளிக்க வில்லை என்று தோன்றுகிறது. அவர்கள் பண்டைத் தமிழ் இலக்கியம், இலக்கணம் மீது தங்களது நாட்டத் தைச் செலுத்தினார்கள்; அவைகளை நன்றாய்க் கற்றுத் தேர்ந்தார். தமிழ் இலக்கணங்களுக்குள் தனியரசு செலுத்தி வந்த தொல்காப்பியத்திற்கும், பிற பழைய தமிழ் நூல்களுக்கும் பேருரைகள் செய்தார். இவை பெரும்பாலும் கி.பி.பதின்மூன்று,பதினான்கு ஆகிய நூற் றாண்டுகளில் எழுதப்பெற்றன. அவை எழுதப்பெற்ற முறையையும், அவைகளை ஆக்கிய புலவரின் அறிவையும் பேராற்றலையும் கவனித்தால், இவ்வுரை நூல்கள் ஒரு வலியுள்ள இலக்கிய இயக்கத்தின் விளைவாகவே தோன் றின என்று கொள்ளலாம். இந்த இயக்கம் சுமார் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றி சுமார் மூன்று நூற்றாண்டுகள் வரை தமிழ் இலக்கிய உலகில் சக்தி யுடன் இயங்கியது என்று கருதலாம். இந்த இயக்கத் தின் பயனாகவே தொல்காப்பியத்திற்கும், பண்டை இலக்கிய நூல்கள் சிலவற்றிற்கும், இறையனார் அகப் பொருளுக்கும் சிறந்த உரைகள் எழுதப்பெற்றன.

இவ்விலக்கியப் பேருரை இயக்கத்தைத் தோற்று வித்துப் பெரும்பாலும் உருவாக்கினவர், இளம்பூரணர், களவியல் உரைகாரர், பேராசிரியர், அடியார்க்கு நல் லார், சேனாவரையர், பரிமேலழகர், மயிலைநாதர், நச்சி னார்க்கினியர் ஆகிய எண்மர். இவர்களில் ஒவ்வொரு

வரின் காலத்தையும் துல்லியமாய் நிர்ணயிப்பதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை. எனினும், அதை உத்தேசமாகத் தெரிந்து கொள்ளச் சில சான்றுகள் இருக்கின்றன. இளம்பூரணர் பனிரண்டாம் நூற்றுண்டின் இறுதி காலத்தையோ பதின்மூன்றும் நூற்றுண்டின் தொடக்க காலத்தையோ சேர்ந்தவர் என்று கொள்வது பொருத்தமாயிருக்கும். நன்னூல் ஆசிரியரான பவணந்தி முனிவர் ஏறக்குறைய இதே காலத்தைச் சேர்ந்தவர் என்று முன்னர் கூறியிருக்கிறோம். இவருக்குப் பின்னரே மற்ற ஏழு உரையாசிரியர்களும் தோன்றியிருக்கிறார்கள் என்று தெரிகிறது; ஒருகால் இளம்பூரணர் கூட நன்னூல் தோன்றிய பிறகு, தமது தொல்காப்பிய உரையை எழுதியிருக்கலாமோ என்று ஐயம் பிறக்கிறது. களவியல் உரைகாரர் பதின்மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதியிலும், பேராசிரியரும் அடியார்க்கு நல்லாரும் அதன் நடுவிலும், சேனுவரையரும் பரிமேலழகரும் இறுதியிலும் வாழ்ந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. மயிலைநாதர் கி.பி. பதினன்காம் நூற்றுண்டிலும், பண்டைத் தமிழ் இலக்கியத்தைச் சேர்ந்த அதிகமான நூல்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் சிறந்த உரைகள் செய்த நச்சினர்க்கினியர் கி. பி. பதினைரும் நூற்றுண்டிலும் தோன்றினர்கள்.

இளம்பூரணர் தொல்காப்பியம் முழுவதற்கும் உரை செய்தார். இவர் இறையனர் அகப்பொருள் உரையைக் குறிப்பிடவில்லை. களவியல் உரையிலுள்ள சில குறிப்புக்கள் இளம்பூரணரின் தொல்காப்பிய உரையைச் சுட்டும் என்று முன்னல் காட்டியிருக்கிறோம். இளம்பூரணருக்குப் பின்னல் தோன்றிய பேராசிரியரும், அடியார்க்கு நல்லாரும் களவியல் உரையைக் குறிப்பிடுகிறார்கள். ஆகவே, இளம்பூரணர் காலத்திற்கு பின்னரும், பேராசிரியர் காலத்திற்கு முன்னரும், இறையனர் அகப்

பொருள் உரை, பெயர் தெரியாத ஒரு சிறந்த புலவரால் எழுதப்பெற்றது என்று தெரிகிறது. இது எழுதப் பெற்ற காலம் சுமார் கி. பி. 1230-40 ஆக இருக்கலாம் என்று கொள்வது தவருகாது.

இறையனுர் அகப்பொருள் உரை நன்னூல் தோன்றியபின் எழுதப்பெற்றது என்று தெரிகிறது. இந்தக் கொள்கைக்கு ஆதரவு கொடுக்கும் முறையில், இறையனுர் அகப்பொருளின் பாயிர உரையில், பாயி ரங்களின் இலக்கணத்தைக் கூறும் சில சூத்திரங்களும் வாசகங்களும் காணப் பெறுகின்றன.[1] இவைகளை இளம்பூரணரும் தமது தொல்காப்பிய உரையில் எடுத் தாண்டிருக்கிருர். இவை, பவணந்தி முனிவரின் நன் னூலில், மேற்கோள்கள் என்ற தன்மைக்குரிய குறிப்பு இல்லாமல், ஆசிரியர் செய்த சூத்திரங்களாகவே அமைந் திருக்கின்றன. இவை எல்லாம் பழைய நூல்களி லிருந்து, நன்னூல் ஆசிரியரும், இளம்பூரணர் முதலிய உரையாசிரியரும் எடுத்திருக்க வேண்டும். இதற்கு ஆதாரம் இல்லாவிட்டால், நன்னூல் ஆசிரியரே இம் மூன்று சூத்திரங்களையும் முதலாவதாகச் செய்திருக்க வேண்டும். நன்னூல் ஆசிரியரே இவைகளைச் செய் தார் என்று ஏற்பட்டால், இளம்பூரணரின் தொல் காப்பிய உரையும், களவியல் உரையும், நன்னூல்

1. ஆயிர முகத்தா னகன்றதாயினும்
பாயிரமில்லது பனுவலன்றே.

—நன்னூல் பாயிரம் 53

ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனேடோ யெண்பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்தி யல்பே.

—ந. பா. 46.

காலங் களனே காரணமென்றிம்
மூவகை யேற்றிமொழி நருமுளரே.

—ந. பா. 47

தோன்றிய பின் எழுதப்பெற்றிருக்க வேண்டும். அநேக மாக எல்லா உரையாசிரியர்களுமே இந்தப் பாயிரச் சூத்திரங்களை மேற்கோள்களாக எடுத்துக் காட்டுவதி லிருந்து அவைகளின் முக்கியத்துவம் விளங்குகிறது. இப்போதுள்ள உரை நூல்களில் காலத்தால் முந்தியது யாப்பருங்கலத்தின் விருத்தியுரை. அதில் இம்மூன்று சூத்திரங்கள் காணப்பெறவில்லை. ஆனால் பாயிரம் சம்பந்தமாக வேறு சூத்திரங்கள் எடுத்தாளப்பட்டிருக் கின்றன. யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்ற இரண்டு யாப்பு நூல்களையும் இயற்றிய அமுத சாகரர் காலத்தைச் சேர்ந்த குணசாகரர், யாப்பருங்கலக் காரிகைக்கு ஒரு உரை எழுதினர். இதற்குச் சற்று முன்னர் யாப்பருங்கலம் என்று நூலுக்கு ஒரு விருத்தி உரை பெயர் தெரியாத ஒரு சிறந்த புலவரால் எழுதப் பெற்றது. யாப்பருங்கலக் காரிகையின் பாயிர உரை யில் குணசாகரர், சூத்திரம் ஒன்றையும் கூறுமல், "நூலு ரைக்கு மிடத்து, நூற்பெயரும் காரணமும், ஆக்கியோன் பெயரும், அளவும், பயனும் எடுத்துரைக் கற்பாற்று' என்று எழுதுகிருர்.[1] பின்னர் அதன் முதல் பாட்டு தற் சிறப்புப் பாயிரம் என்று குறிப்பிட்டு அதற்கு இரண்டு சூத்திரங்களை மேற்கோள்களாகக் காட்டுகிருர்.[2] இவ் விரண்டு சூத்திரங்களும் எந்த நூலைச் சேர்ந்தன என்று தெரியவில்லை. பல சூத்திரங்களின் தொகுதியுடனும், தாம் சில சூத்திரங்களை ஆக்கிச் சேர்த்து அமைத் திருக்கும் நன்னூலின் பாயிர இலக்கணத்தில் இவை

1. யாப்பருங்கலக்காரிகை.
—பாயிரம் பக்கம் 1. குணசாகரர் உரை.

2. வணக்க மதிகார மென்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்றும் பாயிரமாம்.
தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளு
மெய்த வுரைப்பது சிறப்பாகும்'' என்ருராதலின்
—பாயிரம் பக்கம் 3

காணப்பெறவில்லை; ஆகையால் இவை பழைய சூத்திரங்களே. நன்னூலில் ஆசிரிய வசனமாக இருக்கும் பாயிரத்தைப் பற்றியுள்ள மேலே காட்டப் பெற்றிருக்கும் மூன்று சூத்திரங்களையும் நூலை ஆக்கிய பவணந்தி முனிவரே, யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர் முதலியோரின் கருத்தைத் தழுவி, முதன் முதலாகச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

நன்னூலின் பாயிரத்தைச் சற்று நுட்பமாக ஆராய்ந்தால் இந்த முடிவு தெளிவாகும். இந்தப் பாயிரம், சாதாரணமாக மற்ற நூல்களுக்கு அமைந்திருக்கும் பாயிரங்கள் போல் இல்லை. நன்னூலின் பாயிரம், பாயிரங்களைப் பற்றியும், நூல் முதலியவைகளைப் பற்றியும் விளக்கும் ஒரு சிறந்த இலக்கணமாகவே அமைந்திருக்கிறது. பாயிரத்தில், பொதுப் பாயிரத்தைப் பற்றி நாற்பத்தாறு சூத்திரங்களும் சிறப்புப் பாயிரத்தைப் பற்றி ஒன்பதும், ஆக மொத்தம் ஐம்பத்தைந்து சூத்திரங்கள் இருக்கின்றன. இவை அனைத்தையும் பவணந்தி முனிவர் எழுதியதில்லை. தாம் இயற்றிய சிலவற்றையும் முந்து நூல்களிலுள்ள சில சூத்திரங்களையும் தொகுத்து இப்பாயிரப் பகுதியை அவர் ஆக்கியிருக்கிறார். நூலின் பொருளைப் பொறுத்த வரையிலும் பவணந்தி முனிவர் இதே முறையைத்தான் கையாண்டிருக்கிறார்.

நன்னூலின் பாயிரப் பகுதியை அதன் முதல் உரையாசிரியரான மயிலைநாதரே தொகுத்திருக்கிறார் என்றும் பவணந்தி முனிவர் அமைக்கவில்லை என்றும் நன்னூலின் மயிலைநாதர் உரையைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் கருதுகிறார். அவர் எழுதுவதாவது:— "இந்நூற் சூத்திரங்களெல்லாம் பவணந்தி முனிவராலே செய்யப் பெற்றவையல்ல; தானெடுத்து மொழிதலாக இவராற் பழைய நூல்களிலிருந்து எடுத்தாளப் பெற்றவையுமுண்டு. இதன் பாயிரப் பகுதி

களுட் சில இறையனாரகப் பொருட் பாயிரத்திலும் தொல்காப்பியப் பாயிரவுரைகள் முதலிய உரைகளிலும், வேறுபட்டும் வேறுபடாமலும், சூத்திரங்களாகவும், உரை நடையாகவும் காணப்படுகின்றன; அப்பகுதி களுள் மூன்று சூத்திரங்கள் (6, 15, 16) தொல்காப்பியம்; ஐந்து (9-13) பாடலனார் செய்தவை; இரண்டு (51-52) பனம் பாரம். "பூமலிய சோகின்" என்பது முதலி யனவே பவணந்தி முனிவராற் செய்யப்பெற்றன வென்றும், அவற்றுள் ஏழு சூத்திரங்கள் (89, 251, 316, 395, 403, 407, 438) தொல்காப்பிய மென்றும், திருக் குறள் நுண் பொருண் மாலையுடையார் கொள்கை யின்படி 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா அ." (397) என்பது இந்நூலாசிரியர் வாக்கன்றென்றும் இப்போது தெரிய வருகின்றன. தொல்காப்பிய உரை யாசிரியர்களைப் போலவே மயிலைநாதரும், சிறப்புப் பாயிரத்திற்கும் அதன் உரைக்கும் இடையே பாயிரச் சூத்திரங்களை அமைத்திருத்தல் இக்கருத்தை வலி யுறுத்துகின்றது."[1] டாக்டர் சாமிநாதய்யரின் கருத்து மிகுந்த மதிப்புக்குரியதாயினும், நன்னூல் பாயிரப் பகுதியிலுள்ள ஐம்பத்தைந்து சூத்திரங்களும், மயிலை நாதரால் அமைக்கப்பெற்றன என்பது பொருத்த மாயில்லை. இந்தப் பாயிரப் பகுதி ஒரு சிற்றிலக்கண மாகவே இருக்கிறது; அதில் பாயிரம், நூல், உரை ஆசிரியன், மாணக்கன் ஆகியோரின் லட்சணங்கள், பாடங் கேட்கும் முறை ஆகிய பல விஷயங்கள் திட்ப மாகவும் சுருக்கமாகவும் கூறப் பெற்றிருக்கின்றன. பாயிரத்தில் இதுமாதிரி பல விஷயங்களைப் பற்றிக் கூறுவது பொருத்தமாய் இருக்குமோ என்ற கேள்விக்கு ஆம் என்று விடை அளிக்கிறார் நன்னூலுக்கு மயிலை

1. நன்னூல், மயிலைநாதம் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு. முகவுரை பக்கம் 14.

நாதருக்குப் பின் ஒரு சிறந்த உரை எழுதிய சங்கர நமச்சிவாயப் புலவர்.[1] அவர் எழுதுவதாவது:— "அங்ஙனமாயின், நூன் முகத்துரைக்கப்படும் பாயிர வுறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்தாதெனின்: இவ்விலக்கணத்தான் அமைபவன் ஆசிரியன் என்றாற் போல அமைவது நூலென்றதன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியதன்றாம் ஆதலின், ஆசிரியர் தொல்காப்பியர் நூலினியல்பை ஒத்துறுப்பாகிய மரபியலுட் கூறினாற்போல இவ்வாசிரியர் பாயிர வுறுப்பினுட் கூறினாரென்க."[2] இதில் இவ்வுரைகாரர் பாயிரச் சூத்திரங்களை ஆக்கியோ, தொகுத்தோ அமைத்தது நன்னூலின் ஆசிரியரே என்று கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. ஆகவே, பாயிரத்தில் சிறப்புப் பாயிரத்தின் இலக்கணமாக முன்னர் காட்டப்பெற்ற மூன்று சூத்திரங்களும், இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் முந்து நூல்களிலிருந்தோ அல்லது அவை கொடுத்திருக்கும் மேற் கோள்களிலிருந்தோ எடுக்கப் பெற்றதாகத் தெரியவில்லை. இவை பவணந்தி முனிவரால் செய்யப் பெற்றதாகக் கொள்வதைத் தவிர வேறு முடிபு பொருத்தமாயிராது. இவை மூன்றும் இறையனார் அகப்பொருள் உரையில் மேற்கோள்களாக எடுத்தாளப் பெறறிருக்கின்றன.[3] இதேபோல இளம்பூரணர் இம்

1. இந்த உரை சிவஞான முனிவரால் திருத்தப்பெற்றது.

2. நன்னூல். சங்கர நமச்சிவாயப் புலவர் உரை. ஆறுமுக நாவலர் பதிப்பு பக்கம் 12.

3. "எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து
உரைக்க என்பதுமரபு; என்னை
ஆயிரம் முகத்தான் அகன்றதாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே."

என்றாராகலானும்,

இனி சிறப்புப் பாயிரம் எட்டு வகைப்படும். அவையாவையோ எனின் ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும், நூற் பெயரும்

மூன்று சூத்திரங்களையும், தமது தொல்காப்பிய எழுத்ததிகார உரையில் மேற்கோள்களாகவே எடுத்தாள்கிருர். இம்மூன்று சூத்திரங்களும், நமக்குக் கிடைக்காத அல்லது தெரியாத பழைய நூல்களில் இருக்கலாம் என்று சிலர் கருதலாம். அவ்வாறு கருதுவது சரியில்லை. ஏன்? நன்னூலின் பாயிரப் பகுதியிலுள்ள சூத்திரங்களில், பிற நூல்களைச் சேர்ந்தவை என்று திட்டமாய்க் கூறக் கூடியவை போக மீதமுள்ளவை நன்னூல் ஆசிரியராலேயே ஆக்கப்பெற்றன என்று கொள்வது தான் நியாயமானது. பவணந்தி முனிவர், முன்னிருந்த தமிழ் இலக்கணத்தை மாணவர் எளிதில் உணரும் பொருட்டு எவ்வாறு, சில பழைய சூத்திரங்களையும் எடுத்துக் கொண்டு தாமே ஆக்கிய பல புது சூத்திரங்களுடன் தமது இலக்கணத்தை அமைத்தாரோ, அவ்வாறே அதன் பாயிரப் பகுதியையும் பழைய சூத்திரங்கள் சிலவற்றைக் கையாண்டும் வேறு சில சூத்திரங்களைத் தாமே ஆக்கியும் அமைத்தார் என்று கொள்வதுதான் பொருத்தமானது. இதனுல், நன்னூல் தோன்றிய பின்னரே தொல்காப்பிய இளம்பூரணமும், அதற்குச் சற்றுப் பின்னர் களவியல் உரையும் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பாதியில் தோன்றின என்று முடிவு செய்யலாம்.

---

யாப்பும், நுதலிய பொருளும் கேட்போரும், பயனும் இவை. என்னை,

ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட் போர் பயனேடா வெண்பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்தி யல்பே.'' என்ருராகலின்

காலமும் களமும் காரணமும் கூட்டிப் பதினொன்று என்பாரும் உளர்.

''காலம் களனே காரணம் என்றிம்
மூவகை யேற்றி மொழிநரும் உளரே.'' என்பவாகலின்

கடைச் சங்கப் புலவராயிருந்த நக்கீரரால் இறையனார் அகப்பொருள் உரை எழுதப் பெற்றதாகப் பல நூற்றாண்டுகளாகப் புலவர் கொண்ட கருத்தை ஒதுக்கி விட்டு அது கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் இருந்த பெயர் தெரியாத ஒரு புலவரால் ஆக்கப்பெற்றது என்று எங்ஙனம் ஏற்றுக்கொள்வது என்று சிலர் தயங்கலாம். இந்தத் தலைமுறையில் களவியல் உரையை நக்கீரர் எழுதினார் என்று கருதுபவர் அநேகமாக இல்லை என்று கூறலாம்; சென்ற தலைமுறையில் அவ்வாறு கருதிய புலவரில் இறையனார் அகப் பொருளிலுள்ள முதல் சூத்திர உரையிலுள்ள பாயிரப் பகுதி பின்னர் யாரோ ஒரு புலவரால் எழுதிச் சேர்க்கப்பட்ட செருகல் என்று சிலர் கருதியிருக்கிறார்.[1] ஆனால் இந்தப் பாயிரப் பகுதியை ஊன்றிப் படித்தால் அது இடைச்செருகல் இல்லை என்றும் உரைகாரராலே எழுதப் பெற்றிருக்கிறது என்றும் தெரியவரும். ஏன்? நூலைச் செய்தவர் மாடக்கூடலால வாயிலுள்ள அருமறைக் கடவுள் என்றும், அதைக் கேட்டவர் மதுரை உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திர சன்மன் என்றும் கூறிவிட்டு 'அவன் கேட்டதற்குக் காரணம் சொல்லுதும்' என்று ஆரம்பித்து, உரை தமிழ்ச் சங்கங்களின் கதையையும் இறையனார் அகப் பொருள் தோன்றிய கதையையும் கூறுகிறது. இந்தப் பகுதி பொருத்தமில்லாத செருகல் மாதிரி இல்லை. அத்துடன் பாயிரம் முடிந்ததும் உரைகாரர் 'இனிப் பாயிரம் உரைத்த பின்றை நூலாமாறும் உரைக்கற்பாலது' என்று சொல்கிறார். சற்றுப் பின்னால் அவர் "அது பாயிரத்துள்ளும் உரைத்தாம்"

1. அதிலுள்ள, பாண்டிக் கோவையைச் சேர்ந்த மேற்கோட் செய்யுட்களையும் பின்னர் யாரோ சேர்த்திருக்கிறார் என்று சில அறிஞர் கருதியிருக்கிறார். மேற்படி கோவை, பல பாண்டியர்கள் செய்த சமர்களைக் கூறுவதாகவே சிலர் கருதுகிறார்.

என்று எழுதுகிருர். ஆகையால் பாயிரம் எழுதினவர் வேறு, உரை எழுதினவர் வேறு என்று கொள்ள முடியாது. இருவரும் ஒருவரே.

இப்பாயிரத்திற்கு முக்கியத்வம் ஏன் ஏற்பட்டதென்று முன்னர்க் கூறியிருக்கிரும். இதில் தான் முதல் முதலாக, மூன்று தமிழ்ச் சங்கங்களைப் பற்றிச் சில விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.[1] இவைகள்

---

1. ''தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என மூவகைப்பட்ட சங்கம் இரீஇஇனர் பாண்டியர்கள். அவருள் தலைச் சங்கமிருந்தார் அகத்தியனரும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என இத் தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினர் என்ப. அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும் முது நாரையும் முது குருகும் களரியா விரையும் என இத் தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவர்களைச் சங்கம் இரீஇஇனர் காய்சின வழுதி முதலாக கடுங்கோன் ஈருக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவி அரங்கேறினர் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்கம் இருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப. அவருக்கு நூல் அகத்தியம்.

இனி, இடைச் சங்கமிருந்தார் அகத்தியனரும், தொல்காப்பியனரும், இருந்தையூர்க் கருங்கோழியும், மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக் கோனும், கீரந்தையும், என இத் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்து எழுநூற்றுவர் பாடினர் என்ப. அவர்களால் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும், பூத புராணமுமென இவை யென்ப. அவர் மூவாயிரத்தெழு நூற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவரைச் சங்கம் இரீஇஇனர், வெண்டேர்ச் செழியன் முதலாக முடத் திருமாறன் ஈருக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினர் ஐவர் பாண்டியர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது.

ஆராய்ச்சிக்குரியவையாயினும், அது இந்தப் பகுதிக்கு அவசியம் இல்லை; தற்காலத் தமிழ் ஆராய்ச்சியை விளக்கும் மூன்றும் பகுதியில் கவனிக்கப்படும். இந்த இடத்தில் ஓரிரு விஷயங்களைத் தான் குறிப்பிட வேண்டும். தாம் கொடுத்திருக்கும் விபரங்களுக்கு எல்லாம் ஆதாரங்கள் எவை என்று களவியல் உரையாசிரியர் குறிப்பிடவில்லை; விபரங்களை நோக்கினால் அவை பெரும்பாலும் உரைகாரரின் கற்பனையின் விளைவாகவே தோன்றுகின்றன. ஆனால் இவ்வாறு கற்பனை செய்வதற்கும் ஒரு அடிப்படை வேண்டும். ஏதோ சில ஆதாரங்களை மனத்திலிருத்தித் தான் கதையைக் கட்ட முடியும். இந்த அடிப்படையையும் இதற்குரிய ஆதாரங்களையும் தேடிப் பார்க்க முயல வேண்டும்.

சங்கம் என்ற சொல்லும், அது குறிக்கும் கருத்தும் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் கையாளப் பெற்றிருக்-

---

இனிக் கடைச் சங்கம் இருந்து தமிழாராய்ந்தார் சிறு மேதாவியாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையனாரும் பெருங்குன்றூர்க் கிழாரும், இளந்திரு மாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும் கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்றுநாற்பத் தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும் குறுந்தொகை நானூறும் நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப் பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும் பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கம் இருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்துத் தொள்ளாயிரத் தைம்பது யாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்ப. இதற்கப்புறம் இறையனார் அகப்பொருளும் அதன் உரையும் எவ்வாறு எழுந்தன என்பதைப் பற்றிச் சில விபரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நூலை சிவபெருமான் ஆக்கினாரென்றும் உரை நக்கீரரால் சொல்லப்பட்டதென்றும் கூறப் பெற்றிருக்கின்றன.

கின்றனவா என்பதையும், கையாளப் பெற்றிருந்தால் எவ்வாறு என்பதையும் சற்று ஆராய்தல் நலம். சங்க இலக்கியம் என்று வழங்கும் எட்டுத் தொகையிலுள்ள பாடல்களைப் பாடிய புலவரில் ஒருவராவது, பத்துப் பாட்டை எழுதிய கவிஞரில் ஒருவராவது தமிழ்ச் சங்கங் களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதாகத் தெரியவில்லை. தொல்காப்பியம் ஒரு பாண்டியனின் அவையில் அரங் கேற்றப்பட்டது என்று அதன் சிறப்புப் பாயிரத்தில் கூறியிருக்கும் பனம்பாரனாரும் மாங்குடி மருதனைப் பற்றி, அவர் அக்காலத்துப் புலவருக்கெல்லாம் தலைவ ராயிருந்தார் என்று பாடியிருக்கும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும் தமிழ்ச் சங்கம் இருந்ததாகக் குறிப்பிடவில்லை. சங்கங்கள் இயங்கியிருந்தால், அவைகளின் ஆதரவில் வாழ்ந்து, பாடல்கள் இயற்றி, புலமைத் தொழில் நடத்திய புலவர், அவைகளைக் குறிப்பிடாமல், தங்களை ஆதரித்த அரசரை யும் வள்ளல்களையும் பாடியிருப்பதின் மர்மம் விளங்க வில்லை. அத்தகைய சங்கம் இப்புலவரின் பாடல்களுக் குரிய பொருளாய் இருக்கக்கூடிய அளவுக்கு முக்யத்வம் பெறவில்லை. அல்லது தமிழ்ச் சங்கம் என்ற ஒரு ஸ்தாபனம் அந்தப் பெயருடன் தனியாக இயங்கவில்லை என்று தான் கொள்ள வேண்டும். ஆனால் பாண்டிய மன்னரின் ஆதரவில் தமிழ்ப் புலவரடங்கிய அவை நிலைத்து வேண்டும் போதெல்லாம் கூடியிருக்கலாம். அது ஒரு கல்விக் கழகமாகவே இயங்கி இலக்கிய விஷ யங்களைப் பற்றியும் நூல்களைப் பற்றியும் விவாதம் செய்யும் அரங்காக இருந்திருக்க வேண்டும். ஏனென் றால் பண்டைக் காலத்தில் மதுரையில் பட்டி மண்டபம் என்று இருந்ததாகக் குறிப்புகள் காணப் பெறுகின்றன. இந்த மண்டபத்தில் புலவர் கூடி சமயம் முதலிய பல விஷயங்களைப் பற்றி வாதம் செய்யும் வழக்கம் இருந்த

தாகத் தெரிகிறது.[1] பேராசிரியர், தொல்காப்பியம், செய்யுளியல் சூத்திரம் ஒன்றிற்கு உரை எழுதும்போது, 'இவை தெற்கண் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாகவும் பாடிய மந்திரம் அங்கதப்பாட்டாயின' என்று எழுதுகிறார்.[2] ஆகவே பட்டி மண்டபத்தில் புலவர் கூடும் அவை நடைபெற்றது என்பதற்குத் தெளிவான ஆதாரங்கள் இருக்கின்றன. இந்த அவை தமிழை வளர்க்கும் எல்லாவிதமான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கும் என்பதில் ஐயம் இல்லை. தொல்காப்பியம் பாண்டிய மன்னர் ஒருவரின் அவையில் அரங்கேற்றப்பட்டிருப்பது இதை வலியுறுத்தும். இவ்வாறு அடிக்கடி பட்டி மண்டபத்தில் கூடின அவையையே பிற்காலத்துத் தமிழ்ப் புலவர் தமிழ்ச் சங்கம் என்று கொண்டிருக்க வேண்டும். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் மதுரையில் வச்சிரநந்தி என்ற ஒரு சமண ஆசிரியர் ஒரு தமிழ்ச் சங்கத்தை நடத்தினதாகத் தெரிகிறது. இதற்குப் பின்னர், பாண்டிய மன்னரின் தமிழ்ப் புலவர் அவை தமிழ்ச் சங்கம் என்று கருதப்பட்டிருக்கலாம் என்று சில அறிஞர் கருதுகிறார்.[3]

இந்தக் கருத்து ஆராய்ச்சிக்குரியது. மதுரையில் எழுந்தருளியிருந்த சொக்கலிங்கப் பெருமானுக்கும், பாண்டிய வம்சத்தினருக்கும், தமிழ்ச் சங்கத்திற்கும்,

1. ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்,
பட்டி மண்டபத்து பாங்கு அறிந்து ஏறுமின்.
மணிமேகலை 1—60—61.

'பட்டிமண்டபம் ஏற்றினை ஏற்றினை' திருவாசகம்.
'பன்னருங்கலை தெரிபட்டி மண்டபம்' கம்பர்.

2. தொல்காப்பியம் செய்யுளியல் பேராசிரியர் உரை. பவாநந்தம் பிள்ளை பதிப்பு பக்கம் 484.

3. History of the Tamils by P. T. Srinivasa Iyengar. Pages 245, 251.

சங்கப் புலவருக்கும் சில தொடர்புகள் இருந்தன என்று அப்பெருமானின் திருவிளையாடல் கதைகளில் காணப் பெறுகின்றன. இந்தக் கதைகளை எல்லாம் சங்க காலத்திற்குப் பின் தோன்றிய சைவ சமயப் புலவர் கையாண்டு, தங்கள் பாடல்களில் ஆங்காங்கே குறிப்பிட்டிருக்கிருர்கள். சிவபெருமான் தருமிக்குப் பொற்கிழி கிடைக்கச் செய்தது, சங்கத்தாருடனிருந்து தமிழாராய்ந்தது, அகப்பொருள் புலவருக்கு ஆக்கிக் கொடுத்தது, நக்கீரரைக் கடிந்து பின்னர் அவரை மன்னித்தது, சங்கத்தில் நாற்பத்தொன்பது புலவர் இருந்தது போன்ற கதைகள் எல்லாம், திருவிளையாடல்களோடு பிணைக்கப்பட்டு வழங்கி வந்ததால் அவைகளைத் தமிழ்ப் புலவர் சரித்திர உண்மைகளாகவே நினைத்துக் கையாண்டு தங்கள் பாடல்களில் சுருக்கமாகவே குறிப்பிட்டு வந்தார்.[1] அப்பர், திருஞானசம்பந்தர், மாணிக்க

1. "நன்பாட்டுப் புலவனைச் சங்கமேறி
நற்கனகக் கிழி தருமிக்கருளி னேன் காண்."
**அப்பர், திருப்பத்தூர் திருத்தாண்டகம்.**

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற்கூடலின் ஆய்ந்த வொண்தீந் தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ.........
**திருக்கோவையார்—20.**

சென்றணைந்து மதுரையில் திருந்திய நூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந்தருளிய அங்கணர்கோயில்
**தி. நா. புராணம். சேக்கிழார் 403.**

திருவாலவாய் அமர்ந்த செஞ்சுடரைச் செழும் பொருள் நூல்
தருவானை
**சேக்கிழார் 406.**

சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய அங்கண்மூதூர்
நூல்பாயிடத்தும் உளகோன்றலை.........
.........செய்புள் மிக்கேறு சங்கம்.
.........கூடல் **சேக்கிழார். மூர்த்தி 5.**

மாநகரத்துச் சங்கம் வைத்தவன் தேற்றத்தேறு"
**சேக்கிழார். திருஞான 843.**

நூலின்கட் பொருள்பாடி நூலறி வார்க்கீந்தானை"
**சேக்கிழார். திருஞான 883.**

வாசகர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், கல்லாடத்தின் ஆசிரியர் முதலிய சைவ சமயப் புலவர் தங்கள் பாடல்களில் எடுத்தாண்டிருக்கும் இத் திருவிளையாடல் கதைகள் நாடெங்கும் பரவியதால் புலவரும் மக்களும் அவைகளை முழுவதும் ஏற்றுக்கொண்டு நம்பி வந்தார்கள்.[1] இங்கு நாம் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. கடைச் சங்கத்தில் இருந்ததாகச் சொல்லப்படும் புலவர் சங்கத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை. பின்னர் வந்த சைவ சமயாசாரியர்களும் சைவ சமயப் புலவரும், சிவபெருமானின் திருவிளையாடல்களைப் பாடும்போது சங்கத்தைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகையால் தமிழ்ச் சங்கம் என்ற கருத்து, கடைச் சங்க காலத்திற்குப் பின்னும் சமயாசாரியர்கள் காலத்திற்கு முன்னும், சுமார் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம்.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பனிரண்டாம் நூற்றாண்டின் இறுதி வரை மேலே கூறப்பெற்ற திருவிளையாடல் கதைகள் எல்லாம் சமயப் பாடல்களிலுள்ள சில குறிப்புகளுக்குத் தவிர வேறு ஒரு தனி நூலுக்குப் பொருளாக அமையவில்லை. பதின்மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பாண்டியருடைய சாம்ராஜ்யம் மூன்றாம் தடவையாகத் தலைதூக்கி ஓங்கி மதுரை

---

1. சுந்தரர், தமது திருத்தொண்டத் தொகையில் 'பொய்யடிமையில்லாத புலவருக் குமடியேன்' என்றதை விளக்கும் முறையில் நம்பியாண்டார் நம்பி, தமது திருத்தொண்டர் திருவந்தாதியில் பாடியிருப்பதாவது:-

''தரணியிற் பொய்ம்மையிலாத் தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதலைம்பத்தொன்பதுபல் புலவோ
ரருள் நமக்கியும் திருவாலவாயரன் சேவடிக்கே
பொருளமைத்து இன்பக் கவிபல பாடும் புலவர்களே.''

நம்பியாண்டார் நம்பியின் இந்த விளக்கம் சரியில்லை என்று சில தமிழ் அறிஞர் கருதுகிறார்.

யிலிருந்து ஒளி வீசத் தொடங்கியது. இக் காலத்தில் பெரும்பற்றப்புலியூர் நம்பி என்ற ஒரு சிறந்த புலவர், திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் என்ற பெயரில் மதுரை சோமசுந்தரக் கடவுளின் திருவிளை யாடல்களைப் பற்றி வழங்கி வந்த கதைகளை எல்லாம் ஒன்று சேர்த்துத் தொகுத்து முதல் முதலாக ஒரு நூலை இயற்றினர்.[1] இந்நூல், மதுரை மீனாட்சி சுந்தரேசு வரர் ஆலயத்தின் அம்பாள் சந்நிதியின் கோபுரத்தை ஆனந்ததாண்டவ நம்பி கி. பி. 1227-ல் கட்டியதற்கு முன்பு இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்று டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் கருதுகிறர்.[2] இந்த ஆனந்த தாண்டவ நம்பியே பெரும்பற்றப்புலியூர் நம்பி என்றும் அவரே திருவாலவாயுடையார் திருவிளையாடற்

1. இந்த நூலுக்கு, சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு ஓர் அருமையான பதிப்பை வெளியிட்டு, தமிழாராய்ச்சிக்குப் பெரும் பணி செய்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் எழுதுவதாவது:- "திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணமென்னும் இந் நூல் உத்தர மகா புராணமென்னும் வட நூலின் ஒரு பகுதியாகிய சாரமுச்சிய மென்பதிலிருந்து மொழி பெயர்த்து செல்விநகர் பெரும்பற்றப்புலியூர் நம்பி யென்பவரால் செய்யுள் நடையாக இயற்றப்பெற்றது. உத்தர மகாபுராணம் என்னும் வடமொழி நூல் இப்பொழுது கிடைக்கவில்லை." இந்த நூல் அகப்படாததால் அது எந்தக் காலத்தைச் சேர்ந்தது என்று கூற இயலாது. ஆனால் திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணம் தான், தமிழி லுள்ள திருவிளையாடல் புராணங்களில் காலத்தால் முந்தியது.

2. "மேற்கூறிய செய்யுளிற் (மதுரை திருப்பணி மாலை யிலுள்ள ஒரு பாட்டு) கூறப்பட்டுள்ள ஆனந்ததாண்டவ நம்பி அம்பிகையின் சந்நிதிக் கோபுரம் கட்டுவித்த காலம் சாலிவாகன சகாப்தம் 1150 (கி.பி. 1227—28) என்று மதுரைக் கோயி லொழுகு தெரிவிக்கின்றமையால், ஆனந்ததாண்டவ நம்பி என்பவர் இற்றைக்கு 700 வருஷங்களுக்கு முந்தியிருந்தாரென்று மட்டும் ஒருவாறு தெரிகின்றது. அதற்குமுன் இந்நூலுடையார் காலம் இவ்வளவினதென்று தெரியவில்லை." திருவாலயுடையார் புராணம். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு. முகவுரை பக்கம் 19.

புராணத்தை எழுதியிருக்க வேண்டும் என்றும் இக் காலத்துத் தமிழ்ப் புலவர் ஒருவரின் துணிபு.[1] இந்த முடிபு ஏற்றுக் கொள்ளத் தக்கதாய் இருக்கிறது. ஆகவே தமிழிலுள்ள இந்த முதல் திருவிளையாடற் புராணம் மதுரையில் பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதியில் சுமார் கி. பி. 1230—40-ல் தோன்றிற்று என்று கொள்ள லாம்.

இந்தத் திருவிளையாடற் புராணத்தில் தான் சிவ பெருமானுக்கும், தமிழ், தமிழ்ச் சங்கம், தமிழ்ப் புலவர் சிலருக்கும் தொடர்பு கூறும் திருவிளையாடல்கள் எல் லாம் முதல் முதலாகத் தமிழில் விரிவாய்ப் புராணப் பாங் குடன் கூறப் பெற்றிருக்கின்றன. இந்த நூல் இலக்கிய சரித்திர ஆராய்ச்சிக்கு மிகவும் இன்றியமை யாததாய் அமைந்திருக்கிறது. சங்கப் பலகை கொடுத்த திருவிளையாடல், குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளை யாடல், ஊமை தமிழறிந்த திருவிளையாடல், கிழியறுத்த திருவிளையாடல், நக்கீரனைக் கரையேற்றின திருவிளை யாடல், இடைக்காடன்பின் போன திருவிளையாடல் முதலியவைகளில் பல விபரங்களும் கதைகளும் காணப் பெறுகின்றன. மதுரையில் அக்காலத்தில் இருந்த யாரோ ஒரு சிறந்த தமிழ்ப் புலவர், இந்தப் புராணத்தி லுள்ள விபரங்களையும், தமது கற்பனையையும் பயன் படுத்தி களவியல் உரையை எழுதியிருக்கிருர் என்று தெரிகிறது. ஆகையால் இறையனுர் அகப்பொருள் உரை சுமார் கி. பி. 1240-ல் இயற்றப் பெற்றிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

இறையனுர் அகப்பொருள் உரையின் பாயிரத்துள் கூறப்பெற்ற ஒரு முக்கியமான விஷயம் தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்ற மூவகைச் சங்கங்

1. *தமிழ் இலக்கிய வரலாறு* (13, 14, 15 *நூற்ருண்டுகள்*) *டி. வி. சதாசிவ பண்டாரத்தார் பக்கம்* 6.

கள் இருந்தன என்பதாம். இந்த விபரம் களவியல் உரைகாரருக்கு எங்கிருந்து கிடைத்தது என்னும் விஷயம் ஆராயத்தக்கது. பழைய தொகை நூல்களில் மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்ததைப் பற்றிக் குறிப்பு ஒன்றும் இல்லை என்று முன்னர்க் கூறியிருக்கிறோம். அப்பர் திருஞானசம்பந்தர் மாணிக்கவாசகர் சேக்கிழார் நம்பியாண்டார் நம்பி கல்லாடத்தின் ஆசிரியர் ஆகியோரின் நூல்களில் சங்கத்தைப் பற்றிய குறிப்புகள் எல்லாம் சிவபெருமானோடும், அவருடைய திருவிளையாடல்களோடும் சம்பந்தப்படுத்தியே கூறியிருப்பதுமன்றி, அவை ஒரே ஒரு சங்கத்தையே சுட்டிக் காட்டுகின்றன. "மதுரைத் தொகையாக்கினானும்" என்ற தேவாரத் தொடரிலிருந்தும், சங்கப் பலகை கொடுத்த திருவிளையாடலிலிருந்தும், சிவபெருமானே இச் சங்கத்தைத் தோற்றுவித்தார் என்ற கருத்து எழுகிறது. ஆகவே, மூன்று சங்கங்கள் இருந்தன என்பதைப் பற்றி, பழைய குறிப்புகள் ஒன்றும் இல்லை. முதல் முதலாக, பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவாலவாயுடையாரின் திருவிளையாடற் புராணத்தில் தான் முதற் சங்கம், இடைச் சங்கம் ஆகியவைகளைப் பற்றிப் பிரஸ்தாபம் செய்யப்பட்டிருக்கிறது.[1] இந்தப் பாட்டு கடல் சுவற வேலெறிந்த திருவிளையாடல் அதிகாரத்தின் இறுதியில் காணப்பெறுகிறது.

"மனத்தின்பம் பயக்கும் பொன்மதிட்டங்குந் தமிழ்க்
கூடற்றனித்தென்றுஞ் சிறக்குந் தண்டமிழ்ச் சங்கந்
தனைப்பண்பி
னிணைக்குங்கண் முதற்சங்க மிடைச்சங்க நிலைத்தாகு
மினிச்சங்கம் புனற்கங்கைக் கரைப்பங்கின்
புறத்தென்ப."

---

1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு. பக்கம் 81.

இந்தப் பாட்டிலிருக்கும் கருத்தைத்தான் களவியல் உரைகாரர் எடுத்துக் கையாண்டிருக்கிருர் என்று தெரிகிறது. இந்தக் கருத்தையே நடு நாயகமாக வைத்துக் கொண்டு, பண்டைத் தமிழ் இலக்கியத்தைப் பற்றியும் பாண்டிய வம்சத்தின் சரித்திரத்தைப் பற்றியும் தமக்குத் தெரிந்த விபரங்களேப் பயன்படுத்திக் களவியல் உரைகாரர் தமது பாயிரத்தை எழுதியிருக்கிருர். அதில் தலேச் சங்கம், இடைச் சங்கம் ஆகியவைகளேப் பற்றிக் கூறப் பெற்றிருக்கும் விபரங்களுக்கு, அவைகளில் சில பண்டைத் தமிழ்ப் புலவர்கள், நூல்கள் ஆகியவைகளின் பெயர்கள் காணப்பெற்ற போதிலும், எவ்வித ஆதாரங்களும் இல்லே. அவை நம்பத் தகுந்தவை அல்ல; பெரும்பாலும் வெறும் கற்பனேயாகவே தோன்றுகிறது. கடைச் சங்கத்தைப் பற்றிச் சொல்லப் பட்டிருக்கும் விஷயங்களும், முழுவதும் கற்பனேயாக இல்லாவிட்டாலும், தெளிந்த சரித்திரப்பான்மை உடையன அல்ல என்பது வெளிப்படை.

களவியல் உரையில் காணப்பெறும் இன்னெரு முக்கியமான விஷயம் இறையனர் அகப்பொருள் என்ற அந்த நூலே சிவபெருமானே இயற்றித் தந்தார் என்பது. இது திருவிளேயாடல் கருத்துக்களில் ஒன்ருயிருந்த போதிலும், களவியலுக்கு இப்போதுள்ள உரை தோன்றுவதற்கு முன்பு முக்யத்வம் பெற்றிருந்ததாகத் தெரியவில்லே. சைவ சமயாசாரியர்களோ, நம்பி அகப்பொருள் ஆசிரியரோ, இளம்பூரணரோ இறையனர் அகப் பொருளுக்கு முக்யத்வம் கொடுத்து அதைக் குறிப்பிட்டதாகத் தெரியவில்லே. சேக்கிழார்தான் தமது பெரிய புராணத்திலுள்ள திருநாவுக்கரசு நாயனர் புராணத்தில் "திருவாலவாயமர்ந்த செஞ்சுடரைச் செழும் பொருணூல் தருவானே" என்றும், திருஞான சம்பந்தர் புராணத்தில் "நூலின்கட் பொருள் பாடி

நூலறிவார்க் கீந்தானே" என்றும் சிவபெருமான் அகப் பொருள் பாடித் தந்த கதையைத் தெளிவாகக் கூறு கிறார். இந்த விஷயம் கல்லாடத்திலும் இரண்டு பாட் டுக்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.[1] கல்லாடம், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்த நூல் என்று சில அறிஞர் கருதுவது சரியாய் இருக்க லாம். அதில் கூறப் பெற்றிருக்கும் இந்த விபரம் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதால், அதிலிருந்து எடுக் கப் பெற்றதாகக் கொள்ளலாம்.[2] ஆகவே, களவியல் உரைகாரரும், இறையனார் அகப்பொருள் செய்யப் பெற்ற சூழ்நிலை சம்பந்தமாயுள்ள விபரங்களை எல்லாம்,

---

1. "உலகு இயல் நிறுத்தும் பொருள் மரபுஒழுங்க
மாறனும் புலவரும் மயங்குறு காலை,
முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கால்,
'அன்பின் ஐந்திணை' என்று அறுபது சூத்திரம்
கடல் அமுது எடுத்துக் கரையில் வைத்ததுபோல்,
பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டி, மற்று அவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென்தமிழ்க் கடவுள்."

கல்லாடம் 3.

இதே விஷயம் இந்த நூலின் 66-ம் பாட்டிலும் காணப்பெறு கிறது. கல்லாடத்தின் காலத்தைப் பற்றிச் சிலர் கி. பி. 9 அல்லது 10-ம் நூற்றாண்டு என்றும், வேறு சிலர் 11-ம் நூற்றாண்டு என்றும் கொண்டிருக்கிறார். இந்தக் கருத்துக்கள் ஏற்றுக் கொள்வதற் கில்லை. கல்லாடம், திருவால வாயுடையார் புராணம், இறையனார் அகப்பொருள் உரை ஆகியவைகளுக்குப்பின் எழுந்த நூல் என்று தோன்றுகிறது. திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணத் தில் தான் முதல் முதலாகத் தமிழில் சிவபெருமானின் திருவிளை யாடல்கள் அறுபத்துநான்கு என்று தொகுக்கப் பெற்றிருக்கிறது. இதைக் கல்லாடத்தின் ஆசிரியரும் எடுத்தாண்டிருக்கிறார். கல் லாடத்திற்கு, சமய வழியில் முக்யத்வம் இருந்தும், அதிலுள்ள நூறு பாடல்களும் நல்ல இலக்கியச் சுவையுடனிருந்தும், உரை யாசிரியர்கள் இவைகளை எடுத்தாளாததால் இந்த நூல் பிந்திய காலத்தைச் சேர்ந்தது என்ற கருத்து பொருத்தமாய் இருக்கும்.

2. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம். சங்கப் பலகை கொடுத்த திருவிளையாடல், 12, 19.

வேம்பத்தூரார் திருவிளையாடற் புராணத்திலிருந்தே எடுத்துச் சில வேறுபாடுகளுடன் புனைந்திருக்கிறார் என்று ஊகித்தல் தவிர்க்க முடியாதது. பாண்டிய நாட்டில் பனிரண்டு ஆண்டுகள் மழையில்லாமல் வறட்சி ஏற்பட்டு அதனாலுண்டான இன்னல்களைப் பற்றிய பிரஸ்தாபம் திருவிளையாடலில் இந்திரன் முடிமேல் வளை யெறிந்த கதையில் காணப்பெறுகிறது. இவ்வாறு ஒரு வறட்சி காலம் பாண்டிய நாட்டில் இருந்தது என்ற கருத்து வெகு காலமாக இருந்து வந்திருக்கிறது. இது மணிமேகலையிலும் குறிப்பிடப் பெற்றிருக்கிறது.[1] சிலப்பதிகாரத்திலும் பாண்டி நாடு வெகு காலம் மழையில்லாமல் பஞ்சத்திற்குள்ளாயிற்று என்ற ஒரு செய்தி காணப்படுகிறது. இவைகளை எல்லாம் அடிப்படையாக வைத்துக் கொண்டு களவியல் உரைகாரர், இறையனார் அகப் பொருள் செய்யப்பெற்ற சூழ்நிலையைப் பற்றி ஒரு கதையைச் சமைத்திருக்கிறார் என்று புலப்படுகிறது.

ஆகவே, களவியல் உரை பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவிளையாடல் தோன்றிய பிறகே எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்து வலியுறுகிறது. கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் நடுவில் இறையனார் அகப் பொருளுக்கு உரை எழுதிய புலவர், அதற்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன் எழுதப்பெற்ற பாண்டிக் கோவைப் பாட்டுக்களை மேற்கோள்களாகக் காட்டியிருப்பாரா என்ற ஒரு ஐயம் பிறக்கலாம். இதற்குத் தகுந்த விடை அளிக்க வேண்டும். பாண்டிய வம்சத்தின் சரித்திரத்தைச் சற்று ஊன்றிப் பார்த்தால் இந்த விடை எளிதில் கிடைக்கும். பண்டைத் தமிழ் நாட்டின்

---

1. பன்னீராண்டு பாண்டி நன்னாடு பன்னுயிர்மடிய
   மழை வள மிழந்தது.'

   மணிமேகலை காதை 14-வரிகள் 55—56

சரித்திரத்தை நோக்க வேண்டும். கிறிஸ்து சகத்திற்கு சில நூற்றுண்டுகளுக்கு முன்னிருந்து சுமார் கி. பி. மூன்ரும் நூற்ருண்டு வரை மதுரையிலிருந்தும், அதற்குத் தெற்கேயுள்ள கொற்கையிலிருந்தும் பாண்டிய மன்னர் மிகுந்த சிறப்புடன் ஆண்டு வந்தார். இவ்வாறு ஆண்டு வந்த பல மன்னரைப் பற்றி சரித்திரப் பான்மையுடைய தெளிவான விபரங்கள் தெரிய முடியவில்லை யாயினும், அவர்களைப் பற்றி சில விஷயங்கள் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் காணப் பெறுகின்றன. அவர் புகழுடன் அரசு நடத்தினுர் என்பது வட மொழியிலுள்ள இராமாயணம் மகாபாரதம் ஆகிய நூல்களில் சிதறிக் கிடக்கும் குறிப்புக்களிலிருந்தும் அசோகரின் கல் வெட்டுக்களிலிருந்தும் நன்ருய்த் தெரிகிறது. கி. பி. மூன்ரும் நூற்ருண்டிலிருந்து ஆரும் நூற்ருண்டு வரை பாண்டிய மன்னர் வலி குன்றினுர். அவர் நாட்டைக் களப்பிரர் என்பவர் கைப்பற்றி ஆண்டார். ஆரும் நூற்ருண்டின் இறுதியில் கடுங்கோன் என்ற பாண்டிய வம்சத்தரசன் களப்பிரரை வென்று பாண்டிய வம்சத்தின் ஆட்சியை மீட்டினுன். கடுங்கோன் காலத்திலிருந்து சுமார் பத்தாம் நூற்ருண்டு வரை பாண்டியரின் சாம்ராஜ்யம் பரவி வளர்ந்து கீர்த்தியுடன் நடைபெற்றது. இந்தக் காலத்தில் வாழ்ந்தவரில் அரிகேசரி பராங்குச மாற வர்மனும், வரகுணனும் வீரத்திலும் சமயப்பற்றிலும் சிறந்தவர்கள். அரிகேசரியின் வீரத்தைப் பற்றியே பாண்டிக் கோவை பெரும்பாலும் கூறுகிறது. கி. பி. பத்தாம் நூற்ருண்டுக்குப்பின் பாண்டியரின் பலம் மீண்டும் குறைந்ததால், அவர் சோழருக்குக் கீழிருந்து, கப்பம் கட்டிச் சிற்றரசராகவே வாழ வேண்டியிருந்தது. இந்த நிலைமை கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டு வரை இருந்தது. அந்த நூற்ருண்டில் பாண்டிய மன்னர் தங்களுடைய சுதந்தரத்தைப் பெற்றதுமன்றி மற்ற நாடுகளையும் வென்று

இழந்த பழைய புகழையும் வலியையும் மீண்டும் பெற்ருர். இந்த நூற்ருண்டின் முற்பகுதியில் முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியனும், இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனும் பிற்பகுதியில் முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியனும், முதல் மாறவர்மன்குலசேகர பாண்டியனும் பெரும் புகழுடனும் வீரத்துடனும் ஆண்டு, பல நாடுகளை வென்று பாண்டியரின் சாம்ராஜ்யத்தைப் பெருக்கி, தங்களுடைய பழைய குலப் பெருமையை நிலை நாட்டினுர்கள். கி.பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் நடுவில்தான் இறையனுர் அகப்பொருளின் உரை, மதுரையில் வசித்த ஒரு சிறந்த தமிழ்ப் புலவரால், வேம்பத்தூரார் திருவிளையாடல் புராணம் தோன்றியபின் எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்று கூறியிருக்கிருேம். அக் காலத்தில் பாண்டிய குலமும் மதுரைப் பதியும் ஓங்கிய புகழுடன் விளங்கியதால், அப்பதியில் வீற்றிருக்கும் திருவாலவாயுடையார் இயற்றியதாகக் கருதப்பெற்ற இறையனுர் அகப் பொருளின் உரைக்கு, அந்தக் குலத்தின் முன்னேனுகிய அரிகேசரி பராங்குச மாறவர்மனைப் பற்றித் தோன்றியிருந்த பாண்டிக் கோவையின் செம்மையான பாடல்களை மேற்கோள்களாகக் களவியல் உரைகாரர் கொடுத்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. இதுதான் பொருத்தமானது என்று உரைகாரர் கருதியிருப்பார். சிவபெருமானை "தண்ணுர் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை" என்று மாணிக்கவாசகர் கூறியதிலிருந்து திருவாலவாயுடையாருக்கும், பாண்டிய வம்சத்திற்கும், தமிழுக்கும் இருந்த நெருங்கிய தொடர்பு விளங்குகிறது; இந்தத் தொடர்பிலிருந்தே இறையனுர் அகப்பொருளின் உரையில் பாண்டிக் கோவையின் பாடல்கள் எடுத்தாளப் பெற்றதின் பொருத்தமும் விளங்கும்.

இந்த நூல் விமரிசனக் கட்டுரை இல்லை என்று முன்னர்க் கூறியிருக்கிறோம். எனினும் இறையனார் அகப் பொருளின் உரையின் இலக்கிய நயங்களைச் சிறிதாவது கூறாது இந்தப் பகுதியை முடித்தால் அது குறையுடையதாகும் என்ற எண்ணம் உதிக்கிறது தமிழில் உள்ள உரை நூல்களில் எல்லாம் இதுவே சில அம்சங்களில் தலைசிறந்தது. அதன் உரை நடைக்குச் சில உதாரணங்கள் முன்னர்க் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதன் வாக்கியங்களில் காணப்பெறும், வார்த்தைகள் அடுக்கடுக்காகச் சேர்க்கப்பட்டிருக்கும் நேர்மையும், அவை பல இடங்களில் எதுகை மோனையுடனும் ஓசைப் பண்புடனும் விளங்கும் அழகும், பொருட் பொலிவுள்ள உவமைகளும் பிற அணிகளும் இந்த வசன நடைக்குக் கவிதைத்தன்மை அளித்திருக்கின்றன. களவியல் உரைகாரரின் தமிழ் சங்க காலத் தமிழ் அல்ல; பின்னர் தோன்றிய காப்பிய காலத் தமிழ். பொருளைத் தெளிவாக விளக்குவதிலும், வாதங்களைக் காரணங்கூறி எழுப்புவதிலும் களவியல் உரையாசிரியரின் திறமை ஒப்புயர் வற்றது. அவருடைய சக்தியும் அலங்காரமும் ஒருங்கே வாய்ந்த வசன நடை, தமிழ் இலக்கியத்திற்கு அது முன் கண்டிராத ஒரு புதுமை ஆயிற்று. இந்த நடையைத்தான் பின்னர் அடியார்க்கு நல்லார், பேராசிரியர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரிய மன்னர்கள் முன் மாதிரியாக எடுத்துக்கொண்டார்கள் என்று கூறலாம். இறையனார் அகப்பொருள் அதன் உரையாலேயே புகழ்பெற்றது.

## V. தொல்காப்பிய உரைகளும் பிற உரைகளும்

இனி அடுத்தபடியாகத் தொல்காப்பிய உரைகளைக் கவனிக்க வேண்டும். இவ்வுரைகள் எல்லாம், மொத்தத்தில் இறையனுர் அகப்பொருள் உரையைவிட இலக்கிய நயங்களிலும் தமிழ் ஆராய்ச்சித் துறையிலும் அதிக சிறப்புப் பெற்றவை. இடைக் காலத்தில் தொடர்ந்து நடைபெற்ற தமிழ் ஆராய்ச்சியின் விளைவாகவே தொல்காப்பிய உரைகள் தோன்றின. பண்டைத் தமிழ் நூல்களில் தொல்காப்பியம் மிகவும் முக்கியமானது என்பது தமிழ்ப் புலவர் எல்லோரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. அகத்தியம், அவிநயம் போன்ற சிறந்த பண்டைத் தமிழ் இலக்கண நூல்கள் அநேகமாக முழுவதும் அழிந்த நிலைமையில், தொல்காப்பியம் முழுவதும் பாதுகாக்கப்பட்டு வந்திருப்பது தமிழரின் பாக்கியம். இதை ஒரு அற்புதம் என்றுகூடச் சொல்லலாம். இவ்வித அற்புதம் நிகழ்ந்ததற்குக் காரணம் என்ன என்று ஆராய்தல் நலம். எண்ணிறந்த புலவர் அதைப் பயின்றதாலும் உரையாசிரியர் பலரின் நாட்டம் அதன்மீது செலுத்தப்பட்டதாலும்தான் தொல்காப்பியம் இன்று சிதைவின்றி நமக்குக் கிடைத்திருக்கிறது. இத்தகைய உரையாசிரியர்கள் தோன்றியிராவிட்டால் தொல்காப்பியத்தின் பெரும் பகுதி அகத்தியத்தைப் போல் அழிந்து போயிருக்கும். ஆகையால் அவர் இருவிதப் பணியை ஆற்றியிருக்கிறுர். தொல்காப்பிய சூத்திரங்களுக்குப் பொருள் கூறி அவைகளை மேற்கோள்கள் காட்டி விளக்கியதும், நூலின் மூலத்தை நலிந்து போகாமல் காப்பாற்றியதுமே இவ்விரு விதப் பணி ஆகும்.

தமிழ் மொழிக்கும் இலக்கியத்திற்கும் நிலை பேறுடைய பேரிலக்கணமாகத் தொல்காப்பியம் விளங்குகிறது. அது எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று வகையாகப் பிரிக்கப் பெற்றிருக்கிறது. ஒவ்வொரு பிரிவும் ஒன்பது இயல்புகளைக் கொண்டது. தொல்காப்பியத்திலுள்ள எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும், தமிழ் மொழியின் அமைப்பையும், அந்த மொழியில் அடங்கும் எழுத்துக்கள் சொற்கள் ஆகியவற்றின் பிறப்பு, வளர்ச்சி, சேர்க்கை முதலியவைகளைப் பற்றிய விதிகளையும், தமிழ் மொழிக்கே உரிய சில மொழி இயல் தத்துவங்களையும், மிகவும் நுட்பமாயும் விரிவாயும் கூறுகின்றன. அதன் பொருள் இலக்கணம் நூற் கலையின் ஒரு அற்புதம் என்றே கூறலாம். இலக்கியப் பொருளை எல்லாம் அகப் பொருள், புறப் பொருள் என்று கொண்டு ஒவ்வொரு பொருளுக்கும் திணை, துறை முதலியவைகளை வகுத்த பண்டைத் தமிழ் இலக்கிய முறைகளையும் சம்பிரதாயங்களையும் இப்பகுதி தெளிவாக விளக்குகிறது. இந்தப் பொருள் பாகுபாடு எந்த அளவு தமிழுக்கே உரியது என்பதை முதற் பாகத்தில் ஆராய்ந்திருக்கிறோம். தொல்காப்பியத்தின் பொருள் பகுதியிலேயே யாப்பிலக்கணமும் அணி இலக்கணமும் அமைந்திருக்கின்றன; பாக்கள், நூல் வகைகள், உரை வகைகள் ஆகியவற்றின் இலக்கணமும், அவைகளைச் சார்ந்த எத்தனையோ கொள்கைகளும் பண்டைத் தமிழ் இலக்கிய மரபுகளும் பொருளதிகாரத்தில் காணப்பெறுகின்றன. அத்துடன் பண்டைத் தமிழ்ப் புலவர் கொண்ட இலக்கிய தத்துவங்கள், கற்பனை முறைகள், கோட்பாடுகள் ஆகியவைகளைப் பற்றிய நுண்ணிய கருத்துகள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. தொல்காப்பியம் ஒரு இலக்கண நூலாயிருந்த போதிலும், அதிலுள்ள பல சூத்திரங்கள், சொற்

திட்பத்துடனும், கட்டமைப்புடனும் இலக்கிய நயங்களுடனும் அமைந்திருக்கின்றன. கிறிஸ்து சகத்தின் தொடக்கத்தில் தொல்காப்பியம் போன்ற ஒரு முதிர்ந்த இலக்கணமும் கலைக் களஞ்சியமும் தமிழில் இருந்திருப்பது அதன் பழமைக்கும் பெருமைக்கும் நல்ல சான்ருகும். தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரம் முதற் பாகத்தில் ஆராயப்பெற்றிருக்கிறது.

தொல்காப்பியத்தைப் பற்றி இரண்டு பொதுவான விஷயங்களை முதலில் கூற வேண்டும். இன்றுள்ள பண்டைத் தமிழ் நூல்களுக்கு எல்லாம் தொல்காப்பியம் தான் இலக்கணம். இருந்த போதிலும் அதில் காணப் பெறும் சில இலக்கண விதிகளும் மரபுகளும் பண்டைக் காலத்திலேயே வழக் கொழிந்திருந்தன என்று தெரிகிறது. அவை வழக்கில் இருந்திருந்தால், இன்று நமக்குக் கிடைத்திருக்கும் பண்டைத் தமிழ் இலக்கியத்தின் காலத்திற்கு முன்னுல் இருந்திருக்க வேண்டும். இதனுல் தான் தொல்காப்பியம் இடைச் சங்கத்திற்கும் இலக்கணம் என்ற மரபு தோன்றியிருக்க வேண்டும்.

இரண்டாவதாக தொல்காப்பியத்தின் காலத்திற்கு முன்னுலேயே தமிழுக்கு வடமொழியின் தொடர்பு ஏற்பட்டிருந்தது என்பதை அந்த நூல் தெளிவாகக் காட்டுகிறது.[1] வட மொழியிலுள்ள இலக்கியமும் சமய நூல்

---

1. தொல்காப்பியம் சொல்லதிகாரத்திலுள்ள சில சூத்திரங்கள் இவை.

இயற் சொற்றிரி சொற்றிசைச் சொல் வடசொலென்
றனைத்தே செய் யுளீட்டச் சொல்லே.

தொல் சொல் 391

வடசொற் கிளவி வட வெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே.

தொல் சொல் ......

சிதைந்தன வரினும் மியைந்தன வரையார்

தொல் சொல் 396

களும், அவை காட்டக்கூடிய நாகரிகமும் சமுதாயக் கோட்பாடுகளும், சமயப் பண்பாடுகளும் தமிழ் நாட்டில் ஓரளவு நிலைத்திருந்தன என்பதையும் தொல்காப்பியம் தெளிவாக்குகிறது. இதனால் தமிழரின் வாழ்விலும், நாகரிகத்திலும் இலக்கியத்திலும் கலைகளிலும் சில

---

மரபியலில் வழி நூலுக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பிய சூத்திரமாவது.

> தொகுத்தல் விரித்தல்தொகை விரி மொழி பெயர்த்
> ததர்ப்பட யாத்த லோடனை மரபினவே.

**தொல் பொருள் 652**

சொல்லதிகாரம் எச்சவியல் முதல் சூத்திரத்தில், செய்யுளில் வரக்கூடிய நான்கு வகைச் சொற்களில் வட சொற்களும் ஒன்று என்று சொல்லப்பட்டிருக்கிறது. மரபியல் சூத்திரத்தில் வழி நூல் வகை நான்கில் மொழி பெயர்த்தலும் ஒன்று என்று தெளிவாக்கப்பட்டிருக்கிறது. இதற்கு இளம்பூரணர் "வடமொழிப் பனுவலை மொழி பெயர்த்துத் தமிழ் மொழியாற் செய்தலும் என்றவாறு" என்று பொருள் கூறுகிறார். 'மொழி பெயர்த்தென் பது பிறபாடையாற் செய்யப்பட்ட பொருளினைத் தமிழ் நூலாகச் செய்வது. வேதப் பொருண்மையும், ஆகமப் பொருண்மையும், நியாய நூற் பொருண்மையும் பற்றித் தமிழ்ப் படுக்குங்கால் அவற் றிற்கும் இதுவே இலக்கணம் என்றற்கு மொழி பெயர்த்தலையும் இவற்றுக்கட் கூறினனென்பது" என்கிறார் பேராசிரியர். தொல் காப்பியம் இயற்றப்பெற்ற காலத்தில் தமிழில் மொழிபெயர்க்கக் கூடிய நூல்கள் பெரும்பாலும் வடமொழியிலேயே இருந்தன. சிறிதளவு பாலியிலும் பிராகிருதங்களிலும் இருந்திருக்கலாம். திராவிட மொழிகளை எடுத்துக்கொண்டால் மலையாளம் அப்போது பிறக்கவில்லை. தெலுங்கும் கன்னடமும் குழவிப் பருவத்தில் இலக்கியவளமின்றி ஒருகால் இருந்திருக்கலாம். ஆகையால், மொழி பெயர்த்தல் என்பதை வடமொழியிலிருக்கும் நூல்களைக் குறிக்கும் என்று இளம்பூரணர் காட்டியிருப்பது பொருத்தமாயிருக் கிறது. அதுவே தொல்காப்பியரின் கருத்து என்பதில் ஐயம் இல்லை.

மாறுதல்கள் நேர்ந்தன; புது இயக்கங்களும் தோன்றின. இவைகளின் பயனாகவே நாயன்மார்கள் ஆழ்வார்கள் ஆகியோரின் தெய்வத் தமிழ்ப் பாடல்களும், சற்றுப் பின்னர் தமிழ் இலக்கியத்தின் தனிப்பெரும் சிகர மாயுள்ள கம்ப ராமாயணமும், புராணங்களில் தலை சிறந்த பெரிய புராணமும் போன்ற அரிய நூல்களும் தோன்றின. தொல்காப்பியர் காலத்திலேயே இருந்த வடமொழித் தொடர்பு வளர்ந்து கொண்டே வந்ததைத் தான் தமிழ் இலக்கிய சரித்திரம் காட்டுகிறது. இந்த சரித்திர உண்மையை ஒருவராலும் அழிக்க முடியாது. இன்று தமிழ்ப் புலவரில் ஒரு சாரார் இந்த உண்மையை மறந்து விடலாம் அல்லது ஒதுக்கி விடலாம் என்று கருதுவது தமிழரின் பண்பாட்டுக்குகந்ததல்ல.[1] தற்காலத் தமிழின் வளர்ச்சிக்கும் ஏற்றதல்ல.

இப்போது அகப்பட்டிருக்கும் தொல்காப்பிய உரைகளில் காலத்தால் முந்தியது இளம்பூரணம். இந்த உரையைச் செய்தவர் இளம்பூரணர். இவர் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று

---

1. இவ்விதத் தொடர்பின் விளைவாகத் தமிழின் தூய்மை ஒழிந்ததென்றும், தமிழ் நாட்டின் சமுதாயத்திலும் சமய வாழ்விலும் விரும்பத் தகாத மாறுதல்கள் ஏற்பட்டனவென்றும் கருதுபவர்கூட இந்த சரித்திர உண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார். "வட சொற்கள் பயிலுதற்கு இந்நூலுள் (தொல்காப்பியத்தில்) விதி வகுத்திருப்பதால் ஆரியரோடு தமிழர்க்குத் தொடர்பு இவ்வாசிரியர் காலத்தே ஏற்பட்டிருத்தல் கூடுமென்பது யூகிக்கப்படும்" கா. சுப்பிரமணிய பிள்ளை. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம். முகவுரை பக்கம் 3. (1944).

"இவ்வகைத் தனிச் சிறப்புப் பொருந்திய இத்தமிழ் இலக்கணத்துள்ளும் ஆரிய மொழிகள் சிலவற்றையும், ஆரியர் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும், ஆரியர் கொள்கைகள் சிலவற்றையும் இந்நூலாசிரியன் நுழைத் திருத்தலை ஆங்காங்கு காணலாம்" தொல்காப்பியம் இளம்பூரணம். பதிப்புரை வ. உ. சிதம்பரம் பிள்ளை (1928).

முன்னர்க் கூறியிருக்கிறோம். இவர் துறவியாயிருந்தார் என்பது சிலப்பதிகாரத்திற்கு உரை செய்த அடியார்க்கு நல்லாரும், நன்னூலுக்கு உரை செய்த மயிலைநாதரும் இவரைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதிலிருந்து தெரிகிறது. இவரை இளம்பூரண அடிகள் என்றே கூறியிருக்கிறார்[1] உரையாசிரியர் என்றும் இவரை முன்னோர் கூறி வந்திருக்கிறார்.

தொல்காப்பியத்திற்கு முதலாவதாக இளம்பூரணர் தான் உரை செய்தார் என்று வெகு காலமாகத் தமிழ்ப் புலவர் கருதி வந்திருக்கிறார். இக்காரணத்தால் தான் இவரை உரையாசிரியர் என்ற சிறப்புப் பெயரால் அவரைக் குறிப்பிட்டார் என்றும் கூறப்படுகிறது. இந்த விஷயம் ஆராய்ச்சிக்குரியது. சேனவரையர் போன்ற சிலர் இளம்பூரணரை உரையாசிரியர் என்று கூறியிருப்பது உண்மையே. ஆனால் வேறு சிலர் உரையாசிரியர் இவ்வாறு கூறியிருக்கிறார் என்று குறிப்பிட்டிருக்கும் விஷயங்கள் இப்போது கிடைத்து அச்சிடப்பட்டிருக்கும் இளம்பூரணரின் உரையில் இல்லாததால் உரையாசிரியர் எனப்படுபவர் வேறொருவரோ என்று கருத இடமுண்டு.[2] இளம்பூரணருக்கு முன்பு தொல்காப்பியத்திற்கு உரைகள் இருந்திருக்க வேண்டும்

---

1. "உரையாசிரியரான இளம்பூரணவடிகள்" சிலப்பதிகாரம். அடியார்க்கு நல்லார் உரை. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு பக்கம் 230.

நன்னூலின் 359-வது சூத்திர உரையில் மயிலைநாதர் எழுதுவதாவது:— "இஃது ஒல்காப் புலமைத் தொல்காப்பியத்துள் உளங்கூர் கேள்வி இளம்பூரணர் எனுமேதமின் மாதவரோதிய உரையென்றுணர்க." நன்னூல். மயிலைநாதம். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு பக்கம் 237.

2. செந்தமிழ் 12-ம் தொகுதி. பக்கம் 65. திரு. ந. வேங்கடசாமி நாட்டார் எழுதிய கட்டுரையைப் பார்க்க.

என்பது அவருடைய உரையிலிருந்தே தெரிய வருகிறது. இவ்வித உரைகளை இளம்பூரணரே குறிப்பிடுகிருர் என்று திரு. கா. நமசிவாய முதலியார், தமது இளம்பூரணம் சொல்லதிகாரப் பதிப்பின் முகவுரையில் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிருர்.[1] ஆகையால் இன்றுள்ள உரைகளில்தான் இளம்பூரணரின் உரை முந்தியது என்று கொள்ள வேண்டும். இவர் தொல்காப்பியம் முழுவதற்கும் உரை செய்திருக்கிருர். இவருடைய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் பொருளதிகாரம் உரைகள் தனித்தனியாகப் பலரால் அச்சிடப்பெற்று வெளி வந்திருக்கின்றன.

இளம்பூரணரின் வாழ்க்கையைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. இவரே களவியல் உரைகாரராயிருக்கலாம் என்ற திரு. மு. இராகவய்யங்கார் கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதில்லை என்று முன் அத்தியாயத்தில் விளக்கி யிருக்கிறேம். திருக்குறளுக்கு, இப்போது மணக்குடவர் உரை என்று வழங்கிவருவது இளம்பூரணரால் எழுதப்பெற்றது என்றும் அவர் அத்துடன் கொங்குவேள் மாக்கதை என்ற பெருங் கதைக்கும் ஒரு உரை எழுதியிருந்தார் என்றும் ஒரு தமிழ் அறிஞர்

---

1. "அன்றியும் ஒருவன் (4, 20, 29); ஒரு திறத்தார் (4, 41, 45, 259); ஒருவன் சொல்லுவது (6. 17); ஒருசார் ஆசிரியர் (17, 33, 43); என்பாரும் உளர் (24, 26); ஒரு கருத்து (51, 53, 252); இரு திறத்தார் ஆசிரியர் (92); ஒரு சாரார் (222, 259, 261); இப் பகுதியர் ஆசிரியர் (236) எனக் கூறுவதை நோக்கின், இவ்வுரையாசிரியருக்கு முன்பே தொல்காப்பியத்திற்குப் பல்லோர் உரை வழங்கி வந்ததென்பது நன்கு விளங்கும்.—இளம்பூரணம் சொல்லதிகாரம் கா. நமசிவாய முதலியார் பதிப்பு முகவுரை பக்கம் 4. இத்தனை குறிப்புகளும், உரை யொன்றும் எழுதாமல் வெறும் தொல்காப்பிய பாடங்களைச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களைக் குறிக்கலாம் என்று கொள்வது பொருத்தமில்லை.

கருதுகிறார்.[1] இந்தக் கருத்துக்குப் போதிய ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. தொல்காப்பியம் முழுவதற்கும் இளம்பூரணர் எழுதியிருக்கும் உரை அவருடைய புகழைத் தகுந்தபடி நிலைநாட்டி யிருக்கிறது. ஆகையால் பிறர் எழுதிய உரைகளை இளம்பூரணர் மீது ஏற்றும் ஊகம் செய்ய வேண்டியதில்லை.

இளம்பூரணரின் உரையில், மற்றவரால் எழுதிச் சேர்க்கப்பட்ட இடைச் செருகல் பகுதிகள் இருப்பதாகச் சில தமிழ் அறிஞர் கருதி வந்திருக்கிறார். சேனாவரையர், தமது தொல்காப்பியச் சொல்லதிகார உரையில், இளம்பூரணரின் கருத்துக்களையும், சில சூத்திரங்களுக்கு அவர் கூறும் உரையையும் குறிப்பிட்டு மறுத்திருக்கிறார். அவ்வாறு மறுக்கும் பகுதிகளில், பல இடங்களில் 'அவர்க்கு (இளம்பூரணருக்கு) அது கருத்தன்று என்க', 'அவர்க்கு அது கருத்தன்மை அறிக', 'அதனால் அது கருத்தன்று என்க' என்று சேனாவரையர் கூறுகிறார்; வேறு சில இடங்களில் 'அது போலி உரை என்க' என்றும் சொல்

---

1. இளம்பூரணவடிகளும் மணக்குடவரும் டி. வி. சதாசிவ பண்டாரத்தார். செந்தமிழ் தொகுதி 42. பக்கம் 152—156. இதற்கு ஆதாரமாக இளம்பூரண தொல்காப்பிய உரை சிறப்புப் பாயிரம் என்று 'தண்கடல சைவள' என்ற வரியுடன் தொடங்கும் ஒரு பாட்டைக் காட்டியிருக்கிறார். அத்துடன் இளம்பூரணர் உரையிலும் மணக்குடவர் குறளுரையிலும் உள்ள சில கருத்தொற்றுமைகளையும் காரணங்களாகக் கூறுகிறார். செந்தமிழ் (1922 நவம்பர்) 20-ம் தொகுதி, 11-ம் பகுதியில் 503-ம் பக்கத்தில் மேலே கூறப்பட்ட பாட்டு திரு. த. மு. சொர்ணம் பிள்ளை என்பவர் அனுப்பி பிரசுரிக்கப்பட்ட தென்றும், அந்தப் பாயிரப் பாட்டை தொல்காப்பிய இளம்பூரணப் பதிப்பாசிரியர் ஒருவராவது குறிப்பிடாததால், அது போலிப் பாட்டு என்றும், அதை ஆதாரமாகக் கொண்ட கருத்துகள் வலியுடையன அல்ல என்றும் அதே செந்தமிழ்ப் பகுதியில், திரு. சதாசிவ பண்டாரத்தாரின் கட்டுரைக்குப் பதிலளித்து அதன் உதவி ஆசிரியர் திரு. டி. கே. இராமநுஜய்யங்கார் எழுதியிருக்கிறார்.

கிறார்.[1] இதிலிருந்து இளம்பூரணருக்கு இது கருத் தன்று என்று குறிக்கும் பகுதிகளை எல்லாம் சேனு வரையர், அவைகளை இளம்பூரணர் எழுதினதாகக் கொள்ளவில்லை என்றும், வேறு புலவரின் செருகல்கள் என்று கொண்டார் என்றும் சொல்லப்படுகின்றது இந்த வாதம் எம்மட்டிலும் வலியுடையது என்று சொல்ல முடியாது. ஏனென்றால் ஒரே ஆசிரியர் எழுதி யிருக்கும் நூல்களிலும் முரண்பாடான கருத்துக்களைக் காணலாம்.

---

1. உதாரணங்களாக, சேனுவரையர் சொல்லதிகாரச் சூத்தி ரங்கள் 50, 51 ஆகியவைகளின் உரையில் கூறியிருப்பதாவது:—

சூ. 50 "இன்று இவ்வூர்ப் பெற்ற மெல்லாமறங் கறக்கும் உழ வொழிந்தன என உரையாசிரியர் காட்டினாராலோ வெனின்: பெற்றமென்னும் பொதுப் பெயர், கறத்தலும் உழுதலுமாகிய சிறப்பு வினையால் பொதுமை நீங்குதல் வழுவன்மையான் ஈண்டைக் கெய்தாமையின், அவர்க்கது கருத்தன் றென்பது."

சூ. 51 "இருதிணைப் பெயரும் விராய் வந்து ஒரு திணைச் சொல் லான் முடிதல் வழுவாயினும் செய்யுளகத்தமைக என திணை வழு அமைத்தவாறு.

"பாணன் பறையன் துடியன் கடம்பனென்று
இந்நான் கல்லது குடியுமில்லை."

என இருதிணைப் பெயரும் விரவி வாராது உயர்திணைப் பெயரே வந்த செய்யுளுள் அஃறிணை முடிபு கொண்டன என்று உரையாசிரியர் கூறினாராவெனின்: பாணன் முதலா யினாரைக் குடியென்று சுட்டிய வழிக் குடிக்கேற்ற தொகை கொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை என்க." தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனுவரையம். சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு. பக்கம் 42—43.

உரையாசிரியர் உரையில் இடைச் செருகல்கள் இருக்கும் பொருள் பற்றி செந்தமிழ் தொகுதி 21 பகுதி 9 பக்கம் 495 பார்க்க. தொல்காப்பிய உரையாசிரியருரை. செந்தமிழ் தொகுதி 19. பகுதி 3. பக்கம் 73-78. டி. என். அப்பனையங்கார். இந்தக் கட்டுரையும் மேற்படி பொருளைப் பற்றியுள்ளது.

இளம்பூரணரின் உரைத் திறனைத் தமிழ்ப் புலவர் நன்கு அறிவர். அவர் தொல்காப்பிய சூத்திரங்களின் சொற்களுக்கு நேரான பொருளை எளிய முறையில் சுருக்கமாகச் சொல்லக் கூடியவர்; பொருளை விளக்கு வதற்குத் தேவையான அளவுக்கு மாத்திரம் விபரங் களையும் குறிப்புகளையும் எழுதிப் போவார்; மேற்கோள் களை அதிகமாகக் கொட்ட மாட்டார்; கூடுமான வரை யிலும் பழைய தமிழ்ப் பண்பையும் மரபையும் தழுவியே சூத்திரங்களுக்கு உரை கூறுவர். அவர் சூத்திரங்களுக்கு எளிய முறையில் பொருள் கூறுவதையே முக்கியமாகக் கருதினர்.[1] ஆதலால் இலக்கியச் சிறப்புகள் வாய்ந்த தமிழ் உரை நடையைக் கையாள அவர் முயலவில்லை என்று சொல்லலாம். தொல்காப்பிய உரைகளைப் பற்றி பழைய வழக்கு ஒன்று உண்டு: எழுத்துக்கு இளம் பூரணமும், சொல்லுக்கு சேனவரையமும் பொருளுக்கு நச்சினர்க்கினியமும் என்பதுதான் இந்த வழக்கு. அந்தக் காலத்தில் பேராசிரியரைப்பற்றி புலவர் நன்ருய்த் தெரிந்து கொள்ளவில்லை என்று தோன்று கிறது. பொருளுக்குப் பேராசிரியமும், நச்சினர்க்கினி யமும் என்ற ஒரு சிறு திருத்தத்துடன் பழைய வழக்கை இன்றும் நாம் ஏற்றுக்கொள்ளலாம். சில அம்சங்களில், சேனவரையரும், பேராசிரியரும், நச்சினர்க்கினியரும் இளம்பூரணரை விட அதிக உரைத்திறம் படைத்தவர் கள் என்பது உண்மையே. ஆனல் மொத்தமாகத் தொல் காப்பியம் முழுவதற்குமுள்ள உரையைக் கவனித்தால்,

1. *தொல்காப்பிய இளம்பூரணத்தை, காலஞ்சென்ற திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையின் உதவி கொண்டு பதிப்பித்த திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளை, தாம் தொல்காப்பியத்தின் பொருளதி காரத்திற்குத் தனியாக ஒரு எளிய உரை எழுதத் திட்டமிட்டிருந்த தாகவும். இளம்பூரணரின் பொருளதிகார உரையைப் பார்த்த பிறகு அதையே பதிப்பித்தால் போதுமென்று முடிவு செய்ததாகவும், தமது பதிப்புரையில் கூறியிருப்பது நோக்கத்தக்கது.*

இளம்பூரணர் மேலே கூறிய மூவருக்கும், அவரை விட புகழ் குறைந்தவரான தெய்வச் சிலையாருக்கும் கல்லாட ருக்கும் மேலானவர் என்று துணிந்து கூறலாம். இளம் பூரணர் துறவியாயிருந்தும், தமிழ் இலக்கியப் பணியில் ஈடுபட்டது தமிழ் மொழி மீது அவருக்கு இருந்த பேரன் பைக் காட்டுகிறது. பின்வந்த எல்லா உரையாசிரியர்கள் இவரைத் தங்கள் தலைவராகவே கருதியிருப்பதும் இளம்பூரணரின் பெருமையை விளக்குகிறது.

இடைக்காலத் தமிழ் உரையாசிரியரில் பேராசிரி யருக்கு உன்னதமான ஸ்தானம் உண்டு. பேராசிரியரின் வாழ்க்கையைப் பற்றி, அவருக்கு முன்னிருந்தவரின் வாழ்க்கையைப் போலவே ஒன்றும் தெரியவில்லை. யாப் பருங்கல விருத்தி உரை ஒரு பேராசிரியரைக் குறிப் பிட்டு அவர் செய்ததாக உள்ள சில சூத்திரங்களை மேற் கோள்களாக எடுத்தாள்கிறது.[1] இவர் தொல்காப்பியத் திற்கு உரை எழுதிய பேராசிரியர் அல்ல என்பது வெளிப்படை; ஏனென்றால் இவர் யாப்பருங்கல விருத்தி உரைகாரருக்குச் சில நூற்றுண்டுகள் பிந்தியவர். தொல் காப்பியம் மரபியலைச் சேர்ந்த ஒரு சூத்திர உரையில் பேராசிரியர் பாயிரங்களைப் பற்றிக் கூறும்போது, தொல்காப்பியத்திற்கு 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்ற முதல்வரியை யுடைய பொதுப் பாயிரஞ் செய்தான் ஆத்திரையன் பெயராசிரியன் என்று கூறி யிருப்பதை முதற் பகுதியில் குறிப்பிட்டிருக்கிறோம். இவ்வாறு குறிப்பிடப்பெற்ற ஆத்திரையன் பெயராசி ரியனே உரையாசிரியரான பேராசிரியராக இருக்கலாம் என்று சிலர் கருதுகிறார். இது கொஞ்சமும் பொருத்த

---

1. யாப்பருங்கலவிருத்தியில் கூறப்பெற்றிருக்கும் பேரா சிரியர் என்பவர் 'மயேச்சுரர் யாப்பு' என்ற நூலை எழுதினவராக இருத்தல் வேண்டும் என்று அந்த நூலின் முகவுரையில் அதன் பதிப்பாசிரியர் கூறியிருப்பது ஆராய்ச்சிக்குரியது.

மில்லை. தன்மைப்படர்க்கையில் தம்மையே பேராசிரியர் கூறிக் கொள்கிறார் என்று பெயரொற்றுமையினால் மாத்திரம் ஊகிப்பது சரியல்ல. ஆகவே தொல்காப்பியத்திற்கு உரை செய்து புகழ்பெற்ற பேராசிரியர் மேலே கூறப்பெற்ற இருவரினும் வேறானவர். கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த சிறந்த தமிழ்ப் புலவர் என்று முன் அத்தியாயத்தில் கூறப்பெற்றிருப்பதுதான் பொருத்தமானது.

பேராசிரியர் தொல்காப்பியம் முழுவதற்கும் உரை செய்தாரா என்ற விஷயம் ஆராய்ச்சிக்குரியது. இப்போது அவர் செய்ததாக அச்சிட்டு வெளிவந்திருக்கும் உரை பொருளதிகாரத்தைச் சேர்ந்த மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கியல்களுக்கே உளது. இந்தப் பகுதியும் முன்னால் நச்சினார்க்கினியரின் பொருளதிகார உரையோடு சேர்த்து அச்சிடப்பெற்றதால் சிறிது குழப்பமும் ஏற்பட்டது.[1] பொருளதிகாரம் முழுவதற்கும் பேராசிரியர் உரை செய்திருக்கவேண்டும் என்பதற்குச் சில தெளிவான சான்றுகள் இருக்கின்றன.[2] இவர் எழுத்ததிகாரம்

---

1. 1885-ல் தமிழறிஞர் சி. வை. தாமோதரம் பிள்ளை வெளியிட்ட தொல்காப்பிய பொருளதிகாரம் நச்சினார்க்கினியர் உரைப் பதிப்பில், மெய்ப்பாட்டியலிலிருந்து பின்னருள்ள பகுதிகளுக்குள்ள உரை பேராசிரியருடையது. இது மதுரைச் தமிழ்ச்சங்க வித்துவான். ரா. இராகவய்யங்காரின் கூரிய ஆராய்ச்சியின் மூலம் பின்னர் தெரியவந்தது.

**செந்தமிழ் தொகுதி. 2 பகுதி. 9 பக்கம் 367.**

2. "நச்சினார்க்கினியர் தொல்காப்பிய அகத்திணை இயல் 46-ஆம் சூத்திர உரையில், பேராசிரியரும் இப்பாட்டில் 'மீனெறி தூண்டிலெ'ன்பதனை ஏனையுவமம் என்றார் என்று கூறியவற்றால் பேராசிரியர் அகத்திணை இயலுக்கும் ஏனைய புறத்திணை இயல் முதலியவைகளுக்கும் உரை இயற்றியுள்ளனர் என்று தெரிகிறது. மேலும் பேராசிரியர்தானே, மெய்ப்பாட்டியல் 19-ஆம் சூத்திரத் துரையில் 'அகத்திணை இயலுட் கூறினும்' என்றும், செய்யுளியல்

சொல்லதிகாரம் ஆகியவைகளுக்கும் உரை செய்தார் என்று சிலர் கருதுகிறார். இந்தக் கருத்துக்குப் போதிய சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை.[1] ஆகவே பொருளதிகாரத்தின் பிற்பகுதியிலுள்ள நான்கு இயல் களுக்கும் நமக்குக் கிடைத்திருக்கும் பேராசிரியரின் உரையை வைத்தே அவரது பெருமையை அறிய முயலவேண்டும்.

பேராசிரியர் காலத்தைப் பற்றி, இறையனார் அகப் பொருள் உரையை ஆராய்ந்த முன் அத்தியாயத்தில் கூறி யிருக்கிறோம். இவர் நன்னூல் ஆசிரியர், இளம் பூரணர், களவியல் உரைகாரர் ஆகியோருக்குப் பின்னும்

---

188-ஆம் சூத்திர வுரையுள் 'அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணை யுள்ளும் காட்டப்பட்டன' என்றும், 190-ஆம் சூத்திர வுரையில் 'ஒழிந்தளவுங் கற்பியலுட் கூறியவாற்றானறிக' என்றும் கூறியவை கள் இவர் பொருளதிகாரம் முழுமைக்கும் உரை இயற்றியுள்ளார் என்பதை உறுதிப்படுத்தும்'' என். கே. சீனிவாசன் - பிரசுரம் செய்யப் பெற்றிராத ஒரு அருமையான கட்டுரை. மேலே யுள்ள குறிப்பில் முதல் வாக்கியத்தில் செய்யப்பெற்ற அநுமானம் பொருந்தாது. ஏனென்றால் நச்சினார்க்கினியர் ஏனை யுவமம் வந்த செய்யுளுக்கு, குறுந்தொகை 'யானே யீண்டையேனே' (54) என்ற பாட்டை உதாரணமாகக் காட்டி, பேராசிரியரும் தமது குறுந் தொகை உரையில் அவ்வாறு கூறியிருப்பதை மேற்கோளாகக் காட்டுகிறார். நச்சினார்க்கினியரின் வாசகத்திலிருந்து டாக்டர் உ. வே. சாமிநாதய்யரும் 'இதனால் பேராசிரியர் குறுந்தொகைக்கு உரை யெழுதி யிருத்தல் வலியுறுகிறது' என்று எழுதி யிருப்பதும் கவனிக்கத் தக்கது. (குறுந்தொகை டாக்டர் - உ. வே. சாமி நாதைய்யர் முதற்பதிப்பு முகவுரை. மூன்றும் பதிப்பு 1955 - பக்கம் 14). மற்ற மூன்று சான்றுகளும் தெளிவா யிருக்கின்றன.

1. ''பேராசிரியச் சொல்லதிகாரம் கரந்தை தமிழ்ச் சங்கத்தா ரால் அச்சிடப்பெற்று முடிந்து விரைவில் வெளிவரும் நிலைமையில் இருக்கிறது.'' என்று வ. உ. சிதம்பரம் பிள்ளை தமது தொல்காப் பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணம் பதிப்பின் முகவுரையில் எழுதி யிருக்கிறார். ஆனால் அவர் குறிப்பிடும் இந்த உரை பேரா சிரியரது என்று முடிவாய்த் தெளியக்கூட வில்லை. இது தெய்வச் சிலையாரின் உரையோ என்று ஐயுற இடமிருக்கிறது. தொல் காப்பிய உரைகளின் குழப்பத்திற்கு இதுவும் ஒரு சான்று.

அடியார்க்கு நல்லார், சேனாவரையர் ஆகியோருக்கு முன்னும் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் நடுவில் வாழ்ந்தவர் என்பதைத் தெளிந்த முடிவாகக் கொள்ளலாம்.[1] ஒட்டக்கூத்தர் பாட்டிற்குப் பேராசிரியரும் நேமிநாதரும் பட்டோலை பிடித்தார் என்ற செய்தியைக் கூறும் ஒரு பாட்டு தமிழ் நாவலர் சரிதையில் காணப்பெறுகிறது. இது உண்மையானால் அதில் குறிப்பிடப்படும் பேராசிரியர் வேறொருவராக இருக்கவேண்டும். ஆனால் இந்தச் செய்திக்கு வேறொரு ஆதாரமும் இல்லை. தமிழ்

---

1. "செய்யுளியல் 132-ஆம் சூத்திர வுரையில் 'அவரும் இக் கருத்துக்கேற்ப முகத்திற் படுந்தரவினை முகமெனவும், இடை நிற்பனவற்றை இடைநிலையெனவும், இறுதிக்கண் முரிந்து மாறும் சுரிதகத்தினை முரி எனவும் கூறினார் என்று கூறியதையே, அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரம் கடலாடு காதை 35-ஆம் அடியில் 'பெயர் கொடுத்தார் செய்யுளியலின் கண்ணும்' என்று கூறியதாகக் கொண்டால் பேராசிரியர் அடியார்க்கு நல்லாருக்கு முன்னிருந்தவராவார். மேலும் பேராசிரியர் உரையிற் காணப்படும் சில உரைச் சூத்திரங்களை அடியார்க்கு நல்லார் எடுத்தாள்கின்றனர். அதனாலும் பேராசிரியர் அடியார்க்கு நல்லார் காலத்துக்கு முற்பட்டார் என்று கூறலாம். மரபியல் 94-ஆம் சூத்திர வுரையில் "தன்னானொரு பொருள் கருதிக்கூறலென்பது, மலைபடு கடாத்தினை ஆனந்தக் குற்றமென பிற்காலத்தானொருவன் ஒரு சூத்திரம் காட்டுதலும், பதமுடிப்ப தென்பதோ ரிலக்கணம் படைத்துக் கோடலும் போல்வன' என்று காணப்படுகின்றன. இதில் மலைபடுகடாத்தினை ஆனந்தக் குற்றம் என்று கூறியது ஆளவந்த பிள்ளையாசிரியர் என்று நச்சினார்க்கினியர் உரையால் அறியக் கிடக்கிறது. ஆதலின் பேராசிரியர், ஆளவந்த பிள்ளையாசிரியருக்குப் பிற்பட்டவர். பதமுடிப்பு இலக்கணம் கூறியது நன்னூலார் என்று கொண்டால் இப்பேராசிரியர் நன்னூலார் காலத்துக்குப் பிற்பட்டவராவார். சேனாவரையர் 'எல்லா மென்னும்' என்னுஞ் சூத்திரவுரையில் 'எல்லா மென்பது எஞ்சாப் பொருட்டாய் வருவதோ ருரிச்சொல் என்பாருமுளர்' என்றார். திருக்கோவையார் (151) உரையில் எல்லாம் என்பது முழுதும் என்றும் பொருள்படுவதோர் உரிச்சொல் என்றார் பேராசிரியர்" பேராசிரியர் - பிரசுரிக்கப் பெறாத ஒரு குறிப்பு திரு. என். கே. சீனிவாசன்.

நாவலர் சரிதை மிகவும் பிந்திய நூல். புலவரைப் பற்றி அதில் காணப்பெறும் கதைகள் எல்லாம் நம்பத்தகுந் தவை அல்ல; அவை உண்மைச் செய்திகள் அல்ல.

இன்று பேராசிரியரின் தொல்காப்பிய உரையின் பெருமைகளைப் பற்றி அதிகமாய்க் கூறவேண்டியதில்லை. அதைக் கூர்மையாக ஆராய்ந்தால், பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய தத்துவங்களையும் மரபுகளையும் இக்காலத்தார் தெளிவாக அறிந்துகொள்ளும் முறையில் பேராசிரியர் விளக்கி யிருப்பது தெளிவாகும், கவிதை, இலக்கியம் பற்றி, முறையாகவும் மிகுந்த நுட்பமாகவும், தகுந்த மேற்கோள்களுடனும் வேறு எந்த உரையாசிரியரும் பேராசிரியரைப் போல் ஆராய்ச்சி வன்மையுடன் வரையவில்லை. இவர் உரை எழுதிய தொல்காப்பியத்தின் பகுதிக்கு இவருடைய உரையே மிகச் சிறந்தது என்பதில் கருத்து வேறுபாடு இருக்கமுடியாது. இவர் கையாண்டிருக்கும் தமிழ் உரைநடையும் வலியுடையது. சூத்திரங்களுக்குப் பொருள் கூறும்போது அவைகளைத் தெளிவாய்த் தெரிந்துகொள்வதற்கு அவசியமான பல விஷயங்களையும் குறிப்புகளையும் உரைத்திருக்கிறார். பேராசிரியருடைய உரையில் இலக்கிய விமரிசனப் பண்பு காணப்பெறுகிறது. இலக்கிய மரபுகளையும் தத்துவங்களையும் விளக்குவதில் அவர் அரிய தீர்க்க திருஷ்டியையும், முற்போக்குப் பான்மையையும் காட்டி யிருக்கிறார். இதற்கு ஒரு உதாரணம் கொடுப்பது பொருத்தமா யிருக்கும்.

செய்யுளியலில் உள்ள 'மரபேதானு, நாற்சொல்லிய லான் யாப்பு வழிப்பட்டன' என்ற சூத்திரத்திற்குப் பேராசிரியர் அற்புதமாக உரை எழுதி யிருக்கிறார். அதில் அவர் கூறுவதாவது :—

"எனவே சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தார் வழங்குமாற்றானே செய்யுள் செய்க என்பதாயிற்று.

இதனது பயன், ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும், பொருள் வேறுபடுதலும் உடைய. அதொளி, இதொளி, உதொளி எனவுங்கு யின் எனவும் நின்ற இவை ஒரு காலத்துளவாகி இக் காலத்திலவாயின. இவை முற்காலத்துளவென்பதே கொண்டு, வீழ்ந்த காலத்துஞ் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்துளவாயினுங் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற், பாட்டினுந் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கணமாகலி னென்பது. இனிப் பாட்டினுந் தொகையினும் உள்ள சொல்லே மீட்டொரு காலத்திற்கு உரித்தன்றிப் போயின், முற்காலத்துளவென்பதே கொண்டு, பிற் காலத்து நாட்டிச் செய்யுள் செய்யப்பெறு என்பது. இனிப் பொருளும் இவ்வாறே காலத்தானும் இடத் தானும் வேறுபடுதலுடைய. ஒரு காலத்து அணியுங் கோலமும் ஒரு காலத்து வழங்காதன வுள. ஓரிடத்து நிகழும் பொருள் மற்ருேரிடத்து நிகழாதனவு முள. அவ்வக்காலமும் இடனும் பற்றி செய்யுள் செய்ய வேண்டுமென்பது. ஒரு காலத்துக் குழை பெய்தா ரென்றும், ஒரு காலத்துக் குழல்பட முடித்தாரென்றும், ஆண் மக்களை ஒழிந்த காலத்தும் அது கூருர். பதி னெண் பாடை தேசிகமாக்கள் அணியினையுங் கோலத் தினையும் விரவிக்கூருது அவ்வந் நாட்டார் பூணு மாற்ரு னும் புனையுமாற்ருனு ஏற்பச் சொல்லுதல் மரபு. இனி நான்கு நிலத்தினும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்துள வாகச் சொல்லுதலும், உலகொடு மலைதலுஞ் சமயங்க ளொடு மலைதலுங் கலையொடு மலைதலும் பிறவும் இன் ஞேரன்னவும் பொருண் மரபின்பாற் பட்டடங்கும். இடை நாடக வழக்கின் ஆமென்பது முன்னர் அகத் திணை இயலுட் கூறினேம்"

மேலே கொடுக்கப்பட்ட பகுதியின் இறுதி வாக்கியத்திலிருந்து பேராசிரியர் பொருளதிகாரம் முழுவதற்கும் உரை செய்திருக்கலாம் என்று கருதலாம். காலத்தால் ஏற்படக்கூடிய மாறுதல் எவ்வளவு இயற்கையானது என்றும் இந்த நியதி இலக்கியத்திற்கும் பொருந்தும் என்றும் உள்ள தத்துவத்தை எவ்வளவு ஆர்வத்துடனும் அழகுடனும் பேராசிரியர் கூறி யிருக்கிறார். இது போல், அவருடைய அறிவாற்றலையும், சிந்தனைத்திறனையும் எழுத்துவன்மையையும் காட்டக்கூடிய, பல குறிப்புகள் அவருடைய தொல்காப்பிய உரையில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

மாணிக்கவாசகரின் திருக்கோவையாருக்கும் குறுந்தொகையிலுள்ள முதல் 380 பாடல்களுக்கும் பேராசிரியர் உரை செய்தார். திருக்கோவையாரின் உரை முழுதுவதும் கிடைத்து அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த உரையின் ஆசிரியர் யார் என்பதைப் பற்றி வெகு காலமாகக் குழப்பம் வாய்ந்த கருத்துக்களே நிலவி வந்திருக்கின்றன. இந்த உரை செய்தது, தொல்காப்பிய உரையாசிரியரான பேராசிரியர்தான் என்று இப்போது நாம் நிச்சயமாய் முடிவு கட்டலாம்.[1] திருக்கோவையாருக்குள்ள

1. இந்த உரையை எழுதினவர் சேனாவரையர் என்று தஞ்சைவாணன் கோவைக்கு உரை செய்த சொக்கப்ப நாவலர் கொண்டார் - ஆறுமுகநாவலரின் செம்மையான திருக்கோவையார் பதிப்பில் உரை நச்சினார்க்கினியரால் எழுதப்பெற்றது என்று முற்காலத்து அறிஞராலும், பேராசிரியரால் ஆக்கப்பெற்றது என்று பிற்காலத்து அறிஞராலும் கருதப்பெறுகிறது என்று ஒரு குறிப்பு காணப்பெறுகிறது- பிரயோக விவேகம் என்ற இலக்கண நூலை இயற்றியவரான ஆழ்வார் திருநகரி சுப்பிரமணிய தீக்ஷிதரும், திருக்குறள் பரிமேலழகர் நுண்பொருள் மாலை என்ற அரிய நூலை ஆக்கிய திருமேனி ரத்தின கவிராயரும் இத் திருக்கோவையாரின் உரை பேராசிரியரால் எழுதப்பெற்றது என்று தெளிவாகக் கூறியிருப்பது ஏற்றுக்கொள்ளத்தக்கது. திருக்குறள் பரிமேலழகர் உரை நுண்பொருள் மாலையில் கூறப்பட்டிருப்பதாவன: "கோவையாருள் 'கொள்ளப்படாது' என்பதற்குப் பேராசிரியரு மிவ்வா

பேராசிரியரின் உரை சிறந்தது என்பதும் அதைப் பல புலவர் நன்ருகப் பாராட்டி வந்திருக்கிருர்கள் என்பதும் உண்மையே. உரையுடன் துறைகளைக் கூறும் சூத்திரங்களையும் திட்பத்துடனும் சொல்லழகுடனும் அவரே இயற்றிச் சேர்த்திருப்பது பாராட்டத் தக்கது. இருந்தபோதிலும் பேராசிரியரின் தொல்காப்பிய உரைக்கு இணையாக அவருடைய திருக்கோவையார் உரையைக் கூற முடியாது. தொல்காப்பிய உரை கோவையார் உரையைவிடச் சாலச்சிறந்தது; அதிகமான நயங்களையுடையது. ஒரே ஆசிரியரின் நூல்களாய் இருந்தபோதிலும் திருவாசகம், கவிதைத் தன்மையிலும் இலக்கிய அழகுகளிலும், திருக்கோவையாரை விட எவ்வாறு உயர்ந்ததோ அதேபோல் பேராசிரியரின் தொல்காப்பிய உரை, திருக்கோவையார் உரையைவிட உயர்ந்தது என்று கருதலாம். குறுந்தொகைக்குப் பேராசிரியர் எழுதியதாகக் கருதப்பெறும் உரை கிடைத்திலாமையால் அதைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை.

பேராசிரியருக்குப் பின்னர் தொல்காப்பியத்திற்கு உரை செய்த தெய்வச்சிலையார், கல்லாடர் என்ற இருவரையும் சுருக்கமாகக் குறிப்பிட்டுவிட்டு வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையருக்கும் 'உச்சிமேல் புலவர்கொள்' நச்சினார்க்கினியருக்கும் வரவேண்டும். தெய்வச்சிலையார் எழுதியதாக உள்ள தொல்காப்பியச் சொல்லதிகார உரை 1929-ல் பிரசுரிக்கப்பட்டது. இவர்

---

றுரைத்தார்" செந்தமிழ் தொகுதி 7 - பக்கம் 90. "வேயினமென்தோள் (282) என்னுங் கோவையாருட் 'பாயின் மேகலை' என்பதனை இச் சொற்கள் ஒரு சொன்னீர்மைப் படுதலின் ஆகுபெயரெனப் படுமென்றும், 'இயல் மன்னுமன்பு' என்னுங் கோவையாருள் (165) மன்னுமென்பதனைப் பெயரெச்சத்திற்கும், பெயர்க்கும் ஒரு சொன்னீர்மைப் பாடுண்மையின் ஒரு சொல்லென்றும், 'மாதுற்ற மேனி' ஆகுபெயரென்றும் பேராசிரியரும் உரைத்தார்" செந்தமிழ் தொகுதி 7 - பக்கம் 325.

சில இடங்களில் இளம்பூரணரின் உரைகளை மறுத்த லால் அவருக்குப் பிந்தியவர் என்றும், சேனுவரையர் தெய்வச்சிலையாரின் உரைகள் சிலவற்றை மறுப்பதால், அவருக்கு முந்தியவரென்றும் ஊகிக்கப்படுகின்றன. தெய்வச்சிலையார் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் பிற்பாதியில் இருந்தவர் என்று கூறலாம். தொல் காப்பியச் சொல்லதிகாரத்திற்குத் தெய்வச்சிலையார் என்பவரின் உரை ஒன்று இருப்பதே பலருக்கும் தெரி யாது. அது வெகுவாகப் பயிலப் பெறவில்லை என்று தான் கொள்ளவேண்டும். இவர் உரையில் தம்மைப் பற்றியோ மற்ற உரையாசிரியரைப் பற்றியோ ஒருவிதக் குறிப்பும் இல்லை. சில சூத்திரங்களுக்கு இவர் வேறு பாடம் கொண்டிருக்கிருர்; உரையில் சூத்திரங்களின் வைப்பு முறையிலும் சில வேறுபாடுகள் காணப்பெறு கின்றன. தெய்வச்சிலையார். சூத்திரங்களுக்கு நேரான முறையில் இளம்பூரணரைப் போல் பொருள் கூறுகிருர் என்றும், பிற உறைகளில் காணப்பெருத சில பொருள் விசேஷங்களை இவருடைய உரையில் பார்க்கலாம் என்றும் தமிழ் அறிஞர் கருதுகிருர். இவர் சிறந்த வட மொழிப் பயிற்சி பெற்றிருந்தவர் என்பதற்கு அவர் உரை சான்று பகர்கிறது. நச்சிஞர்க்கினியரும் சிவஞான முனிவரும் தெய்வச்சிலையாரின் உரையைக் குறிப்பிட் டிருக்கிருர்கள். இவரைப்பற்றிய சரித்திர விபரங்கள் ஒன்றும் தெரியவில்லை.[1] கல்லாடர் என்ற ஒருவரும்

---

1. தெய்வச்சிலையார் ஆகுபெயர் சூத்திர வுரையில் 'பிறந்த வழிக் கூறல்' என்பதற்கு 'வேளான்காணி' என்பது அவ்விடத்துத் தோன்றிய ஆடையை உணர்த்தும்' என்று சொல்லி யிருப்பதி லிருந்து அவர் சோணுட்டிலுள்ள வேளான்காணி என்ற ஊரிலோ, அல்லது அதற்கு அருகிலுள்ள ஏதாவது ஒரு ஊரிலோ பிறந் திருக்கலாம் என்றும், அந்தணர் குலத்தைச் சேர்ந்தவர் என்றும், சைவசமயி என்றும் ஒரு கட்டுரையில் காணப்படுகின்றன.

செந்தமிழ் தொகுதி 28. பக்கம் 457.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரை எழுதி யிருப்பதாகத் தெரிகிறது. இவர் வாழ்க்கையைப் பற்றி யும் யாதொன்றும் தெரியவில்லை. இவர்தான் கல்லாடம் என்ற நூலின் ஆசிரியரோ என்பதும் தெரியவில்லை. கல்லாடர் உரை சொல்லதிகாரம் முழுவதற்கும் இல்லை என்றும், உரையை ஆராய்ந்து பார்த்தால் அதில் பழைய உரைகளுக்குரிய நயங்கள் இல்லை என்றும் சில அறிஞர் கூறுகிறார்.[1] தெய்வச்சிலையார் உரையும், கல் லாடர் உரையும், பிற தொல்காப்பிய உரைகளைவிட நயங்களில் குறைந்திருக்கலாம். இருந்த போதிலும் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் பல புலவர், தொல் காப்பியத்தைப் பாராட்டி, அதன் மீது சிறப்பான நாட்டம் செலுத்தி, அதன் பயிற்சியை ஊக்குவிக்க உரைகள் எழுத முன் வந்தார் என்பதற்கு இவ்விரு உரைகளும் சான்றுகளாய் இருக்கின்றன என்ற விஷயமே நமது கவனத்திற்குரியது.

தொல்காப்பிய உரைகாரரில் அடுத்தாற்போல் கூற வேண்டியவர் சேனாவரையர். இவர் சொல்லதிகாரத் திற்கு மாத்திரம் உரை செய்தார். இந்த உரை சேனா வரையம் என்று வழங்குகிறது. இவர் திருநெல்வேலிச் சீமையில் கிழக்குப் பகுதியிலுள்ள ஆற்றூரைச் சேர்ந்தவர் என்றும், படைத்தலைவராகவோ, அல்லது படைத்தலைவர் ஒருவர் குடும்பத்தைச் சேர்ந்தவராகவோ இருந்திருக்க வேண்டும் என்றும், தமிழ்ப் புலமையும் வடமொழிப் பயிற்சியும் மிகுந்தவர் என்றும், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்றும் தக்க சான்றுகளுடன் கூறப்பட்டிருக்கின்றன.[2]

---

1. தொல்காப்பிய கல்லாடர் உரை திரு. டி. என். அப்பனைய் யங்கார். செந்தமிழ் தொகுதி 19 - பக்கம் 20 - 24.

2. சாசனத் தமிழ்க்கவி சரிதம். சேனாவரையர். மு. இராக வய்யங்கார் பக்கம் 108 - 114,

சேனாவரையம் நயங்கள் மலிந்த ஒரு உரை. அதன் ஆசிரியரை வட நூற்கடலை நிலைகண்டுணர்ந்தவர் என்று முன்னோர் கூறுவதுண்டு. தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் எழுதிய உரையை 1887-ஆம் வருஷம் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை முதலாவதாக அச்சிட்டு வெளியிட்டார். சேனாவரையம் தோன்றின நாள் முதல், வெகு சமீப காலம்வரை எல்லாத் தமிழ்ப் புலவராலும் பயிலப் பெற்றும் பாராட்டப் பெற்றும் வந்திருக்கிறது. ஆசிரியர் சிறந்த வடமொழிப் பயிற்சி பெற்றிருந்ததால் அதைப் பயன்படுத்தி தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்திற்கு உரை எழுதி அதன் நுட்பங்களை விளக்கி யிருக்கிறார். அவர் பொருள் கூறி வாதம் செய்யும் திறனும் போற்றத்தக்கது. முன்னர்க் கூறப் பட்டதுபோல் தொல்காப்பியச் சொல்லதிகார உரைகளில் சேனாவரையமே மிகச் சிறந்தது என்று முன்னோர் கருதி வந்தார். ஆனால் இன்று முன்னோரின் கொள்கைக்கு மாறாக, தமிழ்ப் புலமை நிறைவுக்கு வடமொழிப் பயிற்சியும் அறிவும் அவசியமில்லை என்று பல தமிழ் அறிஞர் கருதி வருவதால் அவர்கள் சேனாவரையருக்கு முன்னோர் கொடுத்த மதிப்பு கொடுப்பதில்லை என்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. இதனால் சேனாவரையத்தின் பெருமை குறைந்ததாகக் கருத முடியாது.

பழைய தொல்காப்பிய உரைகளில், மிகவும் பிந்தியதும், ஆனால் புகழில் அதிகம் சிறந்ததும் ஆனது நச்சினார்க்கினியம். நச்சினார்க்கினியர், சேனாவரையரைப் போல், தமிழிலும் வடமொழியிலும் அளவற்ற பாண்டித்யம் பெற்ற தமிழ்ப் புலவர். அவர் தொல்காப்பியம் முழுவதற்கும் உரை செய்தார். அவருடைய உரை அச்சிடப் பெற்று வெளியிடப் பெற்றிருக்கிறது. இன்றுள்ள தொல்காப்பிய உரைகளில் இளம்பூரணமும் நச்சினார்க்கினியமும்தான் நூல் முழுவதற்கும் உள்ளன. தொல்

காப்பியத்திற்கு உரை எழுதியதுடன் நச்சினார்க்கினியர் தமது இலக்கியப் பணியை நிறுத்திவிடவில்லை. எட்டுத் தொகையில் கவிதை வளம் நிரம்பிய கலித்தொகைக்கும், பண்டைத் தமிழ்ப் பாடல் களஞ்சியமாகிய பத்துப்பாட்டு முழுவதற்கும், ஐம்பெருங் காப்பியங்களில் சிறந்து விளங்கும் சீவகசிந்தாமணிக்கும் நச்சினார்க்கினியர் விரிந்த உரைகள் எழுதினார். குறுந்தொகையில் பேராசிரியர் எழுதாமல் விட்டிருந்த இருபது பாட்டுகளுக்கும் இவர் உரை கண்டார் என்பது பழைய மரபு. ஆனால் குறுந்தொகைக்கு இவரது உரையோ பேராசிரியர் உரையோ இப்போது கிடைக்கவில்லை. ஆகவே பண்டைத் தமிழ் நூல்களில், அதிகமானவைகளுக்கு மிக விரிந்த உரைகள் சமைத்தவர் நச்சினார்க்கினியர். தொல்காப்பிய உரையை மாத்திரம் கவனித்தால், நச்சினார்க்கினியரின் உரைகளில் பல நயங்களும் தெளிந்த விளக்கங்களும் காணப்பெறினும், மொத்தத்தில் இளம் பூரணம்தான் முதன்மையானது என்று முன்னர் கூறியதுபோல் கருதுவதுதான் பொருத்தம். ஆனால் ஒவ்வொரு புலவர் செய்த உரைகள் முழுவதையும் அதன் மூலம் ஆக்கப்பெற்ற தமிழ் இலக்கியப் பணியையும் கவனித்தால், தமிழ் உரையாசிரியர்கள் எல்லோரிலும் சிறந்து விளங்குபவர் நச்சினார்க்கினியரே. முன்னோர் கொண்ட முடிபும் இதுதான்.[1]

---

1. *ஆங்கிலத்திலும் தமிழிலும் நல்ல பயிற்சி பெற்ற சென்ற தலைமுறையைச் சேர்ந்த அறிஞரான திரு. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை தமது தமிழ் இலக்கியத்தின் (ஆங்கிலம்) சரித்திரத்தில் எழுதுவதாவது* :—"Nachinarkiniyar was the greatest and most popular of Commentators. His Commentaries are always *viruthis* or elaborate ones. In his commentary good prose writing is found...He always brought to bear on the great works he had chosen to annotate his clear and impartial mind, his vast erudition and his minute and critical observation". Tamil Literature: M. S. Puranalingam Pillai page 256.

நச்சினார்க்கினியர் மிகப் பழமையான காலத்தைச் சேர்ந்தவரல்ல; இடைக்காலத்தின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். அவ்வாறு இருந்தும் அவருடைய வாழ்க்கையைப் பற்றித் தெளிந்த விபரங்கள் கிடைக்கவில்லை. சென்ற தலைமுறையிலும் அதற்கு முந்திய தலைமுறையிலும் இருந்த தமிழறிஞரில் பெரும்பாலோர் நச்சினார்க்கினியர் பழமையான காலத்தவர் என்றும், இளம்பூரணர் முதலிய தொல்காப்பிய உரையாசிரியருக்கு முந்தியவர் என்றும் கருதினர். ஆனால் இப்போது பழைய தொல்காப்பிய உரையாசிரியரில் நச்சினார்க்கினியர் தாம் பிந்தியவர் என்று பொதுவாக தமிழ்ப் புலவர் ஒப்புக் கொள்கிறார்கள். அவர் மதுரையில் வசித்த பாரத்வாச கோத்திரத்தைச் சேர்ந்த அந்தணர் என்று அவருடைய உரையின் சிறப்புப் பாயிரத்திலிருந்து தெரிகிறது. அவர் வாழ்ந்த காலம் ஆராய்ச்சிக்குரியது. அவர் கி. பி. 14-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவரில்லை என்று ஒரு சிறந்த தமிழறிஞர் கருதுகிறார்.[1] வேறொரு தமிழ்ப் புலவர் நச்சினார்க்கினியர் கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ வாழ்ந்திருக்கவேண்டும் என்று முடிவு கட்டியிருக்கிறார்.[2] இந்த முடிவு சரியானதென்று கொள்ளமுடியாது. கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் தான் சேனாவரையரும், பரிமேலழகரும் வாழ்ந்தார்கள். அவ்விருவரும் நச்சினார்க்கினியரும் சமகாலத்தவரல்லர் என்பது வெளிப்படை. நச்சினார்க்கினியர் தமது சீவகசிந்தாமணி உரையில், முத்தி யிலம்பகத்தைச் சேர்ந்த 'நாடக நயந்து காண்பர்' என்ற 391-ஆம் செய்யுளுக்குப் பொருள்

1. டி. எஸ். குப்புசுவாமி சாஸ்திரி தமிழகம். முதற்தொகுதி பக்கம் - 91.

2. செந்தமிழ் தொகுதி 10. பகுதி 8 பக்கம் 168 நச்சினார்க்கினியர். எஸ். சாமிநாதய்யர்.

கூறும்போது, கோடகம் என்பதற்கு 'தாமம், முகுடம் பதுமம், கோடகம், கிம்புரி யென்னும் ஐவகையிற் சிகர மாய்ச் செய்தமுடி' என்று சொல்கிருர். இத்தக் குறிப்பு சூடாமணி நிகண்டு பெயர்ப் பிரிவிலுள்ள ஒரு பாட்டைத் தழுவி யிருக்கிறது என்று அறிஞர் கருதுகிருர்.[1] இது சரியானல் நச்சினர்க்கினியர் சூடாமணி நிகண்டின் ஆசிரியரான மண்டலபுருடரின் காலத்திலோ அவருக்குச் சற்று பின்னரோ இருந்திருக்கவேண்டும். நச்சினர்க் கினியர் குறிப்புக்கும் சூடாமணி நிகண்டுப் பாட்டுக்கும் உள்ள ஒற்றுமையை மறுத்தல் இயலாது. மண்டல புருடரின் காலம் விசயநகர சக்ரவர்த்தியான கிருஷ்ண தேவராயரின் காலம் என்பது பெரும்பாலான தமிழ் ஆராய்ச்சியாளரின் தெளிந்த முடிபு.[2] ஆகையால்

---

1. கடிகை சேகரங் கிரீடஞ் சூடிகை மௌலி
முடியின் பேரோராருகு முடிமாலேயே கரோடி
முடியுறுப் பைந்தாம் தாமமுகுடமே பதுமத்தோடு
நெடிய கோடகமேமற்று நேர்ந்த கிம்புரி யென்ருமே.

சூடாமணி நிகண்டு ஏழாவது செயற்கைவடிவப் பெயர்த் தொகுதி. 22 ஆறுமுக நாவலர் பதிப்பு பக்கம் 178.

2. மண்டல புருடர். மு. இராகவய்யங்கார் ஆராய்ச்சித் தொகுதி பக்கம் 474—485, சூடாமணி நிகண்டின் ஆசிரியரான மண்டல புருடர், தமது குருவாகிய ஒரு குணபத்திரரைப் போற்றி நூலின் பாயிரத்தில் பாடி யிருக்கிருர். அவர், நிகண்டின் ஒன்ப தாவது பாகத்தில் 10-ஆம் பாட்டில் 'கொடைமடம்' என்பதை விளக்கும் முறையில் 'கிருட்டிணராயன்' என்ற ஒரு அரசரைக் குறிப்பிட்டுப் புகழ்கிருர். இக்கிருட்டிணராயன் என்பவன் இராட்டிர கூட அரசன் இரண்டாவது கிருஷ்ணராசன் என்றும், இந்த அரசன் காலத்தவரும் வடமொழியில் மகாபுராணத்தின் பிற் பகுதியை கி. பி. 898-இல் எழுதி முடித்த குணபத்திராசாரியரே மண்டலபுருடர் குறிக்கும் குரு என்றும் தஞ்சை திரு. டி. எஸ். குப்புசாமி சாஸ்திரி கொண்டு, மண்டல புருடரின் காலம் கி. பி. ஒன்பது அல்லது 10-ஆம் நூற்ருண்டாக இருக்கவேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார். இவர் கூறும் வாதங்களை திரு. மு. இராகவய்யங்கார் பரிசிலனை செய்து கிருட்டிணராயன் என்று குறிப்பிடப்பட்ட அரசன் விசயநகர சக்கிரவர்த்தியா யிருந்த

நச்சினர்க்கினியர் கி. பி. பதினரும் நூற்ருண்டைச் சேர்ந்தவர் என்று ஏற்படுகிறது.

நச்சினர்க்கினியரின் உரைகளில், அவருடைய கடலனைய கல்வியும், செம்மையான பொருள் கூறும் திறனும், வாதாடும் ஆற்றலும், தெளிந்த தமிழ் ஆர்வமும் நன்ருய் விளங்குகின்றன. அவர் கூறும் பொருள்கள் நூற்றுக்கு நூறு சரியென்ருே அல்லது மற்றப் புலவர் அவைகளை முழுவதும் ஏற்றுக்கொள்வர் என்ருே சொல்லமுடியாது. செய்யுள்களுக்கு அவர் பதம் பிரித்துப் பொருள்காணும் முறையில் சில குறைகள் இருப்பதாகப் பல தமிழ் அறிஞர் கூறி யிருப்பதில் வலி இல்லை என்று கருதமுடியாது.[1] ஆனல் எல்லாத் தமிழ் உரையாசிரிடமும் சற்றுக்கூடவோ, குறைவாகவோ அமைந்திருக்கும் தன்மைதான் இது. ஆனல் மொத்தத்தில் இக்குறைகள் பொருட்படுத்த வேண்டிய அளவில் இல்லை. அவர் செய்திருக்கும் தமிழ் இலக்கியப் பணியோ இமயம் போன்றது. விருப்பு வெறுப்பின்றி ஊன்றி கவனித்தால் நச்சினர்க்கினியர் தமிழுக்குச் செய்திருக்கும் சேவை வேறு எந்தப் புலவரும் செய்திருப்பதாகக் கூறமுடியாது. இதை நன்ருய் உணர்ந்து தான் தமிழ்ப் புலவர் உலகம் அவர் தோன்றின நாள் முதல் நச்சினர்க்கினியரை அவருடைய பெருமைக்குரியவாறு போற்றி வந்திருக்கிறது. தமது உரைகள் மூலம் தமிழ் உரைநடையை உருவாக்கி வளம்பெறச் செய்தவர்களில் இவரே தலை சிறந்தவர். சிற்சில இடங்களில்,

கிருஷ்ண தேவராயர் என்றும், அவர் காலத்திலிருந்த ஒரு சமண ஆசிரியரான குணபத்ராச்சாரியாரே மண்டல புருடரின் குருவாய் இருந்திருக்கவேண்டும் என்றும் முடிபு கட்டியிருக்கிருர். இந்த முடிவு ஏற்றுக்கொள்ளத்தக்கது. காலஞ்சென்ற திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையும் இதே கருத்தைக் கொண்டார் (பதினரும் நூற்ருண்டு இலக்கியம். இலக்கிய சிந்தனைகள் பக்கம் 119)

1. இதை மாட்டு அல்லது கொண்டு கூட்டு என்பர்.

இறையனுர் அகப்பொருளின் உரைநடையைப் பின் பற்றி அமைந்திருக்கும் அவருடைய வசனநடை மிக அழகாகவும் கம்பீரமாகவும் அமைந்து, கலைப் பண்புடனும் கவிதைப் பண்புடனும் உயர்ந்து விளங்கி வாசிப் போருக்கு இன்பம் தருகிறது. இவருடைய உரைகளின் நயங்களை எல்லாம், அவைகளுக்குச் சிறப்புப்பாயிரமாயிருக்கும் பாட்டை எழுதிய புலவர், நல்ல விமரிசனப் பண்புடனும், தெளிவுடனும், உள்ளத்திலிருந்து எழும் உணர்ச்சிப் பெருக்குடனும் வரைந்திருப்பது ஆழ்ந்து நோக்கற்பாலது.[1]

தொல்காப்பிய உரைகளைப் பற்றிய இந்தப் பகுதியை முடிக்குமுன் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். தொல்காப்பியமும் அதன் உரைகளும் பல புலவரின் முயற்சியால் அச்சிடப்பட்டிருக்கின்றன; இவருடைய பணி பெரிதும் போற்றத்தக்கது. இருந்த போதிலும் உரையாசிரியர்கள் எல்லாம், தொல்காப்பியத்தின் எந்தெந்தப் பகுதிக்கு உரைகள் எழுதியிருக்கிருர்கள் என்ற விஷயம் இன்னும் பூராவும் தெளிவுபடவில்லை என்று தான் சொல்ல வேண்டும். அத்துடன் அச்சிடப் பெற்றிருக்கும் தொல்காப்பிய உரைப் பதிப்புகள் முழுவதும் செம்மையானவை என்றும் கூற இயலாது. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், ஜீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு போன்ற நூல்களைத் தாமே நேரில் பரிசோதித்து வெளியிட்ட பதிப்புக்களைப் போல் இப்போதுள்ள தொல்காப்பியப் பதிப்புக்கள் இல்லை. தொல்காப்பியத்திற்கும் அதன் சிறந்த உரைகளுக்கும், இப்போதுள்ளதைவிட இன்னும் நல்ல பதிப்புக்கள், தமிழ் மாணவருக்குப் பயன்படும் முறை

1 பத்துப் பாட்டு. நச்சினர்க்கினியர் உரையுடன். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு (1931) உரைச் சிறப்புப் பாயிரச் செய்யுள். (பக்கம் 58-61)

யில் தக்க குறிப்புக்களுடனும், விளக்கங்களுடனும் மேற்கோள்கள் அகராதியுடனும் வெளிவர வேண்டும்.

தொல்காப்பியத்தைத் தவிர பிற நூல்களுக்கு உரை செய்தவர்களில் நச்சினார்க்கினியரும், சிலப்பதிகாரத்திற்கு உரை செய்த அடியார்க்கு நல்லாரும், திருக்குறளுக்கும் பரிபாடலுக்கும் உரை கண்ட பரிமேலழகரும், நன்னூலுக்கு விருத்தியுரை ஆக்கிய மயிலைநாதரும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்தவர். நச்சினார்க்கினியரைப் பற்றி முன்னர்க் கூறியிருக்கிறோம். மற்ற மூவரைப் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுவோம்.

அடியார்க்கு நல்லாரின் வாழ்க்கையைப் பற்றித் திட்டமாக ஒன்றும் தெரியவில்லை.[1] அவருடைய காலத்தை வரையறுத்துக் கூறுவதற்கும் ஆதாரங்கள் இல்லை. இவர் இளம்பூரணருக்கும், களவியல் உரைகாரருக்கும் பிந்தியவர்; இவருடைய உரையில் சயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணிக்கும் தண்டி அலங்

1. அடியார்க்கு நல்லாருக்கு நிரம்பையர் காவலன் என்று ஒரு பெயருண்டென்றும் இவ்வுரை அக்காலத்திலிருந்த பொப்பண்ண காங்கேயர் கோன் என்ற குறுநில மன்னனால் செய்விக்கப்பட்டதென்றும் இந்த உரையின் சிறப்புப் பாயிரச் செய்யுட்களிலிருந்து தெரிகிறது. இந்த பொப்பண்ண காங்கேயன் போசள விஷ்ணு வர்த்தனின் மந்திரியின் மகன் என்று சிலரால் கருதப்படுகிறது. (செந்தமிழ் தொகுதி 4. பக்கம் 101) அடியார்க்கு நல்லார் குணபூஷண சிங்கை ஆரியச் சக்கிரவர்த்தி யென்னும் ஈழ நாட்டரசருக்கு மந்திரத் தலைவராயிருந்தார் என்று ஒரு புலவர் கூறியிருக்கிறார். (ஆ. முத்துத்தம்பி பிள்ளை செந்தமிழ் தொகுதி 12. பக்கம் 379) இந்த யாழ்ப்பாணத்தரசர் கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் ஆண்டதாகத் தெரிகிறது. பல்குன்றக் கோட்டத்துச் சிங்கம் பொருதவள நாட்டுத் தேவனூரில் அடியார்க்கு நல்லார் பிறந்தார் என்று ஒரு கருத்து நிலவி வருகிறது. (செங்குந்தர் பிரபந்தத் திரட்டு முகவுரை பக்கம் 38—39). இதற்கு ஆதாரமாகக் காஞ்சிபுரத்தில் ஒரு கல்வெட்டு அகப்பட்டிருப்பதாயும் அதில் பல்குன்றக் கோட்டத்துச் சிங்கபுரநாட்டுத் தேவனூர் ஊரில் 480 ஆண்டுகட்குமுன் வசித்தவர் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் என்று காணப்படுவதாகக் கூறப்படுகிறது.

காரத்திற்கும் குறிப்புகள் இருப்பதால் அந்த நூல்களின் ஆசிரியர்களுக்கும் பிந்தியவர். நச்சினர்க்கினியருக்கு முந்தியவர் என்றும் தெரிகிறது. ஆகையால் கி. பி. 14 அல்லது 15-ஆம் நூற்ருண்டைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்று கூறலாம்.

சிலப்பதிகாரத்தின் முப்பது காதைகளில் அடியார்க்கு நல்லாரின் உரை இப்போது முதல் பத்தொன்பதிற்குத்தான் கிடைத்திருக்கிறது; வழக்குரை காதை முதலிய பின்னுள்ள பதிஞெரு காதைகளுக்கில்லை.[1] இவைகளில் சிலவற்றிற்கு இவர் உரை எழுதியிருந்தார் என்றும் வேறு சிலவற்றிற்கு எழுத உத்தேசம் கொண்டிருந்தார் என்றும் தெரிகிறது. அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரைப் பெருமையை எல்லோரும் நன்கு அறிவர். அவர் உண்மையான முத்தமிழ்ப் புலவராய் இருந்தார். பண்டைக் காலத் தமிழ் இலக்கிய இலக்கணங்களை நன்ருகப் பயின்று அவைகளில் பொதிந்து கிடக்கும் தமிழறிவில் ஊறியவர் அவர். உரை எழுதுவதில் வன்மையும் ஆற்றலும் படைத்தவர். இவர் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதியிரா விட்டால், ஐம்பெருங் காப்பியங்களில் சிறந்ததாயும், ஒரு தனித் தமிழ் நாட்டுக் கதையைப் பொருளாகக் கொண்டு அழகாகவும், நாடகப் பண்புடனும், பண்டைத் தமிழ்க் கவிதை நயத்துடனும் சமைக்கப்பெற்ற இந்தக் காப்பியத்தின் பெரு

1. இதைப்பற்றிச் சிலப்பதிகாரப் பதிப்பாசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் எழுதியிருப்பதாவது:—"இவர், (அடியார்க்கு நல்லார்) 'கானல் வரியில் விரியக் கூறுதும் (பக்கம் 88, 100) என்றும், 'முன்னர் ஆணி என்பதனுட் கூறினும் (233) என்றும் எழுதியிருத்தலால் இவர் கானல் வரிக்கு உரை செய்திருந்தனர் என்பதும், அழற்படுக்காதைக் கண்ணே விரித்துக் கூறுதும், (பக்கம் 116) என்றும் கட்டுரை காதையுள் விரியக் கூறுவாம், (237) என்றும் எழுதியிருத்தலால் அழற்படு காதை முதலியவற்றிற்கும் உரை செய்ய எண்ணியிருந்தார் என்பதும் வெளியாகிறது" சிலப்பதிகாரம் பக்கம் 30.

மையை இக்காலத்தவரால் எளிதில் உணர முடியாது.[1] பண்டைத் தமிழ் இசை இலக்கணம், நாடக இலக்கணம், கூத்துக்களின் இலக்கணம் ஆகியவைகளைப் பற்றி எல்லாம் இன்று நமக்குக் கிடைத்திருக்கும் அறிவு அடியார்க்கு நல்லாரின் உபயம்தான். அவர் காலத்திலிருந்த இலக்கண நூல்கள்கூட இப்போது மறைந்து விட்டன. அரங்கேற்று காதைக்குள்ள அடியார்க்கு நல்லாரின் உரை, பண்டைத் தமிழ்க் கலைகளைப் பற்றித் தெளிவாகக் கூறும் அரிய இலக்கிய பொக்கிஷம்; அதில் பண்டைத் தமிழரின் பல திறப்பட்ட கலை வாழ்வைப் பற்றி எத்தனையோ செய்திகளும் நுண்ணிய கருத்துகளும் காணப்பெறுகின்றன. மற்ற உரையாசிரியர்களைப் பின்பற்றி அடியார்க்கு நல்லாரும் தொல்காப்பியத்திற்கு உரை எழுதத் தொடங்காமல் சிலப்பதிகாரத்திற்கு உரை செய்ய முனைந்தது தமிழ் செய்த பாக்கியம். அவரது உரைநடை பலவித இலக்கிய நயங்களையுடையது; சில இடங்களில் அது கவிதைத் தன்மையைப் பெற்றிருக்கிறது. இவர் உரையின் ஒரு தனிச் சிறப்பு என்னவென்ருல் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் கூறுவது போல், அதில் எடுத்தாளப்படும் மேற்கோள்கள் இன்னின்ன நூல்களைச் சேர்ந்தன என்று தெளிவாகக் குறிப்பிட்டிருப்பது; சுமார் அறுபது பண்டைத் தமிழ் நூல்களை இவர் பெயர் சொல்லிக் குறிப்பிடுகிருர். இவர் செய்த உரை ஒரு காப்பியத்தின் ஒரு பகுதிக்கே இருந்த போதிலும், கிடைத்த அந்தப் பகுதியின் உரை இன்றியமையாததாயும் அரிய முக்யத்வம் வாய்ந்ததாயும்

---

1. அடியார்க்கு நல்லாரின் உரைக்கு முன்பு, சிலப்பதிகாரத்திற்கு அரும் பதவுரை இருந்த போதிலும், அதன் நயங்களை டாக்டர் சாமிநாதய்யர் போற்றியிருந்த போதிலும், பழைய உரை, அடியார்க்கு நல்லாரின் உரையோடு கொஞ்சங்கூட ஒப்பிடக்கூடியதில்லை.

திகழ்கிறது. இந்த உரையின் மூலம் அடியார்க்கு நல்லார் ஆற்றியிருக்கும் தமிழ்ப்பணி மதிப்பரியது.

பண்டைத் தமிழ் இலக்கியத்தில் ஒப்புயர்வற்று விளங்கும் நூல் திருவள்ளுவரின் திருக்குறள். இதன் பெருமைகளை இங்கே கூறவேண்டிய அவசியம் இல்லை. இந்த நூலுக்குப் பல புலவர் உரை செய்தார். அவ்வாறு செய்யப்பெற்ற உரைகளில் பரிமேலழகரின் உரை தான் மிகச் சிறந்தது என்பது முன்னோரின் தெளிந்த முடிபு. உண்மையும் அதுவே. பரிமேலழகர் வட மொழியும், தமிழும் நன்ருய்க் கற்றுத் தேர்ந்த பெரும் புலவர். அவர் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்தார் என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு.[1] இந்த முடிபு ஏற்றுக்கொள்ளத்தக்கது. பரிமேலழகர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவரென்று சிலரும், திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்து, பின்னர் மதுரையில் வசித்தவர் என்று வேறு சிலரும் கூறியிருக்கிருர்கள். இவைகளில் எது சரியான கருத்து என்று தெளியச் சரித்திரச் சான்றுகள் இல்லை. அவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்று கருதப்பெறுவது உண்மையாய் இருக்கலாம். திருவாய் மொழியினின்று இவர் சில பொருத்தமான மேற்கோள்களைக் காட்டிச் சில குறட்பாக்களுக்குப் பொருள் விளக்கியிருப்பது இந்தக் கருத்தை வலியுறுத்துகிறது.[2]

பரிமேலழகரின் திருக்குறள் உரையின் நயங்களைத் தமிழ்ப் புலவர் தலைமுறை தலைமுறையாகவே

---

1 *சாசனத் தமிழ்க்கவி சரிதம். பரிமேலழகர்* மு. இராகவய்யங்கார் பக்கம் 114—118.

2. (திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக் கண்டேனே, 4-4-8 இறைமாட்சி. அவதாரிகை); 'அற்றது பற்றெனில் உற்றது வீடு, 1-2-5. 349-ம் குறளின் உரை; 370ம் குறளின் உரையில் நன்ருய் ஞானங்கடந்து போய் என்ற திருவாய் மொழிப்பாட்டு 8-8-6 முழுவதும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தொடர்ந்து பாராட்டி வந்திருப்பதே அதன் பெருமைக்குச் சான்ருகும். சித்தாந்த சாஸ்திரங்கள் பதினுன்கில் எட்டு எழுதியவரும், சைவ சமயத்தைச் சேர்ந்த சந்தாஞசாரியாரில் ஒருவரும், கி. பி. பதினுன்காம் நூற்ருண்டில் வாழ்ந்தவருமான புலவர் சிகாமணியாகிய உமாபதி சிவாச்சாரியார், பரிமேலழகரின் திருக்குறள் உரையைப் போற்றியிருக்கும் முறை கவனிக்கத் தக்கது. இந்த உரை, திருக்குறளுக்கும், திருவாசகத்திற்கும் தொல்காப்பியத்திற்கும், பெரிய புராணத்திற்கும், சிவஞான சித்தியாருக்கும் ஒத்த பெருமையுடையது என்றும், இவ்வாறு நூல்களும் 'தண்டமிழின் மேலாந்தரம்' என்றும் கூறி உமாபதி சிவம் பரிமேலழகரின் உரையைத் தரமறிந்து புகழ்ந்திருக்கிருர்.[1] பரிமேலழகர் வைணவராயிருந்தும், பழுத்த சைவச் செம்மலான உமாபதி சிவம் அவரை இவ்வாறு பாராட்டியிருப்பது வியக்கத்தக்கது. இந்த சைவ சமயாசாரியாரின் நேர்மையான புலமையும், விரிந்த மனப்பான்மையும், இலக்கியப் பண்பும், உதார குணமும் யாவராலும் போற்றிப் பாராட்டத்தக்கன.

தெய்வப் புலமை வாய்ந்த திருவள்ளுவர் தமது திருக்குறளே ஆக்கிய முறையையும், அதன் பொருண்மையையும், குறட்பாக்களின் திட்பம் செறிந்த அழகுகளேயும் சிந்தனே செய்து பார்த்தால், இந்த நூலுக்கு, அதன் கருத்துக்களே விளக்கி, முன்னுக்குப் பின்னுள்ளவைகளேப் பொருத்தமாக்கித் தெளிந்த உரை செய்வது என்பது எளிய காரியமல்ல. தமிழிலுள்ள மிக மேலான அறிவுக் களஞ்சியம் திருக்குறள்; அது இலக்கியப் பண்பு நிறைந்த நூல்; பெரும்பகுதி சுவையுள்ள கவிதையில்

1. *வள்ளுவர் சீரன்பர்மொழி வாசகந் தொல்காப்பியமே*
*தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்*
*தொண்டர் புராணம் தொகு சித்தியோராறுந்*
*தண்டமிழின் மேலாந்தரம்.*

—*உமாபதி சிவாசாரியார்*

ஆக்கப் பெற்றிருக்கிறது. தமது காலத்தில், நாலா பக்கங்களிலிருந்தும், பல மொழிகளிலிருந்தும், எல்லாத் துறைகளைப் பற்றியும் கிடைக்கக்கூடிய பேரறிவு முழு வதையும் பெற்றுத் தேர்ந்து, அதைத் தமது புலமையால் வடிகட்டி நல்ல ஆக்க முறையில் ஒழுங்குபடுத்தி, அறப் பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பகுதி களாக்கி அற்புதமான குறட்பாக்களில் திருவள்ளுவர் அமைத்திருக்கிறார். திருக்குறளின் மூலம் தமிழ் மொழி சிறந்த ஆக்கமும் வளர்ச்சியும் பெற்றது. நுண்ணிய கருத்துக்களைச் சுமக்கக்கூடிய வாக்கியங்களை அளவற்ற சக்தியுடனும், நூற்றுக்கணக்கான அமைப்பு வேறுபாடு களுடனும் சமைத்துக் காட்டிய பெருமை திருவள்ளு வரைச் சேர்ந்தது. அவர் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் இலக்கியக் கலைக்கும் செய்திருக்கும் ஈடும் எடுப்புமிலாத பணியைத் தமிழ்ப் புலவர் பொதுவாக உணரவில்லை; உணராததால் எடுத்துக் காட்டுவதும் இல்லை. தமிழ்ப் புலவரில் பெரும்பாலோர் சாதாரணமாக வள்ளுவரின் கருத்து நயங்களைப் பற்றியே பேசி வருகிறார்கள். திருவள் ளுவரின் கருத்துக்களில் பெரும்பாலானவை எக்காலத் திற்கும் பொருந்தக்கூடியவை யாயிருந்த போதிலும், அவைகளின் நுட்பங்களைத் தெரிய ஆராய்ச்சி வேண் டும். திருவள்ளுவர் தமது குறட்பாக்கள் மூலம் எத்தகைய கருத்துக்களைக் கூறியிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு, அவர் காலத்தில் நிலவிய நாகரிகத்தின் பல முகங்களையும், பல திறப்பட்ட நூலறிவையும், அவர் கையாண்ட சொற்களுக்கு அக்காலத்தில் மேவியிருந்த பொருள் நுட்பத்தையும் பற்றித் தெளிந்த அறிவு அவசியம். அதில்லாமல் ஒவ்வொரு காலத்திலும் புலவர் தம் மனம் போனவாறெல்லாம் திருக்குறள் பாக் களுக்குப் பொருள் கூறினால், அது வள்ளுவருக்குச் செய்த பிழை ஆகும்.

முற்காலத்திய ஒரு புலவனின் இதயத்தையும், கருத்துலகத்தையும், கற்பனை யுலகத்தையும், தெய்வீக மான நூல் செய்யும் ஆற்றலையும் பிற்காலத்திய புலவன் ஒருவன் எவ்வளவு தூரம், தனது பயிற்சியாலும், புல மைத் திட்பத்தாலும், அன்பாலும் அறிய முடியுமோ அவ்வளவு தூரம் பரிமேலழகர் வள்ளுவரின் உள் ளத்தை ஊடுருவிப் பார்த்து அவரது தெய்வப் புலமை யின் அகலத்தையும் ஆழத்தையும் அறிந்து அவரது குறட்பாக்களுக்குப் பொருண்மைத் தொடர்பையும் அதி கார முறையையும் விளக்கித் தமது உரையை எழுதி யிருக்கிறார். இக் காலத்தில் சிலர் தமிழ் மகனாகிய திருவள்ளுவரின் பாக்களின் உண்மைப் பொருளை அறி யாமல், பரிமேலழகர் தமது வடமொழிப் பற்றாலும் அறி வாலும் தவறான உரை பல இடங்களில் எழுதியிருக் கிறார் என்று குற்றம் சாட்டியிருக்கிறார். சில குறட்பாக் களுக்குப் பரிமேலழகர் தரும் பொருள் பற்றி நியாய மாகவே கருத்து வேறுபாடுகள் இருந்திருக்கின்றன. இது எக்காலத்திலும் இருக்கக்கூடிய உலக இயல்பு. இதனால் அவர் உரையின் மேன்மையோ சிறப்போ குறையாது. ஆதலால் பரிமேலழகரின் திருக்குறள் உரையில் சிற்சில குறைகள் இருந்தபோதிலும் அதைப் போல ஒரு சிறந்த உரை அந்த நூலுக்கு இன்றுவரை தோன்றவில்லை என்று திட்டமாய்க் கூறலாம். பரிபாட லுக்குப் பரிமேலழகர் எழுதியிருக்கும் உரையும் பல நயங்களை உடையது. அநேக பாடல்களுக்கு இவர் தெளிவாகப் பொருள் கூறியிருக்கிறார்; அதை விளக்கப் பல அரிய குறிப்புக்களையும் அவர் கொடுத்திருக்கிறார். பரிபாடலுக்கு வேறு நல்ல உரை இருப்பதாகத் தெரிய வில்லை. ஆகையால் பரிமேலழகரின் உரை இன்றி யமையாததாய் இருக்கிறது.

இனி இந்தப் பகுதியில் இறுதியாகக் கவனிக்கப்பட வேண்டியது நன்னூலுக்கு மயிலைநாதர் என்ற சமண முனிவர் எழுதிய உரை. இது மயிலைநாதம் என்று வழங்கி வருகிறது. நன்னூலைப் பற்றியும் அதன் நயங்களைப் பற்றியும் முன்னர்க் கூறியிருக்கிறோம்.[1] மயிலைநாதர் கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று கருதப்பெறுகிறது. இலக்கணவிளக்க ஆசிரியர் போன்ற பின் தோன்றிய தமிழ்ப் புலவர் சிலர் மயிலைநாதரின் சில உரைக் கருத்துக்களினின்று வேறுபட்ட போதிலும், இந்த உரை எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் மிகச் சிறந்தது என்பதைத் தனி இலக்கிய நோக்குடனும் நேர்மையுடனும் படிப்பவர் ஒப்புக் கொள்வர். மயிலைநாதர் நன்னூலின் சூத்திரங்களின் பொருளை அழகாகவும், திட்பமாகவும் விளக்கி, இலக்கணத்தைச் சார்ந்த பொதுக் கொள்கைகளையும் கூறி, அகத்தியம், அவிநயம், தொல்காப்பியம் போன்ற பண்டைத் தமிழ் இலக்கணங்களிலிருந்து பல மேற்கோள்களைக் காட்டி வரைந்திருப்பது அவருடைய பரந்த கல்விப் பயிற்சியைக் காட்டுகிறது. இவர் சொல்லதிகாரச் சூத்திரங்களுக்கு, முன்னிருந்த தொல்காப்பிய உரையாசிரியர்களைவிட, அதிகமான உதாரணங்களைக் கொடுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. மயிலைநாதர், அகத்தியம், அவிநயம் போன்ற பழைய இலக்கணங்களை அடிக்கடி குறிப்பிட்டு அவைகளிலிருந்து பல மேற்

---

1. பிற்காலத்தில் தோன்றிய தமிழ் இலக்கணங்களில் சிறந்தது நன்னூல் என்பது தமிழ்ப் புலவரின் துணிபு. இலக்கணக்கொத்து என்ற நூலின் ஆசிரியர் "முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள், நன்னூலார் தமக்கெந் நூலாருமிணையோ வென்னுந் துணிவே மன்னுக (இ. கொ. சூத்திரம் 8. உரை ஆறுமுக நாவலர் பதிப்பு பக்கம் 17) என்று இதைப் போற்றியிருக்கிறார். நன்னூலை மயிலைநாதர் உரையுடன் பதிப்பித்த டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் கூறுவதாவது:— "தொல்காப்பியத்தின் பின் இயற்றப்பெற்ற

கோள்களை எடுத்துக் காட்டியிருப்பதிலிருந்து அவர் காலத்தில், அகத்தியம், அவிநயம் ஆகியவை முழுவதுமோ அல்லது அவைகளின் பெரும்பகுதிகளோ இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். நன்னூலை ஆக்கியதால் பவணந்தி முனிவரும் அதற்குச் சிறந்த முறையில் உரை செய்ததால் மயிலைநாதரும், தாம் பதிப்பித்த பல நூல்களிலும் ஒரே சிறந்த இலக்கணமாகவுள்ள இந்த மயிலைநாதத்தை மிகச் செம்மையாகப் பதிப்பித்ததால் டாக்டர் உ. வே. சாமிநாதய்யரும் தமிழுக்கு அரிய பணியாற்றி யிருக்கிறார்கள்.

---

இலக்கண நூல்களில் இதைப்போலச் சிறந்தது வேறொன்றில்லையென்பது பெரியோர் கருத்து.'' இருந்த போதிலும் சமீப காலத்தில் சிலர் நன்னூலைக் குறைவாகவே மதித்து எழுதியிருக்கிறார். சி. வை. தாமோதரம் பிள்ளை, தாம் பதிப்பித்த இலக்கண விளக்கப் பதிப்பின் முகவுரையில், திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சங்கர நமச்சிவாயப் புலவர் நன்னூலுக்கு விருத்தியுரை செய்ததையும் அதை சிவஞான முனிவர் திருத்திப் புதுக்கியதையும் குறிப்பிட்டு, அவ்வாதீனத்தார் வைத்தியநாத தேசிகரின் இலக்கண விளக்கத்தைத் திரஸ்கரித்து நன்னூலுக்கு ஏற்றம் தந்தது சரியில்லை என்றும் இலக்கண விளக்கம் நன்னூலுக்குத் தாழ்ந்ததில்லை என்றும் எழுதியிருக்கிறார் (இலக்கண விளக்கம். தாமோதரம் பிள்ளை பதிப்புரை பக்கம் 11) "ஆகவே தொல்காப்பிய பயிற்சிக்குந் தமிழ் மொழிப் பெருக்கத்திற்கும் ஒரு பேரிடையூறாய்த் தோன்றிய பவணந்தியார் எம்மனோராற் பாராட்டப்படுதற்குரிய ரல்லர். பிறர் அவரை எங்ஙனம் பாராட்டினும் பாராட்டுக'' என்று திரு. வேதாசலம் எழுதி பவணந்தி முதலாயினாரை 'அறியார்' என்றும் 'போலிப் புலவர்' என்றும் கூறியிருக்கிறார். (ஞானசாகரம் பதுமம் 1. இதழ் 10. பக்கம் 12.) "இந்நூலின் (தொல்காப்பியத்தின்) எழுத்ததிகாரச் சொல்லதிகாரங் கற்போர் நன்னூலாதியவற்றைப் புன்னூலாதியனவாகக் காண்பர் என்பது திண்ணம்'' பதிப்புரை. தொல்காப்பியம் இளம்பூரணம் எழுத்ததிகாரம் வ. உ. சிதம்பரம் பிள்ளை. நேர்மையான இலக்கிய நோக்குடன் ஆராய்ந்த கருத்துக்களாக இவை தோன்றவில்லை. சில விருப்பு வெறுப்புக்களால் தூண்டப்பெற்று எழுதப்பெற்றவை என்று தெரிகிறது.

இடைக் காலத்தில் தமிழ்ப் புலவர் குழாம் செய்த ஆராய்ச்சியின் பயனாக எழுதப்பெற்ற தொல்காப்பிய உரைகளைப் பற்றியும், முக்கியமான பிற இலக்கிய உரைகளைப் பற்றியும் சுருக்கமாகக் கூறியிருக்கிறோம். இவைகளைத் தவிர, நம்பி அகப் பொருளுக்கும், தண்டி அலங்காரத்திற்கும், தக்கயாகப் பரணிக்கும் தஞ்சை வாணன் கோவைக்கும், வீரசோழியத்திற்கும் பழைய உரைகள் இருக்கின்றன. இவை எல்லாம் நன்றாயும் தெளிவாயும் எழுதப் பெற்றவை. மலைபடு கடாத்திற்கு ஆளவந்த பிள்ளை ஆசிரியர் ஒரு உரை எழுதியிருந்ததாகத் தெரிகிறது. இடைக் காலத்தில் தோன்றிய சிறந்த இலக்கிய நூல்கள் பல. தமிழ்ப் புலவரால் செய்யப்பெற்ற ஆராய்ச்சியும், அதில் விளைந்த நூல்களுமே இந் நூலிற்குப் பொருளாதலால், தனி இலக்கிய நூல்களைப் பற்றிக் கூறுவது இதன் நோக்கத்திற்குப் புறம்பாகும். தமிழ் மொழி வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் உரையாசிரியர் செய்த சேவை நூலாசிரியர் செய்த பணிக்கு அடுத்தபடியாகத் திகழ்கிறது. முன்னர்க் கூறியது போல், இவ்வுரையாசிரியர்கள் தோன்றித் தங்களுடைய மதிப்பரிய உரைகளை எழுதியிரா விட்டால், பண்டைத் தமிழ் இலக்கியம் நமக்கு இருண்ட உலகமாய்த் தானிருக்கும். அதன் இருளைப் போக்கும் விளக்குகளாகவே இவ்வுரைகள் அமைந்திருக்கின்றன. தமிழ் காப்பியங்களைப் பற்றியுள்ள ஒரு பழைய வழக்கைத் தழுவி, தமிழ் இலக்கிய உரையாசிரியரை ஐம்பெரும் உரையாசிரியராகவும் ஐஞ்சிறு உரையாசிரியாகவும் ஒருவாறு வகுத்தால், இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் ஆகியோரை ஐம்பெரும் உரையாசிரியராகவும், களவியல் உரைகாரர், சேனாவரையர், யாப்பருங்கல விருத்திகாரர், பெருந்தேவனார், மயிலைநாதர் ஆகியோரை ஐஞ்சிறு உரை

யாசிரியராகவும் கொள்ளலாம். களவியல் உரைகாரரையும் சேனவரை யரையும், யாப்பருங்கல விருத்திகாரரையும் ஐஞ்சிறு உரையாசிரியர்களாகக் கொள்வதில் சில புலவருக்கு ஆட்சேபணை இருக்கலாம். சேனவரையர் தொல்காப்பிய சொல்லதிகாரத்திற்கு மாத்திரம் உரை எழுதி யிருப்பதாலும், களவியல் உரையும் யாப்பருங்கல விருத்தியுரையும் சிறந்த பெரிய உரைகளாயிருந்த போதிலும் இறையனர் அகப் பொருளும் யாப்பருங் கலமும் சிறிய நூல்களே யர்தலாலும், இந்தப் பாகுபாட்டில் தவறு இல்லை. தவிரவும் திருக்குறளைக் கீழ்க்கணக்கிலும், பெருங் கதையையும் சூளாமணியையும் சிறு காப்பியங்களிலும் நமது முன்னோர் சேர்த்திருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

## VII. நிகண்டுகள்

இடைக் காலத்தில் தொடர்ந்து நிகழ்ந்த பல புல வரின் தமிழ் ஆராய்ச்சியின் வேருெரு விளைவாகவே தமிழில் நிகண்டுகள் தோன்றின. வடமொழியில் நிகண்டுகள் இருந்ததால் அவைகளைப் பின்பற்றி தமிழ்ப் புலவர் இந்தப் பணியைக் கைக்கொண்டார். எல்லோராலும் பயிலப்பெற்ற வட மொழியிலிருந்த நிகண்டு அமரசிம்மன் என்பவரால் கி. பி. ஆரும் நூற் ருண்டின் முற்பகுதியில் இயற்றப்பெற்றது. இதுவே, தமிழில் பின்னர் தோன்றிய நிகண்டுகளுக்கு முன் மாதிரியாக இருந்தது என்று கருதலாம். தமிழில் அதன் பண்புகளுக்கும் தேவைகளுக்கும் தகுந்தபடி நிகண்டுகள் எழுதப்பெற்றன.

தமிழ் மொழியின் வளர்ச்சியைச் சற்று நுட்பமாக ஆராய்ந்தால் சில விஷயங்கள் தென்படும். சங்க காலத் தமிழ் என்று சொல்லப்படுவது கிறிஸ்து சகத்திற்குமுன் னிருந்து, அதற்குப்பின் சுமார் ஆரும் நூற்ருண்டு வரை, பொதுவாக ஆதிக்கத்திலிருந்து புலவரால கையாளப் பெற்றது. அக் காலத்திலிருந்த தமிழ்ப் புலவர் எல்லாம் இந்தத் தமிழையே கைக்கொண்டு நூல் கள் செய்தார்; பாடல்களையும் இயற்றினர். சொற்களுக் குப் பொருள் கொள்வதிலும், அவைகளுக்கு இலக் கணத்தைத் தழுவி வடிவங்களை அமைத்துக் கொள் வதிலும், சில இலக்கிய சம்பிரதாயங்களைக் கையாள் வதிலும் பண்டைத் த்மிழ்ப் புலவர் ஏறக்குறைய ஒரே மாதிரியான இலக்கிய நடையையும் செயல் முறையை யும் கையாண்டார். இந்த நிலைமை கி. பி. ஆரும் நூற் ருண்டு வரை நீடித்தது. அதற்குப் பின்னர் சில மாறு

தல்கள் ஏற்படத் தொடங்கின. அதற்கு அடுத்த நூற்ருண்டில் சமய இலக்கியம் நாயன்மார்களாலும், ஆழ்வார்களாலும் ஆக்கப்பெற்றது. அவர்கள் எண்ணிறந்த பக்திச் சுவைப்பாடல்களை இசைத் தமிழாக இயற்றினர்கள். இவர்கள் கையாண்ட செய்யுள் நடையிலும், கவிதைப் பண்பிலும் சில புது இயல்புகள் இருந்தன. சொற்களின் தன்மையிலும், வடிவங்களிலும், வாக்கியங்களின் அமைப்பிலும், மொத்தமாகவுள்ள இலக்கிய நடையிலும். இவருடைய தமிழ் சங்கத் தமிழினின்றும் பெரும்பாலும் வேறுபட்டிருந்தது. பாடல்களின் எளிமையிலும் இனிமையிலும், பக்திச் சுவையைப் பகரும் சொற்களிலும், சொற்ருெடர்களிலும் வேறுபாடுகள் முக்கியமாகக் காணப்பெற்றன. சொற்களின் வடிவங்களிலும் சில மாறுதல்கள் தோன்றின. பல சொற்களுக்கு விரிந்த பொருள்கள் கையாளப்பெற்றன. சங்கத் தமிழ், நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகியோரின் பாடல்களில் இசைத் தமிழாகவும், சிந்தாமணி, சூளாமணி போன்ற நூல்களில் காப்பிய இலக்கியத் தமிழாகவும் வளர்ந்த போது, அதன் பழைய இயல்புகள் சிலவற்றை இழந்து புதிய ஆக்கமும் வலியும் பெற்றது.[1] இந்த நிலைமையில் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் வழங்கி வந்த பல சொற்களுக்கும் வழக்குகளுக்கும் பொருள் தெரிந்து கொள்வதுகூட, பிற்காலப் புலவருக்குக் கஷ்டமாய் இருந்திருக்கும். புலவருக்கும் இலக்கியப் பயிற்சியில்

---

1. சில நாயன்மார்களும் ஆழ்வார்களும் தங்கள் பாடல்களை சங்கத் தமிழ், சங்கமலித் தமிழ், சங்கத்தமிழ் மாலை என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கிருர்கள். இச் சொற்களுக்கு சிறந்த தமிழ் என்று தான் பொருள் கொள்ள வேண்டும். பண்டைத் தமிழ் இலக்கியத்தின் மீது தங்களுக்குள்ள மரியாதையைக் காட்டக்கூடிய உபசார வழக்காக இவ்வாறு கூறியிருக்கிருர்களே யொழிய, தங்களுடைய தமிழ் சங்க காலத் தமிழ் என்ற பொருளில் கூறவில்லை என்பது வெளிப்படை.

ஈடுபட்டவருக்கும் பண்டைக் கால நூல்களேயும் பாட்டுக் களேயும் தெரிந்து அநுபவிப்பதற்கு உதவி தேவையாய் இருந்தது. இவ்வித உதவியைச் செய்யும் முறையில் தான் நிகண்டுகள் தோன்றின என்று சொல்லலாம். நிகண்டுகள், இக் காலத்திலுள்ள வெறும் அகராதிகள் போல் சொற்களுக்குப் பொருள் மாத்திரம் கொடுக்கும் நூல்களாக இல்லாமல், அக்காலத்திலுள்ள அறிவின் களஞ்சியங்களாகவே இருக்க வேண்டுமென்று ஆக்கப் பெற்றன.

தமிழ்ச் சொற்களின் பொருளேயும் பிரயோக முறை களேயும் பற்றித் தெரிந்துகொள்ள பண்டைக் காலத்தில் கூடப் புலவருக்கு உதவி வேண்டியிருந்தது என்று தெரிகிறது. இவ்வித உதவியைச் செய்ய வேண்டு மென்ற நோக்கத்துடனே பேரிலக்கணமாகிய தொல் காப்பியத்தில் சில பகுதிகள் அமைந்திருக்கின்றன. தொல்காப்பியம், ஒரு பெரிய இலக்கணமாயிருப்பதுடன் ஓரளவு நிகண்டின் இயல்களேக் கொண்டதாயும் இருப் பதைக் கவனிக்க வேண்டும். அதன் சொல்லதிகாரத் தில் உள்ள இடையியலிலும், உரியியலிலும், பொருளதி காரத்திலிலுள்ள மரபியலிலும், சில சொற்கள் எடுத் தாளப் பெற்று அவைகளுக்குப் பொருள் விளக்கமும் பிரயோக முறையும் சூத்திரங்களில் கூறப்பட்டிருக் கின்றன. இதிலிருந்து சொற்களுக்குச் சரியான பொருளேத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றும், அவைகளேப் பிழையில்லாமலும் மரபு வழுவாத முறை யிலும் புலவர் கையாள வேண்டும் என்றும் தொல்காப் பியர் வலியுறுத்தவே, தமது சூத்திரங்களில் பல உதார ணங்களேக் கொடுத்திருக்கிருர் என்று கருத வேண்டும். இந்தக் கருத்தைத் தலேமேற்கொண்டு தான் பிற்கால ஆசிரியர் பல நிகண்டுகளேச் செய்தார். அவை தொல்

காப்பியத்திற்குச் சில நூற்ருண்டுகளுக்குப் பின்னரே தோன்ற ஆரம்பித்தன.

நிகண்டுகளுக்கு உரிச் சொல் பனுவல்கள் என்ற பெயர் முற்காலத்தில் இருந்திருக்கிறது. இதை மயிலை நாதர் தமது நன்னூல் உரையில் கையாண்டிருக்கிருர்.[1] வேறு உரையாசிரியர்களும் இந்தச் சொற்ருெடரை உபயோகப்படுத்தி யிருக்கிருர்கள். இந்தப் பெயர் மிகுந்த பொருட்செறிவு உடையது. அறிவுப் பொருண்மையை எல்லாம் பெயர்ச் சொல்லாக்கினுல், அவ்வறிவை விளக்குவதற்குத் துணையாயிருக்கக்கூடிய நிகண்டுகள் உரிச் சொல் போன்றதாகும்.[2] இது ஒருநுட்பமான கருத்து.

பண்டைக் காலத்திலும், வெகு சமீப காலம் வரையிலும் தமிழ் மாணவர் நிகண்டுகள் மூலம் பெற்ற அறிவை இன்று அகராதிகள் (dictionaries) கலைக் களஞ்சியங்கள் (Encyclopedia) ஆகியவைகளின் மூலம் பெறுகிரேம். உயிரெழுத்துக்களில் அகர வரிசையிலும் உயிர்மெய் யெழுத்துக்களில் ககர வரிசையிலும் வார்த்தைகளை ஒழுங்காகத் தொகுத்து அவைகளுக்குப் பொருளும், வேர்களும், சொல்லமைப்பின் இலக்கண

---

1. "இனி இவ்வாறே ஆண்பாற் பொருட் பெயரும், பெண்பாற் பொருட் பெயரும், ஏனைப்பாற் பொருட் பெயரும், காலப் பெயரும், சினைப் பெயரும் பண்புப் பெயரும், தொழிற் பெயரும், மரபுப் பெயரும் வழுவாமல், ஐம்பெரும் காப்பியம், எண் பெருந் தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இவ்விலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொல் பனுவல்களுள்ளு முரைத்தவாறு அறிந்து வழங்குக" (நன்னூல். மயிலைநாதம். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு பக்கம் 365.)

2. இன்று சட்டத்தில் Substantive law and adjectival law என்றிருக்கும் இருவிதப் பிரிவினையை ஒப்ப இது உள்ளது. சட்ட தத்துவங்களும், கொள்கைகளும் அவைகளைப் பயன்படுத்தும் விதிகளடங்கிய சட்டத்தை Substantive law (பெயர்ச் சொல் சட்டம்) என்று சொல்வர். அந்த சட்டத்தை அமுல் செய்வதற்கு செயல்முறை விதிகளடங்கிய சட்டத்திற்கு Adjectival law (உரிச்சொல் சட்டம்) என்று கூறுவர்.

மும் வரைவது இக்காலத்து அகராதிகளுக்கு அநுஷ்டிக்கப்பெறும் முறை. விரிந்த அகராதிகளில், பொருளைத் தெளிவாக்கவும் சொற்களின் சரியான பிரயோகத்தைக் காட்டவும் இலக்கியத்திலிருந்து மேற்கோள்கள் கொடுப்பது வழக்கம். ஆனால் நிகண்டுகளின் அமைப்பும் நோக்கமும் வேறு விதமாய் இருந்தன. அவைகள் எல்லாம் நூற்பா, வெண்பா, அல்லது விருத்தப்பாவால் ஆக்கப்பெற்றன. ஆசிரியப்பாவால் ஆக்கப்பெற்ற நிகண்டுகளும் இல்லாமல் இல்லை. ஒரு பொருளைக் கொடுக்கும் பல சொற்கள் வகை, பல பொருளைக் கொடுக்கும் ஒரு சொல் வகை, பெயர் கூட்டத் தொகுதி வகை முதலிய வெவ்வேறு தலைப்புகளில் சொற்கள் பிரிக்கப்பட்டு அவை யாப்பில் அமைந்த பாட்டுக்களில் தொகுக்கப்பெற்று விளக்கப் பட்டிருக்கின்றன. மாணவர் பாட்டுக்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு சொற்களுக்கு எளிதில் பொருள் தெரிந்து கொள்வதற்கு இந்த முறை பயனுடையதாயிருந்தது. முற்காலத்தில் எல்லா விதமான நூல்களும் செய்யுள் உருவத்தில் அமைக்கப் பெற்றதால் நிகண்டுகளும் அவ்வாறே இயற்றப் பெற்றன. இவைகளைப் பற்றிய விபரங்களைக் கொடுப்பது இந்த நூலுக்குத் தேவையில்லை.[1]

இடைக் காலத்துத் தமிழ் ஆராய்ச்சியின் ஒரு முக்கிய விளைவாக நிகண்டுகள் இருந்ததையும், தமிழ்

---

1. தமிழில் உள்ள நிகண்டுகள் எல்லாவற்றின் பெயர்கள், அவைகளின் அமைப்பு முறை, அவைகளிலடங்கும் சொற்களின் தொகை, அவைகளின் ஆசிரியரின் பெயர்கள், காலம் முதலிய விபரங்கள் எல்லாம், சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதியின் பதிப்பாசிரியராயிருந்த திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை எழுதியிருக்கும் History of Tamil Lexicography என்ற ஆங்கிலக் கட்டுரையிலும், அவர் பதிப்பித்த பல நிகண்டுகளின் முகவுரைகளிலும் வரைந்த பல தமிழ்க் கட்டுரைகளிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இலக்கிய வளர்ச்சிக்கு அவை உறுதுணையாயிருந்ததையும் சுட்டிக்காட்டி அவைகளில் மிகச் சிறந்த சிலவற்றைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவது தான் இந்த அத்தியாயத்தின் நோக்கம். தமிழில் எத்தனையோ நிகண்டுகள் தோன்றியிருந்த போதிலும் அவைகளில் மூன்று தான் மிகச் சிறந்தவை என்று தமிழ்ப் புலவர் கருதி வந்திருக்கிறார்; இம் மூன்றும் காலத்தால் முந்தியவை என்பதும் சமணப் புலவரால் ஆக்கப்பெற்றன என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கன. இவைகளில் முதலாவது ஆதி நிகண்டு என்று கருதப்பெறுவது சேந்தன் திவாகரம். இது திவாகரர் என்ற சமணப் புலவரால் சேந்தன் என்ற குறுநில மன்னனின் ஆதரவில் எழுதப் பெற்றது. இதன் காலத்தைத் திட்டமாய் வரையறுத்துக் கூற முடியவில்லை; இது சுமார் கி. பி. 7 அல்லது 8-ஆம் நூற்றாண்டில் செய்யப் பெற்றிருக்கலாம் என்பது சில அறிஞரின் துணிபு. இந்த நிகண்டு பனிரண்டு தொகுதி களடங்கியது. அகராதி, கலைக் களஞ்சியம் ஆகிய இரண்டு வகை நூல்களின் இயல்புகளும் திவாகரத்தில் காணப்பெறுகின்றன. அக்காலத்தில் நிலவிய அறிவு முழுவதையும் சுருக்கமாக வரையும் முறையில், சொற்களும், சொற்றொடர்களும், பொருட் பகுதிகளும் அமைந்திருக்கின்றன. இவ்வித நூலை ஒரு தனிப் புலவன் செய்திருப்பது அவனுடைய கல்வியின் அகலத்தையும் அறிவின் ஆற்றலையும் காட்டுகிறது. திவாகரம் வகுத்த தொகுதி முறையைத்தான் பின்னர் தோன்றிய நிகண்டுகளைச் செய்த ஆசிரியரில் பெரும்பாலோர் பின்பற்றினர்.[1] இந்த நிகண்டின் ஒவ்வொரு

1. எதுகைமுறையைத் தவிர்த்து அகர வரிசையில் அகராதி நிகண்டு என்ற ஒரு நூல் கி. பி. 1594-ல் சிதம்பர ரேவணசித்தர் என்பவரால் செய்யப்பெற்றது. இதே போல சில நிகண்டுகளும் பின்னால் தோன்றின.

தொகுதியின் பின் நூலாசிரியரையும் அவரை ஆதரித்த சேந்தனையும் புகழும் பாடல்கள் இருக்கின்றன.[1]

சேந்தன் திவாகரத்திற்கு அடுத்தபடியாக பிங்கலர் என்பவரால் செய்யப்பெற்ற பிங்கலந்தை என்ற நிகண்டு முக்கியமானது. இது அளவில் திவாகரத்தை விடப் பெரிது; கையாளும் சொற்களின் தொகையும் அதிகம். பிங்கலந்தை நிகண்டைப் பற்றி நன்னூல் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[2] ஆகையால் இந்த நிகண்டு கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டுக்கு முன்னர் இயற்றப் பெற்றது என்பது மாத்திரம் தெரிகிறது. நன்னூலுக்கு எவ்வளவு காலத்திற்கு முந்தி தோன்றியது என்பதற்குத் தெளிவான ஆதாரங்கள் இல்லை. இது ஒரு விரிந்த நிகண்டு என்பது நன்னூலின் சூத்திரம் கூறுகிறது. பிங்கலந்தை பல நயங்களையும் உடையது.

மூன்றாவதாகக் குறிப்பிட வேண்டியது நிகண்டு சூடாமணி. இது கி. பி. பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கருதப்பெறும் மண்டல புருடர் என்ற சமணப் புலவரால் செய்யப்பெற்றது என்று முன்னர்க் கூறியிருக்கிறோம். இது முழுவதும் விருத்தப்பாவில் அமைந்திருக்கிறது. இது தோன்றின பிறகு தமிழ் மாணவரும் புலவரும் இதையே பெரிதும் விரும்பிக் கற்றுப் பயின்று வந்திருக்கிறார்கள். இதற்குச் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த சைவ சமயப் புலவரான ஆறுமுக நாவலரால் பரிசோதிக்கப் பெற்ற ஒரு செம்

1. முதல் தொகுதிக்குப் பின்னுள்ள பாட்டு இது.

வட நூற்கரசன் தென் றமிழ்க் கவிஞன்
கவியரங்கேற்று மும்பய கவிப்புலவன்
செறி குணத்தம்பற் கிழவோன் சேந்தன்
அறிவு கரியாகத் தெரிசொற்றி வாகரத்துள்.

2. நன்னூல் சூத்திரம் 459.

இன்ன தின் னுழி யின்னணமியலும்
என்றிசை நூலுட் குணிகுணப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோருரிச் சொலினயந்தனர் கொளலே.

மையான பதிப்பு வெளி வந்தது குறிப்பிடத்தக்கது. சூடாமணி நிகண்டின் சிறப்புப் பாயிரத்தில், திவாகரம் பிங்கலந்தை ஆகிய நிகண்டுகள் கடினமாயிருப்பதால் அவைகளைப் பின்பற்றி, எல்லோரும் எளிதில் கற்கும் பொருட்டு இது செய்யப்பட்டிருக்கிறது என்று காணப் பெறுகிறது. இதன் பதினேராவது பன்னிரெண்டாவது பகுதிகள் மிகவும் சிறப்புற்றவை என்பது தமிழ்ப் புல வரின் கருத்து. இந்த நிகண்டுக்குப் பின்னர், மேலே கூறிய மூன்று நிகண்டுகளும் கையாண்ட முறைகளிலும் வேறு முறைகளிலும் பல நிகண்டுகள் எழுதப் பெற்றி ருக்கின்றன. ஆனுல் சூடாமணி நிகண்டிற்குரிய பெருமை வேறெந்த நிகண்டிற்கும் இல்லை. கி. பி. பதினெட்டாம் நூற்ருண்டிற்குப் பின், தற்கால முறை களை அநுசரித்த அகராதிகள் தமிழில் தோன்ற ஆரம் பித்தன. இவை, தற்கால ஆராய்ச்சியை விளக்கும் மூன்ரும் பகுதியில் குறிப்பிடப்பெறும்.

இடைக் காலத்தில் தமிழ் இலக்கியமும் இலக்கியப் பயிற்சியும் செழித் தோங்குவதற்குத் தகுதியான கருவி நூல்களாகவே இலக்கியப் பேருரைகளும் நிகண்டுகளும் அமைந்தன. வெகு சமீப காலம் வரை தமிழ்ப் புல வரிடம், தமிழறிவு நிரம்பி யிருந்ததற்குக் காரணம் அவர் தமிழ் பயின்ற கல்வி முறை. அக் காலத்தில் தமிழ் கற்கும் மாணுக்கர் இளம் வயதிலேயே இலக்கணத் தைப் பயின்று நிகண்டையும் மனப் பாடம் செய்யும் வழக்கம் இருந்தது. இந்தப் பயிற்சி அவர் அறிவைக் கூர்மையாக்கி வளர்த்தது. பெரும்பாலும் செய்யுள் நடையிலேயே இருந்த நூல்களையும், காப்பியங்களையும் பிரபந்தங்களையும் அவருக்குச் சுலபமாகப் படிக்கவும் பொருள் தெரியவும் முடிந்தது. இக் காலத்தில் பாட சாலைகளிலும் கல்லூரிகளிலும் கலாசாலைகளிலும் நிகண்டுப் பயிற்சி அறவே இல்லை. இலக்கணப் பயிற்சி

யும் போதிய அளவிலும் தெளிந்த முறையிலும் இல்லை. ஆகையால் தமிழ் மாணவரும் புலவரும் தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்வதில் இடர்ப்படுகிறார்கள். பழைய முறைகளை இன்று மீண்டும் கையாள வேண்டும் என்று சொன்னால் பலர் ஏளனம் செய்வர்; கையாளவும் இன்றுள்ள சூழ்நிலையில் இயலாது. இருந்த போதிலும் ஓரளவாவது நிகண்டுகளிலும், இலக்கணத்திலும் பழைய உரை நூல்களிலும் தமிழ் மாணவருக்குப் பயிற்சி இருந்தால்தான் அவர்கள் தாமாகவே தமிழ் இலக்கியத்தைப் படித்துப் பொருள் தெரிந்து அதன் இன்பத்தை அநுபவிக்கலாம்; இல்லையேல் மற்றவர் கூறுவதையே கிளிப்பிள்ளை போல் சொல்லக்கூடிய நிலைமை தான் ஏற்படும். உண்மையான தமிழ் பற்றுடைய எவரும் இந்த நிலைமையை விரும்ப மாட்டார் என்பது திண்ணம்.

---

# பெயரட்டவணை